# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

நான்காம் மடலம் - இரண்டாம் பாகம்

தி - தூ

Vol. IV - Part - II


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# தி

**தி** *ti*, தமிழ் நெடுங்கணக்கில் 'த்' என்ற மெய்யும் 'இ' என்ற உயிரும் சேர்ந்துருவான உயிர்மெய் யெழுத்து; the compound of 't' and 'i'.

*[த் + இ = தி]*

**தி²** *ti*, பெ. (n.) ஒரு பெண்பாலீறு ஒருத்தி, குறத்தி என்பன போல வரும்; a feminine suffix.

**திக்கங்கம்** *tikkaṅgam*, பெ. (n.) திக்குபாலகர் குறி; signs of the tutelary deities of the eight quarters. *'கழுதை யானையேகு காகந் திக்கங்கம்' (சூடா. 12, 81).*

*[Skt. அங்கம்; திக்கு=திசை; திக்கு + அங்கம்]*

**திக்கசம்** *tik-kaśam*, பெ. (n.) திக்கயம் பார்க்க; see *tikkayam*.

*[கயம் = கசம்; திக்கு + கசம்]*

**திக்கடைப்பு** *tikkaḍaippu*, பெ. (n.) நில விற்பனை ஆவணங்களிற் குறிக்கப்படும் நான்கெல்லை; boundaries of land as mentioned in sale-deed.

*[திக்கு + அடைப்பு]*

**திக்கம்** *tikkam*, பெ. (n.) மழகளிறு; young elephant *(யாழ்.அக.)*.

**திக்கயம்** *tik-kayam*, பெ. (n.) திசையானை; elephant's guarding the eight quarters.

*[திக்கு + கயம்]*

**திக்கரன்** *tikkaraṉ*, பெ. (n.) இளைஞன்; youth.

**திக்கரி-த்தல்** *tikkari-*, செ.குன்றாவி. (v.t.) தவிர்த்தொதுக்குதல் (நிராகரித்தல்); to shum, to treat with contempt. *"சினத்துப் பொற் பொருப்பை . . . திக்கரித்து" (திருப்பு. 427).*

**திக்கரி** *tikkari*, பெ. (n.) 1. குமரி; girl. 2. கற்றாழை; aloe *(சா.அக.)*.



**திக்கற்றவன்** *tikkaṟṟavaṉ* பெ. (n.) ஏதிலி, போக்கிலி; forlorn, detitude or forsaken person. திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை *(பழ.)*

*[திக்கு + அற்றவன்]*

**திக்காதிக்கு** *tikkā-tikku* கு.வி.எ. (adv.) பல திசைகளிலும்; in various directions here and there.

**திக்காமல்லி** *tikkāmalli* பெ. (n.) 1. பிசின்மர வகை; dikmali gum-plant. 2. கும்பை¹ பார்க்க; see *kumbai*.

**திக்காரம்** *tikkāram* பெ. (n.) 1. புறக்கணிப்பு (நிந்தனை); contempt disregard *(அலக்.அக.)*. 2. ஒட்டாரம்; inveterate hatred.

**திக்காலுக்கு** *tikkālukku* பெ. (n.) திக்காதிக்கு பார்க்க; see *tikkātikku*. திக்காலுக்கு ஒருவன் ஓடினான் *(வ. வ.)*.

**திக்காலுக்குத்திக்கால்** *tikkālukku-t-tikkāl* பெ. (n.) திக்காதிக்கு பார்க்க; see *tikkātikku.*

*[திக்கால் = திசை]*

**திக்கானை** *tikkāṉai* பெ. (n.) திக்கயம் பார்க்க; see *tikkayam.*

*[திக்கு + யானை]*

**திக்கிடு-தல்** *tikkiḍu-* செகுவி. (v.i.) திடுக்கிடு- பார்க்க; see *tiḍukkiḍu-.*

**திக்கித்திணறு-தல்** *tikki-t-tiṇaṟu-,* செகுவி. (v.i.) *1. சிக்கலில் மாட்டி கொண்டு இன்னலுறுதல்;* struggle. *2. சொற்களில் தடுமாற்றம்;* stammer out.

*[திக்கி + திணறு-.]*

**திக்கிப்பேசு-தல்** *tikki-p-pēśu-,* செகுவி. (v.i.) *கொன்னல்;* art of stammering.

*[திக்கி + பேசு-.]*

**திக்கியானை** *tikkiyāṉai* பெ. (n.) திக்கயம் பார்க்க; see *tikkayam.*

*[திக்கு + யானை]*

**திக்கிராந்தம்** *tikkirāntam* பெ. (n.) கூத்து வகை; a kind of dance. "ஏற்ற திக்கிராந்த மாதியா" *(திருவிளை. கான்மா. 12).*

**திக்கு[1]-தல்** *tikku-,* செகுவி. (v.i.) *1. சொற்கள் தடைபடத் தெற்றிப் பேசுதல்;* to stutter, stammer. *2. சொல் குழறுதல்;* to err or hesitate as in recitation reading etc. "என்மானுரை உரைக்கத்திக்கும்" *(தனிப்பா. 396, 46).*

**திக்கு[2]** *tikku* பெ. (n.) தெற்றிப் பேசும் பேச்சு; stuttering, halting in speech. திக்குவாய்ப் பையன் *(வ.வ.).*

**திக்கு[3]** *tikku* பெ. (n.) *1. வடக்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு என்ற நாற்றிசையும் அவற்றின் கோணத் திசைகளும்;* cordinal and intermediate points, eight quarters *(பிங்.). 2. புகலிடம்;* protection, shelter, aid, asylum, refuge. "மற்றொரு திக்கிலர்" *(உபதேசகா. சிவராம. 42). 3. வாய்ப்பு (சமயம்);* season, opportunity. "திக்கு நோக்கிய தீவினைப் பயனென" *(கம்பரா. நகர்நீ. 215). 4. எட்டு;* eight in number.

*[திக்கு = திசை]*

**திக்கு[4]** *tikku* பெ. (n.) *1. சித்திரமூலம் என்னும் கொடி;* leadwort, climber *(மலை.). 2. கொடுவேர்;* leadwort.

**திக்கு[1]க்கட்டுதல்** *tikku-k-kaṭṭu-* செகுவி. (v.i.) *மந்திரத்தால் எண் திசையைக் கட்டுதல்;* to fortify one against danger from any quarter by invoking the aid of the tutelary dieties of the eight quarters.

*[திக்கு + கட்டு]*

**திக்கு[2]க்கட்டு** *tikku-k-kaṭṭu-* பெ. (n.) *பாது காப்பிற்காக எண்திசைத் தேவதைகளை மந்திரத்தாற் கட்டுப்படுத்தி நிறுத்துகை;* fortifying oneself on all sides by incantations invoking the protection of the tutelary dieties of the eight quarters.

*[திக்கு + கட்டு]*

**திக்குக்கெடு-தல்** *tikku-k-keḍu-,* செகுவி. (v.i.) *1. வழியறியாது மயங்குதல்;* tobe at a loss to know the right direction. *2. கதியற்றுப் போதல்;* to become helpless, destitute.

*[திக்கு + கெடு]*

**திக்குசக்கரம்** *tikku-śakkaram,* பெ. (n.) *திசையறி கருவி;* mariner's compass.

*[திக்கு + சக்கரம்]*

**திக்குத்திக்கெனல்** *tikku-t-tikkeṉal,* பெ. (n.) *1. அச்சத்தால் நெஞ்சடித்தற் குறிப்பு;* onom. expr of throbbing or beating of the heart through fear. "பாம்பாட்டி - பாம்பைப் பிடிக்கும்வரை மனம் திக்குத்திக்கென்று அடித்துக் கொண்டது" *2. எதிர்பார்ப்பில் நெஞ்சடித்தற் குறிப்பு;* onom. expr of throbbing or beating of the heart through anxiety. *2. தாளக்குறிப்பு;* onom. expr of marking time, as in dance. "திக்குத்திக்கென்று குதித்தான்."

*[திக்கு + திக்கு + எனல்]*

**திக்குப்பந்தனம்** *tikku-p-pandanam,* பெ. (n.) திக்குக்கட்டு பார்க்க; see *tikku-k-kaṭṭu.*

**திக்குப்பல்லி** *tikku-p-palli,* பெ. (n.) பல்லிச் சொல்; chirping of a lizard.

*[திசை = திக்கு + பல்லி]*

பல்லியின் ஓசை நன்மை தீமையின் அறிவிப்பு என்பது தமிழ் மக்களின் நீண்ட கால நம்பிக்கை. அந்த ஒலிகேட்கும் திசையைக் கொண்டு தான் நினைத்த செயல் நன்மையையாய் முடியுமா, தீதாய் முடியுமா என்று கணிப்பர்.

**திக்குப்பலி** *tikku-p-pali,* பெ. (n.) திசைத் தேவதைக்கட்கு கொடுக்குங் காவு; offering to the tutelory deities of the quarters, as in a temple.

*[திக்கு + பலி]*

**திக்குப்பாலர்** *tikku-p-pālar,* பெ. (n.) திசை தேவர்கள்; tutelory deities.

*[திக்கு + பாலர்]*

**திக்குப்பேச்சு** *tikku-p-pēccu,* பெ. (n.) தெற்றிப் பேசும் பேச்சு; stammering speech, stuttur.

*[திக்கு + பேச்சு]*

**திக்குமாறாட்டம்** *tikku-mārāṭṭam,* பெ. (n.) திசைத் தடுமாற்றம்; confusion, concerning the directions.

*[திக்கு + மாறாட்டம்]*

**திக்குமுக்கடை-தல்** *tikku-mukkaḍai-,* செ.கு.வி. (v.i.) திக்குமுக்காடு- பார்க்க; see *tikku-mukkāḍu-.*

*[திக்கு + முக்கு + அடைதல்]*

**திக்குமுக்கல்** *tikku-mukkal,* பெ. (n.) திக்குமுக்கு பார்க்க; see *tikku-mukku.*

*[திக்கு + முக்கு]*

**திக்குமுக்காடு-தல்** *tikku-mukkāḍu-,* செ.கு.வி. (v.i.) *1.* மூச்சுவிட முடியாமல் முட்டுப்படுதல்; to be choked, stiffed, smothered, strangled. "தீப் பிடித்துக் கொண்ட வீட்டில் சிக்கியவருக்கு மூச்சுத் திக்குமுக்காடியது" *2.* மகிழ்ச்சியில் ஏற்படும் திளைப்பு; happiness.

*[திக்கு + முக்காடு]*

**திக்குமுக்கு** *tikku-mukku,* பெ. (n.) மூச்சு முட்டுகை; choking, suffocation, strangulation.

**திக்குவாசம்** *tikku-vācam,* பெ. (n.) புனுகு; civet; it is so called on account of its smell prevailing on all sides surroundings (சா.அக.).

**திக்குவாய்** *tikku-vāy,* பெ. (n.) *1.* திக்கிப்பேசும் முறை; stammering. "திக்குவாயைத் திருத்திக் கொள்ளப் புதுமுறைகள்".

*[திக்கு + வாய்]*

**திக்குவாயன்** *tikku-vāyaṉ,* பெ. (n.) தெற்றிப் பேசுபவன்; stammerer, stutturer. திக்குவாயன் அடித்தான் (வ.வ.).

*[திக்கு + வாயன்]*

**திக்குவிசயம்** *tikku-višayam,* பெ. (n.) தற் பெருமை தோன்ற எல்லாத்திசையிலும் அரசர்கள் சென்று வெல்லுகை; conquest of all the quarters undertaken by kings in ancient times to establish their supremacy.

*[திக்கு + வாயன்]*

**திக்குறிக்கெனல்** *tikkuṟikkeṉal,* பெ. (n.) *1.* அச்சக் குறிப்பு; condition of mind indicating fear. *2.* நெஞ்சு அடித்தல்; throbbing of the heart through fear.

**திக்குறு** *tikkuṟu,* பெ. (n.) *1.* மரவகை; east indian satin wood. *2.* சிறு பெண்குழந்தை; a little girl, pariah.

**திக்கெல்லை** *tikkellai,* பெ. (n.) திக்கடைப்பு பார்க்க; see *tikkaḍaippu.*

*[திக்கு + எல்லை]*

**திக்கென்றது** *tikkeṉdradu,* எ. (adj.) திடீரென உண்டாகும் அச்சம்; get a fright. "தொலைவரி என்றதும் அவன் மனம் திக்கென்றது", "கடன் காரனைப் பார்த்ததும் மனம் திக்கென்று அடித்துக் கொண்டது"

*[திக்கு + என்றது]*

**திகச்சம்** *tikaccam,* பெ. (n.) திகசம் பார்க்க; see *tikašam.*

**திகசம்** *tikašam,* பெ. (n.) ஓமம்; bishop's weed.

**திகட்டல்** *tikaṭṭal,* செ.கு.வி. (v.i.) தெவிட்டல்; satiate.

**திகணா** *tikaṇā,* பெ. (n.) கொடுவேரி; white flowered lead word.

**திகத்துரை** *tikatturai,* பெ. (n.) பெருந்துளசி; the large variety of holy basil.



**திகந்தம்** *tikantam,* பெ. (n.) திசையின் முடிவு; farthest extremity of any of the quarters. (கந்தபு. வச்சிரவாருவ. 33). 2. சேனைக் கிழங்கு; elephant yam.

**திகந்தராளம்** *tikantarāḷam,* பெ. (n.) விண்; sky.

**திகம்பரம்** *tikambaram,* பெ. (n.) 1. பிறந்த மேனி நிலை (அம்மணம்); nakedness (செ.அக). 2. இருள்; darkness.

*[திக்கு + அம்பரம்[4]]*

**திகம்பரவாதி** *tikambara-vāti,* பெ. (n.) சமணருள் ஒரு பிரிவினன்; follower of a particular jain sect.

**திகம்பரன்** *tikambaraṉ,* பெ. (n.) 1. ஆடையணியாத் துறவி naked mendicant "கோல மாறாடிக் கூறுந் திகம்பரராகி" (மச்சபு. இரணிய. வத. 9). 2. சமண முனி; jain sage. (சூடா). 3. அருகன்; arhat (திவா.). 4. சிவன்; Šivaṉ. 'திகம்பர னணங்கோர் பாகத் தெய்வநாயகன் (அருதி. 2). 5. ஆடையணியாதவன்; rude person. 6. கதியற்றவன்; destitute person (இ.வ.).

**திகம்பரி** *tikambari,* பெ. (n.) மலைமகள் (பார்வதி); Pārvati. "கங்காளி திகம்பரிக்கு" (மறைசை. 17).

திகம்பரன் = சிவன்
திகம்பரன் மனைவி = திகம்பரி.

**திகர்** *tikar,* பெ. (n.) வேறு; another, different.

**திகரடி** *tikaraḍi,* பெ. (n.) 1. மூச்சடைப்பு; suffocation, difficulty of breathing. 2. சோர்வு; exhaustion, fatique (செ.அக.).

**திகரம்** *tikaram,* பெ. (n.) 1. சோர்வு; weariness, exhaustion. 2. ஈளை; shortness of breath, asthma. 3. அவா; desire (யாழ்.அக.). 4. இளைப்பு; fatigue.

**திகரியாசத்தம்** *tikariyācattam,* பெ. (n.) கோரோசணை; bezoar (சா.அக.).

**திகலைச்சாறு** *tikalai-c-cāṟu,* பெ. (n.) எலுமிச்சஞ்சாறு; juice of lime fruit.

*[திகலை + சாறு]*

**திகழ்ச்சாறு** *tikaḻ-c-cāṟu,* பெ. (n.) திகலைச்சாறு பார்க்க; see *tikalai-c-cāṟu.*

*[திகழ் + சாறு]*

**திகழ்[1]-தல்** *tikaḻ-,* செ.கு.வி. (v.i.) 1. விளங்குதல்; to shine as diamonds, to glitter as stars; to be brilliant. "மீன்றிகழ் விசும்பின்" (புறநா. 25). 2. சிறப்புமிகுதல்; to be eminent; to excel. 'மொய் திகழ் வேலோன்' (பு.வெ. 6, 25, கொளு).

**திகழ்[2]-தல்** *tikaḻ-,* செ.குன்றாவி. (v.t.) உள்ளடக்கிக் கொள்ளுதல்; to contain, hold. "ஒண்குழை திகழு மொளி கெழு திருமுகம்" (மதுரைக். 448).

**திகழ்[3]** *tigaḻ,* பெ. (n.) திகழ்வு பார்க்க; see *tikaḻvu.*

**திகழ்ச்சி** *tigaḻcci,* பெ. (n.) திகழ்வு பார்க்க; see *tikaḻvu.*

*[திகழ் → திகழ்ச்சி]*

**திகழ்த்து-தல்** *tikaḻttu-,* செ.குன்றாவி. (v.t.) 1. தெளிவாக விளக்குதல்; to explain clearly, make clear. "பொருளை பொரு சொல்லாற் றிகழ்த்துதற்கு" (சிவப். பிரபஞ். சிவஞான. தாலாட்டு. 63). 2. விளக்கங்காட்டுதல்; to slow

clearly. "விரிந்த பட மோவியங்கள் பல திகழ்த்தி" (வேதா. சூ. 61). 3. அழகுறுத்துதல்; to beautify, adorn.

**திகழ்வு** *tikaḻvu,* பெ. (n.) 1. பேரொளி; brightness, lustre, splendour. "திகழ்வு கண்டு வந்து கோயிற்பு" (பதஞ்ச. 88). 2. பொலிவுடன் இருத்தல்; glow with lustre. வானில் திகழும் நிலவு; பரந்த நெற்றியில் சந்தனப் பொட்டுத் திகழ வந்தார் (உ.வ.).

[திகழ் → திகழ்வு]

**திகனாதி** *tikanādi,* பெ. (n.) கொடுவேர்; white flowered lead-word.

**திகளர்** *tikaḷar,* பெ. (n.) கருநாடகத்தார் தமிழருக்கு வழங்கும் பெயர்; the appellation by which the karnāṭakās style the Tamilians. (இ.வ.).

**திகாந்தம்** *tikāntam,* பெ. (n.) திகந்தம் பார்க்க; see *tikantam.* 'திகாந்தத்தளவு நடாத்துங் கீர்த்தி' (நன். விருத். உரைப் பாயிரம்).

**திகாந்தரம்** *tikāntaram,* பெ. (n.) திகந்தம் பார்க்க; see *tikantam.*

**திகாரி** *tikāri,* பெ. (n.) திகிரி பார்க்க; see *tikiri.*

**திகிர்**[1] *tikir,* பெ. (n.) காவு கொடுக்கும் சடங்கில் பயன் படுத்துங் கயிறு; cord used in sacrificial ceremonies.

[திகில் → திகிர்]

**திகிர்**[2] *tikir,* பெ. (n.) நடுக்கம்; fright, terror, alarm.

[திகில் → திகிர்]

**திகிரடி**[1] *tikiraḍi,* பெ. (n.) திகரடி பார்க்க; see *tikaraṭi.*

[திகிர் + அடி]

**திகிரடி**[2]**-த்தல்** *tikiraḍi-,* பெ. (n.) காவு கொடுக்கும் பூசகனுக்குக் குறியாகக் கயிற்றை அசைத்தல்; to shake the tikir as a signal to the sacrifice.

[திகில் → திகிர் + அடி]

**திகிரி**[1] *tikiri,* பெ. (n.) 1. மூங்கில்; bamboo. 2. மலை; mountain.

**திகிரி**[2] *tikiri,* பெ. (n.) திகர் பார்க்க; see *tikar.*

[திகில் → திகிரி]

**திகிரி**[3] *tikiri,* பெ. (n.) 1. வட்ட வடிவம் (பிங்.); circle, circular form. 2. உருளை; cylindrical. "ஒரு தனித் திகிரி உரவோன்" (சிலப். 4,2). 3. வேட்கோத்திகிரி (குயவன் சக்கரம்); potters wheel. "அத்திகிரி பசித்த பச்சை மண்ணெ னலாகும்" (காஞ்சிப்பு, திருநகர, ப.76). 4. சக்கரப்படை; the discus weapon. "காலநேமி மேலேவிய திகிரிபோல்" (கம்பரா. சித்திர, 40). 5. அரசாணை; royal authority. "தீதின்று உருள்க நீ ஏந்திய திகிரி" (மணி. 22, 16). 6. தேர்; cart. "திகிரி ஊர் வோன்" (ஞான. 7,17). 7. வண்டி; cart. 8. ஞாயிறு; sun. "விரைசெலற் றிகிரி" (அகநா. 53).

**திகிரிக்கல்** *tikiri-k-kal,* பெ. (n.) 1. சக்கரவாள மலை; a mythical range of mountains. 2. ஆட்டுக்கல்; grinding stone, rubbing stone. 3. கோரோசனை; bezoar. 4. முடவாட்டுக்கல்; sheep's bezoar.

[திகிரி + கல்]



**திகிரிக்கிரி** *tikiri-k-kiri,* பெ. (n.) திகிரிமலை பார்க்க; see *tikiri-malai.*

[திகிரி + கிரி]

**திகிரிகாவலன்** *tikiri-kāvalaṉ,* பெ. (n.) கோரோசனை; bezoar.

[திகிரி + காவலன்]

**திகிரிகை** *tikirikai,* பெ. (n.) 1. சக்கரம்; wheel, circle. 2. குயவன் சக்கரம்; potter's wheel.

[திகிரி → கை]

**திகிரிப்புள்** *tikiri-p-puḷ*, பெ. (n.) இரவில் இணை பிரிந்து வருந்துவதாகக் கூறும் பறவை வகை (*சக்கரவாகம்*); cakra bird, the couples of which are believed to be separated and to mourn during night, noted for conugal fidelity. "*திகழுந்திகிரிப் புள்ளுக்குயம்*" (*திருப்போ.சந். அலங்கா. 31*).

[*திகிரி + புள்*]



**திகிரிமன்னவர்** *tikiri-maṉṉavar*, பெ. (n.) அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன், புரூரவா, கார்த்தவீரியன் என்னும் புகழ்மிகு வேந்தர்கள் அறுவர்; the six famous emperors, viz., Ariccantraṉ, Naḷaṉ, Mucukundaṉ, Purukuccaṉ, Purūravā, Kārtta Viriyaṉ (*சூடா.*).

**திகிரியான்** *tikiriyāṉ*, பெ. (n.) சக்கரத்தைக் கையிற் கொண்டுள்ள திருமால்; Viṣṇu, as holding a discus. '*தொல்கதிர்த் திகிரியாற் பரவுதும்*' (*கலித். 104, 77*).

**திகில்** *tikil*, பெ. (n.) 1. அச்சம்; fright. திகில் காட்சிகள் நிறைந்த திரைப்படம் (*உ.வ.*). 2. திடீர் அச்சம்; sudden fear. 3. பேரச்சம்; panic.

**திகில்படு-தல்** *tikil-paḍu-*, செ.கு.வி. (v.i.) பேரச்சங்கொள்ளுதல்; to start with sudden fear; to be struck with fear.

[*திகில் + படு*]

**திகில்பிடித்தல்** *tikil-piḍittal*, பெ. (n.) பேரச்சம் கொள்ளுகை; being taken with sudden fright.

[*திகில் + பிடி*]

**திகிலடி** *tikilaḍi*, பெ. (n.) திகில் பார்க்க; see *tikil*.

[*திகில் + அடி*]

**திகிலெனல்** *tikileṉal*, பெ. (n.) திடுக்கிடுதற் குறிப்பு; expr. signifying unexpected terror. '*எரியுந் தூமமுந் திகிலென ... மூண்டெழுந்தவே*' (*அரிச்பு. விவா. 82*).

[*திகில் + எனல்*]

**திகுதிகெனல்** *tiku-tikeṉal* பெ. (n.) 1. நெருப்புப் பற்றியெரியுங் குறிப்பு; expr. signifying rapid kindling of fire. ஊர் தீப்பற்றிக் கொண்டு திகுதிகென எரிகிறது (*உ.வ.*). 2. புண்ணெரிச்சற் குறிப்பு; smarting of a sore. '*காலிலுள்ள புண் திகுதிகென எரிகிறது*' (*உ.வ.*) 3. சினக்குறிப்பு; expr. of getting excited with anger. '*அச்செய்தியைக் கேட்டதும் அவருக்குத் திகுதிகெனச் சினமேற் பட்டது*'. 4. விரைவுக் குறிப்பு; expr. signigying coming on in rapid succession. கூட்டைக் கலைத்தவுடன் தேனீக்கள் திகுதிகென வந்து மொய்த்துக் கொண்டன (*உ.வ.*). 5. நீரொலிக் குறிப்பு; expr. signifying bubbling of water. 6. அச்சக்குறிப்பு; expr. signifying trembling with fear. வீட்டினுள் நுழைந்துவிட்ட பாம்பை விரட்டும்வரை மனம் திகுதிகென்று அடித்துக் கொண்டிருந்தது (*உ.வ.*). 7. வயிற்றில் பசியால் உண்டாகும் எரிச்சல் உணர்வுக் குறிப்பு; burning sensation of hunger felt in the stomach. '*காலையிலிருந்து வயிறு திகுதிகென எரிகிறது*'.

[*திக்கு + திக்கு + எனல்*]

**திகேமுசினிவேல்** *tikēmušiṉivēl* பெ. (n.) சிறுபாம்புக் கடிநஞ்சிற்கு மிளகுடன் அரைத்துக் கொடுக்கும் ஒரு மூலிகை வேர். இதனை திகேமுழனிவேர் என்றும் வழங்குவர்; root of a plant given as a paste along with pepper for the poisonous bite of a small kind of reptile (*சா.அக.*).

**திகை[1]-த்தல்** *tikai-* செ.கு.வி. (v.i.) 1. மயங்குதல்; to be taken aback, confused, perplexed, be wildered. "*இருளிற் றிகைத்த கரி*" (*தேவா. 1156, 5*). 2. நிலை மறத்தல்; அசத்தல் (பிரமித்தல்) (*கொ.வ.*); to be astonished, amazed. 3. அடங்குதல்; to subside. "*தென்காறிகைப்ப வடகால் வளர*" (*கல்லா. 93, 7*). 4. சோர்தல்; to be exhausted. '*வேலை செய்து மிகவும் திகைத்து விட்டான்.*'

[*திசை → திகை*]

**திகை²-தல்** *tikai-* செ.கு.வி. (v.i.) *1.* முடிவுறுதல்; to complete, to come to an end. "மாதந் திகைந்த சூலி" (நெல்லை). 2. தீர்மானமாதல்; to be settled. அதன் விலை இன்னும் திகையவில்லை (உ.வ.).

[திசை → திகை]

**திகை³** *tikai* பெ. (n.) நிலைத்தடுமாறுகை; திகைப்பு (பிரமிப்பு); amazement.

[திக்கு → திசை → திகை]

**திகை⁴** *tikai* பெ. (n.) *1.* ஈளை; asthma (இ.வ.). *2.* தேமல்; spreading spots on the skin induced by hot humours (பிங்.).

**திகை⁵** *tikai* பெ. (n.) திசை; cardinal points. "திகை யெலாந் தொழச் செல்வாய்" (தேவா. 308, 1).

**திகைப்பு** *tikaippu* பெ. (n.) *1.* திகை³ பார்க்க; see *tikai.* *2.* மனமயக்கம்; perplexity.

[திகை → திகைப்பு]

**திகைப்பூச்சி** *tikaippūcci* பெ. (n.) மனக் கலக்கத்தை உண்டுபண்ணும் இப்பூச்சி, பாதை வழியில் ஒரு விரல் நுழையும் குழியில் வாழும். இதை வெளிவரச் செய்ய, நண்டு கால் பூச்சியின் காலில் நூலைக் கட்டி, குழியில் விட்டால், திகைப்பூச்சி அப்பூச்சியைப் பிடித்துக் கொள்ளும். குழிக்குள் உடனே ஓசை கேட்கும். உடனே விடுத்த கயிற்றை மேலே இழுத்தால் வரும் பூச்சி உடல் பச்சையாகவும், தலை வெள்ளையாகவும் நான்கு கால்கள் கறுப்பாகவுமிருக்கும். இதுவே திகைப்பூச்சி, இதன் வியப்பான குணத்தையும், தன்மையையும் கருதி மந்திரத் தொழிலுக்கும், ஊதை தொழிலுக்கும் பயன்படுத்துவர்; an insect induce perplexity when treaded upon by passers can be identified with a body of green colour, head portion white, legs four of black or dark complexion.

[திகை + பூச்சி]

**திகைப்பூடு** *tikai-p-pūḍu* பெ. (n.) மிதித்தவர்களை மயங்கச் செய்யும் பூண்டு; a plant that bewilders persons trampling on it. "திகைப்பூடு மிதித்தாற் போல" (சடு).

[திகை + பூடு]

**திகைப்பூண்டு** *tikai-p-pūṇḍu* பெ. (n.) திகைப்பூடு பார்க்க; see *tikai-p-pūḍu.*

[திகை + பூண்டு]

**திகைமூலச்சுண்ணம்** *tikai-mūla-c-cuṇṇam* பெ. (n.) குடற்சுண்ணம்; an alkaline compound prepared from the naval cord of infants as per process laid down in Tamil siddhar's medicine.

[திகை + மூலம் + சுண்ணம்]

**திங்கட்கண்ணியன்** *tiṅkat-kaṇṇiyaṉ,* பெ. (n.) திங்களைத் தலையில் அணிந்துள்ள சிவன்; Šivaṉ, as having moon on his head. "புதுத் திங்கட் கண்ணியான் பொற்பூண் ஞான்றன்ன" (கலித். 150, 17).

**திங்கட்காசு** *tiṅkat-kāšu,* பெ. (n.) மாதந் தோறும் தண்டி வந்த ஒரு பழைய வரி; an ancient tax. "இலை வாணியப் பாட்டமுஞ் திங்கட்காசும்" (T.A.S. i, 165).

[திங்கள் + காசு]

**திங்கட்கிழமை** *tiṅkaṭ-kiḻamai,* பெ. (n.) கிழமையின் (வாரத்தின்) இரண்டாம் நாளான திங்கள்; Monday, the second day of the week.

[திங்கள் + கிழமை]

**திங்கட்குடையோன்** *tiṅkaṭ-kuḍaiyōṉ,* பெ. (n.) நிலவைக் குடையாகக் கொண்ட காமவேள்; the Hindu god of love, as having the moon for his umbrella (சூடா.).

[திங்கள் + குடையோன்]

**திங்கட்குலன்** *tiṅkaṭ-kulaṉ,* பெ. (n.) திங்கட் குலத்தவனாகிய பாண்டியன்; Pāṇḍiyaṉ as belonging to the lunar race. "திங்கட் குலனறியச் செப்புங்கள்" (தனிப்பா. 1, 178, 4).

[திங்கள் + குலன்]

**திங்கட்குழவி** *tiṅkaṭ-kuḻavi,* பெ. (n.) பிறை நிலா; the crescent. "திங்கட்குழவி வருக" (கலித். 80, 18).

[திங்கள் + குழவி]



**திங்கட்சோறு** *tinkaṭ-cōṟu*, பெ. (n.) பிறை நிலா; the crescent. "திங்கட்குழவி வருக" (கலித். 80, 18.).

*[திங்கள் + குழவி]*

**திங்கண்மணி** *tiṅgaṇmaṇi*, பெ. (n.) மதிக்காந்தக் கல்; moon stone. "நீர்தங்கு திங்கண்மணி நீணிலந் தன்னுளோங்கி" (சீவக. 1960).

**திங்கண்முக்குடையான்** *tinkaṇ-mukkuḍaiyāṉ*, பெ. (n.) அருகன்; arhat. "முக்குடையான் திருமாநகர்" (சீவக. 139.).

**திங்கணாள்** *tinkaṇāḷ*, பெ. (n.) ஐந்தாம் நாண்மீனாகிய மாழ்கு (மிருகசீரிடம்); the fifth naksatra, mirugasiridam.

*[திங்கள் + நாள்; திங்களை உரிமைத் தெய்வமாகக் கொண்ட நாள்]*

**திங்கள்** *tiṅgaḷ*, பெ. (n.) 1. மதி; moon. 'பன்மீனாப் பட்டிங்கள் போலவும்' (புறநா. 13). 2. மாதம்; month, lunar month. 'திங்கள் நாள்முந்து கிளதன்ன (சொல். எழுத். 286). 3. திங்கட்கிழமை பார்க்க; see *tiṅgaṭ-kiḻamai*. 4. பன்னிரண்டு என்னும் எண்; the number twelve (தைலவ. தைல.).

**திங்கள்நெய்** *tiṅgaḷ-ney*, பெ. (n.) வரிவகை; a tax (S.I.I.V. 365).

**திங்கள்மூலி** *tiṅgaḷmūli*, பெ. (n.) ஓராண்டு மூலி; சித்தர்கள் பசியெடுக்காதிருக்க வேண்டி உட்கொள்ளும் மூலிகை; herbaceous plant taken by siddhars to keep them off from hunger, for about a year (சா.அக.).

**திங்கள்மோகம்** *tiṅgaḷ-mēgam*, பெ. (n.) வரிவகை; a tax (S.I.I.V. 365).

**திங்களாறுகாடி** *tiṅgalāṟukāḍi*, பெ. (n.) ஆறு திங்களுக்குரிய காடி; six months old vinegar.

**திங்களூர்** *tiṅgalūr*, பெ. (n.) தஞ்சை மாவட்டம் புகைவண்டி நிலையத்திலிருந்து 10 கல் தொலைவிலுள்ளது. நாவுக்கரசரால் பாடப் பெற்ற சிவப்பதி. இப்பதி விடந்தீர்ந்த திருப்பதி. அப்பூதியடிகளின் மகன் பாம்பு தீண்டி இறந்தபின் அவனை இவ்வூர் சிவனைப் பதிகம்பாடி உயிர்ப்பித்தார்; a village, 10 miles distance from railway station in tañcai district

**திங்நு** *tiṅṅu*, பெ. (n.) வினைமுற்று ஈறுகள்; terminations of the finite verbs. 'திங்நுப் படலம்' (பி.வி.).

**திஙந்தம்** *tiṅantam*, பெ. (n.) வினைமுற்று; finite verbs. 'வினையெலாந் திஙந்தம்' (பி.வி. 42).

**திசமிதன்** *tišamitaṉ*, பெ. (n.) மனத்தை அடக்கியவன்; one who has subdued his mind (யாழ்.அக.).

**திசமுருங்கை** *tišamuruṅgai*, பெ. (n.) காட்டு முருங்கை; oval leaved indigo.

**திசாதிசை** *tišātišai*, பெ. (n.) வேறுபட்ட திசைகள்; different directions.

**திசாமிதம்** *tišāmitam*, பெ. (n.) மூன்று இலைகளைக் கொண்ட முன்னை; three leaved fire brand teak.

**திசாமுகம்** *tišāmugam*, பெ. (n.) திசை² பார்க்க; see *tišai* (கம்பரா.அகலிகை. 14.)

**திசாயம்** *tišāyam*, பெ. (n.) குங்கிலியம்; bdellium (யாழ்.அக.).

**திசாலம்** *tišālam*, பெ. (n.) பொழுது; time (யாழ்.அக.).

**திசி** *tiši*, பெ. (n.) திசை²·¹ பார்க்க; see *tišai* (யாழ்.அக.).

**திசிலன்** *tišilaṉ*, பெ. (n.) அரக்கன் (இராக்கதன்); raksasa. 2. திங்கள்; moon.

**திசு** *tišu*, பெ. (n.) உயிரிழைமம் (அல்லது) உடலுறுப்புகளின் ஆக்கமூலப் பொருள்; the substance of which the organs of the body are composed.

**திசை¹-த்தல்** *tišai-*, செ.கு.வி. (v.i.) திகை பார்க்க; see *tikai.* "இவன் சிந்தை துழாய்த் திசைக்கின் றதே" (திவ்.திருவாய். 4, 6, 1).

[திகை → திசை]

**திசை²** *tišai*, பெ. (n.) 1. திக்கு; cardinal points, region, quarter, direction. 'வளிதிரிதரு திசையும்' (புறநா. 30). 2. அதிகாரத்துக்குட்பட்ட இடம்; prinicipality, jurisdiction, dominion. 3. ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு; word used as inflexional suffix of the seventh case (நன். 301, மயிலை).

[திக்கு → திகை → திசை]

**திசை³** *ticai*, பெ. (n.) தசை⁴ பார்க்க (கொ.வ.); see tacai.

[திக்கு → திசை]

**திசைக்கல்** *ticai-k-kal*, பெ. (n.) எல்லைக்கல்; boundary stone (கொ.வ.).

[திசை² + கல்]

**திசைக்காரம்** *tišai-k-kāram*, பெ. (n.) ஒரு குருமருந்து; a king of medicined.

[திசை + காரம்]

**திசைக்குடோரி** *tišai-k-kuḍōri*, பெ. (n.) ஊதை நோய்க்கு (வாதத்திற்கு)ப் பயன்படுத்தும் ஒரு மருந்து; a general medicine used for paralysis.

**திசைக்கெருடன்** *tišai-k-keruḍaṉ*, பெ. (n.) காட்டுக்கொடி; binding creeper.

**திசைகட்டு-தல்** *tišai-kaṭṭu-*, செ.கு.வி. (v.i.) திக்குக்கட்டு-. பார்க்க; see *tikku-k-kaṭṭu-.*

[திசை + கட்டு]

**திசைக்காவல்** *ticai-k-kāval*, பெ. (n.) நாட்டின் அமைதியைக் காப்போன்; watch-man, whose chief duty is to keep the peace fof a country. 2. திசை காவல் வரி; watch-fee levied by a poligar for wider gaurdianship than village level.

[திசை + காவல்]

**திசைச்சொல்** *tišai-c-col*, பெ. (n.) செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரு நிலத்தினின்றும் தமிழில் வந்து வழங்கும் சொல் (தொல்.சொல். 397); word borrowed by Tamil from the twelve countries bordering the ancient Tamil land.

[திசை + சொல்]

**திசை-த்தல்** *ticai-*, செ.கு.வி. (v.i.) திகை¹- பார்க்க; see *tikai-.* "இவள் சிந்தை துழாய்த் திசைக்கின்றதே" (திவ். திருவாய். 4, 6, 1).

**திசைத்தொனி** *tišai-t-toṉi*, பெ. (n.) ஒலி வகையில் பலதிசைகளிலிருந்து வருவதுபோல் அமைந்த ஒலிப்புயமைப்பு முறை. இந்த முறையில் உண்டாகும் ஒலிப்பில் ஆழமும் அழுத்தமும் செழுமையும் ஏற்படுகிறது; stereophonic.

[திசை + தொனி]

**திசைதப்பு-தல்** *tišai-tappu-*, செ.கு.வி. (v.i.) வழி தவறுதல்; to miss the road, lose one's way, as a vessel.

[திசை + தப்பு-]

**திசைநா** *tišainā*, பெ. (n.) கொடுவேலி; Ceylon leadwort (மலை.).

[திசை + நா]

**திசைநாடி** *tišai-nāḍi*, பெ. (n.) எட்டு வகை நாடி; the eight kinds of arteries in the system.

[திசை + நாடி]

**திசைநாதம்** *tišainātam*, பெ. (n.) எட்டுப் பக்கங்களிலிருந்தும் வரும் ஒலி; sound from the eight sides.

[திசை + நாதம்]

**திசைநாற்கோணம்** *tišaināṟ-kōṇam*, பெ. (n.) கோணதிக்குகள்; the four intermediate directions (பிங்.).

[திசை + நாற்கோணம்]

**திசைப்பாலர்** *tišai-p-pālar*, பெ. (n.) திக்குப் பாலகர் பார்க்க; see *tikku-p-pālakar.*

[திசை + பாலர்]

**திசைப்பு** *tišaippu*, பெ. (n.) திகைப்பு பார்க்க; see *tigaippu.* "திசைப்புறுத லுறுஞ் சிவர்க்கு" (வே.சு.110).

[திசை → திசைப்பு]

**திசைப்புரட்டன்** *tišai-p-purațțan*, பெ. (n.) பெரும்பொய்யன்; consummate cheat, liar.

*[திசை + புரட்டன்; புரட்டன் - புரட்டுபவன். திசைகளைப் புரட்டுபவன்- திசைகளையே மாற்றிச் சொல்லும் வல்லமையுள்ள பொய்யன்]*

**திசைபரி** *tišaipari*, பெ. (n.) குளம்பி (காப்பி)க் கொட்டை; coffee seeds.

**திசைபிலம்** *tišai-pilam*, பெ. (n.) மருக்காரை பார்க்க; see *maru-k-kārai*.

**திசைபோ-தல்** *tišai-pō-*, செ.கு.வி. (v.i.) எங்கும் பரவியிருத்தல்; to spread far and wide. "இசையாற் றிசை போயதுண்டே" *(சீவக. 31)*.

**திசைப்போக்கிரி** *tišai-p-pōkkiri*, பெ. (n.) பேர் பெற்ற போக்கிரி (இ.வ.); consummate villain, notorious rogue.

**திசைமயக்கு** *tišai-mayakku*, பெ. (n.) திக்குத் தடுமாறுதல், திசை மாறுதல்; direction confusion.

**திசைமாற்று** *tišai-mārru*, பெ. (n.) எட்டு மாற்றுப் பொன்; gold of eight matru.

*[திசை + மாற்று]*

**திசைமானி** *tišai-māni*, பெ. (n.) எப்போதும் வடக்குத் திசையையே காட்டும் முள்ளை உடைய கருவி; compass.

*[திசை + மானி]*

**திசைமுகன்** *tišai-mugan*, பெ. (n.) நான்முகன்; brahma, as having four faces. "கமலத் திருமலரின். . . திசை முகனைத் தந்தாய்" *(திவ். இயற். 2, 37)*.

**திசைமுகக்குளிகை** *tišai-muka-k-kuligai*, பெ. (n.) காய்ச்சல் வயிற்றோட்டத்திற்காகக் கொடுக்கும் மாத்திரை; a pill given to cure fever and purging.

*[திசை + முகம் + குளிகை]*

**திசைமூலம்** *tišai-mūlam*, பெ. (n.) சிற்றாமுட்டி; ceylon sticky mallow.

*[திசை + மூலம்]*

**திசைமொழி** *tišai-moli*, பெ. (n.) திசைச்சொல் பார்க்க; see *tišai-c-col* (யாழ்.அக.).

*[திசை + மொழி]*

**திசையண்டம்** *tišai-y-aņdam*, பெ. (n.) எட்டு வகை முட்டை; eight kinds of birds or birds eggs (சா.அக.).

*[திசை = எட்டு; திசை + அண்டம்]*

**திசையடுத்தல்** *tišai-y-aduttal*, பெ. (n.) திசையடித்தல் பார்க்க; see *tišai-y-adittal*.

*[திசை + அடுத்தல்]*

**திசையடித்தல்** *tišai-y-ațittal*, பெ. (n.) நல்வாய்ப் புறுகை; being in fortunate circumstances (கொ.வ.).

*[திசை + அடித்தல்]*

**திசையறிகருவி** *tišai-y-ari-karuvi*, பெ. (n.) திக்குகளைக் காட்டுங் கருவி; mariner's compass.

*[திசை + அறி + கருவி]*




**திசையறிபுகைக்கூண்டு** *tišai-yari-pukai-k-kūņdu*, பெ. (n.) காற்று வீசும் திசையையும் வேகத்தையும் கண்டறிவதற்காக மேலே பறக்கவிடப்படும் சிறுபுகைக்கூண்டு; pilot balloon.

*[திசை + அறி + புகை + கூண்டு]*

**திசையுடையவர்**[1] *tišai-y-udaiyavar*, பெ. (n.) நாட்டுப்பற்றாளர்; nationalist.

*[திசை + உடையவர்]*

**திசையுடையவர்**[2] *tišai-y-udaiyavar*, பெ. (n.) மாவட்ட அதிகாரி (யாழ்.அக.); district officer.

*[திசை= அதிகாரத்திற்குட்பட்ட இடம்; திசை + உடையவர்]*

**திசைவளி** *tišai-vaḷi*, பெ. (n.) எட்டு வகையான *காற்று;* the eight kinds of air or wind in the system.

*[திசை = எட்டு; திசை + வளி]*

**திசைவாய்வு** *tišai-vāyvu*, பெ. (n.) திசைவளி *பார்க்க;* see *tišai-vaḷi*.

*[திசை + வாய்வு]*

**திசைவேகம்** *tišai-vēgam*, பெ. (n.) கடக்கும் தொலைவை நேரத்தால் வகுத்து ஒரு நொடிக்கு அல்லது ஒரு நிமையத்துக்கு இவ்வளவு அடி என்று கூறுதல் (இயற்.) ஒரு பொருள் செல்லும் நேரக் *கூறுபாடு;* measurement of speed.

*[திசை + வேகம்]*

**திசைவிளைவுநெம்புகோல்** *tišai-viḷaivu-nembukōl*, பெ. (n.) தூரத்திலுள்ளப் பொருள்களைப் பற்றி எடுப்பதற்குரிய பல்திசை வளைவுகளை உடைய நெம்புகோல் *அமைப்பு;* lazy tongs.

*[திசை + விளைவு + நெம்பு + கோல்]*

**திட்கு-தல்** *tiṭgu-*, செ.குவி. (v.i.) மனங்குலைதல் *(பிங்);* to get troubled in mind. "திட்காதே விண்ணப்பஞ் செய்" *(பதினொ. கைலை. பா. 77).*

*[திக்கு → திட்கு; திக்கு = தடுமாறுதல், குலைதல், மனங்குலைதல்]*

**திட்டக்குழு** *tiṭṭa-k-kuḻu*, பெ. (n.) அரசு மேற்கொள்ள வேண்டிய குமுகப் பொருளியல் வளர்ச்சித் திட்டங்களை வகுத்துக் கொடுக்கக் கூடிய வல்லுநர்கள் *அடங்கிய குழு;* a body of experts to advise the government in developmental policies and schemes, planning commission.

**திட்டங்கட்டு-தல்** *tiṭṭaṅ-kaṭṭu-*, செ.குன்றாவி. (v.t.) *1.* திட்டம்பார்[3] *பார்க்க;* see *tiṭṭam-pār-*. *2.* திட்டம்பண்ணு[2] *பார்க்க;* see *tiṭṭam-paṇṇu-*.

*[திட்டம் + கட்டு-]*

**திட்டஞ்செய்-தல்** *tiṭṭañ-cey-*, செ.குவி. (v.i.) *1. கட்டளையிடுதல்;* to bid, order, direct. *2. ஏற்பாடு செய்தல்;* to settle, arrange. "நடப்பித்து வாருங்கோள் என்று திட்டஞ் செய்து" *(குரு. பரம். 476).* 3. *நிலத்தைப் பண்படுத்துதல்;* to prepare the soil for the cultivation. மஞ்சள் பயிரிட மேட்டு வயலைத் திட்டஞ்செய் *(உவ.).*

*[திட்டம் + செய்-]*

**திட்டப்பற்று** *tiṭṭa-p-paṟṟu*, பெ. (n.) திட்டத்துக் குட்பட்ட செலவு *(சரவண. பணவிடு. 81);* expenditure with in the estimate.

*[திட்டம் + பற்று; பற்று = கடன், செலவு]*

**திட்டப்பட்டம்** *tiṭṭa-p-paṭṭam*, பெ. (n.) திட்ட வட்டம் *(யாழ்.அக.) பார்க்க;* see *tiṭṭa-vaṭṭam*.

*[திட்டம் + பட்டம்; பட்டம் → வட்டம்]*

**திட்டப்படுத்து-தல்** *tiṭṭa-p-paḍuttu-*, செகுன்றாவி. (v.t.) *உறுதிப்படுத்துதல்;* confirm. எட்டுமணிக்கு மேல் அவர் வரமாட்டார் என்பதைத் திட்டப்படுத்திக் கொண்டேன்.

**திட்டம்** *tiṭṭam*, பெ. (n.) *1. உறுதி;* certainty, explicitness. "திட்டமாப் பரகதி சேரவேண்டில்" *(செவ்வந்தி. பு. பிரமதேவ. 25).* 2. *நிலைப்பாடு;* permanence. "மயிலைக் கட்டிட்டங் கொண்டார்" *(தேவா. 1118, 1).* 3. *செவ்வை;* equitablaness, correctness, justness, exactness. *4. ஏற்பாடு;* arrangement, adjustment. "அவர்தந் திராணிக்கு தக்க திட்டஞ் செய்வதுவும்" *(பணவிடு. 26).* *4.* முழுமை (வின்.); completeness. *6. கட்டளை;* rule, canon, standard. *7. மதிப்பு;* estimate, guess, conjecture. "கலியாணஞ் செய்யத் திட்டம் யாது?" *8. கட்டளையளவு;* rate, allowance, determined quantity. "கோயிலில் தினத் திட்டம்". *9. அரசிறை மதிப்பு, செலவு மதிப்பு, விளையுள் மதிப்பு முதலியன;* estimated aggregate of the revenue of a village for the year from investigation of separate holdin; scheme of expenditure, memorandam from of the extent which is extended to cultivate. *10. தொல்வரவான இலவய நிலங்களை உரிமையினின்று நீக்குகை* (G.Tn.D.i, 3ll); a deduction of fixed extent of tax free land as inam. *11. அளவு;* measure, quantity. *12. வேரு மளவு;* degree. *13. வரைவு;* drawing.

*[திட்டு → திட்டம்]*

**திட்டம்²** *tiṭṭam,* பெ. (n.) *1.* *நிலப்படம்;* map.

*[திட்டு → திட்டம்]*

**திட்டம்பண்ணு-தல்** *tiṭṭam-paṇṇu-,* செ.குன்றாவி. (v.t.) *1.* *அணியம் செய்தல்;* to arrange, settle. *2.* *ஏற்படுத்துதல்* (நியமித்தல்); to establish, appoint. *3.* *மதிப்பிடுதல்;* to form an estimate of. *4.* *சரிப்படுத்துதல்;* to mend, adjust, correct. *5.* *ஆணையிடுதல்;* to command, commission. *6.* *செலவிடுதல்;* to dispose of.

*[திட்டம் + பண்ணு-; பண்ணு = செய்]*

**திட்டம்பார்-த்தல்** *tiṭṭam-pār-,* செ.குன்றாவி. (v.t.) *1.* *முயலுதல்* (வின்.); to try. *2.* *கருதுதல்* (வின்); to guess, estimate, conjecture. *3.* *அன்று விற்ற தொகையையும் கணக்கையும் சரிபார்த்தல்* (இ.வ.); to verify the sale account of the date.

*[திட்டம் + பார்-]*

**திட்டமிடு-தல்** *tiṭṭam-iḍu-,* செ.குன்றாவி. (v.t.) *முன்னேற்பாடு செய்தல்;* consider and arrange before hand.

*[திட்டம் + இடு-.]*

**திட்டவட்டம்** *tiṭṭa-vaṭṭam,* பெ. (n.) *1.* *செவ்வை;* accuracy, precision, exactness, strictness. *2.* *ஏற்பாடு;* arrangement, establishment, settlement. *3.* *வரையறை;* restriant.

*[திட்டம் + வட்டம்]*

**திட்டனம்** *tiṭṭaṉam,* பெ. (n.) *1.* *இலுப்பை* (மலை.) பார்க்க; South Indian matua. *2.* *இலுப்பை மரம்;* long leaved bassia.

**திட்டறுகு** *tiṭṭaṟugu,* பெ. (n.) *வெள்ளறுகு;* white doop gram.

*[திட்டு + அறுகு]*

**திட்டா** *tiṭṭā,* பெ. (n.) திட்டறுகு பார்க்க; see *tiṭṭaṟagu.*

*[திட்டு → திட்டா]*

**திட்டாணி** *tiṭṭāṇi,* பெ. (n.) *மரத்தைச் சுற்றி அமைந்துள்ள மேடை* (வின்.); turfing around the shady tree, used as a seat. "சத்திரச் சாலையு மொத்த திட்டாணியும்" (இராமநா. சுந். 4).

*[திட்டு → திட்டாணி]*



**திட்டாந்தப்பேச்சு** *tiṭṭānta-p-pēccu,* பெ. (n.) *1.* *இசைவான சொல்* (வின்.); positive declaration, decisive language. *2.* *கற்பனையாகச் சொல்லும் பேச்சு* (இ.வ.); false or fabricated version. அவன் திட்டாந்தப் பேச்சில் கெட்டிக்காரன் (உ.வ.), இச்சிக்கலில் தலைவர் பேசியது திட்டாந்தப் பேச்சாயிருந்தது (உ.வ.).

*Skt. andam*

*[திட்டம் + அந்தம் + பேச்சு; திட்டம் = வரையரை; அந்தம் = இறுதி]*

**திட்டாந்தப்போலி** *tiṭṭānta-p-pōli,* பெ. (n.) *இயைபில்லாத எடுத்துக்காட்டு;* a fallacious illustration. "பக்கப் போலியு மேதுப் போலியுந் திட்டாந்தப் போலியுமாம்" (மணி. 29. 146).

*[திட்டாந்தம் + போலி]*

**திட்டாந்தம்¹** *tiṭṭāntam,* பெ. (n.) *எடுத்துக்காட்டு;* example. "பக்க மேதுத் திட்டாந்த முபநயம்" (மணி. 29. 57).

*[திட்டம் + அந்தம்]*

**திட்டாந்தம்²** *tiṭṭāntam,* பெ. (n.) *உறுதி;* accuracy. "திட்டாந்தமான பேச்சு" (வின்.).

*[திட்டம் + அந்தம்]*

**திட்டி¹** *tiṭṭi,* பெ. (n.) தினை பார்க்க; see *tiṉai* (சா.அக.).

*[திட்டு → திட்டி]*

**திட்டி²** *tiṭṭi,* பெ. (n.) *1.* *தினை;* millet. *2.* *இலுப்பை;* bassia.

**திட்டி**[3] *tiṭṭi,* பெ. (n.) மேடு *(இலக்.அக.);* raised ground.

*[திட்டு → திட்டி]*

**திட்டி**[4] *tiṭṭi,* பெ. (n.) துவட்டா என்ற தேவதச்சன் *(யாழ்.அக.);* the celestial architect.

**திட்டி**[5] *tiṭṭi,* பெ. (n.) மஞ்சிட்டி பார்க்க; see *mañjiṭṭi.*

*[திட்டு → திட்டி]*

**திட்டிக்கருக்கு-தல்** *tiṭṭi-k-karukku-,* செ.குன்றாவி. (v.t.) கடுமையாகப் பழித்தல் *(வின்.);* to scold, abuse violently.

*[திட்டு + கருக்கு-.]*

**திட்டிக்கல்** *tiṭṭi-k-kal,* பெ. (n.) அஞ்சனக்கல் *(வின்.);* sulphide of antimony, jet.

*[திட்டி → கல்]*

**திட்டிக்கிடாய்** *tiṭṭi-k-kiḍāy,* பெ. (n.) நிலக்கிழார் (சமீன்தார்) ஊரைச்சுற்றிப் பார்க்க வரும் போது ஊரார் கையுறையாகச் (காணிக்கையாக) செலுத்தும் ஆடு; a goat presented to a zamindar by the villagers when he visits their village.

*[திட்டி + கிடாய்]*

**திட்டிச்சீலை** *tiṭṭi-c-cīlai,* பெ. (n.) வேந்தர் முன்பு இட்டு வணங்க பயன்படும் சிறு பட்டுச்சீலை; small silk cloth spread near the feet of a chief while prostrating before him as a mark of homage.

*[திட்டி + சேலை]*

**திட்டிணம்** *tiṭṭiṇam,* பெ. (n.) திட்டனம் பார்க்க; see *tiṭṭanam.*

*[திட்டி → திட்டிணம்]*

**திட்டி-த்தல்** *tiṭṭi-,* செ.குன்றாவி. (v.t.) கற்பித்துக் கூறுதல்; to create, fabricate. திட்டித்துப் போடுவாயோ? (வின்.).

*[திட்டு → திட்டி]*

**திட்டிப்படுதல்** *tiṭṭipaḍutal,* செ.கு.வி. (v.i.) கண்ணூறுபடுதல்; being affected by evil eyes.

*[திட்டி + படுதல்]*

**திட்டிப்பொட்டு** *tiṭṭi-p-poṭṭu,* பெ. (n.) கண்ணூறு கழிதற் பொருட்டு மையா லேனும் சாந்தாலேனும் கன்னத்திலிடும் பொட்டு; mark on the cheeks with collyrium or black pigment called sāndu, made to avert the evil eye.

**திட்டிமணி** *tiṭṭi-maṇi,* பெ. (n.) திட்டிக்கல் பார்க்க; see *tiṭṭi-k-kal.*

*[திட்டி + மணி]*

**திட்டிவந்தனை** *tiṭṭi-vandaṉai,* பெ. (n.) கண்ணூறு போக்கத் தீபவழிபாடு செய்கை *(இ.வ.);* homage by waving lights before great persons or images to avert the evil eye.

*[திட்டி + வந்தனை]*

**திட்டிவாசல்** *tiṭṭi-vāšal,* பெ. (n.) பெரிய கதவுகளை மூடியபின் உட்செல்லுதற்கு அமைக்கப்படும் சிறிய நுழைவாயில்; wicket, small door or gate with in the compass of a larger one. "ஆனையேறியுந் திட்டிவாசலில் நுழைவானேன்" *(இராமநா. அயோத். 22).*

*[திட்டி + வாசல்]*



**திட்டிவிடம்** *tiṭṭi-viḍam,* பெ. (n.) பார்வையால் நஞ்சூட்டிக் கொல்வதாகக் கருதப்படும் பாம்பு; a poisonous serpent whose look is considered fatal. "திட்டிவிடமுணச் செல்லுயிர் போவுழி" *(மணி. 11, 100).*

*[திட்டி + விடம்]*

**திட்டிவிதை** *tiṭṭi-vidai,* பெ. (n.) ஒரு வகை மருந்து விதை *(வின்.);* a medicinal seed.

**திட்டு**[1] *tiṭṭu,* பெ. (n.) *1.* மேட்டு நிலம்; rising ground, bank, elevation. *2.* சிறுகுன்று *(வின்.);* hillock. *3.* ஆற்றிடைக்குறை *(உ.வ);* sand bank, ait in a river. "புளினத் திட்டிற் கண்ணகன் வாரிக் கடல்பூத்த" *(கம்பரா.வானரா. 8).* *4.* யானைகளைப் பிரித்துவைப்பதற்குக் கட்டப்பட்ட இடைச் சுவர் *(யாழ்.அக.);* wall separating elephant stables. *5.* வயலிலுள்ள களை முதலியவற்றின் கொத்து; patch, bunch, as of weeds in a field. *6.* 100 எண் கொண்ட குதிரை, காலாள் முதலிய வற்றின் தொகை; batch, unit of number as of 100 horses, soldiers. 'ஒரு திட்டுக் குதிரை'.

ம., க. திட்டு

*[திண்டு → திட்டு (வ.மொ.வ.)]*

**திட்டு**[2]**-தல்** *tiṭṭu-* செ.குன்றாவி. (v.t.) *1.* பழித்தல்; to abuse, revile. *2.* இகழ்தல் *(யாழ்ப்.);* to curse, utter imprecations.

க., ம. திட்டு

*[திண்டு → திட்டு]*

**திட்டு**[3] *tiṭṭu,* பெ. (n.) வசை; reviling, scolding, vulgar abuse. "பித்த னென்ற திட்டுக்கு" *(அருட்பா. 1, திருவருள். 156).*

*[திண்டு → திட்டு]*

**திட்டுக்கேள்-தல்** *tiṭṭu-k-kēḷ-* செ.கு.வி. (v.i.) பிறரால் பழிக்கப்படுதல்; to be abused, cursed.

க., ம. திட்டு

*[திட்டு + கேள்-.]*

**திட்டுமுட்டு**[1] *tiṭṭu-muṭṭu,* பெ. (n.) எதிர் பழித்தல் (எதிர்நிந்தனை) *(யாழ்ப்.);* mutual abuse.

*[திட்டு → திட்டுமுட்டு]*

**திட்டுமுட்டு**[2] *tiṭṭu-muṭṭu,* பெ. (n.) *1.* நெஞ்சடைப்பு; choking, suffocation, obstruction in the chest, difficulty of breathing. *2.* குழந்தைகட்கு வயிற்று வீக்கத்தோடு வரும் நோய்வகை; disease in children attended with swelling of the abdomen.

*[திக்குமுக்கு + திட்டுமுட்டு]*

**திட்டை**[1] *tiṭṭai,* பெ. (n.) *1.* திட்டு[1] பார்க்க; see *tiṭṭu*. "மணற்றிட்டை சேர்ந்தான்" *(சீவக. 514).* *2.* திண்ணை *(திவா.);* raised floor. *3.* உரல் *(பிங்.);* mortar for pounding. *4.* கண்; eye.

*[திட்டு → திட்டை]*

**திட்டை**[2] *tiṭṭai,* பெ. (n.) *1.* வெள்ளெருக்கு *(மலை.);* white madar. *2.* வெள்ளறுகு; white doop grass.

*[திட்டு → திட்டை]*

**திட்டையிடு-தல்** *tiṭṭai-iḍu-* செ.கு.வி. (v.i.) *1.* பல்லீறு தடித்தல்; to swell, as the gums in the teething. *2.* புண்ணில் தசை வளர்தல் *(யாழ்.அக.);* to become closed, as a wound.

*[திட்டு → திட்டை + இடு-.]*

**திட்டையுரல்** *tiṭṭai-y-ural,* பெ. (n.) அடியாழமற்ற உரல் *(யாழ்ப்.);* shallow mortar.

*[திட்டை = மேடு, ஆழமற்றது; திட்டை + உரல்]*



**திட்பம்** *tiṭpam,* பெ. (n.) *1.* சொற்பொருள்களின் உறுதி; solidity, soundness. "திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்" *(நன். 18).* *2.* வலிமை; strength. "உருத்திட்ப முறாக்காலை" *(காஞ்சிப்பு. திருநாட். 97).* *3.* மனவுறுதி; firmness of mind. "வினைதிட்ப மென்ப தொருவன்" *(குறள். 661).* *4.* உறுதி *(வின்);* certainty, clear knowledge. *5.* காலநுட்பம் *(பிங்.);* moment, minute portion of time.

*[திண்மை → திட்பம்]*

**திட்பவளிமண்டலம்** *tiṭpa-vaḷi-maṇḍalam,* பெ. (n.) வானூர்தியின் செயல்முறையை ஒப்பீடு செய்வதற்குப் பயன்படும் வளி மண்டலம்; standard atmosphere.

*[திட்பம் + வளி + மண்டலம்]*

**திடஉணவு** *tiḍa-uṇavu,* பெ. (n.) நீர்மமாக இல்லாமல் மென்று சாப்பிடக் கூடியதாக இருக்கும் இட்டலி, சோறு போன்ற உணவு; solid food.

**திடஉராய்வு** *tiḍa-urāyvu,* பெ. (n.) ஒரு திடப்பொருள் மற்றொரு திடப்பொருளின் மேலே குறுக்காக நகரும்போது உண்டாகும் உராய்வு; solid friction.

*[திடம் + உராய்வு]*

**திடகாத்திரசாலி** *tiḍa-kāttiraśāli,* பெ. (n.) வலிமை உடையவன்; a man who is vitally strong.

*[தில் – திள் – திண் – திடம்]*

**திடகாத்திரம்** *tiḍa-kāttiram,* பெ. (n.) கட்டுள்ள உடம்பு; well-built body.

**திடங்கொள்(ளு)-தல்** *tiḍaṅkoḷ-,* செ.கு.வி. (v.i.) உள்ளூரமடைதல்; bravery.

*[திண் → திடம். திண் = வலிமை]*

**திடச்சான்று** *tiḍa-c-cāṉṟu,* பெ. (n.) உண்மை கூறும் சான்று (வின்.); positive testimony.

*[திடம் + சான்று]*

**திடச்செய்தி** *tiḍa-c-ceydi,* பெ. (n.) உண்மை யான செய்தி (இ.வ.); certain information, true information.

*[திடம் + செய்தி]*

**திடசாலி** *tiḍa-cāli,* பெ. (n.) உடல்வலிமை உள்ளவன்; strong well-built person. "தாண்டுபரி தூண்டு திடசாலி" *(தனிப்பா. 1, 362, 100).*

*[திடம் + சாலி]*

**திடஞ்சொல்(லு)-தல்** *tiḍañcol-,* செ.கு.வி. (v.i.) உறுதி சொல்லுதல், தேற்றப்படுத்தல்; acto of encourageing.

*[திடம் + சொல்-.]*

**திடத்தாங்கி** *tiḍa-t-tāṅgi,* பெ. (n.) ஒரே துண்டான கெட்டியான தாங்கி; திடத் தாங்கிகள் பொருத்தப்படும் உறுப்புகளில் திடத் தாங்கிகளை அழுத்திப் பொருத்தியதும் அது 'இருசு உருளை' எனப்படும்; solid bearing.

*[திடம் + தாங்கி]*

**திடத்து-தல்** *tiḍattu-,* செ.குன்றாவி. (v.t.) திடப்படுத்து (யாழ்.அக.) பார்க்க; see *tiḍa-p-paḍuttu-.*

**திடத்துவம்** *tiḍattuvam,* பெ. (n.) வலிமை (யாழ்.அக.); strength.

**திடப்படுத்துதல்**[1] *tiḍa-p-paḍuttutal,* பெ. (n.) கிறித்தவச் சமயத்தைச் சார்ந்தவர் என்று உறுதி செய்கை; the rite of confirmation in the church.

*[திடம் + படுத்துதல்]*

**திடப்படுத்து-தல்**[2] *tiḍa-p-paḍuttu-,* செ.குன்றாவி. (v.t.) *1.* வலுப்படுத்துதல்; to invigorate, strengthen. *2.* உறுதிப்படுத்துதல்; to rectify, sanction, corroborate (செ.அக.).

*[திடம் + படுத்து]*

**திடப்பொருள்** *tiḍa-p-poruḷ,* பெ. (n.) கெட்டியான பொருள்; body (or) substance which is solid, not a liquid (or) gas.

*[திடம் + பொருள்]*

**திடபரம்** *tiḍa-param,* பெ. (n.) திடவரம் (பின்.) பார்க்க; see *tiḍavaram.*

**திடம்** *tiḍam,* பெ. (n.) *1.* வலிமை; strength, vigour, power. "பிச்சையெடுக்கவோ திடமில்லை" *(அருட்பா. 6, அபயங்கூ. பக். 737, 1).* *2.* உறுதி; firmness. *3.* கலங்கா நிலை; courage, boldness, intrepidity. "பொறைதிட ஞானம்" *(காசிக. தீர்த்7).* *4.* மனவுறுதி; certainty, assurance, positiveness. "வார்த்தை திடம்படக் கேட்டு" *(தேவா. 17, 4).* *5.* உண்மை; truth. "உயர்கதி பெறுவது திடனே" *(தேவா. 61, 7. 2).* *6.* நிலை தவறாமை; steadiness, inflexibility. "திடவிசும் பெரிவளி" *(திவ். திருவாய். 1. 17).*

*[திட்டம் → திடம்]*

**திடமனம்** *tiḍa-maṉam,* பெ. (n.) *1.* உறுதியான மனம்; firm mind (செ.அக.). *2.* அலைபாயாத மனம்; unagitated mind, unweaving mind.

*[திடம் + மனம்]*

**திடமை** *tiḍamai,* பெ. (n.) வெள்ளெருக்கு; white madar.

*[திடம் → திடமை]*

**திடர்**[1] *tiḍar,* பெ. (n.) *1.* திட்டு[1] (பிங்.) பார்கக; see *tiṭṭu*[1]. "திடர்விளங்கு கரைப்பொன்னி" *(திவ்.*

பெருமாள். 1. 11). 2. தீவு; island. 3. குப்பைமேடு (பிங்.); rubbish heap. 4. புடைப்பு (வின்.); prominence, protuberance.

*[திடல் → திடர்]*

**திடர்ச்சுண்டி** *tiḍar-c-cuṇḍi,* பெ. (n.) வறட் சுண்டி, ஆடுதின்னாப்பாலை; floating sensitive plant (சா.அக.).

*[திடர் + சுண்டி]*

**திடரிடு-தல்** *tiḍariḍu-,* 20 செ.கு.வி. (v.i.) மேடாதல்; pile; heap.

*[திடர் + இடு-]*

**திடல்** *tiḍal* பெ. (n.) 1. திடர்[1] பார்க்க; see *tiḍar*[1]. "'திடலிடைச் செய்த கோயில்" (தேவா. 893. 3). 2. வெளியிடம்; openspace. "திடலடங்கச் செழுங்கழனி" (தேவா. 562, 3).

*[திடர் → திடல்]*

**திடல்கால்** *tiḍal-kāl* பெ. (n.) திடற் புன்செய் (இ.வ.) பார்க்க; see *tiḍar-pun-cey.*

*[திடர் + கால்]*

**திடவரம்** *tiḍa-varam,* பெ. (n.) திடம்[2, 4] (பின்.) பார்க்க; see *tiḍam*[2,4].

*[திடம் + வாரம்]*

**திடற்புன்செய்** *tiḍar-pun-cey,* பெ. (n.) நன்செய் நடுவே புன்செய் பயிராகும் மேட்டுநிலம்; dry land on a high level in the midst of a wet-land area.

*[திடல் + புன்செய்]*

**திடறு** *tiḍaṟu* பெ. (n.) திடர் (சூடா.); mound.

*[திடர் → திடறு]*

**திடாரி** *tiḍāri,* பெ. (n.) வலுவுள்ளவன் (யாழ்ப்); bold, spirited person.

தெ. திடமரி

*[திடர் → திடாரி]*

**திடாரிக்கப்படு-தல்** *tiḍārikka-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) வலியுறுதல் (வின்); to gain strength.

*[திடாரிக்கம் + படுதல்]*

**திடாரிக்கம்** *tiḍarikkam,* பெ. (n.) மனத்திடம் (யாழ்.அக); courage, boldness, vigour of mind.

*[திடாரி → திடாரிக்கம்]*

**திடின்பொதினெனல்** *tiḍin-podin-enal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு (யாழ்.அக.); an onom. expression.

**திடிமம்** *tiḍimam,* பெ. (n.) பறை வகை; a kind of drum. "சீர்முடிவம் பேதிடிம மொலியார் தக்கை" (இலஞ்சி.முருகனுரை. 127).

**திடீரச்சம்** *tiḍīr-raccam* பெ. (n.) கலக்கம்; consternation.

*[திடீர் + அச்சம்]*

**திடீரெனல்** *tiḍīr-enal,* பெ. (n.) 1. விரைவு எதிர் பாராத நிலை இவற்றை உணர்த்தற் குறிப்பு; expr. signifying suddenness, unexpectedness. "திடீரென வந்தான்" 2. பொருள் விழும்போது உண்டாம் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying sound of falling, etc. 'திடீரென்று விழுந்தது'.

*[திடீர் + எனல்]*

**திடுக்கம்**[1] *tiḍukkam,* பெ. (n.) திடுக்கு பார்க்க; see *tiḍukku.* "திடுக்க மெய்தின ரோடினர்" (உபதேச. சிவத். துரோ. 140).

*[திடுக்கு → திடுக்கம்]*

**திடுக்கம்**[2] *tiḍukkam,* பெ. (n.) நோய்வகை; a disease. "குறைப்பிணி திடுக்கம்" (கடம்ப.பு. இலீலா. 125).

*[திடுக்கு → திடுக்கம்]*

**திடுக்காட்டம்** *tiḍukkāṭṭam,* பெ. (n.) திடுக்கு (வின்.) பார்க்க; see *tiḍukku.*

*[திடுக்கு + ஆட்டம்]*

**திடுக்கிடு**[1]**-தல்** *tiḍukkiḍu-,* செ.கு.வி. (v.i.) 1. அச்சமுறுதல்; to be startled, alarmed, frightened. "திடுக்கிட வுற்றணுகி" (அரிச். பு. வேட்டஞ். 69). 2. நடுக்கமுறுதல்; to be shocked, to shudder, to start with fear or surprise; to start in sleep from nervous or muscular affection.

*[திடுக்கு + இடுதல்]*

**திடுக்கிடு**[2] *tiḍu-k-kiḍu,* பெ. (n.) திடுக்கு (யாழ்ப்.) பார்க்க; see *tiḍukku.*

*[திடுக்கு + இடு]*

**திடுக்கு** *tiḍukku,* பெ. (n.) *அச்சம்;* sudden fear, shudder from fright, terror. "திடுக்கற வெனைத் தான் வளர்த்திட" *(அருட்பா. 5, மாயாவிள. 1).*

*[திக்கு → திடுக்கு]*

**திடுக்குத்திடுக்கெனல்** *tiḍukku-t-tiḍukkeṉal,* பெ. (n.) *1. அச்சம் சோர்வுகளால் அடிக்கடி நடுங்கற் குறிப்பு;* expr. signifying starting repeatedly through fear or weak nerves. *2. அச்சத்தால் நெஞ்சடித்தற் குறிப்பு;* onom. expr. signifying beating, throbbing, palpitating of the heart through fear.

*[திடுக்கு + திடுக்கு + எனல்]*

**திடுக்கூரானமருந்து** *tiḍukkūrāṉa-maruntu,* பெ. (n.) நோயை விரைவில் கண்டிக்கக் கூடியதும் நோயின் மிகு நிலையில் மாத்திரம் பயன்படுத்தற்குரியதுமான மருந்து (வின்.); a very strong medicine, speedy in effect and used only in desperate cases.

*[திடுக்கு + ஊரான + மருந்து]*

**திடுக்கூறு** *tiḍukkūṟu,* பெ. (n.) *விரைவு;* suddenness.

*[திடுக்கு + உறு → ஊறு]*

**திடுக்கெனல்** *tiḍukkeṉal,* பெ. (n.) திடீரெனல் பார்க்க; see *tiḍireṉal.* "திடுக்கென விங்கெழுந் திருப்ப" *(அருட்பா. 6, திரு. அருட்பிர. 1).*

*[திடுக்கு + எனல்]*

**திடுதிடு-த்தல்** *tiḍu-tiḍu-,* செ.கு.வி. (v.i.) *1. இடைவிடாது ஒலித்தல்;* to make a reiterated noise, as by nasty stelps, to rumbe, as a carriage; to thump constantly. *2.* நெஞ்சு துடித்தல் (யாழ்ப்.); to beat, throb palpitate, as the heart through fear.

**திடுதிடெனல்** *tiḍu-tiḍeṉal,* பெ. (n.) *1.* திடுக்குத் திடுக்கெனல் (சூடா.) பார்க்க; see *tiḍukku-tiḍukkeṉal. 2.* விரைவுக்குறிப்பு; expr. signifying speed.

*[திடு + திடு + எனல்]*

**திடுதிப்பெனல்** *tiḍu-tippeṉal,* பெ. (n.) திடீரெனல்[1] பார்க்க; see *tiḍireṉal.*

*[திடுதிப்பு + எனல்]*

**திடும்** *tiḍum,* பெ. (n.) ஒரு பறை (வின்); a kind of kettle-drum.

தெ. துடுமு

**திடுமடி** *tiḍum-aḍi,* பெ. (n.) *பறை சாற்று (வின்);* beating of the drum.

*[திடும் + அடி]*

**திடுமல்** *tiḍumal,* பெ. (n.) பெண்ணின் அடங்காத்தன்மை (யாழ்ப்); termagancy, noisy boldness in a woman.

**திடுமலி** *tiḍumali,* பெ. (n.) *அடங்காதவள்;* termagant.

*[திடுமல் + இ]*

**திடுமனடி-த்தல்** *tiḍumaṉaḍi-* செ.கு.வி. (v.i.) திண்மைக் குணங்காட்டல்; showing sound knowledge.

*[திடுமன் + அடி]*

**திடுமெனல்**[1] *tiḍum-e-al,* பெ. (n.) பறை முதலியவற்றின் ஒலிக்குறிப்பு (வின்); onom. expr. signifying the sound of a drum.

*[திடும் + எனல்]*

**திடுமெனல்**[2] *tiḍum-eṉal,* பெ. (n.) திடீரெனல்[1] பார்க்க; see *tiḍireṉal.*

*[திடும் + எனல்]*

**திண்** *tiṉ,* பெ. (n.) வல்லமை; strength.

*[தில் → திள் → திண் (வ.மொ.வ.)]*

**திண்கல்** *tiṉ-kal,* பெ. (n.) சுக்கான்கல் (வின்.); lime stone.

*[திண் + கல்]*

**திண்டகம்** *tiṇḍagam,* பெ. (n.) கிலுகிலுப்பை (மலை.); laburnum-leaved rattle wort.



**திண்டசம்** *tiṇḍašam,* பெ. (n.) *1.* *கிலுகிலுப்பை;* rattle wort. *2.* *வேங்கைமரம்;* kino tree.

**திண்டன்** *tiṇḍaṉ,* பெ. (n.) *தடியன் (உ.வ.);* stout, thick set man.

*[திண்டு → திண்டன்]*

**திண்டாட்டம்** *tiṇḍaṭṭam,* பெ. (n.) *1.* *அலைக் கழிவு;* restless wandering. *2.* *மனக்கலக்கம்;* difficulty, trouble, misery, mental agony. "கொண்டாட்டம் போய்த் திண்டாட்டம் ஆயிற்று".

*[திண்டு + ஆட்டம்]*

**திண்டாட்டு** *tiṇḍāṭṭu,* பெ. (n.) *திண்டாட்டம் (யாழ்அக.) பார்க்க;* see *tiṇḍāṭṭam.*

*[திண்டு + ஆட்டு]*

**திண்டாடு-தல்** *tiṇḍāḍu-,* செ.கு.வி. (v.i.) *1.* *அலைக்கழிதல்;* to wander about restlessly. *2.* *மனங்கலங்கித் தடுமாறுதல்;* to suffer trouble, mental agony. "சிலர் பயமுந்தத் திண்டாடித் திசையறியா மறுகினர்" *(கம்பரா. சுட்ச. 39).*

தெ. திண்டு படு

*[திண்டு + ஆடு]*

**திண்டி**[1] *tiṇḍi,* பெ. (n.) *1.* *பருமன்;* size, bulk. "திண்டி வயிற்றுச் சிறுகட் பூதம்" *(தேவா. 1225, 7).* *2.* *யானை (அகநி.);* elephant. *3.* *தடித்தவள்;* stout woman. *4.* *அரசு பார்க்க;* pipal. *5.* *பசலை (மூ.அ.);* Indian purslane. *6.* *அரசமரம்;* peepul tree.

*[திண்டு → திண்டி (வ.மொ.வ.)]*

**திண்டி**[2] *tiṇḍi,* பெ. (n.) *தம்பட்டம் (சூடா.);* a kind of drum.

*[திண்டு → திண்டி]*

**திண்டி**[3] *tiṇḍi,* பெ. (n.) *1.* *உணவு;* food, eatables. திண்டிக்கு அவசரம் *(இ.வ.).* *2.* *தின்பண்டம்;* edibles, sweets and savouries.

தெ., க. திண்டி

*[திண்டு → திண்டி]*

**திண்டிபோத்து** *tiṇḍi-p-pōttu,* பெ. (n.) உண்டு கொழுத்துத் திரிபவன் (இவ) (உண்டு கொழுத்த கடா); well fed ox or bullock, glutton.

க. திண்டிபோத.

*[திண்டி + போத்து]*

**திண்டிமகவி** *tiṇḍimakavi,* பெ. (n.) திண்டி முழக்கிக் கொண்டு சமராடும் புலவன் *(திருச்செந். பிள். அப்பா. 2);* poet who enters on a literary contest, beating his drum.

**திண்டிமம்** *tiṇḍimam,* பெ. (n.) ஒரு வகைப் பறை *(பிங்.);* a kind of drum. "பெருங் கவிப் புலமைக்கு நீ சொன்னபடி திண்டிமங் கொட்ட" *(திருச்செந். பிள். சப்பா. 2).*

**திண்டியம்** *tiṇḍiyam,* பெ. (n.) செம்பயிரவப் பூண்டு *பார்க்க;* unarmed orange nail dye. *(மருதோன்றி).* *2.* *சீனப்பூ;* china mindie.

*[திண்டு → திண்டியம்]*

**திண்டிறல்** *tiṇḍiṟal,* பெ. (n.) *மிகுவலி;* great valour. "தொண்டை மன்னவன் றிண்டிற லொருவற்கு" *(திவ். பெரியதி. 5, 7, 9).*

**திண்டு** *tiṇḍu,* பெ. (n.) *1.* *அரைவட்டமான பஞ்சணை;* semi-circular cusion. "திண்டருகு போட்டான்" *(விறலிவிடு. 476).* *2.* *முட்டாகக் கட்டிய சிறுசுவர் (இ.வ.);* any small construction of brick built as a support. *3.* *பருமன்;* stoutness, thickness.

ம. திண்டு; தெ. திண்டு (diṇḍu.).

*[திண்டி → திண்டு]*

**திண்டுக்கட்டை** *tiṇḍu-k-kaṭṭai,* பெ. (n.) *1.* *பயனற்ற தடியன் (பருத்த கட்டை)* (Lit., thick block of wood); a worthless bulky person.

*[திண்டு + கட்டை]*

**திண்டுக்குமுண்டு** *tiṇḍukku-muṇḍu,* பெ. (n.) திண்டுமுண்டு (இ.வ.) பார்க்க; see *tiṇḍu-muṇḍu.*

**திண்டுசார்ந்தான்** *tiṇḍu-šārndāṉ,* பெ. (n.) நாட்டுக் கூட்டத்தில் திண்டிற் சாய்ந்து கொண்டு உட்காரும் வலிமை பெற்ற கைகோளர் தலைவன் *(E.T. iii, 36);* a kaikōla chief having the privilege of sitting at council - meetings reclining on a cushion.

*[திண்டு + சார்ந்தான்]*

**திண்டுமுண்டாடு-தல்** *tiṇḍu-muṇḍāḍu-,* செ.குன்றாவி. (v.i.) *1. மூச்சுக் கட்டுதல்;* to be choked, stifled, strangled. *2. துன்பத்திற்கு உள்ளாதல்;* to be in great distress; to be caught in inextricable difficulties.

*[திண்டு + முண்டு + ஆடு-.]*

**திண்டுமுண்டு** *tiṇḍu-muṇḍu,* பெ. (n.) எதிரிடைப் பேச்சு; contradiction; contracitory speech; retort; tit for tat. *"காலன் றிண்டு முண்டோதி" (தனிப்பா. 1, 403, 23).*

*[திண்டு + முண்டு]*

**திண்டுவரி** *tiṇḍuvari,* பெ. (n.) காலத்தின் திண்டைச் சுற்றிப் பாதுகாப்பிற்காக இடும் பெருந்தூண் தொகுதி (க.க.); starling.

*[திண்டு + வரி]*

**திண்டிராவிச்சி** *tiṇḍirāvicci,* பெ. (n.) செப்புச் சதுரக்கள்ளி; a red variety of milk hedge.

**திண்டேல்** *tiṇḍēl,* பெ. (n.) கப்பலைக் கண்காணிப்பவன்; boat swain.

**திண்ணக்கம்** *tiṇṇakkam,* பெ. (n.) நெஞ்சுரம் (இ.வ.); heartlessness, wilfulness, hardihood.

*[திண்மை → திண்ணக்கம்]*

**திண்ணகம்** *tiṇṇagam,* பெ. (n.) *1.* செம்மறி ஆட்டுக்கடா (சூடா.); ram. *2.* துருவாட்டுக் கடா (யாழ். அக.); ram of the turuvāṭṭu variety. *3.* தட்டார் மெருகிடுங் கருவி வகை (யாழ். அக.); goldsmith's polishing tool. *"திண்ணகத்தாற் செய்யுந் தொழில்களை வல்ல பணித்தட்டார்" (சிலப். 6, 136, உரை).*

*[திண் → திண்ணகம்]*



**திண்ணம்** *tiṇṇam,* பெ. (n.) *1.* உறுதி (நிச்சயம்); certainty. *"பரகதி திண்ண நண்ணுவர்" (தேவா. 1111, 10). 2. வலிமை;* vigour, strength, solidity, robustness, power. *3. இறுக்கம்;* tightness. *"திண்ண மாத்தொளிர் செவ்விளநீர்" (கம்பரா. எழுச்சி. 50). 4.* பொய்ம்மை (ஆங்.); falsehood.

*[திண்மை → திண்ணம்]*

**திண்ணறிவு** *tiṉ-ṉ-aṟivu,* பெ. (n.) தெளிந்த எண்ணம்; sound knowledge, spiritual wisdom. *"தடுமாற்றந் தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை" (நாலடி. 27).*

**திண்ணன்** *tiṇṇaṉ,* பெ. (n.) *1.* வலியன்; strong, robust, powerful man. *2.* கண்ணப்ப நாயனார்க்கு அவர் பெற்றோரிட்ட பெயர்; the name given to kaṇṇappa-nāyaṉār by his parents. *"உரிமைப் பேருந்திண்ணனென் றியம்பு மென்ன" (பெரியபு. கண்ண. 17).*

*[திண்மை → திண்ணன்]*

**திண்ணனவு** *tiṇṇaṉavu,* பெ. (n.) *1.* உறுதி (நிச்சயம்); certainty. *"விடார்கண்டீர் வைகுந்தத் திண்ணனவே" (திவ். திருவாய். 2,1,10). 2. திண்ணக்கம்;* heartlessness, hardhood. *"உன் திண்ணனவு அஞ்சத்தக்கது" (திருக்கோ. 343, உரை).*

*[திண்மை → திண்ணனவு]*

**திண்ணி** *tiṇṇi,* பெ. (n.) தின்னி பார்க்க; see *tiṉṉi.*

**திண்ணிமாடன்** *tiṇṇi-māḍaṉ,* பெ. (n.) தின்னிமாடன் பார்க்க; see *tiṉṉi-māḍaṉ.*

**திண்ணிமை** *tiṇṇimai,* பெ. (n.) மனவுறுதி; firmness of mind. *"திண்ணிமையோடு மெல்லச் சார்ந்தநின்" (திருவாலவா. 29, 17).*

*[திண்மை → திண்ணிமை]*

**திண்ணிழல்உருப்படிவம்** *tiṇṇiḻal-uru-p-paḍivam,* பெ. (n.) இது ஒரு நுண்பதிவுப் படம். இதிலிருந்து ஓர் உருவத்தின் எந்தப் பகுதியையும் சுற்றியுள்ள திரையை வெட்டி எடுக்கலாம் (அச்சு); outlined halftone.

*[திண்மை + நிழல் + உரு + படிவம்]*

**திண்ணியன்** *tiṇṇiyaṉ*, பெ. (n.) 1. மன வலிமையுள்ளவன்; man of courage, strong-willed person. "திண்ணிய ராகப் பெறின்" *(குறள் 666).* 2. வலியவன் (சூடா.); strong, robust, powerful man. 3. தடிப்பும் வல்லமையும் உள்ளோன்; a stout strong person.

*[திண்மை → திண்ணியன்]*

**திண்ணெனல்**[1] *tiṇṇeṉal*, பெ. (n.) நரம்பிசைக் கருவிகளில் எழும் ஒலிக்குறிப்பு (வின்.); onom. expr. of the vibrating sound of a stringed musical instrument.

*[திண்மை → திண்ணெனல்]*

**திண்ணெனல்**[2] *tiṇṇeṉal*, பெ. (n.) உறுதியா யிருத்தற்குறிப்பு; expr. of being firm, hardy or strong. "திண்ணென் றிறைவனற் சிறப்போ டொன்றி" *(மேருமந். 570).*

*[திண்மை → திண்ணெனல்]*

**திண்ணெனவு** *tiṇṇeṉavu*, பெ. (n.) திண்ணனவு பார்க்க; see *tiṉ-ṉ-ṉavu*. "மூக்கரிந்து மன்னிய திண்ணெனவும்" *(திவ். இயற். பெரியதரும. 146).*

**திண்ணை** *tiṇṇai*, பெ. (n.) 1. வீட்டின் வேதிகை; pial, a raised platform or veranda in a house. "ஆய்மணிப் பவளத் திண்ணை" *(சீவக. 1126).* 2. மேடு; mound. "தேனயாம் பூம்பொழிற் றிண்ணை" *(சீவக. 1822).*

தெ. தின்னெ; க. திண்ணெ; ம. திண்ண.

*[திள் → திண்ட → திண்ணை]*

**திண்ணைக்குந்து** *tiṇṇai-k-kundu*, பெ. (n.) 1. திண்ணையோரம்; edge of the tiṇṇai. 2. குந்து திண்ணை பார்க்க; see *kundu-tiṇṇai;* a small pial.

*[திண்ணை + குந்து]*

**திண்ணைக்குறடு** *tiṇṇai-k-kuṟaḍu*, பெ. (n.) 1. திண்ணையையொட்டியுள்ள படி (வின்.); a kind of step outside a veranda. 2. பெரிய திண்ணையை ஒட்டிக் கீழேக் கட்டப்பட்ட சிறு திண்ணை (இ.வ.); a small pial of low land adjoining a large pial.

*[திண்ணை + குறடு]*



**திண்ணைப்பள்ளிக்கூடம்** *tiṇṇai-p-paḷḷi-k-kūḍam*, பெ. (n.) வீட்டின் முன் பகுதியாகிய திண்ணையில் நடத்தும் பள்ளிக்கூடம்; pial-school.

*[திண்ணை + பள்ளிக்கூடம்]*

**திண்படு-தல்** *tiṉ-paḍu-*, செ.கு.வி. (v.i.) வலி பெறுதல் (யாழ்.அக.); to be strengthned.

*[திண்-மை → திண்படு-.]*

**திண்பொறு-த்தல்** *tiṉ-poṟu-*, செ.குவி (v.i.) சுமை தாங்குதல் (யாழ்.அக.); to be able to bear a burden. 2. தாக்குப் பொறுத்தல்; suffering the attack as of diseases. 3. வலி பொறுத்தல் (சகித்தல்); to endure pain.

*[திண்(மை) → திண்பொறு-.]*

**திண்மசகிடல்** *tiṉmašakiḍal*, செ.குன்றாவி. (v.t.) எண்ணைய்ப் பூரிதமாகிய அடைபஞ்சுடன் இணைத்து மசகிடும் முறை; pad lubrication.

*[திண் + மசகு + இடல்]*

**திண்மம்** *tiṉmam*, பெ. (n.) திடவடிவம்; solidity.

*[திண் → திண்மம்]*

**திண்மை** *tiṉmai*, பெ. (n.) 1. வலிமை; strength, power, robustness. "சால்பென்னுந் திண்மை யுண் டாகப்பெறின்" *(குறள். 988).* 2. உறுதி; hardness, compactness, firmness. "மண்ணிற் றிண்மை வைத்தோன்" *(திருவாச. 3, 26).* 3. மெய்ம்மை (சங்க.த.அக.); truth, reality, certainity. 4. கலங்கா நிலைமை; steadiness, constancy. "கற்பென்னுந் திண்மை யுண்டாகப் பெறின்" *(குறள். 54).* 5. பருமன்; heaviness, bulkiness. 6. பொருளின் அணுக்கள் ஒன்றோடொன்று நெருங்கிச்

சேர்ந்திருக்குந் தன்மை; closness in constituent parts, density, close union of parts.

*[திண்ணம் → திணம் → திண்மை (வ.மொ.வ.)]*

K. tiṇpu

**திண்மைக்கவர்ச்சி** *tiṇmai-k-kavarcci,* பெ. (n.) ஒன்று மற்றொன்றை இழுக்கத்தக்க ஆற்றல் *(யாழ்.அக.);* power of attraction, gravitational force. 2. வலிமையோடு கூடிய கவர்ச்சி; mighty or potent attraction.

*[திண்மை + கவர்ச்சி]*

**திணம்** *tiṇam,* பெ. (n.) திண்மை' பார்க்க; see tiṇmail. "திணமணி மாடத் திருவிடைக் கழியில்" *(திருவிசை. சேந். திருவிடை. 5).*

*[திண்மை → திணம் (வ.மொ.வ.)]*

**திணர்¹-தல்** *tiṇar-,* செ.கு.வி. (v.i.) சோர்தல்; to get exhausted. "உணர்ந்தவ ருணர்ச்சியா னுழைந்தே திணர்ந்தனராகி" *(அருட்பா, 4, பதிநிச். பக். 751-2).*

*[திணம் → திணர்]*

**திணர்²-தல்** *tiṇar-,* செ.கு.வி. (v.i.) 1. கனமாகப் படிந்திருத்தல்; to form a thick layer. "திணர்த்த வண்டல் கண்மேல்" *(திவ். திருவாய். 6,1,5).* 2. நெருக்கமாதல்; to be crowded, dense, close. "வண்டு திணர்த்த வயல்" *(திவ். திருப்பள்ளி.. தனியன்.).*

*[திணம் → திணர்]*

**திணர்³** *tiṇar,* பெ. (n.) செறிவு; denseness, thickness, as of a cloud. "திணரார்மேக மெனக் களிறு சேருந் திருவேங் கடத்தானே" *(திவ். திருவாய். 6, 105).*

*[திணம் → திணர்]*

**திணறு-தல்** *tiṇaṟu-,* செகு.வி. (v.i.) மூச்சுத் தடுமாறுதல்; to be choked, stifled, suffocated.

*[திணர் → திணறு (வ.மொ.வ.)]*

**திணி¹-தல்** *tiṇi-,* செ.கு.வி. (v.i.) 1. செறிதல்; to be crowded, dense, close. "மண்டிணிந்த நிலனும்" *(புறநா.2).* 2. இறுகுதல்; to become solid, compact, firm.

*[திண் → திணி]*

**திணி²-த்தல்** *tiṇi-,* செ.கு.வி. (v.i.) 1. செறிய உட்புகுத்துதல்; to cram, stuff. "பூமிபாரங்க ளுண்ணுஞ் சோற்றினை வாங்கிப் புல்லைத் திணிமினே" *(திவ். பெரியாழ். 4,4,5).* 2. பதித்தல் to enchase, set "பொன்றிணி மணிமானட் பொலிவன பல" *(கம்பரா. வனம்பு.3).* 3. நெருக்கி வருத்துதல் (இவ.); to nagat, worry persistently. 4. இடைச் சேர்த்தல்; to insert. 5. அதிகமாக உண்பித்தல்; giving excess of food. 6. அடைத்தல்; plugging. 7. துறத்தல்; thristing, stuffing in.

*[திள் → திணி → திணி-தல் (வ.மொ.வ.)]*

**திணி³** *tiṇi-,* பெ. (n.) 1. திட்பம்; solidity, strength, firmness. "பலர்புகழ் திணிதோள்" *(திருமுரு. 152).* 2. செறிவு; denseness. "இருளின்றிணி வண்ணம்" *(திவ். திருவாய். 2,1,8).* 3. மண்ணுலகு (அகநி.); earth.

*[திள் → திணி]*

**திணிகம்** *tiṇigam,* பெ. (n.) போர் (வின்.); battle

*[திண் → திணிகம்]*

**திணிநிலை** *tiṇi-nilai,* பெ. (n.) சேனையின் செறிந்த நிலை; phalanx, dense formation of an army. "திணி நிலையலற".

*[திணி + நிலை]*

**திணிப்பிலவு** *tiṇi-p-pilavu,* பெ. (n.) ஈரப்பலா; monkey jack.

*[திணி + பலவு → பிலவு]*

**திணிப்பு** *tiṇippu,* பெ. (n.) வலிமை; strength force. "திணிப்புற வரற்றின சினைக்கரிய மாரி" *(இரகு. தேனு. 9).*

*[திணிம்பு → திணிப்பு]*

**திணிம்பு** *tiṇimpu,* பெ. (n.) செறிவு; denseness. "இருளின் கருந்திணிம்பை" *(திவ. இயற். திருவிருத். 72).*

க. திணிநபு (tiṇinapu)

*[திணிப்பு → திணிம்பு]*

**திணிமூங்கில்** *tiṇimūṅgil,* பெ. (n.) கெட்டி மூங்கில் (அகநா. 27, உரை); solid hard bamboo.

*[திணி + மூங்கில்]*

**திணியன்** *tiṇiyaṉ*, பெ. (n.) *1.* பயனற்றுப் பருத்த-வன்-து *(யாழ்.);* fat, indolent man; clumsy beast or thing. *2.* உள்ளீடற்ற மரம் மூங்கில் முதலியன *(இவ.);* tree or cane slightly hollow.

*[திண்(மை) → திணியன்]*

**திணிவு** *tiṇivu*, பெ. (n.) *1.* வன்மை; hardness. *2.* நெருக்கம்; denseness.

*[திணி → திணிவு]*

**திணுக்கம்** *tiṇukkam*, பெ. (n.) *1.* செறிவு; closeness, compactness. *2.* கட்டி; thick consistency, solidity. "திணுக்கமாய்க் காய்ச்சிக் கொடு" *(வின்.).*

*[திணுங்கு → திணுக்கம்]*

**திணுங்கு-தல்** *tiṇuṅgu-*, செ.கு.வி (v.i.) *1.* செறிதல்; to become close, thich, dense, crowded. "திணுங்கின விருள்" *(திவ்.திருவாய். 2, 1, 7, பன்னீ.). 2.* உறைதல்; to congeal solidity. "நெய் திணுங்கினாற்போல" *(திவ்.திருமாலை 2, வ்யா. பக்.15).*

*[திண்மை → திணுங்கு-.]*

**திணை** *tiṇai*, பெ. (n.) *1.* நிலம் (பூமி) *(பிங்.);* earth, land. *2.* இடம் *(பிங்.);* place, region, situation, site. *3.* வீடு; house. "திணைபிரி புதல்வர்" *(பரிபா. 16, 7). 4.* குலம்; tribe caste, race, family "உயர்திணை யூமன்" *(குறுந். 224). 5.* ஒழுக்கம்; conduct, custom. "அவன் றொஃறிணை மூதூர்" *(மலைபடு. 401). 6.* தமிழ் நூல்களிற் கூறப்படும் அகமும் புறமுமாகிய ஒழுக்கம். "ஐந்திணை நெறியளாவி" *(கம்பரா. சூர்ப்பணகை 1);* convetional rules of conduct laid down in the Tamil works, of two classes, viz., aka-t-tinai and puṟa-t-tiṇai. *7.* உயர்திணை யஃறிணைகளாகிய பகுப்புகள்; class, as of names of two kinds, viz. uyartiṇai and akṟiṇai. "ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே" *(தொல்.சொல். 1). 8.* அகத்திணை; an idea in the mind. *9.* புறத்திணை; an external object of perception. *10.* ஐந்திணை; the five sorts.

*[திண் → (திண்ணை) → திணை (வே.சொ.க)]*

**திணைக்களம்** *tiṇai-k-kaḷam*, பெ. (n.) துறை; department. "புரவுவரித் திணைக் களத்து வரிப்பொத்தக நாயகன்" *(S.I.I. ii, 412).*

*[திணை + களம்]*

**திணைகள்** *tiṇaigaḷ*, பெ. (n.) மக்கள்; people. "கணக்கருந் திணைகளும்" *(பெருங். வத்தவ. 2, 45).*

*[திணை + கள்]*

**திணைநிலைப்பெயர்** *tiṇai-nilai-p-peyar*, பெ. (n.) *1.* குலமுறையைக் குறிக்கும் பெயர்; noun denoting class or caste. "பல்லோர்க் குறித்த திணை நிலைப்பெயரே" *(தொல்.சொல். 167). 3.* ஐந்திணைத் தலைமக்கட்கு வழங்கும் பெயர்; name of the chieftains of aintinaṇai. "ஆனா வகைய திணை நிலைப் பெயரே" *(தொல். பொ. 22).*

*[திணை + நிலைப்பெயர்]*

**திணைநிலைவரி** *tiṇai-nilai-vari*, பெ. (n.) ஐந்திணைச் செய்திகளை காமக்குறிப்புத் தோன்றப் பாடும் பாவகை *(சிலப். 10, கட்டுரை);* a kind of erotic composition dealing with the incidents and events peculiar to aintiṇai.

*[திணை + நிலைவரி]*

**திணைப்பாட்டு** *tiṇai-p-pāṭṭu*, பெ. (n.) எடுத்த திணைக்குரிய தொழிலைப் பொதுப் படக்கூறும் பாடல் *(இலக்.வி. 603, உரை);* a poem dealing in general terms with a particular tiṇai *(செ.அக.).*

*[திணை + பாட்டு]*

**திணைப்பெயர்** *tiṇai-p-peyar*, பெ. (n.) ஐந்திணையில் வாழும் மக்கட்கு வழங்கும் பெயர் *(தொல். பொ.21);* names of the peoples occuying aintiṇai.

*[திணை + பெயர்]*

**திணைமயக்கம்** *tiṇai-mayakkam*, பெ. (n.) *1.* ஒரு நிலத்துக்கு உரிய காலம், உரிய பொருள், கருப்பொருள்கள் மற்ற நிலத்துக்குரிய அப்பொருளுடன் கலந்து வரப் பாடலமைக்கை; to compose poems with the hormonies blending of the features of one tinai with those of another. *2.* அகம் புறம் என்ற

திணைகள் ஒன்றோடொன்று மயங்கி வருகை; blending of akattiṇai and puṟattiṇai.

[திணை + மயக்கம்]

**திணைமயக்கு** *tiṇai-mayakku*, பெ. (n.) திணையமயக்கம் பார்க்க; see *tiṇai-mayakkam* "அகத் திணையின்கட் கைக்கிளை வருதல் திணை மயக்காம் பிறவெனின்" (திருக்கோ. 4, உரை).

[திணை + மயக்கு]

**திணைமாலைநூற்றம்பது** *tiṇai-mālai-nūṟṟambadu*, பெ. (n.) பதினெண்கீழ்க் கணக்கினுளொன்றும் கணிமேதாவியார் இயற்றியதும் 150 செய்யுளில் ஐந்திணை யொழுக்கங்களைக் கூறுவதுமான நூல்; an ancient love poem of 150 stanzeas by kaṇi-mētāviyār. one of padiṉen-kīḻ-k-kaṇakku.

**திணைமொழியைம்பது** *tiṇai-moḻiy-aimbadu*, பெ. (n.) பதினெண் கீழ்க்கணக்கினு ளொன்றும் கண்ணஞ் சேந்தனாரியற்றியதும் 50 செய்யுட்களில் ஐந்திணையொழுக்கங் களைக் கூறுவதுமான நூல்; an ancient love poem of 50 stanzas by kaṇṇaṉ-cēndaṉār one of padiṉeṇ-kīḻ-k-kaṇakku.

**திணைவழு** *tiṇai-vaḻu*, பெ. (n.) ஒரு திணைச் சொல்லை மற்றொரு திணைப் பொருளிற் சொல்லுவதாகிய வழுவகை (தொல். சொல். 11, சேனா); incorrect use of a noun in a tiṇai which to it does not belong.

[திணை + வழு]

**திணைவழுவமைதி** *tiṇai-vaḻu-v-amaidi*, பெ. (n.) மரபு பற்றி ஆன்றோரால் அமைத்துக் கொள்ளப்பட்ட திணைவழு (தொல்.சொல். 57, சேனா.); tinai-vaḻu sanctioned by usage.

[திணை + வழுவமைதி]

**தித்தகம்** *tittagam*, பெ. (n.) 1. மலைவேம்பு (மலை) பார்க்க; see *malai-vēmbu*; persian lilac. 2. துருக்க வேம்பு; Persian lilac. 3. நில வேம்பு; ground neem. 4. காரப் புகையிலை; smoking tobacco. 5. கண்ணுக்கிடுமோர் மூலிகை (பித ரோகினி); an unknown plant useful in eye disease.

**தித்தகாருட்டி** *tittakāruṭṭi*, பெ. (n.) சிறுவழு தலை; wild Indian brinjal.

**தித்தக்கிருதம்** *tittak-kirudam*, பெ. (n.) கசப்பு மருந்து நெய்; medicinal ghee with bitter taste being prepared with bitter herbs.

**தித்தசம்** *tittašam*, பெ. (n.) பேய்ப்புடல்; wild snake gourd.

**தித்ததண்டுலம்** *titta-taṇḍulam*, பெ. (n.) திப்பிலி; long pepper.

**தித்ததுத்தம்** *titta-tuttam*, பெ. (n.) மரத்தின் கசப்புப் பால்; bitter milky sap of the tree.

**தித்ததும்பி** *titta-tumbi*, பெ. (n.) கசப்புக் கொடி; bitter gourd cralber.

**தித்தசாரம்** *titta-šāram*, பெ. (n.) மாவிலங்கம்; lingam tree. 2. கருப்புக் காசுக் கட்டி; black cateche.

**தித்தபரி** *titta-pari*, பெ. (n.) 1. ஒரு வகை வெள்ளரி; a kind of cucumber. 2. கொம்மட்டி; 3. ஒரு வகையுப்பு; a kind of salt.

**தித்தபருவன்** *titta-paruvaṉ*, பெ. (n.) 1. சீந்தில்; moon creeper. 2. முயற்புல்; hare grass. 3. குன்றி; liquorice.

**தித்தபலை** *titta-palai*, பெ. (n.) கசப்புக்காய்; bitter fruit.

**தித்தபீசம்** *titta-pīšam*, பெ. (n.) பேய்ச்சுரை; a kind of gourd.

**தித்தம்**[1] *tittam*, பெ. (n.) 1. நெருப்பு; fire. 2. கட்டுக் கதை; fable.

**தித்தம்**[2] *tittam*, பெ. (n.) 1. கசப்பு (பிங்.); bitterness. 2. தித்தகம் (மலை) பார்க்க; see *tittagam*. 3. நிலவேம்பு (வின்.) பார்க்க; see *nila-vēmbu*. 4. எண்ணெய்; oil. 5. மணம்; fragrance. 6. நிலவேம்பு; ground neem. 7. மலைவேம்பு; persian lilac. 8. வெள்ளைக் கிலுகிலுப்பை; white rattle wort. 9. புனல் முருங்கை; three learned indigo. 10. சின்ன முள்ளங்கி; small radish. 11. காரம்; purngancy. 12. வெப்பாலை; desontery rosebay.

**தித்தம்**[3] *tittam*, பெ. (n.) ஒளி; effulgence. "தித்த தவர்" (மேருமந். 1097).

**தித்தன்** *tittaṉ,* பெ. (n.) ஒரு பழைய சோழவரசன்; an ancient Chola king. "மாவண் டித்தன்" (புறா. 352).

**தித்தாவெனல்** *tittā-v-v-eṉal,* பெ. (n.) நடனத்தில் வழங்கும் தாளக் குறிப்பு; expr. of time-measure.

**தித்தி¹-த்தல்** *titti-,* செ.குவி. (n.) இனித்தல்; onom to be sweet, savoury delicious, pleasing. "திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித் திருக்குமோ" (திவ். நாய்ச். 7,1).

[தீந்தி → திந்தி → தித்தி (வே.சொ.க.)]

**தித்தி²** *titti,* பெ. (n.) *1.* தித்திப்பு; sweetness. "தித்திப்பனங்கட்டி" (வின்.). *2.* சிறுதீனி (யாழ்ப்.); light food. *3.* பேரீந்து (வின்.); date palm. *4.* இன்பம் (அகநி.); pleasure. *5.* தேமல்; yellow spreading spots on the body. "கோதை யூரலந் தித்தி" (பதிற்றுப் 52, 17). *6.* குரா (யாழ்.அக.) பார்க்க; common bottle - flower. *7.* சிற்றுண்டி; lunch on.

க. ; sihi

[திந்தி → தித்தி]

**தித்தி³** *titti,* பெ. (n.) *1.* தாளச்சதி; two syllables sung to a tune, signifying time measure. "தித்தி யறுத்தும்" (திருப்பு. 417). *2.* குரங்கு (அகநி.); monkey. *3.* ஓர் பனை; a kind of palm tree.

**தித்தி⁴** *titti,* பெ. (n.) *1.* துருத்தி; bellows. "வாயுவேற்றித் தித்திவாய் செம்மில்" (யசோதா. 4, 12). *2.* தோற்பை (இவ.); leather bag. *3.* ஒரு வகை இசைக் கருவி; a kind of flute or pipe. "தித்தி சிறு முகவீணை" (சுற்றா. தல. தருமசாமி. 54).

[துருத்தி → துத்தி → தித்தி (வ.மொ.வ.10)]



**தித்தி⁵** *titti,* பெ. (n.) வேள்விக்குண்டம் (வின்.); a sacrificial pit.

**தித்திக்கப்பேசு-தல்** *tittikka-p-pēśu-,* செ.குவி. (v.i.) முகமனாகக் கூறுதல்; to flatterr, coax or wheedle with sweetwrods. "தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்" (திருவாச. 7,3).

[தித்தி + பேசு]

**தித்திக்காரன்** *titti-k-kāraṉ,* பெ. (n.) துருத்தி என்னும் இசைக்கருவியை ஊதுபவன்; a piper. "கூடுதித்திக்காரனையும்" (விறலிவிடு. 288).

[தித்தி + காரன்]

**தித்திக்கும்வேம்பு** *tittikkum-vēmbu,* பெ. (n.) சருக்கரை வேம்பு (பதார்த்த. 230); a kind of neem.

[தித்தி + வேம்பு]

**தித்திகம்** *tittigam,* பெ. (n.) *1.* பேய்ப்புடோல் பார்க்க; wild snake gourd. *2.* அரத்தை; galangal. *3.* பேய்க் கொம்மட்டி; bitter water melon. *4.* கசப்பு மணம் வாய்ந்தது; anything having bitter flaver.

**தித்திகா** *tittikā,* பெ. (n.) கண்டங்கத்திரி; prickly night shade.

**தித்திசாகம்** *titti-śāgam,* பெ. (n.) மாவிலிங்கு (மலை) பார்க்க; see *māviliṅgu;* round berried cuspidate-leaved lingam tree.

**தித்திப்பனங்கட்டி** *titti-p-paṉaṅgaṭṭi,* பெ. (n.) ஈச்சவெல்லம் (வின்.); jaggery of the date palm.

[தித்தி + பனங்கட்டி]

**தித்திப்பு** *tittipu,* பெ. (n.) *1.* இனிப்பு; sweetness. "தித்திக்குமோர் தித்திப் பெலாங்கூட்டி யுண்டாலும் (அருட்பா, 3, நடரா. 10). *2.* இனிப்புள்ள பண்டம்; any sweet eatable. *3.* பூண்டின் முதற் பெயர்; plants first term. *4.* தித்திப்பு நாரத்தை; sweet nārattai.

[தித்தி + பு]

தெ. திபு

**தித்திப்புக்கொடிமுந்திரி** *tittippu-k-koḍi muntiri,* பெ. (n.) இனிப்புக் கொடிமுந்திரி; sweet grapes as opposed sour grapes.

[தித்திப்பு + கொடிமுந்திரி]

**தித்திப்புக்கோவை** *tittippu-k-kōvai,* பெ. (n.) இனிப்புக் கோவை. இது இதளியத்தைக் கட்டும்; sweet caper lehneria umbellate/. It is capable of binding or consolidating mercury.

*[தித்திப்பு + கோவை]*

**தித்திப்புச்சுரிஞ்சான்** *tittippu-curiñcāṉ,* பெ. (n.) இனிப்புச் சுரிஞ்சான்; sweet barbary dollocolchicum. It is opposed to brilter curiñcāṉ.

*[தித்திப்பு + சுரிஞ்சான்]*

**தித்திப்புச்சோளம்** *tittippu-c-cōḷam,* பெ. (n.) இனிப்புச் சோளம்; sugar millet sweet corn.

*[தித்திப்பு + சோளம்]*

**தித்திப்புநாரத்தை** *tittippu-nārattai,* பெ. (n.) இதுவே சாத்துக்குடி; sathukoḍi.

*[தித்திப்பு + நாரத்தை]*

**தித்திப்புநாவல்** *tittippu-nāval,* பெ. (n.) சீனி நாரத்தை; sweet gulgul. *2.* சம்பு நாவல்; இனிப்பு நாவற் பழம்; sweet jamoon.

*[தித்திப்பு + நாவல்]*

**தித்திப்புநீர்நோய்** *tittippu-nīr-nōy,* பெ. (n.) நீரிழிவு நோய்; diabetes.

*[தித்திப்பு + நீர்நாய்]*

**தித்திப்புப்பண்டம்** *tittippu-p-paṇḍam,* பெ. (n.) இனிப்புணவுப் பொருள் (வின்.); sweetmeat. *2.* தித்திப்புப் பண்ணியம்; confection. *3.* சர்க்கரைப் பாகில் போட்டெடுத்த பண்டம்; that which is preserved by means of sugar or syrup.

*[தித்திப்பு + பண்டம்]*

**தித்திப்புப்பாலை** *tittippu-p-pāḷai,* பெ. (n.) நல்ல பாலை; sweet palay. இனிப்பு மாதுளை; sweet pomegranate.

*[தித்திப்பு + பாலை]*

**தித்திப்புப்புளி** *tittippu-puḷi,* பெ. (n.) இனிப்புப் புளியம்பழம்; tamarind that is sweet.

*[தித்திப்பு + புளி]*

**தித்திப்பெலுமிச்சை** *titti-p-pelumiccai,* பெ. (n.) எலுமிச்சை வகை; sweet lime.

*[தித்திப்பு + எலுமிச்சை]*

**தித்திப்புப்பேதி** *tittippu-p-pēti,* பெ. (n.) உலர்கொடிமுந்திரி கற்கண்டு சேர்ந்த மலநீக்கி மருந்து; puragative containing dried graphes and sugar candy.

*[தித்திப்பு + பேதி]*

**தித்திப்புமா** *titti-p-pumā,* பெ. (n.) இனிப்பு மாங்காய்; graft mango.

*[தித்திப்பு + மா]*

**தித்திப்புமுந்திரி** *tittippu-muntiri,* பெ. (n.) இனிப்புக் கொட்டை முந்திரிகை; sweet grapes with seeds.

*[தித்திப்பு + முந்திரி]*

**தித்திப்புவாதுமை** *tittippu-vādumai,* பெ. (n.) இனிப்பு வாதுமைக் கொட்டை; sweet almond.

*[தித்திப்பு + வாதுமை]*

**தித்திமுளை** *tittimuḷai,* பெ. (n.) இரட்டைத் தித்திப் பனங்கட்டி (யாழ்ப.); double cake of palm jaggery.

*[தித்திப்பு + முளை]*

**தித்தியம்** *tittiyam,* பெ. (n.) தித்தி[5] பார்க்க; see titti[5]. "அழலெழு தித்திய மருத்தயாமை" (அகநா. 361). *2.* அரத்தை; galangal (சங்.அக.).

**தித்திரம்** *tittiram,* பெ. (n.) அரத்தை (மலை) பார்க்க; see *arattai;* galangal.

**தித்திரகம்** *tittirakam,* பெ. (n.) சிற்றரத்தை; small galangal.

**தித்திரி** *tittiri,* பெ. (n.) *1.* கவுதாரி; Indian partridge. *2.* மீன் கொத்தி வகை; a kind of king fisher. *3.* சிக்கிலிக் குருவி; king fihser. *4.* நாணல்; reed.

**தித்திரிப்பு** *tittirippu,* பெ. (n.) புனை சுருட்டு; hoax, humbug, cheating, delusion. "செய்யுங்கபடு மகாதித்திரிப்பு மாகாசப் பொய்யுங் கலந்து புகட்டினாள்" (விறலிவிடு. 168).

**தித்திரிபலை** *tittiri-palai,* பெ. (n.) நேர்வாளம்; purging nut.

**தித்திரியை** *tittiriyai,* பெ. (n.) பெண் கவுதாரி; femal patridge (சா.அக.).

**தித்திரு** *tittiru,* பெ. (n.) *1.* நாணல் *(மலை)* பார்க்க; see *nāṇal;* a large and coarse grass. *2.* கம்பம்புல்; ponccum grass.

**தித்திருச்சி** *tittirucci,* பெ. (n.) தித்திரு *(வின்.)* பார்க்க; see *tittiru.*

**தித்திவி-த்தல்** *tittivi-,* செ.குன்றாவி. (v.t.) வாங்கிய கடன் முதலியவற்றைத் தீர்த்தல்; to repay, as loans. "வாங்கி பொன் தித்திவிக்கும் வல்லமையும்" *(தெய்வக். விறலிவிடு. 81).*

**தித்தீபம்** *tittīpam,* பெ. (n.) பேரரத்தை; large golangal.

**தித்து[1]-தல்** *tittu-,* செ.குன்றாவி (v.t.) திருத்துதல்; to correct, rectify a mistake. "தெள்ளமிர்த மூட்டி யுரைதித்தி வளர்த்தெடுத் தோர்" *(கூளப்ப. 8).* *2.* எழுத்துக் கற்க வரிவடிவின்மேற் பல முறையெழுதிப் பழகுதல் *(இ.வ.);* to practise hand writting by tracing over a written copy.

T. K., diddu

*[திருத்து → தித்து-தல்]*

**தித்து[2]** *tittu,* பெ. (n.) தித்துப்பாடு பார்க்க; see *tittu-p-pāḍu.*

**தித்துப்பாடு** *tittu-p-pāḍu,* பெ. (n.) திருத்தம் *(கொ.வ.);* correction, alteration.

K. diddupāḍu

*[தித்திப்பு + படு]*

**தித்துருணி** *titturuṇi,* பெ. (n.) துளசி; holy basil.

**தித்துவெட்டு** *tittu-veṭṭu,* பெ. (n.) தித்துப்பாடு *(இ.வ.)* பார்க்க; see *tittu-p-pāḍu (இ.வ.).*

*[தித்து + வெட்டு]*

**தித்தேகி** *tittēgi,* பெ. (n.) பற்படகம் *(சங்அக.)* பார்க்க; fever plant.

**தித்தை** *tittai,* பெ. (n.) வேம்பு; neem tree.

**திதம்[1]** *tidam,* பெ. (n.) நிலை; fixedness, steadiness, stability. "திதமாய் நிற்குமிடம் மாயை" *(ஞானவா. இட்சு. 29).*

**திதம்[2]** *tidam,* பெ. (n.) தித்தம்[1] *(யாழ்.அக.)* பார்க்க; see *tittam[1].*

**திதலை[1]** *tidalai,* பெ. (n.) *1.* தேமல்; yellow spots on the skin, considered beautiful in women. "பொன்னுரை கடுக்கும் திதலையர்" *(திருமுரு. 145).* *2.* ஈன்ற பெண்களுக் குள்ள வெளுப்பு நிறம்; pale complexion of women after confiement. "ஈன்றவ டிதலைபோல்" *(கலித். 32).*

**திதலை[2]** *tidalai,* பெ. (n.) பொற்பிதிர்வு; golden streak. "திதலைத் திருவாசிச் சேவை" *(சொக்க. உலா. 63).*

**திதளம்** *tidaḷam,* பெ. (n.) மாமரம் *(மலை);* a mango.

**திதன்** *tidaṉ,* பெ. (n.) *1.* மனவுறுதியுடையவன்; one who is firm in mind. "திதனாயெவரு மறியாத பொருளைத் தெரிந்து கொண்டு" *(பகவத் கீதை, 2, 31).* *2.* திடமானது *(பகவத் கீதை, ப.27);* that which is firm.

**திதனி** *tidaṉi,* பெ. (n.) திதலை[1] பார்க்க; see *tidalai.* "ஆகத்தா யெழிற் றிதனி" *(கலித். 14).*

**திதி-த்தல்** *tidi,* செ.குவி (v.i.) தித்தி பார்க்க; see *titi.*

**திதை-தல்** *tidai,* செகு.வி. (v.i.) பரவுதல்; to spread. "திதையுந் தாது தேனுஞ் ஞிமிறும்" *(தேவா. 395, 5).*

**திந்தி** tindi, பெ. (n.) இனிப்பு; sweetness.

**திந்திகத்திரிப்பழம்** *tindi-kattiri-p-paḻam,* பெ. (n.) இனிப்புச் சுவையுடைய கத்திரிப்பழம்; a kind of fruit.

**திந்திடம்** *tindiḍam,* பெ. (n.) *1.* புளி *(மலை)* பார்க்க; see *puḷi.* *2.* புளியமரம்; tamarind tree. *3.* இனிப்புப் புளியமரம்; sweet tamarind.

**திந்திடிகை** *tindigai,* பெ. (n.) திந்திடம் பார்க்க; see *tindiḍigam.*

**திந்திடீகம்** *tindiḍīgam,* பெ. (n.) புளி *(சூடா.)* பார்க்க; see *puḷi.*

**தித்திப்பிச்சி** *titti-p-picci,* பெ. (n.) நாணல்; reed.

**திந்திருணி** *tindiruṇi,* பெ. (n.) *1.* புளி *(திவா.)* பார்க்க; tamarind. *2.* புளியமரம்; tamarind tree. *3.* புளியாரை; sour sorrel.

**திந்திருணிக்குழம்பு** *tindiruṇi-k-kuḻambu,* பெ. (n.) **புளிக்குழம்பு;** sauce of tamarind fruit.

**திந்து** *tindu,* பெ. (n.) *1.* **கருங்காலி;** ebony. *2.* **எட்டி;** nukuomica. *3.* **திந்திகம்** பார்க்க.

**திநாரம்** *tināram,* பெ. (n.) **பொன்னகை வகை;** a gold coin. "நூறு திநாரந் தண்டப் படுவது" *(T.A.S. ii, 13).*

**திப்பம்** *tippam,* பெ. (n.) **திப்பிலி** *(சங்அக.)* பார்க்க; see *tippali.*

**திப்பலி** *tippali,* பெ. (n.) **மருந்துக்கொடி வகை** *(பதார்த்த. 954);* long pepper.

**திப்பலிக்கட்டை** *tippali-k-kaṭṭai,* பெ. (n.) **கண்டதிப்பலி** *(வின்.);* long pepper vine, used for medicinal purpose.

*[திப்பலி + கட்டை]*

**திப்பலிக்கொச்சிக்காய்** *tippali-k-kocci-k-kāy,* பெ. (n.) **ஒரு வகைச் சிறுமிளகாய்** *(யாழ்.அக.);* a kind of small chillies.

*[திப்பலி + கொச்சிக்காய்]*

**திப்பலியரிசி** *tippali-y-arici,* பெ. (n.) **திப்பலிக்காய்** *(வின்.);* long pepper.

*[திப்பலி + அரிசி]*

**திப்பாயம்** *tippāyam,* பெ. (n.) **ஓமம்;** Bishop's weed.

**திப்பி**[1] *tippi,* பெ. (n.) *1.* **வாயகன்ற சிறு மண் சட்டி;** shallow earthen vessel with a wide mouth. *2.* **கொட்டங்காய்ச்சியகப்பை;** piece of a coconut shell, used as a ladle.

T. cippa.



**திப்பி**[2] *tippi,* பெ. (n.) *1.* **கோது;** dregs, refuse of anything from which the juice has been squeezed out. *2.* **வடிகட்டியபின் அடியிற் தங்கி நிற்கும் வண்டல்;** sediment at the bottom of an oil pot.

T. pippi.

**திப்பி**[3] *tippi,* பெ. (n.) **பன்னிரண்டு மலங்கள்;** 12 kinds of refuses and excretions *(சா.அக.).*

**திப்பிச்சோறு** *tippi-c-cōṟu,* பெ. (n.) **சாரத்தைப் பிழிந்தெடுத்த சோறு;** refuse of boiled rice from which the juice or essence in squeezed out.

*[திப்பி + சோறு]*

**திப்பிதை-த்தல்** *tippi-dai-,* செ.குன்றாவி. (v.i.) **திரும்பித் தையலிடுதல்** *(இவ.);* to stich back.

**திப்பியகம்** *tippiyagam,* பெ. (n.) **ஓமம்;** bishop's weed.

**திப்பியம்** *tippiyam,* பெ. (n.) *1.* **தெய்வத் தன்மையுடைய பொருள்;** that -which is divine, sacred. "தெய்வங் கொல்லோ, திப்பியங் கொல்லோ" *(மணி. 18, 84). 2.* **துறக்கம்** *(சுவர்க்கம்);* heaven. "செய்கை யடங்குத றிப்பியமாம்" *(திரிகடு. 43). 3.* **வியக்கத்தக்கது;** that which is admirable. "பிச்சைப் பாத்திரங் கையினேந்தியது திப்பியம்" *(மணி. 15, 70). 4.* **சிறந்தது** *(உ.வ.);* that which is excellent. *5.* **ஒருவகை நெல்;** a kind of paddy. "செந்தசாலி திப்பிய மென் றிவையகத் தறியுந்தண்கழனி" *(தேவா. 700, 7).*

**திப்பியம்** *tippiyam,* பெ. (n.) **ஓமம்** *(மலை.);* bishop's weed *(செ.அக.).*

**திப்பியன்** *tippiyan,* பெ. (n.) **தெய்வத் தன்மையுடையோன்;** a divine person. "ஒப்பிறந்துவ மொருவிய திப்பியன்" *(ஞானா. 48, 6).*

**திப்பிரமை** *tippiramai,* பெ. (n.) *1.* **திசை தடுமாற்றம்;** confusion regarding direction. *2.* **மனக்குழப்பம்;** be wilderment, perplexity.

**திப்பிருத்தை** *tippiruttai,* பெ. (n.) **கடற் காந்தள்;** madagascan mangrow *(சா.அக.).*

**திப்பிலாட்டம்** *tippilāṭṭam,* பெ. (n.) **திப்பிலியாட்டம்**' பார்க்க; see *tippiliyāṭṭam*'.

**திப்பிலி** tippili, பெ. (n.) *1.* **திப்பலி** பார்க்க; see *tippali.* "தீந்தேன் றிப்பிலி தேய்த்து" *(சீவக. 2703) 2.* **திப்பிலிப்பனை** பார்க்க; see *tippili-paṉai.*

**திப்பிலிக்கட்டை** *tippi-k-kaṭṭai,* பெ. (n.) கண்டத்திப்பிலி; root of long pepper.

*[திப்பிலி + கட்டை]*

**திப்பிலிக்கள்** *tippili-k-kaḷ,* பெ. (n.) மேற்கு மலைத் தொடர்ச்சியிலுள்ள முதுவரென்னுஞ் சாதியாரால் ஒருவகைப் பனையிலிருந்து இறக்கப்படுங் கள்; toddy extracted from a wild palm on the western ghats by the muthuvar tribe.

*[திப்பிலி + கள்]*

**திப்பிலிக்கொச்சிக்காய்** *tippili-k-kocci-k-kāy,* பெ. (n.) சிறுமிளகுக்காய்; small pepper fruit.

**திப்பிலிக்கொடி** *tippili-k-koḍi,* பெ. (n.) அரிசித் திப்பிலி; common long pepper.

*[திப்பிலி + கொடி]*

**திப்பிலிக்கொம்மட்டி** *tippili-k-kommaṭṭi,* பெ. (n.) பேய்க் கொம்மட்டி; devil on bitter water don.

*[திப்பிலி + கொம்மட்டி]*

**திப்பிலிசுத்தி** *tippili-cutti,* பெ. (n.) திப்பிலியைப் பழச்சாற்றில் ஊற வைத்து எடுத்தல்; purification a long pepper by soaking it in fruit juice.

**திப்பிலித்தவயம்** *tippili-tavayam,* பெ. (n.) 1. அரிசித்திப்பிலி; common long peper. 2. ஆனைத்திப்பிலி; elephant long pepper.

*[திப்பிலி + தவயம்]*

**திப்பிலிநாரி** *tippili-nari,* பெ. (n.) பூச்சிப் பகை (கிருமிச் சத்துரு)ச் செடி; a plant smelling of long pepper said to be vermifage.

**திப்பிலிநாவல்** *tippili-nāval,* பெ. (n.) அவந்தி நாவல்; Indian mulberry.

*[திப்பிலி + நாவல்]*

**திப்பிலிப்பனை** *tippili-p-paṉai,* பெ. (n.) பனைவகை; jaggery palm. ஈழப்பனை; wine palm of Srilanka.

*[திப்பிலி + பனை]*

**திப்பிலியத்தி** *tippiliy-aṭṭi,* பெ. (n.) ஆனைத் திப்பிலி; elephant long pepper.

**திப்பிலியரிசி** *tippili-aricci,* பெ. (n.) அரிசித் திப்பிலி பார்க்க; see *arici-t-tippilil.*

*[திப்பிலி + அரிசி]*

**திப்பிலியாட்டம்** *tippili-y-āṭṭam,* பெ. (n.) 1. பிறனைக் கிள்ளியும் அலைத்தும் ஆடும் விளையாட்டு வகை; a kind of play in which one teases, pinches, pulls the ears of another. 2. புதுமையான கேள்வி; puzzles, riddles. 3. பித்தலாட்டம்; deception, fraud.

*[திப்பிலி + ஆட்டம்]*

**திப்பிலிவேர்** *tippili-vēr,* பெ. (n.) கண்டத் திப்பிலி; bengal long pepper.

*[திப்பிலி + வேர்]*

**திப்பை** *tippai,* பெ. (n.) 1. மேடு (சினேந். 368, உரை); mound, elevated ground. 2. பருத்தது; that which is bulky (செ.அக.).

**திபதிச்சம்** *tipadiccam,* பெ. (n.) வாலுழுவை (மலை); black oil tree.

**திபதை** *tipadai,* பெ. (n.) இரண்டடிக் கண்ணி (இராமநா. பாலகா. 2); distich, couplet.

**திபசு** *tipacu,* பெ. (n.) வேங்கை மரம்; kino tree.

**தி.பி.** *t-pi,* பெ. (n.) திருவள்ளுருக்குப் பின்; திருவள்ளுவர்ஆண்டு பார்க்க; see *tiruvaḷḷuvar-āṇḍu.*

**திம்** *tim,* பெ. (n.) திக்கு (யாழ்.அக.); direction.

**திம்பு** *timbu,* பெ. (n.) செங்கத்தாரி; false peacon acor tree.

**திம்மக்குரங்கு** *timma-k-kuraṅgu,* பெ. (n.) திம்மன் (வின்.) பார்க்க; see *timman.* 2. ஒருவகை மாந்தக்குரங்கு; a man like monkey. 3. வாலில்லாக் குரங்கு; tail less monkey.

*[திம்மன் + குரங்கு]*

**திம்மலி** *timmali,* பெ. (n.) உடல் பருத்தவள் (யாழ்ப்); stout, strong woman.

**திம்மன்** *timman,* பெ. (n.) ஆண் குரங்கு வகை (வின்.); male of a species of monkey.

தெ. திம்மடு; க. திம்மன்.

**திம்மை**[1] *timmai,* பெ. (n.) *1.* பருமன் (இவ.); bulk, size. *2.* பொன்னிழை முதலியவற்றின் பந்து; ball, skein as gold thread. *"சரிகைத் திம்மை" (வின்.)*

தெ. திம்மெ.

**திம்மை**[2] *timmai,* பெ. (n.) திப்பிரமை (வின்.); insensibility.

**திமி** *timi,* பெ. (n.) பெருமீன் (திவா.); an aquatic animal of enormous size.

**திமிகோடம்** *timi-kōḍam,* பெ. (n.) கடல் (யாழ்.அக.); Sea.

**திமிங்கிலகிலம்** *timiṅgila-gilam,* பெ. (n.) திமிங்கிலத்தை விழுங்கக் கூடிய பெருமீன்; an aquatic animal believed to be large enough to swallow a timiṅgilam. "தேசமுநூலுஞ் சொல்லுந் திமிங்கில கிலங்களோடும்" *(கம்பரா. கடவுறாலு. 38).*

**திமிங்கிலம்** timi-ṅ-gilam, பெ. (n.) *1.* திமியை விழுங்கக்கூடிய பெருமீன் (சூடா.); an aquatic animal believed to be large enough to swallow a timi. *2.* பெருமீன் வகை; whale cetaceac (செ.அக.).

*[திமி → திமிங்கிலம்]*



**திமிசடி-த்தல்** *timisaḍi-,* செ.கு.வி. (v.i.) இளகிய தரையைத் திமிசுக்கட்டையால் கெட்டிப் படுத்துதல்; to ram, beat-loose earth to solidity.

*[திமிசு + அடித்தல்]*

**திமிசம்** *timišam,* பெ. (n.) திமிசு[1] பார்க்க (வின்); see *timišu.*

**திமிசு**[1] *timišu,* பெ. (n.) *1.* வேங்கை; East Indian kino. *"சாரலந் திமிசிடைச் சாந்தனத் தழைவயின்" (சீவக. 1901). 2.* வச்சிரவேங்கை; Andamans red wood.

**திமிசு**[2] *timišu,* பெ. (n.) இளகிய தரையை கெட்டிக்கும் கட்டை; rammer.

**திமிசுக்கட்டை** *timišu-k-kaṭṭai,* பெ. (n.) திமிசு[2] பார்க்க; see *timišu*[2].



**திமிசுசெய்-தல்** *timišu-cey-,* செ.கு.வி. (v.i.) திமிசடி பார்க்க; see *timišaḍi.*

**திமிசுபோடு-தல்** *timišu-pōḍu-,* செ.குன்றாவி. (v.i.) திமிசடி பார்க்க; see *timišaḍi.*

**திமிதகுமுதம்** *timida-kumudam,* பெ. (n.) *1.* இரைச்சல்; noise, stir, bustle. *2.* மகிழ்ச்சி; joy, mirth joviality. *3.* மிகுதி; abundance, plenty. *4.* ஊதாரித்தனம்; extravagance.

**திமிதகூதளம்** *timita-kūtalam,* பெ. (n.) சிவப்பு ஆதலை அதாவது செவ்வாமணக்கு; a red variety of castor plant.

**திமிதம்**[1] *timidam,* பெ. (n.) *1.* பேரொலி; noise, bustle. *2.* குதித்தாடுகை; dancing. "கூத்தரிற் றிமிதமிட்டு" *(கம்பரா. செது. ப. 42).*

*[திமி → திமிதம்]*

**திமிதம்**[2] *timidam,* பெ. (n.) ஈரம் (யாழ்.அக.); dampness.

**திமிதம்**[3] *timidam,* பெ. (n.) உறுதி (யாழ்.அக.); stability.

**திமிதம்போடு-தல்** *timidam-pōḍu-,* செகுவி.. (v.i.) திமிதமிடு-தல் (யாழ்அக.) பார்க்க; see *timidamiḍu-.*

*[திமிதம் + போடு-.]*

**திமிதமிடு-தல்** *timidam-iḍu-,* செகுவி.. (v.i.) களித்தல் (வின்.); to be merry, jovial, jolly noisy.

*[திமிதம் + இடுதல்]*

**திமிதிமி** *timi-dimi,* பெ. (n.) 1. தாளங் குறிக்குஞ்சொல் (வின்.); syllable sung to keep time in dancing. 2. திமிங்கிலம்; whale.

T. dimidimi

**திமிதிமி²** *timi-dimi,* பெ. (n.) திமிங்கிலம் (வின்.) பார்க்க; see *timiṅgalam.*

**திமிதிமியெனல்** *timi-dimi-y-eṉal,* பெ. (n.) 1. தாளக்குறிப்பு; keeping time in dancing or music. 2. கூட்டத்தொலிக்குறிப்பு; bustle of agreat crowed. 3. விரைவுக்குறிப்பு; repeated sounds in rapid succession.

**திமிநெய்** *timi-ney,* பெ. (n.) திமிங்கிலநெய் பார்க்க; see *timiṅkila-ney.*

**திமிர்¹-தல்** *timir-,* செகுன்றாவி. (v.i.) 1. பூசுதல்; to smear, as sandal peste. "சாந்தந்திமிர்வோர்" (மணி. 19, 86). 2. தடவுதல்; to rub. "ஈர்ங்கை விற்புறந் திமிரி" (புறனா. 258). 3. அப்புதல்; to apply to, as a flower to the skin. "பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே" (ஐங்குறு. 347). 4. வாரியிறைத்தல்; to throw or scatter, as on one'sbody. "கையிடை வைத்தது மெய்யிடைத் திமிரும்" (நற். 360). செகுவி. (v.i.); 1. ஒலித்தல் (சூடா.); to sound, resound. 2. வளர்தல் (வின்.); to grow, increase, become more intense M.timiruka. 3. நடுக்கமடைதல்; to tremble, shake. "நிலைதளாந் துடலந் திமிர்ந்து வேர் வரும்பி" (திருவிளை. நாக. 19).

**திமிர்²-த்தல்** *timir-,* செகுவி. (v.i.) 1. தடவுதல்; to rub, besmear. "வறுவலுக்கு மிளகாயப் பொடி திமிர்த்து வைக்க வேண்டும்" 2. தீர்மானித்தல்; to determine. "அணைத்தபோதை பர்சத்தாலே திமிர்த்துச் சொல்லுகிறார்" (ஈடு. 2.6.2). 3. அடித்தல்; to beat. "கூழையங் குறுநரியுடையோர் திமிர்ப்ப" (கல்லா. 89, 19). 4. குலுக்குதல்; to shake. திமிர்த்தி வைத்தான். 5. அருவருத்தல் (யாழ்.); to loathe, as food.

**திமிர்³** *timir-,* பெ. (n.) 1. மரத்துப்போகை; numbness. தெ. திமிரி, ம. திமிர். 2. குளிராலுண்டாம் விறைப்பு; stiffness from cold. 3. சோம்பல் (வின்.); dullness, sluggishness of the system from idleness. 4. திமிர்வாதம் பார்க்க; 5. அறிவுடல்களின் சோர்வு; partial suspension of the bodly and mental powers, from consternation, from taking an anaesthetic, anaesthesia. 6. உடற்கொழுப்பு; obesity. 7. மனக்கொழுப்பு (உவ.); hautuer,wantonness. தெ. திமிரு. 8. மதம்; sexual excitment. 9. மயக்கம்; dizziness. 10. வலியின்மை; absence of pain.

**திமிர்⁴-த்தல்** *timir-,* செகுன்றாவி. (v.i.) 1. கால் முதலியன மரத்தல்; to be numbed, as a limb; to be paralysed. 2. கொழுத்துத்தடித்தல்; to grow stout from obesity. 3. பித்துப்பிடித்தல்; to be stupefied, dumb-founded.

**திமிர்கொண்டாடு-தல்** *timir-koṇḍāḍu,* செகுவி. (v.i.) தொந்தரவு செய்தல் (வின்.); to be employed in mischief.

*[திமிர் + கொண்டாடு-]*

**திமிர்கொள்ளல்** *timir-koḷḷal,* பெ. (n.) உணர்ச்சியுறல்; being deprived of sensation becoming senseless and motionless. 2. மதங் கொள்ளல்; becoming sexually excited.

*[திமிர் + கொள்ளல்]*

**திமிர்க்கிரந்தி** *timir-k-kiranti,* பெ. (n.) உணர்ச்சியுறச் செய்யும் ஒரு வகைக் கிரந்திப் புண்; sore or ulcertation attended with numbness or less of feeling of pain.

*[திமிர் + கிரந்தி]*

**திமிர்க்குட்டம்** *timir-k-kuṭṭam,* பெ. (n.) கை கால்களில் சுரணையற்றுக் காணும் ஒரு வகைக் குட்ட நோய்; leprosy attended with loss of sensation anesthelic leprosy.

*[திமிர் + குட்டம்]*

**திமிர்ச்சி** timircci, பெ. (n.) திமிர்ப்பு பார்க்க; timirppu. 2. திமிராயிருத்தல்; the state of remaining benumbed.

*[திமிர் → திமிர்ச்சி]*

**திமிர்த்திரு-த்தல்** *timirttiru-*, செ.கு.வி. (v.i.) திமிராகவிருத்தல்; toremaing benumbed.

*[திமிர்த்து + இரு-]*

**திமிர்த்துப்போ-தல்** *timirttu-p-po-*, பெ. (n.) அதிகமாக ஊதை கொள்ளல்; to get affected with too much of vayu in the system.

*[திமிர்த்து + போ-]*

**திமிர்த்துவை-த்தல்** *timirttu-vai-*, செ.கு.வி. (v.i.) குலுக்கி அளவை நிறைத்தல் (வின்.); to shake and fill a measure.

**திமிர்தம்** *timirdam*, பெ. (n.) பேரொலி (சது.); sound, great noise. "திமிர்தமிடு கடலதென" (திருப்பு. 180). 2. எச்சில்; spit. 3. ஒலி; sound.

**திமிர்தல்** *timirdal*, பெ. (n.) 1. பூசுதல்; smearing. 2. வளர்தல்; becoming more intense (சா.அக.).

**திமிர்நஞ்சு** *timir-nañcu*, பெ. (n.) எலும்புகளி னின்று எடுக்கும் ஒரு வகை நஞ்சு; இது தீப்பற்றி எரியும்; a poisonous element highly inflammable obtained from bones phosphorous.

*[திமிர் + நஞ்சு]*

**திமிர்நோய்** *timir-nōy*, பெ. (n.) தொடு உணர்வற்றிருக்கும் ஒரு வகை நோய்; loss of feeling or sensation.

*[திமிர் + நோய்]*

**திமிர்ப்படலம்** *timir-p-paḍalam*, பெ. (n.) கருவிழியின் சவ்வைப் பற்றிய ஒருவகை நோய்; a disease of the films over the pupil marked by thin growth of flesh.

*[திமிர் + படலம்]*

**திமிர்படு-த்தல்** timir-p-paḍu-, பெ. (n.) 1. உணர்ச்சியறும்படிச் செய்தல்; to put under the influence of anesthetics. 2. உதவாமற் போகும்படி செய்தல்; reducing to a helpless state - paralysing.

*[திமிர் + படு-]*

**திமிர்ப்படுத்துகை** timir-p-paduttugai, பெ. (n.) 1. நோவில்லாமற் செய்தல்; production of insensibility to pain. 2. பயன்படாதபடி செய்தல்; the act of rendering useless by destroying the power of action.

*[திமிர் + படுத்துகை]*

**திமிர்பிடித்தல்** *timir-p-piḍittal*, பெ. (n.) திமிரெடுத்தல் பார்க்க; see *timireḍuttal*.

*[திமிர் + பிடித்தல்]*

**திமிர்ப்பித்தம்** *timir-p-pittam*, பெ. (n.) உடம்பு முழுமையும் திமிர்த்து, கனத்து, மயக்கமும் வாந்தியும் உண்டாக்கும் ஒரு வகை நோய்; a kind of biliausness marked by drowsiness, malaise, giddiness followed by vomitting.

*[திமிர் + பித்தம்]*

**திமிர்ப்பு** *timirppu*, பெ. (n.) திமிர்ச்சி; insensibility to pain.

*[திமிர் → திமிர்ப்பு]*

**திமிர்ப்புழு** *timir-p-pulu*, பெ. (n.) 1. மலக் குடலில் இருக்கும் புழு; worms in the intestines. 2. கருக் கொள்ளாமற் செய்யுந்தன்மை யுள்ள ஒரு வகைப் புழு; some kind of worm which prevents conceiving.

*[திமிர் + புழு]*

**திமிர்ப்பூச்சி** *timir-p-pūcci*, பெ. (n.) வயிற்றுச் சிறுபுழு (வின்.); small thread worm.

*[திமிர் + பூச்சி]*

**திமிர்ப்பிடி-த்தல்** *timir-piḍi-*, செ.கு.வி. (v.i.) 1. மரத்தல்; to become numb. 2. கொழுத்தல்; to become corpulent, as the body. 3. செருக் குறுதல்; to become haughty.

*[திமிர் + பிடி-]*

**திமிர்முறித்தல்** *timir-murittal*, பெ. (n.) திமிர் விடுதல்; the act of stretching and yawning.

*[திமிர் + முறித்தல்]*

**திமிர்முறுக்கு** *timir-murukku*, பெ. (n.) ஊதையினால் உடம்பிற்கேற்படும் ஒரு நிலைமை; a condition of the body in which one in prompted by acts stretching and yawning

especially when the system is charged with vayu or vatham.

[திமிர் + முறுக்கு]

**திமிர்மொய்த்தல்** *timir-moyttal*, பெ. (n.) விரைப்புக் கொள்ளுதல்; growing stiff, stiffening.

[திமிர் + மொய்த்தல்]

**திமிர்வரி** *timir-vari*, பெ. (n.) தண்டவரி; punitive tax.

[திமிர் + வரி]

**திமிர்வளி** *timirvaḷi*, பெ. (n.) 1. பக்க ஊதை; palsy, paralysis. 2. ஊதை(வாதம்)நோய்; rheumatism, neuritis. (தைலவ. தைல. 9).

[திமிர் + வளி]

**திமிர்வாதக்கரப்பான்** *timir-vāda-k-karappāṉ*, பெ. (n.) குழந்தைகளுக்குத் தலை கனத்து, தொண்டை எரிந்து திமிருண்டாகி, உடம்பின் வலுவைக் குறைத்து, அதனால் மேல் மூச்செறிந்து, கடுமையாகக் காணும் ஒரு வகைக் கரப்பான்; a congenital disease in children characterised by heaviness of head, burning sensation in the throat, rigidity of muscles, weakness, hard breating and other symptoms of severity.

[திமிர் + வாதக்கரப்பான்]

**திமிர்வாதக்காரன்** timirvādakkāraṉ, பெ. (n.) பாரிச ஊதை கொண்டோன்; a paralytic man, one struck with paralysis or palsy.

[திமிர் + வாதக்காரன்]

**திமிர்வாயு** *timir-vāyu*, பெ. (n.) திமிர்வளி பார்க்க; see *timir-vaḷi*.

**திமிர்விடு-தல்** *timir-viḍu-*, செ.கு.வி. (v.i.) சோம்பல் முறித்தல்; to stretch and yawn from sleepiness.

[திமிர் + விடு-.]

**திமிரக்கடவி** *timira-k-kaḍavi*, பெ. (n.) சீந்தில்; moon creeper.

**திமிரகத்துந்தீரன்** *timiragattutīraṉ*, பெ. (n.) செவ்வியம்; root of black pepper.

**திமிரகரி** *timirakari*, பெ. (n.) கண் திமிரத்தைப் போக்கக்கூடிய பூடு. அதாவது ஆவாரை; tarrers cassia which is capable of curing opthalmia or country sore eye.

**திமிரகாசம்** *timira-kāsam*, பெ. (n.) கண் நோய் வகை; darkness of the eye, gutta serena producing an affection of the optic nerves.

**திமிரத்தல்** *timirattal*, செ.கு.வி. (v.i.) அதிகமாக வளி கொள்ளல்; being affected with too much of vayu in the system. 2. திமிர் அடைதல்; growing benumbed.

**திமிரதம்** *timiradam*, பெ. (n.) கண் மறைப்பு; partial sight.

**திமிரநயனம்** *timiranayaṉam*, பெ. (n.) அரைக் குருடு; partial blindness of the eye.

**திமிரபேதம்** *timirapētam*, பெ. (n.) 1. வெள் ளெழுத்து; short sight. 2. மாலைக்கண்; night blindness. 3, மந்தாரத் திமிரம்; dullness of sight. 4. வறட்சித் திமிரம்; dryness of eyes. 5. நீர்த்திமிரம். 6. கோழை (சிலேட்டுமம்)த் திமிரம். 7. மேகத்திமிரம், 8. விழிவிழுங்கி வெள்ளி (சுக்கிரன்); different varieties of the timiram. they are as stated above.

**திமிரம்** *timiram*, பெ. (n.) 1. இருள்; darkness, obsecurity, gloom. "விலகியது திமிரம்" (கம்பரா. மூலம். 161). 2. இரவு; night (பிங்.). 3. கருநிறம்; blackness, dark colour. "திமிர மாவுடற் குங்குமச் சேதகந் திமிர" (கம்பரா. வரைஞ். 56). 4. நிரையம் (நரகம்) (அக.நி.); hell. 5. திமிரகாசம் (வின்) பார்க்க; 6. ஒரு வகைக் கண்ணோய்; an eye disease. 7. விழிக் கண்கூடு; blindness without any visible defect due to diseases.

**திமிரம்** *timiram*, பெ. (n.) மாயை; māyā. "திமிரக் கொடும் பிணியாற் றேகமெரி வானேனே" (கதிரை மலை. காதல். 5).

**திமிரன்** *timiraṉ*, பெ. (n.) மந்தன்; dull, slow, inactive person or beast.

[திமிர் + அன்]

**திமிராகரன்** *timirākaraṉ*, பெ. (n.) அறிவிலி (இருளுக்கு இருப்பிடமானவன்); fool, idiot, as

being a mine of darkness and delusion. "ஒருகாலு நினையாத திமிராகரனை வாவென்று" (திருப்பு. 189).

**திமிராயிரு-த்தல்** *timirāy-iru-,* செகு.வி. (v.i.) **உணர்ச்சியற்று இருத்தல்;** being deprived of feeling or affected with palsy.

*[திமிராய் + இரு-.]*

**திமிராரி** timirari, பெ. (n.) **கதிரவன் (இருளின் பகைவன்)** (சூடா.); sun, as the foe of darkness.

**திமிராளி** timirāḷi, பெ. (n.) *1.* **பக்க ஊதைக் (வாத)காரன்;** paralytic patient. *2.* **சோம்பேறி;** sluggish person.

*[திமிர் + ஆள்]*

**திமிரேறல்** timirēṟal, செ.கு.வி. (v.i.) **திமிர் கொள்ளல்;** being affected by palsy.

**திமிரித்து வாலையிடு-தல்** *timirittu-vālai-iḍu,* பெ. (n.) **மருந்திட்டுத் தேய்த்தல்;** to apply ointment and rubbing well on the body (சா.அக.).

**திமிரியாடி** *timiriyādi,* பெ. (n.) **கழுத்து;** neck.

**திமிரூதை** *timirūdai,* பெ. (n.) *1.* **உடல் மரத்துப் போவதால் உண்டாகும் நோய் வகை;** a kind of spasm proceeding from numbness. *2.* **உடற் கொழுப்பால் ஏற்படும் மந்தஅறிவு;** mental sluggishness accompanying corpulence. *3.* திமிர்வளி பார்க்க (உவ.); see *timirvaḷi.*

**திமிரெடு-த்தல்** *timireḍu-,* செ.கு.வி. (v.i.) *1.* **திமிர்வளி கொள்ளல்;** being affected by palsy. *2.* **உணர்ச்சியறல்;** becoming insensible and motionless (சா.அக.).

**திமில்**[1] *timil,* பெ. (n.) *1.* **மீன் படகு;** catamaran, small boat. "திண்டிமில் வன்பரதவர்" (புறநா. 24). *2.* மரக்கலம் (யாழ்ப்.); vessel, ship. *3.* **எருத்தின் முரிப்பு;** hump, as of a bullock. "திமிலுடைச்சே" (உடதேசகா. சிவபுண்ணிய. 144). *4.* **வேங்கை (மலை);** East Indian kino.

**திமில்**[2] *timil,* பெ. (n.) **திமிலம்**[1] *பார்க்க;* see *timilam.* "திமிலிடுகின்ற தொல் சேடிமாருடன்" (கந்தபு. உமைவரு. 20).

**திமில்வாழ்நர்** *timil-vāḻnar,* பெ. (n.). **செம்படவர் (படகுக்காரர்);** fisherman as boatman. "திமில் வாழ்நர் சீறூர்க்கே" (சிலப். 7, 11., கயலெழுதி).

*[திமில் + வாழ்நர்]*

**திமிலம்**[1] *timilam,* பெ. (n.). **பேரொலி;** great-noise, tumult. "திமிலநான் மறைசேர் திருப் பெருந்துறையில்" (திருவாச. 29, 4).

**திமிலம்**[2] *timilam,* பெ. (n.) *1.* **பெருமீன் வகை** (பிங்.); a kind of big fish. *2.* **யானைமீன்;** a sea fish of gigantic size usually considered to be capable of devouring elephants.



**திமிலர்** *timilar,* பெ. (n.). *1.* **நெய்தனில மாக்கள்;** fishermen, inhabitants of the maritime tract. "பாய்திமிலர் வலையோடு மீன்வாரி" (தேவா. 532, 2).

*[திமில் → திமிலர்]*

**திமிலி** timili, பெ. (n.) *1.* **உடல் தடித்தவள்** (இவ.); stout, corpulant woman. *2.* **வேங்கை மரம்;** East Indian kino tree.

**திமிலிடு-தல்** *timil-iḍu-,* செ.கு.வி. (v.i.) **மிக ஒலித்தல்** (யாழ்ப்); to make a great noise; to clamour, roar.

*[திமில் → இடுதல்]*

**திமிலை**[1] *timilai,* பெ. (n.) *1.* **ஒரு வகைப் பறை** (சிலப். 3, 27, உரை); a kind of drum. *2.* **திருக்கை** *பார்க்க;* see *tirukkai,* electrical ray. *3.* **மங்கற் சிவப்பு நிறமுள்ளதும் 10 விரல நீளம் வளர்வதுமான கடல் மீன்வகை;** sea fish, dull reddish olive, attaining 10 in. in length (செ.அக.).

*[திமில் → திமிலை]*

**திமிலை²** *timilai,* பெ. (n.) ஒரு மீன். மூக்குத் துளையையொட்டிக் கண் அமைந்துள்ள இம்மீனின் உடலமைப்பு சுறாவைப் போன்றது. கையினின்றும் எளிதில் வழுக்குத் தன்மையது (தஞ்சை. மீன்.); a fish which eyes are situated near its nosbilly and rosembles shark by its structure. It slips easily from hand.

**திமிலைத்திருக்கை** *timilai-t-tirukkai,* பெ. (n.) திமிலை ஒத்த முகமுடைய திருக்கை மீன்; a kind of ray-fish.

[திமிலை → திருக்கை]



**திமிலைப்பாம்பு** *timilai-p-pāmpu,* பெ. (n.) திமிலைப் போன்ற தோற்றத்தில் காணப்படும் நச்சுத்தன்மையுள்ள கடற்பாம்பு (தஞ்சைமீன்.); a kind of sea snake.

[திமிலை + பாம்பு]

**திமிலோகப்படு-தல்** *timilōga-p-paḍu-,* பெ. (n.) தடபுடலாயிருத்தல்; to be perf ormed with great eclat.

**திமிறல்** *timiṟal,* பெ. (n.) திமிறிடு-தல் பார்க்க; see *timiridu-.*

[திமிர் + அல்]

**திமிறிடு-தல்** *timiṟiḍu-,* 1. தேய்த்தல்; rubbing. 2. பறித்தல்; plucking. 3. வளர்த்தல்; growing.

**திமிறியடி-த்தல்** *timiṟi-y-aḍi-,* செ.கு.வி. (v.i.) 1. ஒருவன் பிடிப்பினின்றும் விடுவித்துக் கொள்ளுதல்; to wrench onesef from another's grip. 2. எதிர்த்துப்பேசுதல்; to contradict or oppose with vehemence. 3. குளிர்காற்றால் நடுக்க மிகுதல்; to be violent as the quaking due to ague.

[திமிறி + அடி-]

**திமிறு-தல்** *timiṟu-,* செகுன்றாவி. (v.t.) 1. வலிந்து தன்னைப் பிறரிடமிருந்து விடுவித்தல்; to wriggle out of another's grip. 2. நீண்டு வளருதல்; to grow tall and big. "ஆள் இப்போது திமிறிப் போய்விட்டான்" 3. மா முதலியன சிந்துதல் (யாழ்ப்.); to be scattered, spilled, as flour in pounding.

[திமிர் → திமிறு]

**தி.மு.** *t.mu.,* பெ. (n.) திருவள்ளுவராண்டு பார்க்க; see *tiruvaḷḷuvarāṇḍu.*

**திமுதிமுவெனல்** *timu-timu-v-eṉal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. of repeated thumping or beating sound (செ.அக.).

**திமை-த்தல்** *timai-,* செ.குன்றாவி. (v.t.) கிளப்புதல் (சது.); to raise up, lift, as stones.

**தியக்கடி** *tiyakkaḍi,* பெ. (n.) சோர்வு (வின்.); faintness, exhaustion.

[தியங்கடி → தியக்கடி]

**தியக்கம்** *tiyakkam,* பெ. (n.) 1. சோர்வு; faintness, exhausinion, drooping, as from hunger or heat தியக்கமற வின்பசுகஞ் சேர்வதென்றோ (தாயு. பெற்றவட். 5). 2. மயக்கம் (வின்.); swoon, loss of the senses syncope. 3. அறிவுக்கலக்கம் (உ.வ.); bewilderment, delusion. 4. மனக்குழப்பம் (வின்.); meloncholy, dejection, pensiveness.

[தியங்கு + அம்]

**தியக்கு¹** *tiyakku,* பெ. (n.) தியக்கம் (சது) பார்க்க; see *tiyakkam.*

**தியக்கு²-தல்** *tiyakku-,* செ.குன்றாவி. (v.t.) மயங்கச் செய்தல்; to cause confusion, to conf ound. "சிறியனேனை நீர்தியக்குத வழகோ" (அருட்பா. 2. நாடகவின். 10).

**தியக்கோன்** *tiyakkōṉ,* பெ. (n.) பூசைப் (பரிசாரகன்); deacon (செ.அக.).

**தியக்கோனாடை** *tiyakkōṉ-ādai,* பெ. (n.) கிறித்தவத்துறவியரின் குப்பாய வகை; wide-sleeved coat of bishops, etc., surplice.

**தியங்கு-தல்** *tiyaṅgu-,* செ.கு.வி. (v.i.) *1.* சோர்தல்; to faint, droop, languish. *2.* மனக் கலக்கமுறுதல்; to be dejected, pensive, sad. "அசுரேசர் வாசல்கள் சென்று நின்று தியங்கியே" (சிவரக. தேவியுடன்-11). *3.* அறிவு மயங்குதல்; to be confounded, deluded.

**தியங்குவிழல்** *tiyaṅku-viḻal,* செகு.வி.. (v.i.) மூர்ச்சையாதல்; fainting (சா.அக.).

**தியசம்** *tiyašam,* பெ. (n.) மரஞ்சன் (மலை); tree turmeric (செ.அக.).

**தியதி** *tiyadi,* பெ. (n.) தேதி; date. "கற்கடக ஞாயிற்று அஞ்சாந்திய தியும்" (TAS i, 252).

M. tiyyadi.

**தியந்தி** *tiyandi,* பெ. (n.) திராய் (மலை) பார்க்க; see *tirāy.*

**தியம்பகன்** *tiyampagaṉ,* பெ. (n.) திரயம்பகன் பார்க்க; see *tirayampagaṉ.* "தியம்பகன் திரிசூலத்தன்ன கையன்" (தேவா. 30, 8).

**தியரடி** *tiyaradi,* பெ. (n.) தியக்கடி (மலை) பார்க்க; see *tiyakkaḍi.*

**தியாக்கர்** *tiyākkar,* பெ. (n.) தியக்கோன் பார்க்க; see *tiyakkōṉ* (செ.அக.).

**தியாகப்பள்ளு** *tiyāga-p-paḷḷu,* பெ. (n.) திருவாரூர்ப்பள்ளு பார்க்க; see *tiruvārūr-p-paḷḷu* (செ.அக.).

*[தியாகர் + பள்ளு]*

**தியைபி** *tiyaibi,* பெ. (n.) திப்பிலி; long pepper.

**திரக்காரவஞ்சி** *tirakkāravañci,* பெ. (n.) சிறு களா; bengal current.

**திரக்கிரணி** *tirakkiraṇi,* பெ. (n.) பிரண்டை (மலை.); square stalked wild grape.

**திரக்கு¹-தல்** *tirakku-,* செகுவி. (v.i.) சுருங்குதல்; to be crumpled; to shrivel, wrinkle. "திரக்குவிரற் கழுதுக்கு" (பதினொ. பொன்வண். 75).

**திரக்கு²-தல்** *tirakku-,* செ.குன்றாவி. (v.t); தேடுதல்; to search; to enquire "ஊரெங்கும் திரக்கியும் கள்ளப்பயல் அகப்பட வில்லை" (நாஞ்.).

ம. திரக்குக

*[திரங்கு → திரக்கு]*

**திரக்கு²** *tirakku,* பெ. (n.) கூட்டம்; crowed. "திருவிழாத் திரக்கில் தவறின குழந்தையைக் காண முடியாது" (நாஞ்.).

**திரகதாரு** *tiraka-tāru,* பெ. (n.) நிலப்பனை; ground palm.

**திரகம்** *tiragam,* பெ. (n.) திரக்கம் (மலை) பார்க்க; see *tirakkam.*

**திரகமூலகம்** *tiragamūlagam,* பெ. (n.) திரகமூலம் (வின்) பார்க்க; see *tiraga-mūlam.*

**திரகமூலம்** *tiragamūlam,* பெ. (n.) முடக் கொற்றான் (மலை) பார்க்க; see *muḍakkọṟṟāṉ.*

**திரகலூமம்** *tiragalūmam,* பெ. (n.) வேதாரு (மலை.); red cedar. *2.* செம்புளிச்சை; Indian or red sorrel.

**திரகவூர்தி** *tiraga-vūrti,* பெ. (n.) காட்டுப் பலா; wild jack.

**திரங்கம்¹** *tiraṅgam,* பெ. (n.) *1.* மிளகு (மலை) பார்க்க; see black pepper. *2.* காட்டு மிளகாய்; wild chilli.

*[திரங்கு → திரங்கம்]*

**திரங்கம்²** *tiraṅgam,* பெ. (n.) நகரம் (யாழ்.அக.); town, city.

M. tirakku

*[திரங்கு → திரங்கம்]*

**திரங்கல்** *tiraṅgal,* பெ. (n.) *1.* சுருங்குகை; being shrivelled, wrinkling, crumpling. "திரங்கன் முகுவன்" (தேவா. 1155, 3). *2.* திரங்கம்1 (சூடா) பார்க்க; *3.* முத்துக்குற்றவகை; a flaw in pearls. "சுப்பிரமும் திரங்கலும் உடையன உட்பட்ட முத்து ஒன்பதினால் (S.I.I.ii, 78). *4.* அகவை மிகுதியால் தோல் சுருக்கமடைதல்; shrinking of the skin through old age. *5.* மிளகு; black pepper.

*[திரங்கு → திரங்கல்]*

**திரங்கலம்** *tirangalam*, பெ. (n.) திரங்கம்1 (மலை) பார்க்க; see *toramga*.

**திரங்கன்முகவன்** *tirangan-mugavan*, பெ. (n.) குரங்கு (சுருங்கின முகத்தோன்); monkey as having puckered face. "திரங்கன் முகவன் சேர்காவும் பொழிலும்" (தேவா. 1155, 3).

*[திரங்கன் + முகம்]*

**திரங்கு-தல்** *tirangu-*, செ.கு.வி. (v.i.) 1. வற்றிச் சுருங்குதல்; to be wrinkled, crumpled. "தெங்கின் மடல்போற் றிரங்கி" (மணி. 20, 53). 2. உலர்தல்; to dry up, as dead leaves. "திரங்கு மரனாரிற் பொலியச் சூடி" (மலைபடு. 431). 3. சுருளுதல்; to be folded in, as the fingers of a closed hand; to be curled up, as the hair. "திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்கு" (கம்பரா. காட்சி. 25). 4. தளர்தல்; to faint, droop. "மடமா னம்பிணை மறியொடு திரங்கு" (ஐங்குறு. 326).

**திரட்கோரை** *tirat-kõrai*, பெ. (n.) பஞ்சாய்க் கோரை (பிங்.); a kind of sedge, cyperus rotundus tuberoscus. 2. கச்சற்கோரை; bitte sedge gram. 3. கஞ்சாங்கோரை; persian tooly or white basil

*[திரள் + கோரை]*

**திரட்சி** *tiratci*, பெ. (n.) 1. உருண்டை வடிவம்; globularity, rotundity. 2. கூட்டம்; multitude, assemblage. "திரட்சி விரும்பக் கையாலே பாத்திரத் தையிருத்திய" (பு.வெ. 3, 5, உரை). 3. முத்து (உரி.நி.); pearl.

*[தில் → திர் → திரள் → திரட்சி (வே.சொ.க. பக். 262).]*

**திரட்டடைப்பன்** *tirattataippan*, பெ. (n.) மாட்டு நோய் வகை (மாட்டுவரி. 3); a kind of cattle disease.

*[திரட்டு + அடைப்பன்]*

**திரட்டல்** *tirattal*, பெ. (n.) திரட்டு-தல் பார்க்க; see *tirattu-*.

*[திரள் → திரட்டல்]*

**திரட்டிக்கோவை** *tiratti-k-kõvai*, பெ. (n.) கோவைக்கொடி; Indian caper (சா.அக.).

*[திரட்டு + கோவை]*

**திரட்டியீரல்முட்டி** *tiratti-y-iral-mutti*, பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவா. 92); a kind of cattle disease.

*[திரட்டு + ஈரல் + முட்டி]*

**திரட்டு[1]-தல்** *tirattu-*, செ.குன்றாவி. (v.i.) 1. உருண்டையாக்குதல்; a make round lumps or balls, as of boiled rice, towork into round masses as pills; tomake round or conical, as a turner with lathe. "விளங்காய் திரட்டினா ரில்லை" (நாடி, 103) (M. tirattuka). 2. ஒன்று கூட்டுதல்; to collect, as taxes; to bring together, muster, gather as men, troops. "படை திரட்டினார்கள்" 3. கலத்தல்; to mix. "திருமுலைப் பாலினோடு ஞானமுந் திரட்டி" (திருவிளை. பாண்டியன். புரந்.20). 4. குவித்தல்; to heap up, as grrain; to amass, as wealth. 5. தொகுத்தல்; to compile from various authors, incorporate, embody. 6. சுருக்குதல்; to state succinctly. 7. கட்டுதல்; to construct, as dikes in rice fields "வரம்பு திரட்டுகிறார்கள்" (இவ.).

*[திரள் → திரட்டுதல்]*

**திரட்டு[2]** *tirattu-*, பெ. (n.) 1. திரட்டுகை; gathering, accumulation. 2. தொகை நூல்; compilation. "பெருந்திரட்டு, குறுந்திரட்டு" 3. கண்டக் காய்ச்சிய மருந்து; a medicine which has been strengthened by the evaporation of its nonactive parts.

*[திரள் → திரட்டு]*

**திரட்டு[3]** *tirattu-*, பெ. (n.) (இருது) பெண் பூப்பெய்தல் (யாழ்.அக.); puberty of girls.

**திரட்டுக்கலியாணம்** *tirattu-k-kaliyanam*, பெ. (n.) மகளிர் பூப்பெய்தல் விழா; the subsequent inter course which makes a marriage legally valid.

*[திரட்டு + கலியாணம்]*

**திரட்டுப்பால்** *tirattu-p-pãl*, பெ. (n.) சர்க்கரை யிட்டு இறுகக் காய்ச்சின பால்; milk thickened by boiling with sugar. "திரட்டுப் பால் குமட்டுதோ" (இராமநா. அரண்9). 2. ஒரு வகைப் பண்ணிகாரம்; a kind of sweet preparation.

*[திரட்டு + பால்]*

**திரட்டோசை** *tiraṭṭōsai*, பெ. (n.) உரப்பலோசை (பிங்.); bustle.

*[திரட்டு + ஓசை]*

**திரடம்** *tiraḍam*, பெ. (n.) வெண்ணொச்சி (சங்.அக.); five-leaved chaste tree.

**திரடு** *tiraḍu*, பெ. (n.) மேடு (நெல்லை); high or elevated ground.

*[திரள் → திரடு]*

**திரண்** *tiraṇ*, பெ. (n.) திரணம் பார்க்க; see *tiraṇam*. "திரணுறு செழுகை போல்" (சிவதரு. சனை மரண. 88).

**திரண்டகல்** *tiraṇḍa-kal*, பெ. (n.) 1. உருளைக் கல் (வின்.); cylindrical stone-roller. 2. குண்டுக் கல் (பிங். 4, 54.); globular stone.

*[திரள் + கல்]*

**திரண்டகழுத்து** *tiraṇḍa-kaḻuttu*, பெ. (n.) உருண்டையாகவும் அழகாகவுமுள்ள கழுத்து; round beautiful neck.

*[திரள் + கழுத்து]*

**திரண்டகூட்டம்** *tiraṇḍa-kūṭṭam*, பெ. (n.) மக்கள் கூட்டம்; crowd of people.

*[திரள் + கூட்டம்]*

**திரண்டகூடு** *tiraṇḍa-kūḍu*, பெ. (n.) இழைப் புளிக்கூடு (யாழ்ப்.); frame of a smoothing plane.

*[திரள் + கூடு]*



**திரண்டகொடிச்சி**[1] *tiraṇḍa-koḍicci*, பெ. (n.) புற்றாம் பழம் அதாவது கரையான் (புற்று) கூடு; the nest of the white ants.

*[திரள் + கொடிச்சி]*

**திரண்டகொடிச்சி**[2] *tiraṇḍa-koḍicci*, பெ. (n.) மாழை மண்வகை (வின்.); a kind of ore.

*[திரள் + கொடிச்சி]*

**திரண்டபால்** *tiraṇḍa-pāl*, பெ. (n.) 1. திரட்டுப் பால் பார்க்க; see *tiraṭṭu-p-pāl*. 2. திரைந்த பால்; concentrated milk.

*[திரள் + பால்]*

**திரண்டபெண்** *tiraṇḍa-peṇ*, பெ. (n.) பருவமடைந்தவள்; matured girl.

*[திரள் + பெண்]*

**திரண்டமுகம்** *tiraṇḍa-mugam*, பெ. (n.) உருண்டையான முகம்; round face.

*[திரள் + முகம்]*

**திரண்டமுலை** *tiraṇḍa-mulai*, பெ. (n.) செழுமையான மார்பகம்; well developed breast.

*[திரள் + முலை]*

**திரண்டமூலம்** *tiraṇḍa-mūlam*, பெ. (n.) 1. உருண்டையான கிழங்கு; bullous root. 2. முளை மூலம்; external piles.

*[திரள் + மூலம்]*

**திரண்டவடிவு** *tiraṇḍa-vaḍivu*, பெ. (n.) உருண்டை வடிவு; round shape or figure.

*[திரள் + வடிவு]*

**திரண்டவலகு** *tiraṇḍa-v-alagu*, பெ. (n.) மட்டலகு (இ.வ.); blade of jack-plane.

*[திரள் + அலகு]*

**திரண்டவீக்கம்** *tiraṇḍa-vīkkam*, பெ. (n.) ஒரு பக்கத்திற்காணும் வீக்கம்; swelling in one part of the body.

*[திரள் + வீக்கம்]*

**திரணகடம்** *tiraṇakaḍam*, பெ. (n.) ஒரு கடல் நண்டு; a kind of sea crab.

**திரணகேது** *tiraṇa-kētu*, பெ. (n.) மூங்கிலரிசி; bamboo seed.

**திரணச்சி** *tiraṇacci*, பெ. (n.) எரியுப்பு (வின்.); an alkaline salt.

**திரணச்சோதி** *tiraṇa-c-cōti,* பெ. (n.) *1. நச்சுப் புல்;* poisonous grass. *2. சிவப்பு நாணற் புல்;* a red variety of sacred or sacrificial grass.

**திரணசாரம்** *tiraṇacāram,* பெ. (n.) *பூவன் வாழை;* true banana.

**திரணசீதம்** *tiraṇa-sītam,* பெ. (n.) *1. நறுமணப் புல்;* fragrant grass. *2. மல்லிகை;* jasmine. *3. தாழை;* fragrant screw pine.

**திரணசோணிதம்** *tiraṇa-sōṇitam,* பெ. (n.) *புல் அரத்தம்;* grass blood.

**திரணசோத்தமம்** *tiraṇa-sōttamam,* பெ. (n.) *பெரிய சாமை;* large shaumay panīcum freementaceum.

**திரணசௌண்டிகம்** *tiraṇa-sowṇḍigam,* பெ. (n.) *ஒரு நாயுருவி;* a kind of achyranthus.

**திரணத்தான்யம்** *tiraṇa-t-tāṉyam,* பெ. (n.) *காட்டரிசி;* wild rice, paddy.

**திரணத்துவம்** *tiraṇa-t-tuvam,* பெ. (n.) *மூங்கிற்குருத்து;* bamboo shoot.

**திரணதூமாக்கினி** *tiraṇa-tūmākkiṉi,* பெ. (n.) தொல்காப்பியரது இயற்பெயர் *(தொல். பாயி. நச். உரை);* the proper name of tol-kāppiyar.

**திரணி** *tiraṇi,* பெ. (n.) *1. புளியங்கொடி;* climbing brachypterum. *2. கொடிப் பூண்டு;* long creeper.

**திரணை**[1] *tiraṇai,* பெ. (n.) *1. உருண்டை;* ball, anything globular. *2. மாலைவகை;* a kind of garland. "இரட்டிய திரணையோடு" *(சிலப். 22, 43).* *3.* கட்டட எழுதக வேலை *(வின்.);* chaplet, cornice, coping. *4.* வைக்கோற் புரிக்கற்றை *(வின்.);* load on a bullock's back. *5.* திண்ணை *(நெல்லை);* pial. *6. கம்பி;* wire, rod. *7. தக்காளி;* tomato.

*[திரளை → திரணை]*

**திரணை**[2] *tiraṇai,* பெ. (n.) எழுதக வேலைக் குதவுங் கொத்துக் கரண்டி *(இவ.);* mason's trowel for cornice work.

*[திரளை → திரணை (வே.சொல்.க. பக். 262).]*

**திரணைக்கம்பி** *tiraṇai-k-kambi,* பெ. (n.) இருப்புக்கம்பி (C.E.M.); cylindrical metal rod.

*[திரணை + கம்பி]*

**திரணைச்செடி** *tiraṇai-c-ceḍi,* பெ. (n.) *பாவட்டை;* Indian pavetta.

*[திரணை + செடி]*

**திரணைத்தாழ்ப்பாள்** *tiraṇai-t-tālppāḷ,* பெ. (n.) தாழ்ப்பாள் வகை (C.E.M.); round bold.

*[திரணை + தாழ்ப்பாள்]*

**திரணைமேடு** *tiraṇai-mēḍu,* பெ. (n.) சுவரின் மேலிடம் (C.E.M.); coping.

*[திரணை + மேடு]*

**திரணையரம்** *tiraṇai-y-aram,* பெ. (n.) *உருண்டையான அரவகை;* round file.

*[திரணை + அரம்]*

**திரணையிழைப்புளி** *tiraṇai-y-iḻai-p-puḷi,* பெ. (n.) இழைப்புளிக் கருவி வகை (C.E.M.); moulding plane.

*[திரணை + இழைப்புளி]*

**திரணைவேலை** *tiraṇai-vēlai,* பெ. (n.) கட்டட எழுதகவேலை (C.G.); cordon work, cornice-work.

*[திரணை + வேலை]*

**திரந்தி** *tiranti,* பெ. (n.) *வால் திருக்கை;* a sea shark fish which has a black tail.

**திரந்திகம்** *tirantigam,* பெ. (n.) திப்பிலி *(மலை.);* long pepper.

**திரபருட்சி** *tira-paruṭci,* பெ. (n.) *சிற்றீஞ்சு;* small date tree.

**திரபுட்பம்** *tira-putpam,* பெ. (n.) *துத்தநாகம்;* zinc.

**திரம்** *tiram,* பெ. (n.) *1. தகரைச் செடி;* ringworm plant. *2. உறுதி;* firmness. *3. வலி;* strength. *4. உரம்;* hardnss. *5. மலை;* mountain. *6. நிலைவரம்;* everlasting state. *7. நிலம் (பூமி);* earth.

*[தில் → திர் → திரம் (வ.மொ.வ.).]*

**திரமம்** *tiramam,* பெ. (n.) *1.* **பழைய கிரேக்க நாணய வகை** *(T.A.S. iv. 30);* an ancient greek coin, used in India. *2.* **சாதிலிங்கம்;** cinnabar.

**திரல்** *tiral,* பெ. (n.) **காட்டாமணக்கு** *(மலை.);* physic nut.

**திரலடி** *tiralaḍi,* பெ. (n.) **ஏலம்** *(மலை.);* cardomam plant.

**திரவியம்** *tiraviyam,* பெ. (n.) **செல்வம்;** wealth. 'என் திரவியமே! கண்ணுறங்கு' *(உ.வ.).*

**திரவாதி** *tiravādi,* பெ. (n.) **காட்டாமணக்கு** *(வின்.);* physic nut.

**திரள்[1](ளு)-தல்** *tiraḷ-,* செ.கு.வி. (v.i.) *1.* **உருண்டையாதல்;** to become round, globular. "திங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி" *(நாலடி. 199). 2.* **மிகக்கூடுதல்;** to assemble, congregate, to collect in large numbers. "சனம் திரளுகிறது" *3.* **மிகுதல்;** to accumulate, to abound "அவலு மிசையு நீர்த்திரள் பீண்டி" *(மதுரை. 240). 4.* **இறுகுதல்;** to become dense; to grow thick. 'பால் திரண்டு விட்டது'. *5.* **வீங்குதல்;** to form, as a tumour, a pustule; to swell up, bulge out. 'புண்கட்டி திரண்டிருக்கிறது' (வின்.) *6.* **பருத்தல்** *(வின்);* to mature, as fruits; to grow to full size, as beasts, tubers.

ம. திரளுக

*[துல் → தில் → திர் → திரள்(ளு)- (வே.சொல்.க. பக். 262).]*

**திரள்[2]** *tiraḷ,* பெ. (n.) *1.* **உருண்டை;** ball, round mass, globe. "தேசப்பளிங்கின்றிரளே" *(திருவாசக. 4, 103).* ம. திரள. *2.* **கூட்டம்;** crowd, assembly, multitude, flock, herd, shoal, aggregation. "ஏனத்திரள் வந்திழியுஞ் சாரல்" *(தேவா. 353, 1). 3.* **குலை** *(வின்.);* cluster, clump, tuft. *4.* **படை** *(யாழ்.அக.);* army. *5.* **மிகுதி;** abundance. *6.* **இயக்கம் நான்கனுள் விரைந்த செலவினை யுடைய பாடல்** *(சிலப். 3, 6, உரை);* song with quick movement, one of four iyakkam.

*[துல் → தில் → திர் → திரள்]*

**திரள்[3](ளு)-தல்** *tiraḷ-,* செ.கு.வி. (v.i.) **பெண் பருவமெய்தல்;** to arrive at puberty.

ம. திரளுக

*[திரள் → திரள்(ளு)-தல்]*

**திரள்கோரை** *tiraḷ-kōrai,* பெ. (n.) **கஞ்சாங் கோரை வகை** *(மலை.);* white basil.

*[திரள் + கோரை]*

**திரள்மணிவடம்** *tiraḷ-maṇi-vaḍam,* பெ. (n.) **கழுத்தணிவகை;** a kind of necklace. "திரள் மணிவடம் ஒன்று" *(S.I.I. ii, 143).*

*[திரள் + மணிவடம்]*

**திரள** *tiraḷa,* கு.வி.எ. (adv.) **முழுதும்;** entirely. "திரள ஒப்பில்லையாகில் ஒருவகை யாலேதான் ஒப்புண்டோ" *(ஈடு. 1, 1, 2).*

**திரளாரம்** *tiraḷāram,* பெ. (n.) **நிலப்பனை** *(மலை.);* ground palm.

**திரளி** *tiraḷi,* பெ. (n.) *1.* **மீன்வகை** *(யாழ்ப்.);* perch, marine, gerres *(செ.அக.) 2.* **தேளி மீன்;** scorpion fish. *3.* **கராம்பூ;** cloves.



**திரளுதல்** *tiraḷutal,* பெ. (n.) *1.* **உருட்சியாதல்;** *2.* **பூப்பெய்தல்;** attaining puberty.

*[திரள் → திரளுதல்]*

**திரளை** *tiraḷai,* பெ. (n.) *1.* **சோற்றுக்கட்டி;** a solid round object, as a ball of rice. "சோறுதண் டயிரி னாற்றிரளை மிடற்றிடை நெருக்குவார்" *(திவ். பெரியதி. 2, 1, 7). 2.* **நூலின் உருண்டை** *(வின்.);* skein of thread. *3.* **கூட்டம்** *(இ.வ.);* assemblage.

*[திரள் → திரளை]*

**திரா** *tirā,* பெ. (n.) *1.* **பவள மல்லிகை** *(மலை);* night jasmine. *2.* **மெழுகு கட்டி வார்க்கும் ஒரு வகைக் கலப்பு மாழை;** an alloy cast or moulds perhaps pinch beck. *3.* **பவள மல்லிகை மரம்;**

coral jasmine tree. *4.* *கண்பூ;* cataract of the eye.

**திராக்கவுப்பு** *tirākka-v-uppu,* பெ. (n.) **ஒரு வகை உப்பு;** cream of tartar.

**திராகம்** *tirāgam,* பெ. (n.) **உயர எறிந்து பிடிக்கை** *(யாழ்.அக.);* throwing up and catching.

**திராங்கு** *tirāṅgu,* பெ. (n.) **தாழ்ப்பாள்** *(W.);* latch.

**திராசம்** *tirāsam,* பெ. (n.) **மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று** *(S.I.I.ii, 78);* a flaw in rubies.

**திராசனம்** *tirāsaṉam,* பெ. (n.) **அசையா விருக்கை** *(சி.சி. 10, 5, சிவாக்.);* study, firmsitting posture.

**திராசனிமுத்திரை** *tirāsaṉi-muttirai,* பெ. (n.) **கை முத்திரை வகை** *(செந்10, 425);* a hand pose.

**திராசிரவம்** *tirā-ciravam,* பெ. (n.) **பேராமல்லி;** onge tubed arabia jasmine.

**திராசு**[1] *tirāsu,* பெ. (n.) **துலாக்கோல்;** balance.

**திராசு**[2] *tirāsu,* பெ. (n.) **திராசுக்கயிறு பார்க்க;** see *tirāsu-k-kayiṟu.*

**திராசுக்கயிறு** *tirāsu-k-kayiṟu,* பெ. (n.) **குதிரை வண்டியைப் பூட்டுங் கயிறு;** each of the two side straps or chains by which horse draws vehicle.

*[திராசு + கயிறு]*



**திராட்டிலேவிடு-தல்** *tirāṭṭilē-viḍu-,* செ.குன்றாவி. (v.t.) **திண்டாடவிடுதல்;** to leave in the lunch. *அவன் கடன் தருவான் என்று காரியத்தில் இறங்கினேன், இப்படித் திராட்டிலேவிட்டு விட்டானே' (உ.வ.).*

**திராடம்** *tirāḍam,* பெ. (n.) **பாலை யாழ்த்திறத்து ஒன்று** *(பிங்.);* a secondary melody type of the pālai class.

**திராணி** *tirāṇi,* பெ. (n.) **வலிமை;** strength. *உழைக்கத் திராணி வேண்டும் (உ.வ.).*

**திராமரம்** *tirā-maram,* பெ. (n.) **பவள மல்லிகை மரம்** *(வின்);* coral jasmine tree.

**திராய்** *tirāy,* பெ. (n.) **கீரை வகை;** a profuesly branching prostrate herbs.

**திராய்க்கம்பம்** *tirāi-k-kambam,* பெ. (n.) **விட்டம் (உத்தரம்);** beam, long squared piece of wood.

*[திராய் + கம்பம்]*

**திரி**[1]**-தல்** *tiri-,* செ.கு.வி. (v.i.) *1.* **அலைதல்;** to walk about, wander. "வண்டாய்த் திரிதருங் காலத்து" *(நாலடி, 284).* *2.* **சுழலுதல்;** to turn, whirl. "வலந்திரியாப் பொங்கி" *(பு.வெ. 9: 12).* *3.* **திருகுறுதல்;** to be twisted, convolved. "திரிந்து மறிந்துவீழ் தாடி" *(கலித். 15).* *4.* **சலித்தல்;** to move. "நாராசத் திரிவிற் கொள்ளத்தருவது காந்தம்" *(மணிமே. 27, 55; 6).* *5.* **போதல்;** to proceed *(பிங்).* *7.* **வேறுபடுதல்;** to change, vary. "நாஅல் வேத நெறிதிரியினும்" *(புறநா. 2).* *8.* **எழுத்து மாறுதல்;** to be substituted, as a letter by another. "தோன்ற றிரிதல் கெடுதல்" *(நன். 154).* *9.* **கெடுதல்** *(திவா.);* to perish. *10.* **பால் தன்மை கெடுதல்;** to change in quality, to become sour. *11.* **மயங்குதல்;** to be confused. "திரிந்தயர்ந்தகன் றோடி" *(பரிபா. 3; 54).*

**திரி**[2]**-தல்** *tiri-,* செ.குன்றாவி. (v.t.) **கைவிடுதல்;** to leave, to abandon. "இனந்திரி யேறுபோல" *(சீவக. 2720).*

**திரி**[3]**-த்தல்** *tiri-,* செ.குன்றாவி. (v.t.) *1.* **அலையச் செய்தல்;** to cause to wander. "கொடிப்புள் திரித்தால்" *(திவ். பெரியதி 1, 10;; 2).* *2.* **சுழற்றுதல்;** to turn, whirl. "எஃகு வலந்திரிப்ப" *(திருமுரு. 111).* *3.* **முறுக்குதல்;** twist. *4.* **திரும்பச் செய்தல்;** to

cause to return. "சென்று சென்றழியுமாவி திரிக்குமால்" (கம்பரா. மாயாசனக. 23). 5. வேறு படுத்துதல்; to change, alter, vary. 'அறிவு திரித்து' (மணிமே. 23; 39). 6. மாவரைத்தல்; to grind as flour. 7. பலதிறப்படுத்துதல்; to diversity. 8. மொழிபெயர்த்தல்; to translate. 9. சேதித்தல்; to break, cut, smash. "அவனுருவு திரித்திட்டோன்" (பரிபா. 5;35). 10. எழுத்துகளை ஒற்றுமைப்பட அமைத்தல்; to repeat words and syllables in different meaning.

**திரி**[4] *tiri*, பெ. (n.) 1. முறுக்குகை; twisting. "திரிபுர நரம்பின்" (பட்டினப். 254). 2. விளக்குத்திரி; roll or twist of cloth or thread for a wick. "நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரி கொளீஇ" (முல்லை. 48.). 3. தீப்பந்தம்; torch of twisted cloth. "திரியெடுத்தாடுகிறான்" (உ.வ.). 4. வெடிக் குழாயின் திரி; candle. 5. மெழுகுத்திரி; candle. 6. புண்ணுக்கிடும் திரி; lint. 7. வெள்ளைப்பூடு; Garlic (தைலவ. தைல. 91). 8. காதுக்கிடும் திரி; small roll of cloth put into the pierce bore of child, widening the aperture.

**திரிக்குழாய்** *tiri-k-kulay*, பெ. (n.) தீப்பந்தத்திற்கு எண்ணெய் வார்க்குங் கருவி; oil can with a long nattow spout for feeding a torch (பதிற்றுப். 47, உரை).

[திரி + குழாய்]

**திரிகடுகம்** *tiri-kaḍukam*, பெ. (n.) 1. சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூவகை மருந்துச் சரக்குகள் (திவா.); medicinal stuffs, numbering three, viz. cukku, milaku, tippili. 2. பதினெண்கீழ்க் கணக்கினுள் ஒன்றும் நல்லாதனாரால் 100 செய்யுட்களில் இயற்றப்பெற்றதும் ஒவ்வொரு செய்யுளிலும் மூன்று செய்திகளை உணர்த்து வதுமான ஓர் அறநூல்; an ancient didactic work by Nallātaṉār, mentioning three points in each of the 100 stanzas, one of padiṉ-eṇ-kīḻ-kaṇakku, q.v.

**திரிகடுகு** *tiri-kaḍuku*, பெ. (n.) திரிகடுகம் பார்க்க (பதார்த்த. 959); see *tiri-kaḍugam*.

[திரி + கடுகு]

**திரிகண்** *tiri-kaṇ*, பெ. (n.) மூங்கில் (பிங்.); bamboo.

[திரி + கண்]

**திரிகல்** *tirikal*, பெ. (n.) எந்திரம்; handmill "திரிகலொப்புடைத்தாய... தொண்டகம்" (கல்லா. 24:13).

[திரி + கல்]

**திரிகூடராசப்பகவிராயர்** *tirikūḍa-rāsappa-kavirāyar*, பெ. (n.) 18ஆம் நூற்றாண்டில் குற்றாலத் தலபுராணம், குற்றாலக் குறவஞ்சி முதலிய நூல்கள் இயற்றிய புலவர்; the author of Kurrāla-t-taḷa-purāṇam, kurrāla-k-kuṟavañji and other poems, 18th C.

[திரிகூடம் + இராசப்பகவிராயர்]

**திரிகை**[1] *tirikai*, பெ. (n.) 1. அலைகை; roaming. 2. இயந்திரம்; handmill. 3. குயவன்சக்கரம்; potter's wheel. "குயவர் திரிகையென" (கம்பரா. மூலபல. 165). 4. இடக்கை மேளம்; musical instrument. 5. நாட்டிய கூத்துவகை (சிலப். பக். 81); a particular gesture in dance.

[திரி + கை]

**திரிகை**[2] *tirikai*, பெ. (n.) முந்திரிக்கொட்டை; cashew nut.

**திரிகைக்கல்** *tirikai-k-kal*, பெ. (n.) திரிகல் பார்க்க; see *tirikal*.

[திரிகை + கல்]

**திரிகைக்கோல்** *tirikai-k-kōl*, பெ. (n.) குயவன் சக்கரம் சுழற்ற பயன்படுத்தும் கோல்; the stick used in turning the potter's wheel.

[திரிகை + கோல்]

**திரிகோணப்பாலை** *tiri-kōṇa-p-pālai*, பெ. (n.) பாலைப்பண் வகை (சிலப். 17; 18, பக். 453); one of the four modes of the ancient Tamil music.

[திரிகோணம் + பாலை]

**திரிசங்கு** *tiri-caṅku*, பெ. (n.) கதிரவக் குலத்துத் தோன்றிய அயோத்தி வேந்தனும் மாந்த உடலுடன் விசுவாமித்திர முனிவரால் துறக்கத்திற்கு (சுவர்க்கம்) விடுக்கப் பெற்றவனுமான அரசன்; a prince of oudh the solar line, who was bodily elevated to a new

heaven by the sage Visvāmitra. "மீதுபோந் திரிசங்கை" (கந்தபு. ஆற்றுப். 22).

**திரிசங்குநிலை** *tiri-caṅku-nilai,* பெ. (n.) இருபக்க வாய்ப்பையும் இழந்து இடையில் மாட்டிகொண்ட நிலை; இரண்டுங்கெட்டான் நிலை; the state of being left in the middle having lost both options, the situation of falling between two stools.

**திரிசடை** *tiri-caḍai,* பெ. (n.) இலங்கையில் சீதைக்குத் துணையாயிருந்து உதவியவள் (கம்பரா. காட்சி. 31.); the daughter of vibhīsanā and companion of sīta during her capitivity in Lanka.

**திரிசொல்** *tirišōl,* பெ. (n.) செய்யுளில் மட்டும் வழங்குதற்குரிய தமிழ்ச் சொல் (தொல். சொல். 399); Indigenous Tamil word used only in literary works.

[திரி + சொல்]

**திரிஞ்சான்** *tiriñjāṉ,* பெ. (n.) கறையான் (இ.வ.); termites.

**திரிஞ்சில்** *tiriñjil,* பெ. (n.) வௌவால்; bat.

[துரிஞ்சில் → திரிஞ்சில்]

**திரிடி** *tiriḍi,* பெ. (n.) 1. கரும்புக்கணு; the juice of sugarcane. 2. கள்ளி; spurge in general Euphoribic genus.

**திரிதடம்** *tiritaḍam,* பெ. (n.) உட்காதிலிருக்கும் வளைவுள்ள மூன்று குழல்கள்; the three semicircular canals or ear vessels, the three long canals of the labrinth.

**திரிதரவில்லாவிருக்கை** *tiridaravillā-virukkai,* பெ. (n.) தாமரைமுகம் போன்ற ஒன்பது வகைப் பிரிவுடைய சலியாத் தன்மையுள்ள இருக்கை வகை (சிலப். 8, 25, உரை); posture of the motionless kind, of which nine are mentioned in the science of painting viz., padumugam etc.

[திரிதரவு + இல்லா + இருக்கை]

**திரிதரவுள்ளவிருக்கை** *tiridaravuḷḷa-virukkai,* பெ. (n.) சலிக்கும் தன்மையுள்ள இருக்கை வகை (சிலப். 8, 25, உரை); posture of the moving kind, mentioned in the science of painting, one of two irukkai.

[திரிதரவு + உள்ள + இருக்கை]

**திரித்தல்** *tirittal,* செ.குன்றாவி. (v.t.) துணியைக் கயிறுபோல் உருட்டல்; rolling up a piece of cloth - linen in the shape of a wick.

**திரிதல்** *tirital,* பெ. (n.) 1. மூவகை மாற்றங்களுள் (விகாரங்களுள்) ஒரெழுத்து மற்றொன்றாக மாறுவது (நன். 154); change of one letter into another, one of three vikāram. 2. ஒன்றை மற்றொன்றாகக் கருதுகை; mistaking one object for another. "சுட்டல் திரிதல் கவர்கோடல்" (மணி. 27, 22). 3. சுழலல்; whirling. 4. உலாவல்; trolling about.

[திரி → திரிதல்]

**திரிதலை** *tiritalai,* பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a kind of shrub (செ.அக.).

**திரிதி** *tiriti,* பெ. (n.) பெண்காமக்களை; the ovarian secretion of woman.

[திரி → திரிதி]

**திரிதிரிப்பொம்மை** *tiritiri-p-pommai,* பெ. (n.) மணற்குவியலில் திரிபோன்ற பொருளை மறைத்தும் எடுத்தும் விளையாடும் குழந்தை விளையாட்டு வகை (வின்.); a children's game in which an object such as a wick is hidden in sand and is required to be found out.

[திரி + திரி + பொம்மை]

**திரிதிவேர்** *tiriti-vēr,* பெ. (n.) ஏலம்; cardamom.

**திரிதூளி** *tiri-tūḷi,* பெ. (n.) சின்னாபின்னம் (யாழ்ப்.); pell mell; medley.

[திரி + தூளி]

**திரிப்பு**[1] *tirippu,* பெ. (n.) 1. மதகரிவேம்பு பார்க்க; see madakari-vēmbu; red cedar of the nilgiri planters. 2. முறுக்கு; twist.

[திரி → திரிப்பு]

**திரிப்பு**[2] *tirippu,* பெ. (n.) கோயில் முதலிய அறநிலையங்களுக்கு நிலவரியினின்று கொடுக்கப்படும் பகுதி (நாஞ்.); portion of land revenue assigned to a temple or a charitable institution.

[திரி → திரிப்பு]

**திரிப்பழம்** *tiri-p-paḻam,* பெ. (n.) நன்றாக எரியும் திரி (இ.வ.); burning wick.

*[திரி + பழம்]*

**திரிபடைந்தபால்** *tiripaḍainta-pāl,* பெ. (n.) புளிப்படைந்த பால்; a milk naturally clotted in souring.

*[திரிபு + அடைந்த + பால்]*

**திரிபதை** *tiripatai,* பெ. (n.) இசைப்பா வகை (சிலப். 6, 35, உரை); a kind of song (செ.அக.).

**திரிபந்தாதி** *tiripandādi,* பெ. (n.) முதலெழுத்து மட்டுந்திரிய இரண்டு முதலிய பல வெழுத்துகள் ஒன்றிப் பொருள்வேறு படவரும் செய்யுளாலாகிய ஈறு தொடங்கி (அந்தாதி) இலக்கியம்; an andādi poem of tiripu stanzas.

*[திரிபு + அந்தாதி]*

**திரிபலம்** *tiripalam,* பெ. (n.) திரிபலை (தைலவ. தைல. 43) பார்க்க; see *tiripalai.*

**திரிபலை** *tiripalai,* பெ. (n.) கடு, தான்றி, நெல்லியாகிய முக்காய்களின் கூட்டம் (திவா.); fruits of the three myrobalams, viz., kaḍu, dāṉri, nelli.

**திரிபலையேனாதி** *tiripalai-y-eṉādi,* பெ. (n.) திரிபலை முதலியவற்றாற் செய்த ஒருவகை இளகியம் (இலேகியம்) (வின்.); an electuary compounded of tiri-palai and other ingredients.

*[திரிபலை + ஏனாதி]*

**திரிபழுகம்** *tiripaḻugam,* பெ. (n.) பால், நெய், தேன்களால் ஆகிய கூட்டுப் பண்டம் (வின்.); a preparation made of milk, ghee and honey.

**திரிபன்றி** *tiripaṉṟi,* பெ. (n.) திறமையைச் ஆய்வு செய்வதற்குப் பன்றி வடிவாய் அமைக்கப் பட்ட சுழலும் இலக்கு வகை; whirling target in the shape of a boar, used to test the skill of an archer. "திருமக ளவட்குப் பாலா னருந்திரி பன்றி யெய்தி வருமக னாரும்" (சீவக. 277).

*[திரி + பன்றி]*

**திரிபாதி** *tiripādi,* பெ. (n.) சிறுபுள்ளடி (மலை) பார்க்க; see *siṟupuḷḷaḍi;* scabrous ovate unifoliate tick-trefoil.

**திரிபாலைத்திறம்** *tiripālai-t-tiṟam,* பெ. (n.) பாலைப்பண் வகை (பு.வெ.ஒழிவு. 15, உரை); melodies of the pālai class.

**திரிபு** *tiripu,* பெ. (n.) 1. வேறுபாடு; change, alteration. "குறிதிரி பறியா வறிவனை" (கலித். 39, 46). 2. தோன்றல், திரிதல், கெடுதல் என்ற புணர்ச்சி வேறுபாடு (தொல். எழுத். 109, உரை); change in sandhi, as tōṉṟal, tiridal, keḍutal. 3. முதலெழுத்தொழிய இரண்டு முதலான எழுத்துகள் அடிதோறும் ஒத்திருக்கையிற் பொருள் வேறுபடப்பாடும் செய்யுள்; stanza whose initial letters excepting the first are identical in each line, opp. to yamagam. 4. தகரம்; tin.

*[திரி → திரிபு]*

**திரிபுக்காட்சி** *tiripu-k-kāṭci,* பெ. (n.) 1. ஒன்றனை மற்றொன்றாக மாறியுணர்கை; optical illusion, erroneous apprehension of objects of sense, as mistaking a post for a thief (செ.அக.). 2. பொய்க்காட்சி; unreal vision presented to the bodily or mental eye (சா.அக.). 3. திரியக் காண்டல் அதாவது ஒன்றை வேறொன்றாக காணுதல்; logic.

*[திரிபு + காட்சி]*

**திரிபுடை** *tiripuḍai,* பெ. (n.) எழுவகைத் தாளத்துளொன்று (பரத. தாள. 22); a variety of time-measure, represented thus, one of catta-tāḷam.

**திரிபுரத்தான்** *tiripurattāṉ,* பெ. (n.) குப்பைமேனி பார்க்க; see *kuppai-mēṉi;* Indian acalypha.



**திரிபுரத்தைத்தீயிட்டோன்** *tiripurattai-t-tīyiṭṭōṉ*, பெ. (n.) கரிசிலாங்கண்ணி; eucalypse plant.

**திரிபுரமல்லிகை** *tiripuramalligai*, பெ. (n.) மல்லிகை வகை (யாழ்.அக.); arabian jasmine.

[திரிபுரம் + மல்லிகை]

**திரிபுவனத்திலகம்** *tiripuvaṉa-t-tilagam*, பெ. (n.) ஒரு பழைய கணித நூல் (கணக்கதி. 5, உரை); an ancient mathematical treatise.

**திரிபுவனம்** *tiripuvaṉam*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள சிவன் கோயில் கொண்ட ஓரூர்; a siva shrine in Tanjore district. "சோமா திரிபுவனத் தோன்றலே" (தமிழ்நா. 47).

**திரிமண்டலச்சிலந்தி** *tirimaṇḍala-c-cilandi*, பெ. (n.) நஞ்சுடைய சிலந்தி வகை (சீவரட். 354); a kind of poisonous spider.

[திரிமண்டலம் + சிலந்தி]

**திரிமணை** *tirimaṇai*, பெ. (n.) புரிமணை (யாழ்ப்.); plaited ring of straw or fibre for setting a pot on.

[திரி + மணை]



**திரிமரம்** *tirimaram*, பெ. (n.) தவசமரைக்குந் திரிகை; wooden mill for grinding grain. "களிற்றுத் தாள் புரையுந் திரிமரப் பந்தர்". (பெரும்பாண். 187).

[திரி + மரம்]

**திரியங்கூடம்** *tiriyaṅ-kūḍam*, பெ. (n.) ஓர் அஞ்சனம்; a kind of collyrium.

[திரியம் + கூடம்]

**திரியன்** *tiriyaṉ*, பெ. (n.) கடுக்காய்; gall nut.

**திரியாமை** *tiriyāmai*, பெ. (n.) 1. இரவு; night. 2. நீலக்கல்; blue stone.

**திரியலூட்டல்** *tiriyalūṭṭal*, பெ. (n.) திரியாகச் செய்த சீலையை மருந்தில் தோய்த்து எடுத்தல்; to smear or dip the gauze in medicine in order to apply it.

[திரியல் + ஊட்டல்]

**திரியூசி** *tiriyūsi*, பெ. (n.) அறுவை மருத்துவம் செய்யும்போது பயன்படுத்தும் ஊசி; needle used at the time of surgery.

[திரி + ஊசி]

**திரிய** *tiriya*, கு.வி.எ. (adv.) திரும்ப; again. "திரியப் பிரலியம் வர" (ஈடு, 8, 1, 5).

தெ. திரிகி, க. திருகி, ம. திரிய.

[திரி → திரிய]

**திரியக்கதி** *tiriya-k-kadi*, பெ. (n.) விலங்குகதி பார்க்க; see *vilaṅgu-kadi*; the animal stage in transmigration.

[திரிய + கதி]

**திரியக்காண்டல்** *tiriya-k-kāṇḍal*, பெ. (n.) ஐயக்காட்சி; Indistinct perception.

[திரிய + காண்டல்]

**திரியக்கு**[1] *tiriyakku*, பெ. (n.) 1. அகப்பை; laddle. 2. குறுக்ககப்பை; a kind of laddle. 3. விலங்கு; beast and birds (சிசி. 2, 58, சிவாக்.).

**திரியக்கு**[2] *tiriyakku*, பெ. (n.) 1. புணர்ச்சி வகை; posture of entercounter. 2. ஒரு வகை முத்தமிடல்; a kind of kissing - bent kiss.

**திரியங்குலி** *tiriyaṅkuli*, பெ. (n.) வயற்பயறு; field gram.

**திரியஞ்சனம்** *tiriyañjaṉam*, பெ. (n.) ஓர் அஞ்சனம்; a kind of collyrium.

**திரியட்டும்** *tiriyaṭṭum*, கு.வி.எ. (adv.). திரிய பார்க்க; see *tiriya*. "திரியட்டும் ஸம்ஸாரி களோடே இருக்கையன்றியே" (ஈடு, 2, 3, 10).

**திரியணுகம்** *tiriyaṇugam*, பெ. (n.) நுண்மை; minute (திவ். பெரியதி. 1, 2, 3, வ்யா, பக். 65).

**திரியம்** *tiriyam,* பெ. (n.) செவ்வள்ளி (மலை.) பார்க்க; purpleyam. 2. செவ்வள்ளி கொடி; red sweet potato creeper.

**திரியமுகம்** *tiriyamugam,* பெ. (n.) அடிவானம் நோக்கிய பார்வை; a concentrated look of the horizon.

**திரியவிடு-தல்** *tiriya-vidu-,* செ.குன்றாவி. (v.t.) சொத்து முதலியவற்றைப் பிறர் பேரால் மாற்றுதல்; to transfer, as one's property. "உன் க்ஷேத்திரத்தையும் என் பேரிலே திரிய விட்டுவை என்னும்" (ஈடு. 4, 9, 6).

**திரியவும்** *tiriyavum,* கு.வி.எ. (adv.) திரிய பார்க்க; see *tiriya.* "ஐந்தலையொடு திரியவும் வந்து" (பாரத. பதினேழாம். 226).

**திரியன்** *tiriyan,* பெ. (n.) கடுக்காய்; gall-nut.

**திரியாபுரம்** *tiriyā-puram,* பெ. (n.) குறும்பு (யாழ்.அக.); mischief.

*[திரியாவிரம் → திரியாபுரம்]*

**திரியாமை** *tiriyāmai,* பெ. (n.) 1. இரவு; night. 2. எமுனை; The Jamuna. 3. நீலக்கல்; a kind of black stone.

*[திரி → திரியாமை]*

**திரியிடு-தல்** *tiri-y-idu-,* செ.கு.வி. (v.i.) காது வளர்க்கத் துணித் திரி இட்டு வைத்தல்; to insert a roll of cloth in the perforation of the ear to enlarge it. "திரிபாட்டுச் சொல்லுகேன் மெய்யே" (திவ். பெரியாழ். 2, 3, 8).

*[திரி + இடுதல்]*

**திரியிலூட்டல்** *tiriyil-ūttal,* பெ. (n.) திரியாகச் செய்த சீலையை மருந்தில் தோய்த்து எடுத்தல்; to smear or dipute gauze in medicine in order to apply it.

**திரியெடுத்தாடு-தல்** *tiri-y-eduttādu-,* செ.கு.வி. (v.i.) திருவிழாக்காலங்களில் நேர்த்திக் கடன் பொருட்டுத் தீப்பந்தம் பிடித்தாடுதல்; to dance with a burning torch on festive occasion in fulfilment of a vow.

*[திரி + எடுத்து + ஆடுதல்]*

**திரியேற்று-தல்** *tiri-yērru-,* செ.கு.வி. (v.i.) 1. புண் முதலியவற்றிற் காரச்சீலையிடுதல்; to introduce a set on into an issue or abscess. 2. திரியிடு பார்க்க; see *tiriyidu.*

*[திரி + ஏற்று]*

**திரியோடல்** *tiri-y-ōdal,* பெ. (n.) கொடி முறுக்கு விழுகை (வின்.); forming of a kink or twist in a rope.

*[திரி + ஓடல்]*

**திரில்** *tiril,* பெ. (n.) குயவன் சக்கரம் (இ.வ.); potter's wheel.

*[திரி → திரில்]*



**திரிவசியம்** *tirivaciyam,* பெ. (n.) 1. பெண் வசியம்; the facinating drug or prepared medicine for enchanting women. 2. மூன்று வகை வசியங்கள்: ஆண் வசியம், பெண் வசியம், உலகவசியம்; three kind of Philte with which male, female and the public are attracted.

**திரிவட்டம்** *tirivattam,* பெ. (n.) திருகுவட்டம் (யாழ்.அக.) பார்க்க; see *tirugu-vattam.*

*[திரி + வட்டம்]*

**திரிவடம்** *tirivadam,* பெ. (n.) திருகுவட்டம் (யாழ்.அக.) பார்க்க; see *tirugu-vattam.*

*[திரி + வடம்]*

**திரிவடைந்தபால்** *tirivadainta-pāl,* பெ. (n.). திரிந்தபால் பார்க்க; see *tirinta-pāl* (சா.அக.).

**திரிவாசம்** *tirivāsam,* பெ. (n.) 1. ஒக்கரி (மலை) பார்க்க; see *okkari;* kakri-melon. 2. கக்கரக்காய்; cucumber.

**திரிவாய்** *tirivāy,* பெ. (n.) வெடிகுண்டில் திரி வைக்கும் இடம் (யாழ்அக); touch hole of a gun.

**திரிவாலி** *tirivāli,* பெ. (n.) 1. மூன்று மடிப்பு அல்லது வெடிப்பு; the three folds or incisions. 2. பெண்களின் கொப்பூழ் மேற்காணும் மூன்று மடிப்புகள்; the three folds over a woman's navel regarded as a beauty. 3. குதம்; the genus.

**திரிவிச்சுதா** *tiriviccutā,* பெ. (n.) மூக்கறட்டை; spreading hog weed.

**திரிவிருத்தி** *tirivirutti,* பெ. (n.) 1. கடுக்காய் வகை (பதார்த்த. 969); species of chebulic myrobalan. 2. மொந்தன் என்னும் ஒரு வகைக் கடுக்காய்; a variety of gall-nut.

**திரிவிருதம்** *tirivirutam,* பெ. (n.) சிவதை; turbit root.

**திரிவு** *tirivu,* பெ. (n.) 1. வேறுபாடு; change, alteration, variation. "திரி வின்றித் துஞ்சே மெனமொழிதி" (பு.வெ. 12, 15). 2. தவறுகை; failure. "திரிவின்றி விண்ணில் வுலகம் விளக்கும் வளைவு" (பு. வெ. 8, 20). 3. கேடு; ruin. "மறந்திரி வில்லா மன்பெருஞ் சூட்சி" (பு.வெ. 9, 33, கொளு). 4. திரிவுக்காட்சி பார்க்க; see *tirivu-k-kāṭci.* "ஐயமேதிரிவே யென்னு மவையற" (விநாயகபு. 2, 46). 5. அசைவு; motion. "நாராசத்திரிவிற் கொள்ளத்தகுவது காந்தம்" (மணி. 27, 55). 6. சரியல்லாததால் திரும்பத்தரப்பட்டது (நாஞ்.); that which is returned as bad, as a coin.

*[திரி → திரிவு]*

**திரிவுக்காட்சி** *tirivu-k-kāṭci,* பெ. (n.) திரிபுக் காட்சி பார்க்க; see *tiribu-k-kāṭci.*

*[திரிவு + காட்சி]*

**திரு**[1] *tiru,* பெ. (n.) 1. திருமகள்; lakṣmī, the Goddess of wealth and prosperity. "திருவுக்குந் திருவாகிய செல்வா" (திவ். பெரியதி. 7, 7, 1). 2. செல்வம்; wealth, riches, affluence. "சிறிற் சிறுகுந் திரு" (குறள். 568). 3. சிறப்பு (சூடா.); distinction, eminence. 4. அழகு; beauty. 5. காந்தி; brilliance. "திரு என்று காந்தி" (ஈடு. 3, 5,10). 6. பொலிவு (திருக்கோ. 114); fertility. 7. பாக்கியம்; blessing, fortune. "நன்றறிவாரிற் கயவா திருவுடையர்" (குறள். 1072). 8. தெய்வத் தன்மை; holiness; sacredness. "திருச்சிற்றம் பலம், திருவரங்கம்". 9. நல்வினை; good karma. "சோர்ந்தெழு நங்கைமாரே திருநங்கைமார்கள்" (சீவக. 2552). 10. கணியங் கூறுவோன்; astrologer. "திரு ஒருவனுக்கும் கீழாள் இரண்டுக்கும்" (S.I.I.II.157). 11. மாங்கலியம்; wedding badge. 12. பழைய தலையணி வகை; an ancient head-ornament. "செந்திருவிற் கேற்கத் திருவும் பிறையுமிட்டு" (கூளப்ப. 140). 13. மகளிர் கொங்கைமேல் தோன்றும் வீற்றுத் தெய்வம்; a deity supposed to be seated on women's breasts.

*[திர் → திரு (வ.மொ.வ.)]*

**திரு**[2] *tiru,* பெ. (n.) 1. திருநீறு; holy ashes. 2. திருகுதல்; turning as, trusted spurge. 3. ஒரு வகை உப்பு; a kind of prepared salt. 4. அழகு; beauty. 5. பூண்டின் முதற்பெயர்; plants first term to denote its sacredness as திருவாத்தி, திருத்துழாய். 6. அரசு; peepal tree.

*[திர் → திரு. திரு = செல்வம், பொலிவு, நற்பேறு (வ.மொ.வ.)]*

**திருக்கடன்மல்லை** *tiru-k-kaḍaṉ-mallai,* பெ. (n.) மாமல்லபுரம் (S.I.I.,i,68); Mamallapuram.

*[திரு + கடல் + மல்லை]*

**திருக்கடைக்காப்பு** *tiru-k-kaḍai-k-kāppu,* பெ. (n.) தேவாரம் முதலியவற்றின் பதிகத்தில் பாடியோர் பெயரும் படிப்போர் பயனும் பயனுங் கூறும் இறுதிச் செய்யுள்; last benedictory stanza in a patigam of the sacred hymns containing the name of the author. "திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி" (பெரியபு. திருஞான. 80).

*[திருக்கடை + காப்பு]*

**திருக்கடைக்காப்புச்சாத்து-தல்** *tiru-k-kaḍai-k-kāppu-c-cāttu-,* செ.கு.வி. (v.i.) பதிகத்தி னிறுதியில் திருக்கடைக் காப்புச் செய்யுள் கூறுதல் (பெரியபு. திருஞான. 80); to close a poem with tiru-k-kaḍai-k-kāppu.

*[திருக்கடைக்காப்பு + சாத்துதல்]*

**திருக்கண்** *tiru-k-kaṇ,* பெ. (n.) *1.* அருட் பார்வை; the divine eye. *2.* திருவிழா புறப்பாட்டிற்கு இறைவன் எழுந்தருளும் மண்டகப் படி; halting place for the idol in a festive procession.

*[திரு + கண்]*

**திருக்கண்சாத்து¹-தல்** *tiru-k-kaṇ-šāttu-,* செ.கு.வி. (v.i.) இறைவன் தெருவுலாவில் தேங்காய் பழம் முதலியன படைத்தல் (நாஞ்.); to make offerings of coconut, plantain fruits, etc., when a temple deity is taken out in procession during a festival.

*[திரு + கண் + சாத்து]*

**திருக்கண்சாத்து²-தல்** *tiru-k-kaṇ-cāttu-,* செ.கு.வி. (v.i.) *1.* அருணோக்கம் வைத்தல்; to bestow a look of grace, as a deity. *2.* மண்டகப் படிக்கு எழுந்தருளப் பண்ணுதல்; to carry a deity to a halting place during procession. *3.* பார்வையிடுதல்; to look into, inspect.

*[திரு + கண் + சாத்துதல்]*

**திருக்கண்டவாளி** *tiru-k-kaṇḍa-vāḷi,* பெ. (n.) கழுத்தணிகை (S.I.I.iii, 476); a kind of necklace.

*[திரு + கண்டம் + வாலி]*

**திருக்கண்ணப்பதேவர்திருமறம்** *tiru-k-kaṇṇappa-dēvar-tirumaṟam,* பெ. (n.) கண்ணப்ப நாயனார் மீது கல்லாடதேவ நாயனார் இயற்றிய நூல் (பதினொ.); a poem kaṇṇappa-nāyaṉār by kallāḍa-dēva-nāyaṉar.

**திருக்கண்ணமுதம்** *tiru-k-kaṇṇamudam,* பெ. (n.) இனிப்பு நீர்ம உணவு (பாயசம்) (இவ.); sweet milk pudding.

*[திரு + கன்னல் + அமுதம்]*

**திருக்கண்ணமுது** *tiru-k-kaṇṇamudu,* பெ. (n.) இனிப்பு நீர்ம உணவு (பாயசம்) (இ.வ.); sweet milk pudding.

*[திரு + கன்னல் + அமுது]*

**திருக்கண்ணாமடை** *tiru-k-kaṇṇāmaḍai,* பெ. (n.) அரிசி சர்க்கரை வாழைப் பழங்களால் ஆக்கப்பட்ட ஒரு வகை இனிய உணவு; a sweet preparation with rice, ghee, sugar and plantain fruit. "திருக்கண்ணாமடைக்கு அரிசி இரு நாழியும்." *(S.I.I.iii, 188).*

*[திரு + கண்ணல் + ஆம் + மடை]*

**திருக்கண்ணோக்கு** *tiru-k-kaṇṇōkku,* பெ. (n.) கடவுளை மண்டபப்படிக்கு எழுந்தருளச் செய்கை (S.I.I.V. 109); taking a temple deity to a maṇḍapam.

*[திரு + கண் + நோக்கு]*

**திருக்கண்மலர்** *tiru-k-kaṇ-malar,* பெ. (n.) கடவுள் திருமேனியில் சூட்டும் மலர் போன்ற கண்ணுரு (S.I.I.ii.340); metalic eyes for an idol. "திருக்கண் மலர் இரண்டு".

*[திரு + கண் + மலர்]*

**திருக்கண்டவாளி** *tiru-k-kaṇḍa-vāḷi,* பெ. (n.) கழுத்தணி வகை; a kind of necklace.

*[திரு + கண்டம் + ஆளி]*

**திருக்கணாமரம்** *tiru-k-kaṇāmaram,* பெ. (n.) திரிகோணமலையில் வளரும் மரம்; trincomala tree.

*[திரு + கணா + மரம்]*

**திருக்கம்** *tirukkam,* பெ. (n.) வஞ்சகம்; crookedness, dis-honesty. "சிந்தையுற் றிருக்க மின்மை" *(கம்பரா. திருவடி. 76).*

*[திருகு → திருக்கம்]*

**திருக்கம்பி** *tiru-k-kambi,* பெ. (n.) காதுக்கம்பி; a kind of ear-ring. "திருக்கம்பியொன்று பொன் முக்காலே மஞ்சாடியுங் குன்றி" *(S.I.I.ii.157).*

*[திரு + கம்பி]*

**திருக்கரணம்** *tiru-k-karaṇam,* பெ. (n.) பாம்பு (யாழ்.அக.); snake.

**திருக்கருவைப்பதிற்றுப்பத்தந்தாதி** *tirukkaruvai-p-padiṟṟu-p-pattandādi,* பெ. (n.) அதிவீரராம பாண்டியனால் கரிவலம்வந்த நல்லூர்ச் சிவபிரான்மேல் பாடப்பட்ட பதிற்றுப்பத்து ஈறு தொடங்கி நூல்; andādi poem in 100 stanzas in ten different metres, each ten being in one metre, on the śivan shrine in karivalam-vanda-nallūr by Adivīra-rāma-pāṇḍiyaṉ.

*[திருக்கருவை + பதிற்றுப்பத்து + அந்தாதி]*

**திருக்கருவைக்கலித்துறையந்தாதி** *tiru-k-karuvai-k-kalitturai-y-andādi,* பெ. (n.) அதிவீரராம பாண்டியனால் கரிவலம்வந்த நல்லூர்ச் சிவபிரான்மேல் நூறு கலித்துறையிற் பாடப் பட்ட ஈறு தொடங்கி நூல்; andādi poem in 100 kalitturai stanzas on the śivan shrine in karivalam-vanda-nallūr by Adivīra-rāma-pāṇḍiyan.

*[திருக்கருவை + கலித்துறை + அந்தாதி]*

**திருக்கருவைவெண்பாவந்தாதி** *tiru-k-karuvai-veṇpā-v-andādi,* பெ. (n.) அதிவீரராம பாண்டியனால் கரிவலம்வந்த நல்லூர்ச் சிவபிரான்மேல் நூறு வெண்பாவிற் பாடப் பட்ட ஈறு தொடங்கி நூல்; andādi poem in 100 stanzas in veṇpā metre on the śivan shrine in karivalam-vanda-nallūr by Adivīra-rāma-pāṇḍiyan.

*[திருக்கருவை + வெண்பா + அந்தாதி]*

**திருக்கலசமுடி-த்தல்** *tiru-k-kalasa-muḍi-,* செ.குன்றாவி. (v.t.) குடமுழுக்குச் செய்தல்; to consecrate a newly-built temple. "பணி செய்விச்சு திருக்கலச முடிச்சருளிய" *(T.A.S.i. 290).*

*[திரு + கலசம் + முடி]*

**திருக்கலியாணம்** *tiru-k-kaliyāṇam,* பெ. (n.) கோயிற்றிருமண விழா; marriage festival of god and a goddess in a temple. மதுரை அங்கயற்கண்ணி திருக்கலியாணம்.

*[திரு + கலியாணம்]*

**திருக்கள்ளி** *tiru-k-kaḷḷi,* பெ. (n.) திருகுகள்ளி பார்க்க; see *tirugu-kaḷḷi.*

*[திரு + கள்ளி]*

**திருக்களிற்றுப்படி** *tiru-k-kaḷiṟṟu-p-paḍi,* பெ. (n.) தில்லைக் கூத்தப்பெருமான் கோயிலின் யானை யுருவமைந்த படி; door-step with sculptured elephants at the Nataraja shrine of Chidambaram. "சென்று தாழ்ந் தெழுந்தான் றிருக்களிற் றுப்படி மருங்கு" *(பெரியபு. தடுத்தாட். 105).*

*[திரு + களிறு + படி]*

**திருக்களிற்றுப்படியார்** *tiru-kaḷiṟṟu-p-paḍiyār,* பெ. (n.) திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார் இயற்றியதும் திருக்களிற்றுப்படியில் வைக்கப்பெற்று அக்களிற்றால் எடுத்துக் கொடுக்கப்பட்டதும் மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஒன்றுமாகிய சிவசமய நூல்; a siva siddhanta treatise by Tirukkaṭavur uyyavanta-teva-nayanar, traditionally believed to have been placed on the tiru-k-kaḷiṟṟu-p-paḍi of Chidambaram shrine by the author and returned to him by the sculptured elephants, one of 14 mey-kaṇṭa-cāttiram.

*[திரு + களிறு + படி + ஆர்]*

**திருக்கற்றளி** *tiru-k-kaṟṟaḷi,* பெ. (n.) கருங் கல்லால் அமைக்கப்பட்ட கோயில்; stone temple. "திருக்கற்றளி தேவர்க்கு" *(S.I.I.i, 113)*

*[திரு + கல் + தளி]*

**திருக்காட்சி** *tiru-k-kāṭci,* பெ. (n.) இறைமைத் தன்மை; state of being divine.

*[திரு + காட்சி]*

**திருக்காப்பிடு-தல்** *tiru-k-kāppiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) கோயிற்கதவு மூடுதல்; to close the door of a temple.

*[திருக்காப்பு + இடு-.]*

**திருக்காப்பு** *tiru-k-kāppu,* பெ. (n.) 1. தெய்வக் காவல்; divine protection. "உன் சேவடி செவ்வித் திருக்காப்பு" *(திவ்.பெரியாழ். திருப்பல்.).* 2. கோயிற் கதவு; door of a temple. 3. திரு முறைகளைக் கயிற்றால் கட்டி வைக்கை (காழிக் கல்வெட்டு. 41); 4. அந்திரட்சை; ceremonies performed in the evening for protecting a child from the evil eye. "திருக்காப்பு நானுன்னைச் சாத்த" *(திவ்.பெரியாழ். 2,8,9).*

*[திரு + காப்பு]*

**திருக்காப்புச்சாத்து-தல்** *tiru-k-kāppu-c-cāttu,* 5 செ.குன்றாவி. (v.t.) திருக்காப்பிடு பார்க்க; see *tiru-k-kāppiḍu-.*

**திருக்காப்புச்சேர்த்து-தல்** *tiru-k-kāppu-c-cērttu-* 5 செ.குன்றாவி. (v.t.) திருக்காப்பிடு பார்க்க; see *tiru-k-kāppiḍu-.*

**திருக்காப்புநீக்கு-தல்** *tiru-k-kāppu-nīkku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கோயிற் கதவைத் திறத்தல்

(திவ்.திருப்பா. 18, 172, அரும்.); to open the door of a temple.

[திரு + காப்பு + நீக்கு-.]

**திருக்கார்த்திகை** *tiru-k-kārttigai,* பெ. (n.) நளி (கார்த்திகை)த் திங்கள் ஆரல் (கார்த்திகை) விண்மீன் நாளில் விளக்கேற்றிக் கொண்டாடும் திருவிழா; a festival celebrated in the month of Kārttikai on the day when the moon is in conjunction with Pleiades.

[திரு + கார்த்திகை]

**திருக்காவேரி** *tiru-k-kāvēri,* பெ. (n.) இறைவழி பாட்டு நீர்ச்செம்பு (மாலியவ.); a vessel used for keeping water for worship.

[திரு + காவேரி]



**திருக்காளத்திப்புராணம்** *tiru-k-kāḷatti-p-purāṉam,* பெ. (n.) திருக்காளத்தியின் சிறப்பு குறித்து 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆனந்தக் கூத்தர் பாடிய தமிழ்த் தொன்மம்; a Purana in Tamil on the Šivan shrine at Sri Kāḷahasti by Ānanda-k-kūttar, 16th century.

[திரு + காளத்தி + புராணம்]

**திருக்கானப்பேர்** *tiru-k-kāṉa-p-pēr,* பெ. (n.) இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள காளையார் கோயில் என்ற சிவத்தலம்; Kāḷaiyār kōyil, as Šiva shrine in Ramnad district.

[திரு + கானப்பேர்]

**திருக்கிடு-தல்** *tiru-k-kiḍu-,* 8 செ.குன்றாவி. (v.t.) நீளமுறுக்கிடுதல்; to twist, as a long rope. "இருடிருக்கிட்டு" (சீவக. 164).

[திருகு + இடு-.]

**திருக்கு¹-தல்** *tirukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. முறுக்குதல்; to twist. 2. ஒருவனைத் தூண்டி விடுதல்; to set on, screw up.

**திருக்கு²** *tirukku,* பெ. (n.) இன்னல்; difficulty. "ஏத்திருக்கும் கெடுமென்பதை யெண்ணா" (கம்பரா. திருவவதாரப். 123).

**திருக்கு³** *tirukku,* பெ. (n.) 1. முறுக்கு; twist. 2. முடக்கம்; bend, curve. "மதிற்றிருக்கால் . . . திருமுடங்க லென்றார்" (திருவாலவா. 47:14). 3. அணித்திருகு; tiny screw in jewels. 4. ஒருவகைத் துகில் (சிலப். 14: 108. உரை); a garment. 5. மாறுபாடு; perverseness. "பெருந் திருக்குளத்துளான்" (திருவாலவா. 16. 34). 6. வஞ்சனை; fraud, deceit.

[திருகு → திருக்கு]

**திருக்குக்காட்டாளி** *tirukku-k-kāṭṭāḷi,* பெ. (n.) வஞ்சகன்; cheat, deceiver.

[திருக்கு + காட்டாளி]

**திருக்குகம்** *tirukkugam,* பெ. (n.) 1. முற்றம்; courtyard. 2. புடைவை; saree.

**திருக்குகை** *tiru-k-kukai,* பெ. (n.) துறவிகள் வாழிடம் (I.M.P.Tj. 1083); monastery.

[திரு + குகை]

**திருக்குடந்தை** *tiru-k-kuḍandai,* பெ. (n.) கும்பகோணம்; Kumbakonam. "திருக்குடந்தை யேரார் கோலந் திகழக் கிடந்தாய்" (திவ். திருவாய். 5: 8).

[திரு + குடந்தை]

**திருக்குதம்பை** *tiru-k-kutambai,* பெ. (n.) காதணி வகை (S.I.I.ii, 156); a kind of ear-rings.

[திரு + குதம்பை]

**திருக்குருகை** *tiru-k-kurugai,* பெ. (n.) சட கோபர் பிறந்த இடமான ஆழ்வார் திருநகரி; the birth place of šaint šaḍakōpar, now called Āḻvār-tiru-nakari.

[திரு + குருகை]

**திருக்குருகைப்பிரான்பிள்ளான்** *tiru-k-kurukai-p-pirāṉ-piḷḷāṉ,* பெ. (n.) இராமானுசர் மாணவருள் ஒருவரும், திருவாய் மொழியின்

முதல் ஆறாயிரப்படியியற்றியவருமான ஆசிரியர்; a disciple of Ramanujacarya and the author of Ārāyirappaḍi, the first commentary on tiruvāy-moḻi.

*[திருக்குருகை + பிரான்பிள்ளான்]*

**திருக்குருகைப்பெருமாட்கவிராயர்** *tiru-k-kurukai-p-perumāṭ-kavirāyar*, பெ. (n.) மாறனலங்காரம், மாறனகப்பொருள், திருக்குருகாமான்மியம் முதலிய நூல்கள் இயற்றிய வரும் 16ஆம் நூற்றாண்டினரும் ஆழ்வார் திருநகரியூரினருமாகிய ஆசிரியர்; a native of Alvar-tiru-nakari and the author of Maran-alankaran, maran-alapporul, tiru-k-kurukamamiyam and other works, 16th century.

*[திருக்குருகை + பெருமாள் + கவிராயர்]*

**திருக்குவலிப்பன்** *tirukku-valippaṉ*, பெ. (n.) மாட்டுநோய் வகை (மாட்டுவா. 147); a kind of cattle disease.

*[திருகு + வலிப்பன்]*

**திருக்குளம்** *tiru-k-kuḷam*, பெ. (n.) கோயிலைச் சார்ந்த தடாகம்; sacred tank of a temple.

*[திரு + குளம்]*

**திருக்குற்றாலம்** *tiru-k-kuṟṟālam*, பெ. (n.) திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள சிவன் கோயில்; a Šivan shrine in the Tinnevelly district.

*[திரு + குற்றாலம்]*

**திருக்குறணுண்பொருண்மாலை** *tiru-k-kuraṇuṇ-poruṇ-mālai*, பெ. (n.) திருக்குறள் பரிமேலழகருரைக்கு ஆழ்வார் திருநகரித் திருமேனி இரத்தின கவிராயர் எழுதிய குறிப்புரை; critical notes on Parimel-aḻagar's commentary on Tiru-k-kural by Tiru-mēṉi. Irattiṉa-kavirāyar of Āḻvār-tiru-nakari.

*[திருக்குறள் + நுண்மை + பொருள் + மாலை]*

**திருக்குறள்** *tiru-k-kuraḷ*, பெ. (n.) பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றும், அதிகாரத்துக்குப் பத்துக் குறள் வெண்பா கொண்ட 133 அதிகாரங்களில் அறம், பொருள், இன்பங்களைப் பற்றிக் கூறுவதும் திருவள்ளுவர் இயற்றியதுமான நூல்; the sacred kural, a classic work treating of virtue, wealth and love in 133 chapters of ten distichs each, by tiru-valluvar, one of patiṇeṉ-kīḻ-k-kaṇakku.

*[திரு + குறள்]*

திருவள்ளுவர், வள்ளுவம், முப்பால், அறம், அறநூல், திருவள்ளுவப் பயன் என்பனவும், தமிழ் மறை, பொதுமறை என்பனவும் திருக் குறளின் சிறப்புப் பெயர்களாக வழங்கப்பெற்று வருகின்றன.

மொழி, இனம், சமயம், நாடு என்னும் எல்லைகளைக் கடந்து மக்கட்குலம் முழுவதும் கடைப்பிடிக்கத்தக்க உயரிய ஒழுகலாறுகளை வகுத்துரைப்பதால் திருக்குறள் உலகப் பொதுமறையாகப் போற்றப்படுகிறது. சமயம், அரசியல் முதலான சார்புகள் ஏதுமின்றி உலகமொழிகளில் அதிக எண்ணிக்கையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் நூல் திருக்குறளேயாகும்.

**திருக்குறிப்பு** *tiru-k-kuṟippu*, பெ. (n.) திருவுள்ளக் கருத்து; will, as of God or great person. "திருக்குறிப் பன்னதாயிற் செப்புவல்" (சீவக. 1853).

*[திரு + குறிப்பு]*

**திருக்குறிப்புத்தொண்டநாயனார்** *tiru-k-kuṟippu-t-toṇḍa-nāyaṉar*, பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a canonized Saiva saint, one of 63.

*[திருக்குறிப்பு + தொண்டநாயனார்]*

**திருக்குறுங்கைநம்பிசம்பா** *tiru-k-kuṟuṅgai-nambi-šambā*, பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of šampā paddy. "தென்னரங்கன் சம்பா திருக்குறுங்கை நம்பி சம்பா" (நெல்விடு. 183).

*[திருக்குறுங்கைப் + நம்பி + சம்பா]*

**திருக்குறுந்தாண்டகம்** *tiru-k-kuṟuntāṇḍagam*, பெ. (n.) திருமங்கையாழ்வார் இயற்றியதும் நாலாயிரப்பனுவலில் அடங்கியதுமான பனுவல்; a poem in Nālayira-p-pirapantam by Tirumaṅgai-y-āḻvār. 2. அறுசீர்த் தாண்டகங் களாகிய தேவாரப் பதிகங்கள்; Tevaram decads in tan-takam notre of six cirs.

*[திரு + குறு + தாண்டகம்]*

**திருக்கூட்டம்** *tiru-k-kūṭṭam*, பெ. (n.) *அடியார் குழாம்;* fraternity of devotees. "நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெரும் பேறு" *(காஞ்சிப்பு. கடவு. 16).*

*[திரு + கூட்டம்]*

**திருக்கூத்து** *tiru-k-kūttu*, பெ. (n.) 1. சிவன் நடனம்; sacred dance of Šivan. "திருக்கூத்தை மேவின இறைவனுக்கு" *(பு.வெ. 9, 48, உரை).* 2. இறைவன் திருவிளையாட்டு; devine sport.

*[திரு + கூத்து]*

**திருக்கூவப்புராணம்** *tiru-k-kūva-p-purāṇam*, பெ. (n.) சிவப்பிரகாச முனிவர் இயற்றியதும் திருக்கூவத்தலப் பெருமைக் கூறுவதுமான தொன்மம்; a purana on Tirukkuva.n by Šivappirakasa munivar.

*[திரு + கூவம் + புராணம்]*

**திருக்கை**[1] *tirukkai*, பெ. (n.) 1. முட்கள் அடர்ந்து நீண்ட கூரிய வாலையுடையதும், தட்டை யானதும் சுறாமீன் இனத்தைச் சேர்ந்ததுமான கடல்மீன் வகை; sting ray fish. 2. செம்பழுப்பு நிறமும் 18 விரலம் (அங்குலம்) வளர்வதுமான மீன்; electrical ray, reddish brown, attaining 18in. in length, Nareine timilei *(செ.அக.).*



சாம்பசிவம் பிள்ளை அகரமுதலி கூறும் இந்தியாவில் காணப்படும் திருக்கை வகைகள்

1. சப்பைத் திருக்கை; banded teriky - Myliobatis niewhofli alias M. batoidei.
2. இராசாத்திருக்கை; rajah teriky - Raja fasciate.
3. தப்புக்கூளி; small drum teriky - Myliobatis plgios tomata.
4. கூளித்திருக்கை; Eagle ray or whip ray - Myliogbatis acquila.
5. கருவால்திருக்கை; black tail teriky Aeldobatis nari alias Ac. flagellum.
6. முள்ளந்திருக்கை; sting ray - Urogymmis asperrimus alias Anacanthus asperrimus.
7. மட்டத்திருக்கை; flat teriky - Rhinoptera adspersa.
8. குருவித்திருக்கை; Sparrow headed teriky- Rhinoptera batoidei.
9. பெருந்திருக்கை; large teriky - Pteroplatea microura.
10. தப்பகுட்டித்திருக்கை; small tabour teriky - Dasiyatis microura.
11. ஆடுவாலான் திருக்கை; shark teriky Trygon sephen.
12. கோணத்திருக்கை; tiger teriky - Trygon Uarnak.
13. சீமைத்திருக்கை; English ray Pastnachus Uarnak.
14. துருக்கத்திருக்கை; Mahomedan thorn back - Trygon ellioti.
15. ஆடாத்திருக்கை; mossy thorn back.
16. ஓட்டைத்திருக்கை; lean ray.
17. கருந்திருக்கை; black ray.
18. கொட்டத்திருக்கை; strong toothed ray.
19. செந்திருக்கை; red thorn back.
20. பஞ்சாடித்திருக்கை; leaping teriky.
21. புள்ளித்திருக்கை; spotted teriky.
22. மணல்திருக்கை; sand ray.
23. கல்திருக்கை; stone backed ray.
24. செம்மந்திருக்கை
25. கோட்டுவாய்த்திருக்கை
26. மலைத்திருக்கை
27. அழுக்குத்திருக்கை
28. பாயும்சாலைத்திருக்கை
29. ஆட்டுவால் திருக்கை; sheep tailed ray.
30. வெள்ளை நண்டுத்திருக்கை
31. சீவாளித் திருக்கை
32. தில்லைத் திருக்கை
33. வரி நண்டுத் திருக்கை
34. பேய்க்கால் நண்டுத் திருக்கை
35. பால் திருக்கை; white ray.

**திருக்கைஅளவுமானி** *tirukkai-y-aḷavumāṉi*, பெ. (n.) ஓர் வானூர்தித் திருக்கையின்

கோணம் எவ்வளவு என்று அளந்து கூறும் கருவி (அறி.களஞ்.); yaw meter.

*[திருக்கை + அளவுமானி]*

**திருக்கைக்காறை** *tiru-k-kai-k-kāṟai,* பெ. (n.) இறைத் திருமேனிகளுக்குச் சூட்டும் கையணி வகை (S.I.I. ii. 144); a kind of armlet worn on idols.

*[திரு + கை + காறை]*

**திருக்கைக்கோட்டி** *tiru-k-kai-k-kōṭṭi,* பெ. (n.) 1. திருமுறை பாடுதற்குரிய கோயில் மண்டபம் (I.M.P.Tj. 855); sacred hall in Temples where the sacred hymns are sung. 2. திருக்கைக் கோட்டியோதுவார் (கல்.) பார்க்க; *tiru-k-kai-kōṭṭi-y-ōduvār.*

*[திருக்கை + கோட்டி]*

**திருக்கைக்கோட்டியோதுவார்** *tirukkai-k-kōṭṭi-y-ōtuvār,* பெ. (n.) கோயிலில் திருமுறைப் பாடல் பாடுவோர் (I.M.P.Tj. 1113); reciters of the sacred hymns in temple.

*[திருக்கை + கோட்டி + ஓதுவார்]*

**திருக்கைச்சிரா** *tirukkai-c-cirā,* பெ. (n.) திருக்கை மீனின் செதில் (மீனவ.); scale of the tirukkai fish which is used to prepare soup.

*[திருக்கை + சிரா]*

**திருக்கைச்சிறப்பு** *tiru-k-kai-c-ciṟappu,* பெ. (n.). ஏனாதிப் பட்டத்திற்கு அறிகுறியாய் அளிக்கும் விரற்செறி (மோதிரம்); signet-ring given as badge of the title ēṉādi.

*[திருக்கை + சிறப்பு]*

**திருக்கைத்தலம்** *tiru-k-kai-t-talam,* பெ. (n.) கைத்தலமூலம் கடவுள் திருமேனியை எழுந்தருளப் பண்ணுகை (இவ.); the procession in which an idol is carried on hand.

*[திருக்கை + தலம்]*

கடவுட்டிருமேனியைக் கையில் சுமந்து கொண்டு வீதியுலா செல்லுகை.

**திருக்கைத்தோல்** *tirukkai-t-tōl,* பெ. (n.) மெருகிடுதற்குதவும் திருக்கை மீனின் தோல் (வின்); ray skin, used in polishing.

*[திருக்கை + தோல்]*

**திருக்கைத்திமிரம்** *tirukkai-t-timiram,* பெ. (n.) பாய்மர வகையுள் ஒன்று (மீனவ.); a kind of mast.

*[திருக்கை + திமிரம்]*

**திருக்கைப்புலியன்** *tirukkai-p-puliyaṉ,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. "திருக்கைப் புலியன் திருக்கையாரல்" (பறாளை. பள்ளு. 16).

*[திருக்கை + புலியன்]*

**திருக்கையாரல்** *tirukkai-y-āral,* பெ. (n.) மீன் வகை; a kind of fish. "திருக்கைப் புலியன் திருக்கையாரல்" (பறாளை. பள்ளு. 16).

*[திருக்கை + ஆரல்]*

**திருக்கைவலை** *tirukkai-valai,* பெ. (n.) திருக்கை மீன் பிடிப்பதற்குரிய பருங்கண் வலை (நெல்லை மீனவ.); net which has large hole to catch shark fish.

*[திருக்கை + வலை]*

**திருக்கைவலைவள்ளம்** *tirukkai-valai-vaḷḷam,* பெ. (n.) திருக்கை வலை வலைத்தற்கெனக் கடல்மேற்செலுத்தப்படும் மரக்கலம் (நெல்லை மீனவ.); ship sailed in the sea to throw net for the shark.

*[திருக்கை + வலை + வள்ளம்]*

**திருக்கைவழக்கம்**[1] *tirukkai-vaḻakkam,* பெ. (n.) தெய்வத்திற்குப் படையல் செய்ததை வழங்குகை (கல்.); distribution to worshippers of offerings in a temple on special occasions. 2. வேளாளத் தலைவர்களின் கொடையைச் சிறப்பித்துக் கூறும் ஒரு நூல்; a poem on the liberality of the Vēḷāla chiefs.

*[திரு + கை + வழக்கம்]*

**திருக்கைவழக்கம்**[2] *tirukkai-vaḻakkam,* பெ. (n.) நாள்தோறும் கோயிலில் நடக்கும் பூசைக்கு வழங்கும் நாட்படி (S.I.I.V. 504); fixed allowance for the daily routine services in a temple.

*[திரு + கை + வழக்கம்]*

**திருக்கைவால்** *tirukkai-vāl,* பெ. (n.) திருக்கை மீனின் வாலாகிய சாட்டை (வின்.); a tail of ray-fish, used as whip.

*[திருக்கை + வால்]*

**திருக்கைவெட்டியான்** *tirukkai-veṭṭiyāṉ,* பெ. (n.) **மீன்வகை;** a kind of fish. "சீருந் திருக்கை வெட்டியான்" *(பறாளை. பள்ளு. 16).*

*[திருக்கை + வெட்டியான்]*

**திருக்கொசகம்** *tiru-k-košagam,* பெ. (n.) அணிவகை *(S.I.I.vi.14);* an ornament.

**திருக்கொட்டாரம்** *tiru-k-koṭṭāram,* பெ. (n.). கோயிலில் பொருள்கள் வைக்கும் அறை *(கோயிலொ. 62);* store room; store-house in a temple.

*[திரு + கொட்டாரம்]*

**திருக்கொடித்தட்டு** *tiru-k-koḍi-t-taṭṭu,* பெ. (n.) கோயிற் கொடிமரம் *(குருபரம். 283);* flag-staff in a temple.

*[திரு + கொடி + தட்டு]*

**திருக்கொடுக்கு** *tiru-k-koḍukku,* பெ. (n.) அணிவகை *(S.I.I.vi.14);* an ornament.

*[திரு + கொடுக்கு]*

**திருக்கொள்கை** *tiru-k-koḷgai,* பெ. (n.) அணிவகை *(S.I.I.vi.14);* an ornament.

**திருக்கொற்றவாய்தல்** *tiru-k-koṟṟa-vāy-dal,* பெ. (n.) **அரண்மனை;** palace. 'எப்பேர்ப்பட்ட திருக்கொற்றவாய்தலாற் போந்த குடிமை' (S.I.I.VII. 40).

*[திரு + கொற்றம் + வாய்தல்]*

**திருக்கோட்டியூர்நம்பி** *tiru-k-kōṭṭiyūr-nambi,* பெ. (n.) இராமநாதபுரம் மாவட்டம் திருக்கோட்டியூரினரும் இராமாநுசரின் ஆசானுமான மாலிய ஆசான்; the guru of Rāmānujācārya, native of Tirukkōṭṭiyūr in Ramnad district *(செ.அக.).*

*[திருக்கோட்டியூர் + நம்பி]*

**திருக்கோணமரம்** *tiru-k-kōṇa-maram,* பெ. (n.) மரவகை; Trincomali wood.

**திருக்கோணமலை** *tiru-k-kōṇa-malai,* பெ. (n.) திரிகோணமலை பார்க்க; see *trigōṇa-malai.*

**திருக்கோமண்டலம்** *tiru-k-kō-maṇḍalam,* பெ. (n.) திருமஞ்சனத்தில் பெருமாளுக்குத் திருமுடியில் சுற்ற வேண்டிய மலர்ச்சரம் *(சம.சொ.அக.);* garland.

*[திரு + கோ + மண்டலம்]*

**திருக்கோலம்** *tiru-k-kōlam,* பெ. (n.) *1.* திருமேனிக்குச் செய்யும் ஒப்பனை; decoration of the idol. *2.* நின்றதிருக்கோலம் கிடந்த திருக்கோலம் இருந்த திருக்கோலம் என மூவகையாகத் திருமால் திருவுருவ நிலை; posture of the idol, especially in Viṣṇu temples, of three varieties, viz., niṉṟa-tiru-k-kōlam, kiḍanda-tiru-k-kōlam, irunda-tiru-k-kōlam *(செ.அக.).*

*[திரு + கோலம்]*

**திருக்கோவை** *tiru-k-kōvai,* பெ. (n.) இறைத் திருமேனியின் முன் வரிசையாக நின்று திருமறை, வழிபாட்டுச் செய்யுள் முதலியன பாடும் கூட்டம்; row of people chanting the sacred hymns in the presence of an idol. "திருக்கோவைக்குப் பின்னே கைகட்டிக் கொண்டு பின்னடி ஸேவிக்கிறதும்" *(கோயிலொ. 88).*

*[திரு + கோவை]*

**திருக்கோவையார்** *tiru-k-kōvaiyār,* பெ. (n.) திருச்சிற்றம்பலக்கோவை பார்க்க; see *tiru-c-ciṟṟambala-k-kōvai.*

*[திரு + கோவையார்]*

**திருகணி** *tirukaṇi,* பெ. (n.) *1.* திருகாணி-*2* பார்க்க; see *tirukāṇi*-2. *2.* **சங்கின் சுழி;** spiral formation of a conch.

க., ம. திருகணி

*[திருகு + அணி]*

**திருகணை** *tirukaṇai,* பெ. (n.) **புரிமணை** *(யாழ்ப்.);* plaited ring of straw or rattan for setting a pot on.

*[திரு + கணை]*

**திருகம்**[1] *tirugam,* பெ. (n.) **சாதிக்காய்மரம்** *(மலை.);* true nutmeg.

**திருகம்**[2] *tirugam,* பெ. (n.) **துளை** *(யாழ்.அக.);* hole.

*[திருகு → திருகம்]*

**திருகரிவாள்மணை** *tirukarivāḷ-maṇai,* பெ. (n.) திருகுமணை பார்க்க; see *tirugu-maṇai.*

*[திருகு + அரிவாள்மணை]*

**திருகல்** *tirugal,* பெ. (n.) *1.* **முறுக்கு;** twist, as of a horn; contortion. *2.* **மாறுபடுகை;** crooked

ness. "திருகலையுடைய விந்தச் செகத்துளோர்" (கம்பரா. திருவவ. 33). 3. திருகல்முறுகல் பார்க்க; see *tirugal-murugal.* 4. ஆணை மீறுகை (பிங்.); infringement of a rule. 5. முறுகுகை (சிலப். 12: 1); severity. 6. மாணிக்கக் குற்றவகை (கல்லா. 47; திருவாலவா. 25: 14); a flaw in ruby.

[திருகு → திருகல்]

**திருகல்முறுகல்** *tirugal-murugal,* பெ. (n.) 1. கோணல்; crookedness, crumpled condition. 2. மனக்கோணல்; perverseness. 3. இடர்ப்பாடுள்ள சொற்றொடர்; involved construction of a sentence (செ.அக.).

[திருகல் + முறுகல்]

**திருகலி** *tirukali,* பெ. (n.) நுனிவளைந்த பனை முதலியன (யாழ்ப்.); palmyra or coconut tree crooked near the top.

[திருகல் → திருகலி]

**திருகாணி** *tirukāṇi,* பெ. (n.) 1. அணியின் திருகுமரை; screw in ornaments. 'திருகாணிக்கு வலுவும் பழஞ்சாணிக்கு புழுவும் உண்டு' (பழ.) 2. பெண்கள் காதிலும் மூக்கிலும் அணியும் ஓரணிவகை; small ornament like a tack, worn by girls and women in the upper helix of the ear or in the nostril. 3. பிளவுப்பட்டதைப் போன்ற தலைப்பகுதியையும் மரையோடு கூடிய கீழ்ப்பகுதியையும் கொண்டதும் திருகி உள்ளே செலுத்தக் கூடியதுமாகிய ஆணி; screw.

க. திருகாணி

[திருகு + ஆணி]



**திருகாணிக்குழாய்** *tirukāṇi-k-kuḻāy,* பெ. (n.) அணிகளின் கரை; exterior screw, in ornaments (செ.அக.).

[திருகாணி + குழாய்]

**திருகாணியச்சு** *tirukāṇi-y-accu,* பெ. (n.) திருகாணி செய்யும் அச்சு (C.E.M.); screw die.

[திருகாணி + அச்சு]

**திருகு[1]-தல்** *tirugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. முறுக்குதல்; to twist, turn, wring. "யாக்கையைத் திசைமுகன் படைசென்று திருக" (கம்பரா. பாசப். 58). 2. பின்னுதல்; to braid, as hair. "திருகுகுழ லுமைநங்கை" (தேவா. 657, 3). 3. பறித்தல் (வின்.); to pluck, snatch, wrest away.

தெ. திருகு; க. திருகு

[துல் → தில் → திர் → திரு → திருகு → திருகு-தல்]

**திருகு[2]-தல்** *tirugu-,* 5 செகுவி. (v.i.) 1. முறுகுதல்; to be intense, severe. "பரிதி சினந்திருகிய கடுந்திறல்வேனில்" (பெரும்பாண். 3). 2. மாறுபடுதல்; to be crooked. "திருகு சிந்தையைத் தீர்த்து" (தேவா. 338, 2).

**திருகு[3]** *tirugu,* பெ. (n.) 1. முறுக்கு; twist, wrench. "ஒரு திருகு திருகினான்". 2. கோணல்; bend, curve. 3. சுரி; screw, swivel. 4. அணியின் திருகுமரை; thread of a screw. 5. மாறுபாடு; crookedness of mind. 6. ஏமாற்றுப்பேச்சு; prevarication. "திருகு சொன்னால்" (இராமநா. கிஷ்கி. 16). 7. குற்றம் (வின்.); fault. "சிந்தைத் திருகோட்டும்" (சி.சி. பாயி. 1)

[துல் → தில் → திர் → திரு → திருகு].

**திருகுஇடைத்தொலையளவு** *tirugu-iḍai-t-tolai-y-aḷavu,* பெ. (n.) ஒரு திருகின் இழையில் ஒரு புள்ளியிலிருந்து அடுத்த சுற்றின் நேரிணையான புள்ளி வரையிலான தொலைவின் அளவு; இதனைத் திருகின் ஒரு சுழற்சிக்கான முன்னேற்ற அளவு என்றுங் கூறலாம் (அறி.களஞ்.); pitch of a screw.

[திருகு + இடை + தொலை + அளவு]

**திருகுகம்மல்** *tirugu-kammal,* பெ. (n.) மகளிரணியும் திருகோடு கூடிய காதணி

வகை; a kind of ear-ornament for women fastened with a screw (செ.அக.).

*[திருகு + கம்மல்]*

**திருகுகள்ளி** *tirugu-kaḷḷi*, பெ. (n.) *1.* கொம்புக் கள்ளி (பதார்த்த. 120); milk-hedge. *2.* கள்ளி வகை; twisted square spurge.

*[திருகு + கள்ளி]*

**திருகுகொம்பன்** *tirugu-kombaṉ*, பெ. (n.) வளைந்த கொம்புடைய விலங்கு வகை; beast having twisted or crumpled horns (செ.அக.).

*[திருகுகொம்பு → திருகுகொம்பன்]*

**திருகுகொம்பு** *tirugu-kombu*, பெ. (n.) விலங்கின் முறுக்குண்ட கொம்பு (வின்.); twisted or crumpled horn.

*[திருகு + கொம்பு]*



**திருகுகோல்** *tirugu-kōl*, பெ. (n.) வண்டிச்சக்கர இருசினைத் தூக்குவதற்கான திருகுநிலை உதைகோலமைவுப் பொறி (அறி. களஞ்.); screw jack.

*[திருகு + கோல்]*



**திருகுசக்கரம்** *tirugu-šakkaram*, பெ. (n.) குயவன் பானை வனையப்பயன்படும்



சக்கரம்; a whirling table machine exhibiting the effect of centripetal and centrifugal forces used by pottern.

*[திருகு + சக்கரம்]*

**திருகுசாமந்திப்பூ** *tirugu-šāmandi-p-pū*, பெ. (n.) பெண்கள் தலையிலணியும் திருகுப் பூ வகை (இ.வ.); chrysanthemum-shaped ornament, worn by girls on their heads.

*[திருகு + சாமந்தி + பூ]*

**திருகுசுருள்** *tirugu-šuruḷ*, பெ. (n.) திருகு சுருளாகச் செல்கிற சுருள் வட்டவளைவு (அறி. களஞ்.); spiral.

*[திருகு + சுருள்]*

**திருகுசொல்லி** *tirugu-šolli*, பெ. (n.) கபடமாய்ப் பேசுபவள் (வின்.); a prevaricating woman.

*[திருகு + சொல்லி]*

**திருகுதாழை** *tirugu-tāḻai*, பெ. (n.) வாதமடக்கி மூலிகை; worn-killer.

*[திருகு + தாழை]*

**திருகுதாளம்** *tirugu-dāḷam*, பெ. (n.) மாறுபட்ட பேச்சு, புரட்டு (நெல்லை); artifice trick, chicanery. இந்த வேலையில் உன் திருகுதாளம் எல்லாம் நடக்காது.

*[திருகு + தாளம்]*

**திருகுதாளி** *tirugu-dāḷi*, பெ. (n.) புரட்டன் (யாழ்.அக.); cheat, trickish person.

*[திருகு + தாளி]*

**திருகுபுரி** *tirugu-puri,* பெ. (n.) திருகாணிச் சுரையின் உட்சுற்றுத் திருகுபுரி(அறி.களஞ்); screw threads.

*[திருகு + புரி]*

**திருகுப்பூ** *tirugu-p-pū,* பெ. (n.) செவந்தி வடிவிலான மகளிர் தலையணி வகை; girl's hair-ornament in the shape of a chry santhemum.

தெ. திருகுடுபுவ்வு; க. திருபு

*[திருகு + பூ]*

**திருகுபலை** *tirugu-palai,* பெ. (n.) வலம்புரிக் காய் (தைலவ. தைல. 104); fruit of the East Indian screw tree.

*[திருகு + பலை]*

**திருகுபனைமுகிழ்** *tirugu-paṉai-mugiḻ,* பெ. (n.) பனை மடல் (யாழ்ப்.); the whole upper integurment of a palmyra fruit.

*[திருகு + பனை முகிழ்]*

**திருகுமணை** *tirugu-maṇai,* பெ. (n.) தேங்காய் துருவும் மணை; coconut-scraper.

க. துருவுமனை

*[திருகு + மணை]*



**திருகுமரம்** *tirugu-maram,* பெ. (n.) 1. கோணல் மரம்; twisted or crooked tree. 2. வழித்தடையான சுழல்மரம் (இ.வ.); turnstile.

*[திருகு + மரம்]*

**திருகுமரை** *tirugu-marai,* பெ. (n.) 1. திருகு முதலியவற்றின் சுரிந்தவரை; thread of a screw. 2. திருகாணி; screw, as in ornaments. 3. திருகாணியின் தலை (இவ.); nut for securing bolt.

*[திருகு + மரை]*

**திருகுமுகம்** *tirugu-mugam,* பெ. (n.) 1. பாரா முகம் (வின்.); indifference as indicated by averted face. 2. ஒருபக்கம் திரும்பிய அழகற்ற முகம்; face contorted to one side with an averse or unfavarable countenence. 3. நோயினின்று தெளிவடையலாமெனக் காட்டு முகம்; face showing a favourable crisis with reference to sickness.

*[திருகு + முகம்]*

**திருகுமூலம்** *tirugu-mūlam,* பெ. (n.) முடக் கொற்றான்; balloon vine.



**திருகுவட்டம்** *tirugu-vaṭṭam,* பெ. (n.) நூல் சுற்றுங் கருவி வகை (வின்.); small wedge-shaped reel with a handle for winding yarn.

*[திருகு + வட்டம்]*



**திருகுவரிக்கடைசல்எந்திரம்** *tirugu-vari-k-kadaišal-y-andiram,* பெ. (n.) திருகாணி

வரிகளை வெட்டுவதற்கேற்ற கடைசல் எந்திரம் (அறிவி.களஞ்); screw cutting lathe.

*[திருகு + வரி + கடைசல் + இயந்திரம்]*

**திருகுவாதம்** *tirugu-vādam*, பெ. (n.) முதுகும் விலாவும் திருகித் தெரிந்திடும் ஒருவகை முடக்குநோய்; a variety of rheumatism.

*[திருகு + வாதம். வ. வாதம்]*

**திருகுவானூர்தி** *tirugu-vānūrdi*, பெ. (n.) தும்பியம்; helicopter.

*[திருகு + வான் + ஊர்தி]*

**திருகுவிட்டமானி** *tirugu-viṭṭamāṉi*, பெ. (n.) திருகு அமைப்புடைய வட்டமானி (அறிவி. களஞ்); screw adjusting calyser.

*[திருகு + விட்டம் + மானி]*

இதில் நுட்பமான சீரமைப்புக் கேற்ற வில் சுருள் அமைந்த திருகாணி அமைப்புள்ளது

**திருகுவில்லை** *tirugu-villai*, பெ. (n.) திருகுப்பூ (உவ.) பார்க்க; see *tirugu-p-pu*.

*[திருகு + வில்லை]*

**திருகுவெட்டித்தகடு** *tirugu-veṭṭi-t-tagaḍu*, பெ. (n.) திருகுபுரிகளை வெட்டுதற்கான துளைகளையுடைய எஃகுத் தகடு (அறிவி. களஞ்); screw plate.

*[திருகு + வெட்டு + தகடு]*

**திருகுளி** *tiruguḷi*, பெ. (n.) *1.* உளி வகை; carpenter's plane. *2.* திருப்புளி; turnscrew, screwdriver. *3.* திருகூசி[1] பார்க்க; see *tiru-kūši*.

*[திருகு + உளி]*



**திருகூசி** *tiru-kūši*, பெ. (n.) *1.* ஓலையில் துளையிடுங் கருவி வகை; drill to bore holes in an ola book. *2.* கிணற்றுத் துலாவின் குறுக்கேயிடும் அச்சுக்கட்டை; cross-beam in a well-sweep.

*[திருகு + ஊசி]*

**திருகையத்தான்** *tirugaiyattāṉ*, பெ. (n.) சிவனார் வேம்பு; Shiva's neem.

**திருங்கற்று** *tiruṅgaṟṟu*, பெ. (n.) கப்பலின் முன்பக்கத்திலுள்ள பாய்மரம் (M.Navi.80). fore-mast.

**திருங்கற்றுக்காவிச்சவாய்** *tiruṅgaṟṟu-k-kāvi-c-cavāy*, பெ. (n.) திருங்கற்றுக் காவிமரத்தில் கட்டப்பட்ட கயிறு (M.Navi. 83); fore-top-mast stay.

**திருங்கற்றுக்காவிச்சேர்சவாய்** *tiruṅ-gaṟṟu-k-kāvi-c-cēr-šavāy*, பெ. (n.) திருங்கற்றுக் காவி மரத்தின் கயிறுகளிற் கட்டப்படும் பாய் (M.navi. 83); fore-top-mast stay-sail.

*[திருங்காற்று + காவி + சேர்சவாய்]*

**திருங்கற்றுக்காவிப்பறுவான்** *tiruṅgaṟṟu-k-kāvi-p-paṟuvāṉ*, பெ. (n.) திருங்கற்றுமரத்தின் பகுதியாகிய காவிமரத்தின் குறுக்கே போடப் பட்டிருக்கும் மரச்சட்டம் (M.navi. 8l); fore-top-yard.

*[திருங்கற்று + காவி + பறுவான்]*

**திருங்கற்றுக்காவிமரம்** *tiruṅgaṟṟu-k-kāvi-maram*, பெ. (n.) திருங்கற்று மரத்தின் அடிக்கட்டைக்கு மேலுள்ள பகுதி (M.navi. 8l); fare-top-mast.

*[திருங்கற்று + காவி + மரம்]*

**திருங்கற்றுச்சவர்மரம்** *tiruṅgaṟṟu-c-cavar-maram*, பெ. (n.) திருங்கற்று மரத்திலுள்ள காவிமரத்துக்கு அடுத்து மேலுள்ள பகுதி (M.Navi. 8l); fore-top-gallanet mast.

*[திருங்கற்று + சவர் + மரம்]*

**திருங்கற்றுப்பறுவான்** *tiruṅgaṟṟu-p-paṟuvāṉ*, பெ. (n.) திருங்கற்று மரத்துக்குக் குறுக்கே

இடப்பட்டிருக்கும் மரச்சட்டம் (M.Navi. 81); fore-yard.

*[திருங்கற்று + பறுவான்]*

**திருச்சந்தம்** *tiru-c-candam*, பெ. (n.) அணி வகை (S.I.I. iv, 81); an ornament.

*[திரு + சந்தம்]*

**திருச்சந்தவிருத்தம்** *tiru-c-canda-viruttam*, பெ. (n.) திருமழிசையாழ்வார் இயற்றியதும் நாலாயிரப் பனுவலுள் அடங்கியதுமான நூல்; a poem in Nālāyira-p-pira-pandam by Tirumaḻišai-y-āḻvār.

*[திரு + சந்தம் + விருத்தம்]*

**திருச்சபை** *tiru-c-cabai*, பெ. (n.) *1. தில்லையில் (சிதம்பரத்தில்) உள்ள ஆடவல்லான் அவை;* the sacred shrine of Ādavallān at Chidambram. *2. கிறித்தவர் கூடித் தொழுமிடம்;* church, assemblage or congregation of Christians, select society of believers.

*[திரு + சபை]*

**திருச்சரி** *tiru-c-cari*, பெ. (n.) அணிவகை (M.E.R. 720 of 1916); an ornament.

*[திரு + சரி]*

**திருச்சலை**[1] *tiru-c-calai*, பெ. (n.) கபிலப் பொடி (L.); kamela dye.

**திருச்சலை**[2] *tiru-c-calai*, பெ. (n.) குரங்கு மஞ்சணாறி; monkey face rouge-mallotus phillipinensis (சா.அக.).

**திருச்சாந்தாடல்** *tiru-c-cāndāḍal*, பெ. (n.) கோயிலில் தெய்வத்திருமேனிக்கிடும் சந்தனக் காப்பு (I.m.p.cg. 1000) besmearing an idol with sandal paste.

*[திரு + சாந்து + ஆடல்]*

**திருச்சாயல்** *tiru-c-cāyal*, பெ. (n.) தெய்வப் படிவம் (கிறித்துவம்); divine image, the likeness of God.

*[திரு + சாயல்]*

**திருச்சித்தம்** *tiru-c-cittam*, பெ. (n.) திருவுள்ளம்; divine will, will of great men. தேவரீர் திருச்சித்தப்படியே நடக்கிறேன்.

*[திரு + சித்தம்]*

**திருச்சிராப்பள்ளி** *tiru-c-cirā-p-paḷḷi*, பெ. (n.) திரிச்சிராப்பள்ளி; Trichinopoly.

**திருச்சிற்றம்பலக்கோவை** *tiru-c-ciṟṟambala-k-kōvai*, பெ. (n.) மாணிக்கவாசகர் இயற்றியதும் திருச்சிற்றம்பலத்தைப் பற்றியதுமான அகப்பொருட்கோவை; a kōvai poem on Chidambaram by Māṇikkavāšakar.

*[திரு + சிற்றம்பலம் + கோவை]*

**திருச்சிற்றம்பலம்** *tiru-c-ciṟṟambalam*, பெ. (n.) *1. தில்லையிலுள்ள பொன்னம்பலம்;* the sacred shrine of Ādavallān at Chidambaram. *2. தேவாரம் முதலியவை பாடுவதற்கு முன்னரும் கடிதம் முதலியவை எழுதுவதற்கு முன்னரும் சிவனியர்கள் வழங்கும் ஒரு வணக்கச் சொல்;* an invocatory expression of Saivaites used when reciting Tēvāram hymns or writing letter, document, etc.

*[திரு + சிற்றம்பலம்]*

**திருச்சிற்று** *tiru-c-ciṟṟu*, பெ. (n.) கோயில் பெருக்குபவள் (இ.வ.); sweeper-woman of a temple.

*[திரு + சிற்று]*

**திருச்சின்னம்** *tiru-c-cinnam*, பெ. (n.) தெய்வம், அரசன் முதலானாரின் முன்பு இசைக்கும் ஊது குழலுள்ள இசைக்கருவி; a kind of trumpet, usually blown in pairs before a detiy, king. etc.

*[திரு + சின்னம்]*

**திருச்சீரலைவாய்** *tiru-c-cīr-alaivāy*, பெ. (n.) திருச்செந்தூர் (திருமுருகு. 125) பார்க்க; see *tiru-c-cendūr.*

*[திரு + சீர் + அலைவாய்]*

**திருச்சுண்ணம்** *tiru-c-cuṇṇam*, பெ. (n.) திருமண் பார்க்க; see *tirumaṇ.*

*[திரு + சுண்ணம்]*

**திருச்சுற்றாலயம்** *tiru-c-cuṟṟālayam*, பெ. (n.) கோயிலின் சுற்றுப் பகுதியிலுள்ள தெய்வங்களின் கோயில்; I.M.P.Tj. 450 temples of minor deities in temple enclosure.

*[திரு + சுற்று + ஆலயம்]*

**திருச்சுற்றாலை** *tiru-c-cuṟṟālai*, பெ. (n.) 1. திருச்சுற்றாலயம் பார்க்க; see *tiru-c-cuṟṟālayam*. "மஹாதேவர் ஸ்ரீகோயிலுக்குந் திருச்சுற்றாலைக்கும்" (S.I.I.iii,23.). 2. திருச்சுற்று மாளிகை பார்க்க; see *tiru-c-cuṟṟu-māligai*.

[திரு + சுற்றாலை]

**திருச்சுற்று** *tiru-c-cuṟṟu*, பெ. (n.) கோயிலைச். சுற்றியுள்ள பகுதி; temple enclosure. "சேனை முதலியார் திருச்சுற்றான ராஜமகேந்திரன் திருவீதியில்" (கோயிலொ. 13).

[திரு + சுற்று]

**திருச்சுற்றுமண்டபம்** *tiru-c-cuṟṟu-maṇḍapam*, பெ. (n.) திருசுற்றுமாளிகை பார்க்க; see *tiru-cuṟṟu-māḷigai*. "திருச்சுற்று மண்டபத்துக் கோயிற் கருமமாராயாவிருந்து" (S.I.I.iii, 137).

[திரு + சுற்று + மண்டபம்]

**திருச்சுற்றுமாடம்** *tiru-c-cuṟṟu-māḍam*, பெ. (n.) திருச்சுற்று மாளிகை; a maṇḍabam like enclosure round the shrine in a temple. "இக்கோயில் திருச்சுற்று மாடம் எடுக்க" (S.I.I.v, 326).

[திரு + சுற்று + மாடம்]

**திருச்சுற்றுமாளிகை** *tiru-c-cuṟṟu-māḷigai*, பெ. (n.) கோயில் திருச்சுற்று மதிலின் உட்புறம் தொடர்ந்தாற் போல் கட்டப்பெறும் நெடு மண்டபம்; porches surrounding the inner shrine of a temple; maṇḍabam enclosing a temple. "ராஜராஜதேவர் திருவாய்மொழிந்தருள இத்திருச்சுற்று மாளிகை எடுப்பித்தான்" (S.I.I.iii, 139).

[திரு + சுற்று + மாளிகை]

**திருச்சூரணம்** *tiru-c-cūraṇam*, பெ. (n.) மஞ்சள் தூள்; turmeric powder (சா.அக.).

[திரு + சூரணம்]

**திருச்சூலக்கல்** *tiru-c-cūla-k-kal*, பெ. (n.) சிவன் கோயிலுக்குரிய தேவதான நிலங்களின் எல்லைகளில் நாட்டப்பெறும் முத்தலைச் சூலம் பொறித்த எல்லைக்கல்; demarcation stones with trident mart, for the lands belonging to Śiva temples. "நான்கெல்லையும் திருச்சூலக்கல்லு நாட்டிக் கொள்க" (S.I.I.ii, 247). "இந்நிலத்தில் நாற்பாலெல்லையிலும் திருச்சூலக் கல்லுநாட்டி" (தெகல்தொ. 12, பகு. 1, கல். 142).

மறுவ. திரிச்சூலக்கல்

[திரு + சூலம் + கல்]

**திருச்சூலத்தாபரம்** *tiru-c-cūla-t-tābaram*, பெ. (n.) திருச்சூலக்கல் பார்க்க; see *tiri-c-cūlakkal*. "இறையிலி திருநாமத்துக் காணியாகத் தந்தோம். இப்படிக்கு நாற்பாற்கெல்லைக்கும் திருச்சூலதாபரமும் பண்ணி கல்லிலும் வெட்டிக் கொள்க" (முதற்குலோத்துங்கன், கிபி. 1078, தெ. கல். தொ. 7, கல். 780).

**திருச்சூலி** *tiru-c-cūli*, பெ. (n.) கற்றாழை; aloe (சா.அக.).

**திருச்செங்கோடு** *tiru-c-ceṅgōḍu*, பெ. (n.) நாமக்கல் மாவட்டத்திலுள்ள ஊர்; the small town in Namakkal district.

[திரு + செங்கோடு]

கோடு என்பது மலையைக் குறிக்கும். இப்பகுதியிலுள்ள மலை சிவப்பு நிறம் வாய்ந்ததாக விளங்குவதால் செங்கோடு எனப்பெயர் பெற்றது. இம்மலையைச் சுற்றி உள்ள ஊர், மலையின் பெயரால் இப் பெயர்ப் பெற்றது. மதுரையைத் தீக்கிரை யாக்கிய பின் இரவும் பகலும் 14 நாட்கள் நடந்து சென்று "நெடுவேல் குன்றம் அடி வைத்தேறிப் பூத்த வேங்கைப் பொங்கர்க் கீழ்" தங்கியபோது அவள் (கண்ணகி) உயிர் பிரிந்தது என்று சிலப்பதிகாரம் கூறும் நெடுவேல் குன்றம் என்பது திருச்செங்கோடே என அரும்பத உரையாசிரியர் கூறுவார். இங்குச் சோழர் கால வெட்டுக்கள் கிடைத்துள்ளன. ஞானசம்பந்தர் இத்தலத்தை "சீருறும் அந்தணர்வாழ் கொடி மாடச் செங்குன்றூர் நின்ற" எனப் பாடியுள்ளார் (தமி. ஊர். பெ. அக.).

**திருச்செந்தில்** *tiru-c-cendil*, பெ. (n.). திருச்செந்தூர் பார்க்க; see *tiru-c-cendūr*.

[திரு + செந்தில்]

**திருச்செந்தில்சந்தவிருத்தம்** *tiru-c-cendil-canda-viruttam*, பெ. (n.) ஆறுமுக நாவலரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Āṟumuga-nāvalar in 19th century.

[திரு + செந்தில் + சந்தம் + விருத்தம்]

**திருச்செந்தூர்** *tiru-c-cendūr,* பெ. (n.). **திருநெல்வேலி மாவட்டத்துள்ளதும் முருகக் கடவுள் அறுபடை வீடுகள் எனப்படு பவற்றுள் ஒன்றுமான இடம்;** Tiru-c-cendūr, a Skanda shrine in Tinnelvelly district, one of six-paḍai-vīḍu.

செம்பொருளான முருகப்பெருமான் கோயில் கொண்டதால் செந்தில் எனப் பெயர் பெற்று, நாளடைவில் 'இல்' நீங்கி ஊர் என மாறி இருக்கின்றது. இதற்கு அலைவாய் படை வீடு என்ற பெயர்களும் உண்டு. இவ்வூரை "வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்" எனப் புறநானூறு குறிக்கின்றது. "சீரார் குமரரோ - என் கண்ணே திருச்செந்தூர் வேலவரோ" என்று நாட்டுப் புறப் பாடல் இவ்வூரைக் குறிக்கும். "சிக்கலில் வேல்வாங்கிச் செந்தூரில் சூரசம்மாரம் என்னும் பழமொழி சிக்கலில் முருகன் வேல் வாங்கியதையும் திருச்செந்தூரில் அவ்வேலால் அசுரனை அழித்ததையும் குறிக்கும் *(தமி. ஊர். பெ. அக.).*

*[திரு + செந்தில் + ஊர் → திருச்செந்தூர்]*

**திருச்செந்தூர்நொண்டிநாடகம்** *tiru-c-cendūr-noṇḍi-nāḍagam,* பெ. (n.) **மாரிமுத்துப் பிள்ளை என்பவரால் 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்** *(சிற்.அக.);* a minor literature written by Mārimuttu piḷḷai in 18th century.

*[திருச்செந்தூர் + நொண்டி + நாடகம்]*

**திருச்செந்நடை** *tiru-c-cennaḍai,* பெ. (n.) **கோயிலின் நடப்புச் செலவு** *(S.I.I.iii, 335);* current expenses of a temple.

*[திரு + செம்மை + நடை]*

**திருச்செந்நெல்நடை** *tiru-c-cennel-naḍai,* பெ. (n.) **கோயில் அமுது படித்தரம்;** provision of campā paddy for making offering in a temple *(செ.அக.).*

*[திரு + செந்நெல் + நடை]*

**திருச்செம்பொன்கோவில்** *tiru-c-cempoṉ-kōvil,* பெ. (n.) **நாகை மாவட்டம் சீர்காழி வட்டத்திலுள்ள ஊர்;** the small town in Nāgai district. கோயிலின் சிறப்பால் இப்பெயர் வழங்குகின்றதென்பர். இவ்வூர் மாலியத் திருத்தலமாக விளங்குகின்றது.

**திருச்செவிசாத்து-தல்** *tiru-c-cevi-šāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **கேட்டருளுதல்;** to be pleased to hear *(செ.அக.).*

*[திரு + செவி + சாத்து-.]*

**திருச்செய்ஞலூர்** *tiru-c-cey-ñalūr,* பெ. (n.) **தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஊர்;** a village in Tanjavure district. சேய் என்னும் பெயரையுடைய முருகன் இவ்வூரில் தங்கி சிவலிங்கத்தை வழிபட்டதால் இவ்வூர் சேய் ஞலூர் என ஆயிற்று என்பர்.

**திருச்சேறை** *tiru-c-cēṟai,* பெ. (n.) **தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர். மாலியத் திருப்பதியாகவும் சிவதலமாகவும் விளங்கு கின்றது;** district. இவ்வூரில் இறைவன் கோபுரம், தாயார், நீர் என ஐந்து சாரங்களும் ஒரு சேர அமைந்திருப்பதால் இப்பெயர் பெற்றது. "சிறப்பர் சேறையும் செந்நெறியான் கழல்" என நாவுக்கரசர் இத்தலத்தைப் பற்றிப் பாடியுள்ளார் *(தமி. ஊர். பெ. அக.).*

*[திரு + சேறை]*

**திருச்சோற்றுத்துறை** *tiru-c-cōṟṟu-t-tuṟai,* பெ. (n.) **தஞ்சை மாவட்டத்திலுள்ள சிவதலம்;** the village in Tanjavure district. *1.* இவ்வூர் நீர்வள, நிலவள காரணமாகச் சேற்றுத்துறை என பெயர்ப் பெற்றுப் பின் சோற்றுத்துறை என ஆகியிருக்கலாம். 2. சிவனடியார் ஒருவர் பசியால் வாடுவதைக் கண்ட சிவபெருமான் எடுக்கக் குறையாத சோற்றுக்கலம் ஒன்றை தந்தருளி யிருப்பதால் சோற்றுத்துறை எனப் பெயர்ப் பெற்றது என்பர். சுந்தரர் இவ்வூரை,

"சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத்துறையே"

எனப் பாடியுள்ளார் *(தமி. ஊர். பெ. அக.).*

*[திரு + சோறு + துறை]*

**திருசிமாந்தம்** *tirušimāndam,* பெ. (n.). **வெண்பாதிரி;** trumpet tree bearing white flowers *(சா.அக.).*

**திருசூலை** *tirušūlai,* பெ. (n.) **சிவனார் வேம்பு;** Šiva's neem *(சா.அக.).*

**திருசோபம்** *tiru-šōbam,* பெ. (n.) **வெண்டாமரை** *(மலை.);* white lotus.

**திருஞ்சூலி** *tiruñjūli,* பெ. (n.) கற்றாழை; aloe (சா.அக.).

**திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்** *tiru-ñāṉa-šambanda-mūrtti-nāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவரும் தேவாரத்தின் ஒரு பகுதி இயற்றியவரும் 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான சமயாசாரியர் (பெரியபு.); a canonized šaiva saint author of a section of the Tevāram, 7th c. one of 63.

**திருஞானசம்பந்தர்பதிகம்** *tiru-ñāṉa-šambantar-patigam,* பெ. (n.) இராமசுப்பிரமணியம் செட்டியாரால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது (சிற்.அக.); a minor literature written by Rāmasuppira maniyam Mudaliyār in 20th century.

*[திருஞானசம்பந்தர் + பதிகம்]*

**திருஞானப்புறம்** *tiruñāṉa-p-puṟam,* பெ. (n.) தேவாரம் முதலிய திருப்பாட்டுப் பாடுவதற்கு வழங்கப்படும் மானியம்; land bestowed for the recitation of sacred hymns.

*[திரு + ஞானம் + புறம்]*

**திருஞானம்** *tiru-ñāṉam,* பெ. (n.) 1. சிவனறிவு, மெய்யறிவு (சிவஞானம்); knowledge or perception of Šiva-ñāṉam. "முகிண் முலைத் திருஞானம் பொழிந்த பான்மணம்" (சம்பந். பிள்.). 2. பாலில்வெந்த அக்காரவடிசில்; food cooked in milk and sweetened with sugar. "நெறியருச் சித்துத் திருஞானமுள் நீரடைக்காயும் படைத்து" (ஞானதீக்ஷை. 4). 3. கோயில் திருமேனி முன்பு பாடும் திருப்பாட்டு (S.I.I.V.146); sacred hymns sung before the chief deity in a temple.

*[திரு + ஞானம். வ. ஞானம்]*

**திருஞானம்பெற்றபிள்ளையார்** *tiru-ñāṉam-peṟṟa-piḷḷaiyār,* பெ. (n.) திருஞான சம்பந்த நாயனார் (M.E.R. 208 of 1924); saint Jñāṉašambandha.

*[திருஞானம் + பெற்ற + பிள்ளையார்]*

**திருட்டவுத்தி** *tiruṭṭa-vutti,* பெ. (n.) சீமையகத்தி; ringworm shrub (சா.அக.).

**திருட்டாட்டம்** *tiruṭṭāṭṭam,* பெ. (n.) திருட்டு (உவ.); theft.

*[திருட்டு + ஆட்டம்]*

**திருட்டியானை** *tiruṭṭi-yāṉai,* பெ. (n.) தன் கூட்டத்தினின்று தனித்த முரட்டுக் காட்டி யானை (இ.வ.); rogue elephant living in isolation from a herd.

*[திருடு + யானை]*

**திருட்டு** *tiruṭṭu,* பெ. (n.) 1. தனக்குச் சொந்தம் இல்லாத ஒன்றை உரியோர் அறியாதபடி எடுக்கும் முறையற்ற செய்கை, களவு (திவா.); theft, robbery. திருட்டு வாய்த்தால் திருடப் படாதா? (பழ.). இலக்கியத் திருட்டு. 2. கரவு (வஞ்சகம்); fraud, deception.

**திருட்டுக்கவி** *tiruṭṭu-k-kavi,* பெ. (n.) 1. கள்ளக் கவி (சோரக்கவி); plagiarized poem. "திருட்டுக் கவிப் புலவரை" (தமிழ்நா. 221). 2. பிறர்கவியைத் திருடிப் பாடுபவன்; a poet who plagiarizes.

*[திருட்டு + கவி]*

**திருட்டுச்சாவான்** *tiruṭṭu-c-cāvāṉ,* பெ. (n.) கள்ளப்போக்கிலி; thievish rogue. ஆக்க மாட்டாத அழுகல்நாரிக்குத் தேடமாட்டாத திருட்டுச் சாவான்.

*[திருட்டு + சாவான்]*

**திருட்டுச்சுரம்** *tiruṭṭu-c-curam,* பெ. (n.). வெளிக்காட்டாது உள்ளாகக் காயும் காய்ச்சல்; internal fever without external symptom of heat.

**திருட்டுடைமை** *tiruṭṭuḍaimai,* பெ. (n.) திருட்டுச் சொத்து; stolen property.

*[திருட்டு + உடைமை]*

**திருட்டுத்தனம்** *tiruṭṭu-t-taṉam,* பெ. (n.) 1. கள்ளம்; thieving, stealthiness. 2. நேர்மை யின்மை; dishonesty. 3. வலக்காரம் (தந்திரம்); craftiness.

*[திருட்டு + தனம்]*

**திருட்டுப்பிள்ளை** *tiruṭṭu-p-piḷḷai,* பெ. (n.). கூடாவொழுக்கத்தால் பிறந்த பிள்ளை (இவ.); natural child.

*[திருட்டு + பிள்ளை]*

**திருட்டுப்போ-தல்** *tiruṭṭu-p-pō-,* 8 செகுவி. (v.i.) *களவுபோதல்;* to be stolen. வீட்டுக்கு வெளியில் இருந்த மிதிவண்டி திருட்டுப் போயிருக்கிறது.

*[திருட்டு + போ-]*

**திருட்டுமட்டை** *tiruṭṭu-maṭṭai,* பெ. (n.) *திருட்டுப் பயல்;* thievish fellow *(செஅக.).*

*[திருட்டு + மட்டை]*

**திருட்டுவழி** *tiruṭṭu-vaḻi,* பெ. (n.) *கள்ள வழி;* secret or falseway.

*[திருட்டு + வழி]*

**திருட்டுவாசல்** *tiruṭṭu-vāšal,* பெ. (n.) *கமுக்க வழி;* sally port, secret gate *(செஅக.).*

*[திருட்டு + வாசல்]*

**திருடக்காண்டம்** *tiruḍa-k-kāṇḍam,* பெ. (n.). *மூங்கில்;* bamboo *(சாஅக.).*

**திருடக்கிரந்தி** *tiruḍa-k-kirandi,* பெ. (n.). *மூங்கில் (மலை.);* bamboo *(செஅக.).*

**திருடதை** *tiruḍatai,* பெ. (n.) *1. வலு;* strength. *2. மர வயிரம்;* heart-wood. *3. மிகுதி;* abundance *(சாஅக.).*

**திருடபலம்** *tiruḍa-palam,* பெ. (n.) *1. கொட்டைப் பாக்கு வகை;* a kind of areca nut. *2. தேங்காய்;* coconut *(செஅக.).*

**திருடமம்** *tiruḍamam,* பெ. (n.) *தென்னை;* coconut tree *(சாஅக.).*

**திருடமூலம்** *tiruḍa-mūlam,* பெ. (n.) *1. தேங்காய்;* coconut. *2. விடத்தேர்;* sore eye plant *(சாஅக.).*

**திருடழம்** *tiruḍaḻam,* பெ. (n.) *திருடமூலம் (மலை.) பார்க்க;* see *tiruḍa-mūlam.*

**திருடகாந்தம்** *tiruḍa-kāntam,* பெ. (n.). *மூங்கில்;* bamboo.

**திருடன்** *tiruḍaṉ,* பெ. (n.) *1. திருட்டுத் தொழில் செய்பவன்; கள்வன் (பிங்.);* male thief. *2. வலக்காரன் (தந்திரக்காரன்);* sly, artful fellow. திருடனைத் தேள் கொட்டியது போல, திருடனுக்குத் திருட்டுப் புத்திப் போகாது *(பழ.).*

*[திருடு → திருடன்]*

**திருடாட்டபதி** *tiruḍāṭṭa-pati,* பெ. (n.). *சிறுபுள்ளடி;* scarbrous ovate, unifoliate tick trefoil *(சாஅக.).*

**திருடி** *tiruḍi,* பெ. (n.) *1. திருடுபவள்;* female thief. திருடிக்குத் தெய்வமில்லை, சம்சாரிக்கு ஆணையில்லை *(பழ.). 2. கள்ளி (மூஅ.);* spurge.

*[திருடு → திருடி]*

**திருடு¹-தல்** *tiruḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *களவாடுதல்;* to steal, rob, pilfer. பணத்தைத் திருடும்போது கையும் களவுமாகப் பிடிபட்டான் *(செஅக.).*

**திருடு²** *tiruḍu,* பெ. (n.) *களவு;* theft, robbery. பக்கத்து வீட்டில் திருடு நடந்தது தெரியாமல் தூங்கினான்; திருடத் தெரிந்தால் தெற்றுமாற்றுந் தெரிய வேண்டும் *(பழ.).*

**திருணகம்** *tiruṇagam,* பெ. (n.) *வாளுறை;* sheath of a sword *(செஅக.).*

**திருணகேது** *tiruṇa-k-kēdu,* பெ. (n.) *மூங்கில் (மலை.);* bamboo.

**திருணசாரை** *tiruṇa-šārai,* பெ. (n.) *வாழை (மலை.) பார்க்க;* plantain tree.

**திருணசூனியம்** *tiruṇa-šūṉiyam,* பெ. (n.) *தாழை (மலை);* fragrant screw-pine.

**திருணராகவம்** *tiruṇarāgavam,* பெ. (n.) *1. சுக்கு நாறிப்புல்;* ginger grass. *2. ஒரு மரம்;* an unknown tree *(சாஅக.).*

**திருணா** *tiruṇā,* பெ. (n.) *சுரா (L.);* common bottle flower *(செஅக.).*

**திருத்தக்கதேவர்** *tiru-t-takka-tēvar,* பெ. (n.) *9ஆம் நூற்றாண்டினரும் சீவகசிந்தாமணி ஆசிரியருமான சமணர்;* the Jaina, author of Šīvaga-šindāmaṇi, prob. 9th c. *(செஅக.).*

**திருத்தக்காரன்** *tirutta-k-kāraṉ,* பெ. (n.) *1. நேர்மையானவன்;* correct, upright, moral person. *2. தெளிவாய்ப் பேசுபவன்;* one who speaks clearly and neatly *(செஅக.).*

*[திருத்து → திருத்தக்காரன்]*

**திருத்தகு-தல்** *tiru-t-tagu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. **தூய்மை பொருந்துதல்;** to be sacred. "திருத்தகு மறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்" *(திருவாச. 3:16).* 2. **அழகு தகுதல்;** to adorn, add beauty. "செல்வமொ டெல்லாந் திருத்தக்கான்" *(சீவக. 1635).*

*[திரு + தகு-.]*

**திருத்தகுமாமுனி** *tiruttagu-mā-muṉi,* பெ. (n.) திருத்தக்கதேவர் பார்க்க; see *tiru-t-takka-tēvar.* "திருத்தகுமாமுனி செய் சிந்தாமணியும்" *(பெருந்தொ. 1551).*

**திருத்தண்கா** *tiru-t-taṇkā,* பெ. (n.) **காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ள மாலியத்தலம்;** a village in Kañjipuram district.

குளிர்ந்த சோலைகள் நிறைந்த பகுதியில் இவ்வூர் தோன்றியதால் இப்பெயர் பெற்றது. இதனை திருமங்கையாழ்வார் "விளக் கொளியை மரகதத்தைத் திருத்தண்காவில் வெஃகாவில் திருமாலைப் பாடக்கேட்டு" என இப்பதியைப் பாடியுள்ளார் *(தமி.ஊர்.பெ. அக.).*

**திருத்தண்கால்** *tiru-t-taṇkāl,* பெ. (n.) **தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள ஊர்;** a village in Tūttu-k-kuḍi district.

1. இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் பெயர் தண்காலப்பன். இச்சிறப்பினால் இவ்வூர் இப்பெயர் பெற்றது.

2. தண்கால் என்பது நீர்வளம் நிறைந்த பகுதியையும், சோலைகளையும், பொழில் களையும் குறிக்கும். இவ்வளமை காரணமாகவும் இப்பெயர் பெற்றது. திருமங்கையாழ்வார் இப்பதியை "சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித்து ஆங்கே தண்காலும் தண்குடந்தை நகரும் பாடித் தண்கோவலூர் பாடியாடக் கேட்டு" எனப் பாடியுள்ளார் *(தமி. ஊர். பெ. அக.).*

**திருத்தண்டலைநீணெறி** *tiru-t-taṇḍalai-nīṇeṟi,* பெ. (n.) **தஞ்சை மாவட்டம் திருத்துறைப் பூண்டிக்கு வடக்கே உள்ள ஊர்;** the small town in Tanjavure district.

தண்டலை என்ற சொல் சோலையைக் குறிக்கும். இங்கு எழுந்தருளி யுள்ள இறைவன் நீணெறிநாதர், கோயில்கள் சூழ்ந்த பகுதியில் கோயில் கொண்டு உள்ளமையால், இப்பகுதி யிலுள்ள ஊர் தண்டலை நீணெறி என்று பெயர் பெற்றது. சம்பந்தரால் பாடப்பெற்ற தலம் *(தமி. ஊர். பெ.அக.).*

*[திரு + தண்டலை + நீணெறி]*

**திருத்தணி** *tiru-t-taṇi,* பெ. (n.) **தொண்டை நாட்டு முருகக்கடவுள் கோயில் உள்ள தலங்களுள் ஒன்று;** tiruttaṇi, a Skanda shrine in Toṇḍai-nāḍu.

**திருத்தணிகைநூற்பாஅலங்கல்** *tiru-t-taṇigai-nūṟpā-alaṅgal,* பெ. (n.) **ஆறுமுகம் என்பவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.);** a minor literature written by Āṟumugam in 19th century.

**திருத்தணிகைப்பதிகம்** *tiru-t-taṇigai-p-padigam,* பெ. (n.) **இராமானுசம் பிள்ளையால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.);** a minor literature written by Ramānujam piḷḷai in 19th century.

*[திருத்தணிகை + பதிகம்]*

**திருத்தணிகைவிருத்தம்** *tiru-t-taṇigai-viruttam,* பெ. (n.) **சுப்பிரமணியத் தம்பிரானால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.);** a minor literature written by Suppiramaṇiya-t-tambirāṉ in 19th century.

*[திருத்தணிகை + பதிகம்]*

**திருத்தணிமுருகன்காவடிப்பதம்** *tiruttaṇi-murugaṉ-kāvaḍi-p-padam,* பெ. (n.) **இராமநாதப் பிள்ளையாரால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.);** a minor literature written by Ramanāda piḷḷaiyār in 19-20th century.

*[திருத்தணி + முருகன் + காவடிப் பதம்]*

**திருத்தம்** *tiruttam,* பெ. (n.) 1. **எழுதபட்டவற்றில் அல்லது அச்சிடப்பட்டவற்றில் உள்ள தவறுகளை நீக்கி ஒழுங்குபடுத்தித் தரும் முறை, பிழை திருத்துகை;** correction. 2. **கட்டடம் முதலியவற்றைச் செப்பம்**

செய்கை; repair; improvement as of a building. 3. சட்டம் தீர்மானம் முதலியவற்றில் செய்யப்படும் மாற்றம்; amendment, as of law, proposal, etc. வருமானவரிச் சட்டத்தில் சில மாற்றங்கள் செய்ய வேண்டும். 4. ஒழுங்கு; orderliness, regularity. 5. செப்பம்; evenness, smoothness. 6. திட்டம்; exactness, precision (செ.அக.).

[திருத்து → திருத்தம்]

**திருத்தல்** *tiruttal,* பெ. (n.) 1. திருத்தம்; correction, as of writing. 2. நெல்வயல் (இ.வ.); paddy field.

[திருத்து → திருத்தல்]

**திருத்தற்குறிப்பு** *tiruttaṟ-kuṟippu,* பெ. (n.) திருத்தங்கள் கொண்ட குறிப்பு (C.G.); memo or note of corrections.

**திருத்தன்** *tiruttaṉ,* பெ. (n.) 1. தூய்மையானவன்; holy person. 2. கடவுள்; God, as holy. "திருத்தன் சேவடியை" (தேவா. 376, 4).

[திருத்து → திருத்தன்]

**திருத்தாண்டகம்** *tiru-t-tāṇḍagam,* பெ. (n.). திருநாவுக்கரசரால் 7ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் தேவாரத்தில் ஒரு பகுதி; a book written by Tirunāvukarašar in 6th century (சிற்.அக.).

[திரு + தாண்டகம்]

**திருத்தாலாட்டு** *tiru-t-tālāṭṭu,* பெ. (n.) அச்சுதானந்த அடிகளால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Accutānanta aḍikaḷ in 20th century.

[திரு + தாலாட்டு]

**திருத்தில்** *tiruttil,* பெ. (n.) திருத்தம் செய்யப்பட்ட நிலம்; cultivated land. "இத்தேவர் ஊரான சோதியம் பாக்கத்து ஊரின் மேலை புதுத்திருத்தில் அரையும்", "புது திருத்தில் அரை - புதிதாகத் திருத்தம் செய்யப்பட்ட நிலத்தில் அரைமாவும்" (தெகல்.தொ.3:1, கல்.11).

[திருத்து → திருத்தில்]

**திருத்து**[1]**-தல்** *tiruttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பேச்சு, எழுத்து ஆகியவற்றில் உள்ள தவறுகளை நீக்கிச் சரி செய்தல், செவ்வி தாக்குதல்; to correct, rectify, reform. "கொடிது கடிந்து கோறிருத்தி" (புறநா. 17). 2. சீர்ப்படுத்துதல் (வின்.); to mend, repair, refit. 3. மேன்மைப் படுத்துதல்; to improve, elevate. "துளங்குடி திருத்திய ... வென்றியும்" (பதிற்றுப். 37:7). 4. செம்மையாகச் செய்தல்; perform excellently. "மூவர்காரியமுந் திருத்தும்" (திவ். பெரியாழ். 4. 4:1). 5. செம்மைபெற அணிதல்; to deck oneself properly in; to dress sprucely. "பட்டாடை சாத்திப் பணிமேகலை திருத்தி" (பிரபோத 27:19). 6. நன்கமைத்தல்; to arrange properly. "பரிசு விளங்கப் பரிகலமுந் திருத்தி" (பெரியபு. சிறுத்தொண். 73). 7. வயல் பண்படுத்துதல்; to prepare and make a land suitable for cultivation. "பூமிவெளி காணத்திருத்தி" (தாயு. ஆனந்தமான. 6). 8. மெருகிடுதல் (வின்.); to scour and polish. 9. ஆடைதுவைத்தல்; to clean clothes. 10. மேற்பார்த்தல்; to supervise. "கிராமகாரியந் திருத்தும் பெருமக்கள்" (S.I.I.iii. 21). 11. இலை காய் முதலியன நறுக்குதல்; to prepare vegetables, plantain-leaves, etc. by cutting them to size. 12. அழைத்தல்; to call, summon. "திருத்தாய் செம்போத்தே" (திவ். பெரியதி. 10:10: 1). 13. உறவாக்குதல்; to make friends, effect reconciliation. "ஒன்னார் தந்நிலை திருத்திய காதலர்" (பு.வெ. 10, முல்லைப். 3, கொளு).

**திருத்து**[2] *tiruttu,* பெ. (n.) 1. நன்செய்நிலம்; cultivated wet land. "வயல்பிச்சைப் பிள்ளை திருத்தெல்லாம்" (குற்றா. குற. 11:2). 2. காடு திருத்தி வேளாண்மைக்குக் கொண்டு வரப்பட்ட நிலம்; reclaimed land. "மன்றச்சநம்பி திருத்துக்குத் தெற்கில்" (S.I.I.iv. 14).

**திருத்துழாய்** *tiru-t-tuḻāy,* பெ. (n.) துளசி; sacred basil (செ.அக.).

[திரு + துழாய்]

**திருத்துறையூர்** *tiru-t-tuṟaiyūr,* பெ. (n.) கடலூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Cuddalore district. ஆறுகளில் மக்கள் இறங்கி நீரைப் பயன்படுத்து வதற்குரிய இடம் "துறை" எனப்படும். அதுபோல மக்கள் இறையருளைப் பெற உதவும் இடமும் துறை எனப்பட்டதால்

இவ்வூர் துறையூர் எனப்பெயர் பெற்றது. பாடல் பெற்ற தலமாதலால் திரு என்னும் அடை பெற்றது. சுந்தரர் இத்தலத்தை "கரும்பார் மொழிக்கன் னியராடும் துறையூர்" எனப் பாடியுள்ளார் (தமி. ஊர். பெ. அக.).

*[திரு + துறை + ஊர்]*

**திருத்தெள்ளேணம்** *tiru-t-teḷēṇam,* பெ. (n.) தெள்ளேண விளையாட்டில் மகளிர் கூற்றாகப் பாடப்பட்ட திருவாசகப் பகுதி; a poem in Tiruvāšagam, which purports to be sung by girls playing at teḷḷēṇam (செ.அக.).

*[திரு + தெள்ளேணம்]*

**திருத்தென்குடித்திட்டை** *tiru-t-teṉkuḍi-t-tiṭṭai,* பெ. (n.) தஞ்சாவூருக்கு வடகிழக்கே ஆறு கல் (மைல்) தொலைவிலுள்ள ஊர்; a village in Tanjore district. வெட்டாற்றுக்கும், வெண்ணாற்றுக்கும் இடையில் திட்டான பகுதியிலிருப்பதால் இவ்வூர் திட்டை எனப் பெயர் பெற்றது (சிறபெ.அக.).

*[திரு + தென்குடி + திட்டை]*

**திருத்தேர்** *tiru-t-tēr,* பெ. (n.) இறைவன் திருமேனியினை எழுந்தருளச் செய்து வீதியில் வலமாக இழுத்துவரும் மரச் சித்திரத் தேர்; car. தில்லை ஆடவல்லான் திருக்கோயிலில் 12ஆம் நூற்றாண்டு இத்தேர் திருவிழா நிகழ்ந்ததெனக் கல்வெட்டுக் கூறுகின்றது. "நாயகர் திருத்தேர் எழுந்தருளும்போது திருப்புறக் குடையில்" (தெ. கல். தொ. 12. கல். 245).

*[திரு + தேர்]*

**திருத்தொண்டத்தொகை** *tiru-t-toṇḍa-t-togai,* பெ. (n.) அறுபத்து மூவர் நாயன்மார் பெயர்களையும் தொகையடியார்களையும் தொகுத்துச் சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய தேவாரத் திருப்பதிகம்; a poem of 10 stanzas in Tēvāram of Sundaramūrtti nāyaṉār dealing with 63 šaiva saints and dogai-y-aḍiyār. "சொற்றமெய்த் திருத்தொண்டத் தொகை யென" (பெரியபு. மலை. 38).

*[திருத்தொண்டர் + தொகை]*

**திருத்தொண்டர்** *tiru-t-toṇḍar,* பெ. (n.). இறைவனடியார்; devotees of God.

*[திரு + தொண்டர்]*

**திருத்தொண்டர்திருவந்தாதி** *tiru-t-toṇḍar-tiruvandādi,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவரும் தொகையடியாருமாகிய பெரியார் பேரில் நம்பியாண்டார் நம்பிகள் பாடிய ஒரு சிற்றிலக்கியம் (பதினொ.); a poem on the 63 Šaiva saints and dogai-y-aḍiyār by Nambiyāṇḍār-nambi.

*[திருத்தொண்டர் + திருவந்தாதி]*

**திருத்தொண்டர்புராணம்** *tiru-t-toṇḍar-purāṇam,* பெ. (n.) பெரியபுராணம்; Periya-purāṇam. "திருத்தொண்டர் புராணமென்பாம்" (பெரியபு. பாயி. 10).

*[திருத்தொண்டர் + Skt. புராணம்]*

**திருத்தொண்டு** *tiru-t-toṇḍu,* பெ. (n.) கடவுளடியார்க்குச் செய்யும் பணிவிடை; services rendered to God or His devotees. "திருத்தொண்டு பரவுவாம்" (பெரியபு. திருஞான. 1).

*[திரு + தொண்டு]*

**திருத்தோணோக்கம்** *tiru-t-tōṇōkkam,* பெ. (n.) தோணோக்கம் என்ற விளையாட்டில் மகளிர் கூற்றாகப் பாடப்பட்டதும் 14 பாடல்கள் கொண்டதுமான திருவாசகப் பகுதி; a poem of 14 stanzas in Tiruvāšagam which purports to be sung by girls playing at tōnōkkam (செ.அக.).

*[திரு + தோள் + நோக்கம்]*

**திருத்தோப்பு** *tiru-t-tōppu,* பெ. (n.) கோயிலுக் குரிய பூந்தோட்டம் (S.I.I.V. 89); flower-garden attached to a temple.

*[திரு + தோப்பு]*

**திருதம்** *tirudam,* பெ. (n.) தாளவகை; a fast-moving time - measure (செ.அக.).

**திருதராட்டிரன்** *tiruda-rāṭṭiraṉ,* பெ. (n.) பாண்டுவின் தமையனும் கௌரவர் தந்தையுமாகிய அரசன் (சூடா.); paṇḍu's brother and father of the Kauravas.

**திருதாளி** *tirudāḷi,* பெ. (n.) தழுதாழை; creeping screw-pine (சா.அக.).

**திருந்தகைமை** *tirundagaimai,* பெ. (n.) மேன்மை (*யாழ்ப்.*); superiority, excellence.

*[திருந்து + தகைமை]*

**திருந்தலர்** *tiruntalar,* பெ. (n.) திருந்தார் (*பிங்.*) பார்க்க; see *tirundār.*

*[திருந்து + அல் + அர்]*

**திருந்தனம்** *tiruntaṉam,* பெ. (n.) **பெருந்துளசி;** large holy basil (*சா.அக.*).

**திருந்தார்** *tirundār,* பெ. (n.) **பகைவர்;** foes, enemies. "திருந்தார் தெம்முனை" (*பு.வெ. 3:23, கொளு.*).

*[திருந்து + ஆ + ர்]*

**திருந்திழை** *tirundiḻai,* பெ. (n.) **அழகிய அணிகலன் அணிந்த பெண்;** woman as adorned with jewels. "திருந்திழை கணவ" (*பதிற்றுப். 24:11*).

*[திருந்து + இழை]*

**திருந்தினர்** *tirundiṉar,* பெ. (n.) **ஒழுக்க முள்ளவர்;** upright persons, persons of good character. "திருந்தினர் விட்டார் திருவி ரைகம்" (*திருமந். 2339*).

*[திருந்து → திருந்தினர்]*

**திருந்து-தல்** *tirundu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **செவ்விதாதல்;** to be correct, perfect. "திருந்து வேதமும்" (*திவ். திருவாய். 6. 5: 8*). **2. சீர்ப்படுதல்;** to be amended, improved, reformed, as a person, to be settled, as hand-writing, to be trained, as the tongue of a child. அவன் இப்போது திருந்திவிட்டான். *3.* **புதிதாக்கப் படுதல்** (*வின்.*); to be repaired, renovated. *4.* **பண்படுத்தப்படுதல்** (*உ.வ.*); to be improved, as land, soil, situation. *5.* **பயிற்சி மிகுதல்** (*வின்.*); to be disciplined, as the mind; to be educated, cultivated, experienced, proficient. *6.* **தொழில் முற்றுதல்;** to be finished artistically. "திருந்தெயிற் குடபால்" (*மணிமே. 6:22*). **7.** **அழகு பெறுதல்;** to be beautiful elegant. "திருந்து சேவடி பணிந்தனன்" (*தணிகைப்பு. சீபரி. 451*). **8. மேன்மையாதல்;** to be worthy, honourable. "திருந்திய தியாதது செய்து தீர்தும்" (*கம்பரா. சம்பாதி. 5*).

க. திந்து

**திருநகர்** *tiru-nagar,* பெ. (n.) **செல்வநகரம்;** wealthy, prosperous city. "செறிகழலவன் றிருநகர் புகுதர" (*திருக்கோ. 350, கொளு.*).

*[திரு + நகர்]*

**திருநட்டக்கணப்பெருமக்கள்** *tiru-naṭṭa-k-kaṇa-p-perumakkaḷ,* பெ. (n.) **கோயில் அதிகாரிகளுள் ஒரு பகுதியினர்** (S.I.I.vii, 378); a class of temple authorities.

*[திரு + நட்டக்கணம் + பெருமக்கள்]*

**திருநட்டி** *tiru-naṭṭi,* பெ. (n.) **கள்ளி;** milk hedge plant (*சா.அக.*).

**திருநடனம்** *tiru-naḍaṉam,* பெ. (n.). திருக்கூத்து-1 பார்க்க; see *tiru-k-kūttu-1.*

*[திரு + நடனம்]*

**திருநடனமாலை** *tiru-naḍaṉa-mālai,* பெ. (n.). **தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்** (*சிற்.அக.*); a minor literature written by Taṇḍapāṇi šuvāmigaḷ in 19th c.

*[திரு + நடனமாலை]*

**திருநடைமாளிகை** *tiru-naḍai-māḷigai,* பெ. (n.) **கோயில் திருச்சுற்று** (I.M.P.Tj.1237); the procession-path round a shrine.

*[திரு + நடைமாளிகை]*

**திருநணா** *tirunaṇā,* பெ. (n.) **இந்நாளில் பவானி என்றழைக்கப்படும் ஊர் ஈரோடு புகைவண்டி நிலையத்திற்க வடக்கே ஒன்பது நாழிகை வழித் தொலைவிலுள்ளது;** a village in Erode.

> வழிபடுவோர்க்குத் தீமைகள் நண்ணாத ஊராகையால் நண்ணாவூர் கடை குறைந்து நணா என்று நின்றது (சிற. பெ. அக.).

**திருநந்தவனம்** *tiru-nandavaṉam,* பெ. (n.) **கோயிலின் பூந்தோட்டம்** (S.I.I.i, 135); flower garden of a temple.

*[திரு + நந்தவனம்]*

**திருநந்தாவிளக்கு** *tiru-nandā-viḷakku,* பெ. (n.) கடவுள் திருமுன் எப்பொழுதும் எரிந்து கொண்டிருக்குந் திருவிளக்கு; perpetual lamp before the chief idol in a temple. "திருநந்தா விளக்கு . . . சந்திரா தித்தவரையுஞ் செல்லும் படிக்கு" (*S.I.I. i, 79*).

*[திரு + நந்தாவிளக்கு]*



**திருநமனிகை** *tiru-namaṉigai,* பெ. (n.) கோயில் திருமேனிக்குச் செய்யும் திருமுழுக்கு (அபிசேடச் சடங்கு) (S.I.I.ii, 71); ceremonial bath of the deity in a temple.

*[திரு + நமனிகை]*

**திருநயனந்துயில்(லு)-தல்** *tiru-nayaṉan-tuyil-,* 13 செ.கு.வி. (v.i.) கடவுளர் முதலியோர் துயில் கொள்ளுதல்; to sleep, as a deity. "திருநயனந் துயில்வோய்" (*அஷ்டப். திரு. வரங். கலம். 1*).

*[திரு + நயனம் + துயில்-.]*

**திருநயனம்** *tiru-nayaṉam,* பெ. (n.) கோயில் திருமேனிக்குச் சாத்துந் திருக்கண்மலர் (S.I.I.ii, 409); eye made of silver or gold for a deity.

*[திரு + நயனம்]*

**திருநல்லியாண்டு** *tiru-nalli-yāṇḍu,* பெ. (n.) நல்லாட்சி ஆண்டு; prosperous, regnal year. "ஸ்ரீ கரிகாலசோழதேவர்க்கு . . . திரு நல்லியாண்டு 2-ஆவது" (*S.I.I.v, 84*).

*[திரு + நல்லியாண்டு. நல்ல + யாண்டு - நல்லியாண்டு]*

**திருநலியாண்டு** *tiru-nali-yāṇḍu,* பெ. (n.) திருநல்லியாண்டு (S.I.I.v, 83) பார்க்க; see *tiru-nalli-yāṇḍu.*

*[திரு + நலியாண்டு]*

**திருநள்ளாறு** *tiru-naḷḷāṟu,* பெ. (n.) திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் தக்களூர் என்னும் ஊருக்கருகில் உள்ள ஊர்; the small town in Thiruvārūr district.

1. அரிசிலாற்றுக்கும், வாஞ்ச ஆற்றுக்கும் நடுவே இந்த ஊர் அமைந்திருப்பதால் நள்ளாறு எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர்.

2. நளன் வழிபட்டுப் பேறு பெற்றதால் இப் பெயர்பெற்றது என்றும் கூறுவர். சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் இத்தலத்தைப் பாடியுள்ளனர் (தமி. ஊர். பெ. அக.).

*[திரு + நள்ளாறு]*

**திருநா** *tiru-nā,* பெ. (n.) பாவட்டை; common bottle-flower.

**திருநாட்டுக்கெழுந்தருள்(ளு)-தல்** *tiru-nāṭṭu-k-keḻundaruḷ-,* 5 செ.கு.வி. (v.i.) திருநாடணி செய்தல்; to die. "எம்பெருமானார் திரு நாட்டுக் கெழுந்தருளுகிறபோது" (*ரஹஸ்ய. 560*).

*[திரு + நாட்டுக்கு + எழுந்தருள்(ளு)-.]*

**திருநாடலங்கரி-த்தல்** *tiru-nāḍalaṅgari-,* 4 செ.கு.வி. (v.i.) நன்னிலையடைதல் (மாலுலகத்தை அணி செய்தல்); lit. to adorn Vaikuṇḍam, to die, used euphemistically of a great person.

*[திருநாடு + அலங்கரி-.]*

**திருநாடு** *tiru-nāḍu,* பெ. (n.) மாலுலகம்; Viṣṇu's heaven. "தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும்" (*திவ். திருவாய். 9. 7:5*).

*[திரு + நாடு]*

**திருநாப்பழம்** *tiru-nā-p-paḻam,* பெ. (n.) திருநா பார்க்க. see *tirunā.*

*[திரு + நாப்பழம்]*

**திருநாமக்கத்திரி** *tirunāma-k-kattiri,* பெ. (n.) விரியன் பாம்பு வகை (வின்.); russell's Viper, vipera russelli.

*[திரு + நாமம் + கத்திரி]*

**திருநாமக்காணி** *tiru-nāma-k-kāṇi,* பெ. (n.) திருநாமத்துக்காணி பார்க்க; see *tirunāmattu-k-kāṇi.*

*[திரு + நாமக்காணி]*

**திருநாமக்கிழவர்** *tiru-nāma-k-kiḻavar,* பெ. (n.) ஊர்ப் பெருமகனார்; குடவோலை வழியே பெயர் சொல்லப்பட்டு ஊர்ச் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட முதன்மை யுடையவர்; a person. "ஊற்றுக் காட்டு பூசாலி வாமணனுக்கு இவ்வூரைச் சேரி திருநாமக் கிழவர்களோம் ஒட்டிக் குடுத்த பரிசாவது" *(கம்பவர்மபல்லவன், கிபி. 884, தெ. கல். தொ. 8, கல். 168).* "இவ்வூரைச் சேரித்திரு நாமக்கிழவர் களோம்" *(தெ. கல். தொ. 12. புகு. 1. கல். 168).*

*[திரு + நாம + கிழவர்]*

**திருநாமச்செடி** *tiru-nāma-c-ceḍi,* பெ. (n.) செடி வகை (L.); Indian worm-wood.

*[திரு + நாமம் + செடி.]*

**திருநாமத்துக்காணி** *tiru-nāmattu-k-kāṇi,* பெ. (n.) கோயில் நிலம்; land assigned to a deity, as bearing his name; temple land. "நாயனார் திருநாமத்துக்காணியு மாறி" *(S.I.I.i, 118).*

*[திரு + நாமம் + காணி]*

**திருநாமத்துத்தி** *tiru-nāma-t-tutti,* பெ. (n.) துத்திச் செடி வகை; lobed, leaved Mysore mallow.

*[திரு + நாமம் + துத்தி]*

**திருநாமப்பாலை** *tiru-nāma-p-pālai,* பெ. (n.) ஒருவகைப் பூடு (யாழ்ப்.); oval-leaved China root.

*[திரு + நாமம் + பாலை]*

**திருநாரணம்பிழை-த்தல்** *tiru-nāraṇam-piḻai-,* 4 செ.குன்றாவி. (v.i.) திருமாலின் மேற் செய்த ஆணையை மீறுதல்; to break an oath taken in the name of God Viṣṇu. "திருநாரணம் பிழைத்த தண்டம்படுவதாக ஒட்டினோம்" *(S.I.I.vii. 265).*

*[திரு + நாரணம் + பிழை-.]*

**திருநாரையூர்** *tiru-nāraiyūr,* பெ. (n.) கடலூர் (தென்னார்க்காடு) மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in South Arcot district.

*[திரு + நாரையூர்]*

1. இங்குள்ள நீர்நிலைகள், நிலவளம் மிகுந்த பகுதிகளில் நாரைகள் மிகுந்து வாழ்ந்திருக்கின்றன. இதன் காரணமாக இப்பெயர் பெற்றது. நாவுக்கரசர், சம்பந்தரரால் பாடல் பெற்ற தலம். 2. நாரை வழிபட்டுப் பேறு பெற்ற தலமாதலாலும் இப்பெயர் பெற்றது. 3. நம்பியாண்டார் நம்பிகள் இவ்வூரில் எழுந்தருளியுள்ள பிள்ளையார் மீது பாடிய திருவிரட்டை மணிமாலை" 11ஆம் திருமுறையாகும். "செங்கழு நீர்கட்குந் திருநாரையூர்ச் சிவன் செய் கொங்கெழு தாரைங் கரத்தகோ".

**திருநாவுக்கரசுநாயனார்** *tiru-nāvu-k-karašu-nāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரும் தேவாரத்தின் ஒரு பகுதி பாடியவரும் 7ஆம் நூற்றாண்டினருமான சிவனடியார்; a canonized Šaiva saint, one of the 63 Nāyaṉmārs, who wrote a part of Tēvāram in 7th century.

*[திரு + நாவுக்கரசு நாயனார்]*

**திருநாள்** *tirunāḷ,* பெ. (n.) 1. திருவிழா; day of festival, as a sacred day. "திருநாள் படைநாள் கடிநாள்" *(பெருங். இலாவாண. 2:32).* திருநாளுக்குப் போகிறாயா என்றால் ஆம் ஆம்; திரும்பி வருகிறாயா என்றால் உம் உம் *(பழ.).* திருநாளும் முடிந்தது எடுபிடியும் கழிந்தது *(பழ.).* 2. பிறந்த நாள் (நாஞ்.); birthday, as of a king.

தெ. திருநால்ல

*[திரு + நாள்]*

**திருநாள்தேவை** *tirunāḷ-tēvai,* பெ. (n.) திருவிழாச் செலவு (S.I.I.iv. 122); expenses of a festival.

*[திருநாள் + தேவை]*

**திருநாளைப்போவார்நாயனார்** *tiru-nāḷai-p-pōvār-nāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரான நந்தனார் எனப்படுஞ் சிவனடியார்; a canonized Šaiva saint, commonly known as Nandaṉār, one of the 63 Nāyaṉmārs.

*[திரு + நாளைப்போவார் + நாயனார்]*

**திருநிலைக்கால்** *tiru-nilai-k-kāl,* பெ. (n.). தலைமைக் கோபுரத்தை (இராய கோபுரத்தைத் தாங்கி நிற்கும் முதன்மையான தூண் (இவ.); chief pillar supporting the irāya-kōpuram.

*[திரு + நிலை + கால்]*

**திருநிலைமகளிர்** *tiru-nilai-magaḷir,* பெ. (n.) **மணமான பெண்கள்;** married women. "தேன்றோய் கோதைத் திருநிலை மகளிர்" *(பெருங். உஞ்சைக். 54:6).*

*[திரு + நிலை + மகளிர்]*

**திருநிறஞ்செய்-தல்** *tiru-niṟaiñ-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) **கோயில் திருமேனிக்குப் பொன் மெருகிடுதல்** (M.E.R. 16 of 1932-3); to gild the image of the deity.

*[திரு + நிறம் + செய்-.]*

**திருநீர்மலை** *tiru-nīr-malai,* பெ. (n.) **சென்னை மாநகரத்தில் பல்லாவரம் புகைவண்டி நிலையத்திலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள ஊர்;** the small town in Chennai district. காண்டபவளம் என்ற பெயரும் இதற்குண்டு; திருமங்கை ஆழ்வார் தலந்தோறும் சென்று பெருமாளை வழிபட்டு வந்தபொழுது, இந்த ஊரிலுள்ள மலை மீது எம்பெருமான் எழுந்தருளினார். அப்பொழுது மலையைச் சுற்றி நீர் நிறைந்திருந்தது. ஆகவே அவர் அப்பதிக்கு சற்றுத் தொலைவிலுள்ள மந்திரிகிரியில் தங்கிப் பெருமானைத் தொழுதார். பின்னர் நீர் வடிந்தது. பின் கோயிலுக்குள் சென்று பெருமானை வணங்கியதால் இவ்வூர் திருநீர் மலை ஆயிற்று. திருமங்கையாழ்வார் இப்பதியை "நீண்டான்குற ளாகிநி மிர்ந்தவனுக் கிடம்மாமலை யாவது - நீர்மலையே" எனப் பாடியுள்ளார் (தமி. ஊர். பெ).

*[திருநீர் + மலை]*

**திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்** *tiru-nīlakaṇḍa-yāḻ-p-pāṇa-nāyaṉār,* பெ. (n.). **நாயன்மார் அறுபத்து மூவருள் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்** (பெரியபு.); a canonized šaiva saint, contemporary of Tiru-ñāṉa-sampanda-mūrtti-nāyaṉār, one of the 63.

*[திரு + நீலகண்டம் + யாழ் + பாணர் + நாயனார்]*

**திருநீலகண்டன்** *tiru-nīla-kaṇḍaṉ,* பெ. (n.) *1.* **சிவன்;** God Šivaṉ. *2.* **கொடியவன்;** wicked man. *3.* **பூரான்வகை;** a large kind of centipede.

*[திரு + நீலம் + கண்டன்]*

**திருநீலநக்கநாயனார்** *tiru-nīla-nakka-nāyaṉār,* பெ. (n.) **நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரான சிவனடியார்** (பெரியபு); a canonized Šaiva saint, one of 63.

*[திரு + நீலநக்கன் + நாயனார்]*

**திருநீற்றுக்காப்பு** *tiruniṟṟu-k-kāppu,* பெ. (n.) **பெரியோரால் ஒருவரின் நெற்றியில் இடப்படும் திருநீறு;** sacred ashes rubbed on one's forehead by a great person, as a charm.

*[திருநீறு + காப்பு]*

**திருநீற்றுக்கோயில்** *tiruniṟṟu-k-kōyil,* பெ. (n.) **திருநீற்றுப்பை;** bag for sacred ashes.

*[திருநீறு + கோயில்]*

**திருநீற்றுநானம்** *tiru-niṟṟu-nāṉam,* பெ. (n.) **திருநீற்றால் குளிப்பாட்டல்;** purification with sacred ashes. "திருநீற்று நானஞ் சொலப்படுமால்" *(திருக்காளத். பு. 26:29).*

*[திருநீறு + நானம். Skt. snanam]*

**திருநீற்றுப்பச்சை** *tiru-niṟṟu-p-paccai,* பெ. (n.) **மணமுள்ள மருந்துச் செடிவகை;** sweet basil.

*[திருநீறு + பச்சை]*

**திருநீற்றுப்பத்திரி**[1] *tiru-niṟṟu-p-pattiri,* பெ. (n.). **தாலியுருக்களுள் ஒன்று;** a pendant in the tāli cord. "தாலிச்சரட்டிலே திருநீற்றுப் பத்திரி யேனும் அலரிப்பூவேனும் அணிந்தவர்கள்" *(எங்களூர். 24).*

*[திருநீறு + பத்திரி]*

**திருநீற்றுப்பத்திரி**[2] *tiru-niṟṟu-p-pattiri,* பெ. (n.) **திருநீற்றுப்பச்சை** பார்க்க; see *tiru-niṟṟu-p-paccai.*

*[திருநீறு + பத்திரி]*

**திருநீற்றுப்பந்தர்** *tiru-niṟṟu-p-pandar,* பெ. (n.). **திருவாரூரில் ஆரூரான் புறப்பாட்டின் போது மேலே பிடிக்கும் நடைப்பந்தல்** (தஞ்சை.); canopy held over the image of Tyāgarāja at Tiruvārūr, during a procession.

*[திருநீறு + பந்தர்]*

**திருநீற்றுப்பழம்** *tirunīṟṟu-p-paḻam,* பெ. (n.) திருநீற்று உருண்டை (வின்.); balls of sacred ashes.

*[திருநீறு + பழம்]*

**திருநீற்றுமடல்** *tirunīṟṟu-maḍal,* பெ. (n.) திருநீறு வைக்குங் கலம்; a vessel for keeping sacred ashes.

*[திருநீறு + மடல்]*

சிவசின்னங்களுள் ஒன்று

**திருநீறு** *tiru-nīṟu,* பெ. (n.) தெய்வத் தன்மை கொண்ட சாம்பல்; sacred ashes, used for šaivaite mark. "எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறும்" (தேவா. 816, 3). திருநீற்றிலே ஒட்டாதது கழற்சிக்காய் (பழ.).

*[திரு + நீறு]*

**திருநுந்தாவிளக்கு** *tirununḍā-viḷakku,* பெ. (n.) திருநந்தாவிளக்கு பார்க்க; see *tiru-nandā-viḷakku.*

*[திரு + நந்தாவிளக்கு]*

**திருநூற்றந்தாதி** *tiru-nūṟṟandādi,* பெ. (n.) அருகக்கடவுண்மேல் அவிரோதி யாழ்வார் இயற்றிய ஓர் அந்தாதி நூல்; an andādi poem on Arhat by Avirōdi-y-āḻvār (செ.அக.).

*[திரு + நூற்றந்தாதி]*

**திருநெடுந்தாண்டகம்** *tiru-neḍun-dāṇḍagam,* பெ. (n.) 1. நாலாயிரத் தெய்வப் பனுவலில் திருமங்கை மன்னன் இயற்றிய ஒரு பகுதி; a poem in Nālāyira-p-pirapantam, by Tirumaṅgai-y-āḻvār. 2. எண்சீர்த் தாண்டகத் தாலாகிய தேவாரப் பாடல்கள்; Tēvāram decades in tāṇḍagam metre of eight cīr.

*[திரு + நெடும் + தாண்டகம்]*

**திருநெல்வேலிஅம்பலவாணக்கவிராயர்** *tiru-nelvēli-ambalavāṇa-k-kavirāyar,* பெ. (n.) முத்துக்குமாரக் கவிராயர் என்பவருடைய புதல்வர்; இவர் திருவாவடுதுறை அம்பல வாண தேசிகர் மீது வண்ணம், இரட்டைமணி மாலை ஆகிய நூல்களைப் பாடியவர் (பிற்காலபுல.); an auhtor of Iraṭṭaimaṇimalai written by Ambalavana-k-kavirayar.

**திருநெல்வேலிசென்னா** *tiru-nelvēli-šennā,* பெ. (n.) நிலாவிரை; Tirunelvēli senna - cassia angustifolia (சா.அக.).

**திருநெல்வேலித்தலபுராணம்** *tirunelvēli-t-talapurāṇam,* பெ. (n.) நெல்லையப்பப் பிள்ளை 19ஆம் நூற்றாண்டில் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Nellaiyappar in 19th Century.

*[திருநெல்வேலி + தலபுராணம்]*

**திருநெற்றித்திரணை** *tiru-neṟṟi-t-tiraṇai,* பெ. (n.) கடவுள் திருமேனியின் நெற்றியிற் சாத்தும் அணிவகை (S.I.I.iii, 474); an ornament for the forehead of a deity.

*[திரு + நெற்றி + திரணை]*

**திருநெற்றிமாலை** *tiru-neṟṟi-mālai,* பெ. (n.) கோயில் திருமேனியின் நெற்றியில் அணியும் மாலை (வின்.); garland for the forehead of an idol.

*[திரு + நெற்றி + மாலை]*

**திருநெறித்தமிழ்** *tiruneṟi-t-tamiḻ,* பெ. (n.) தேவாரம் (தஞ்.சா.128); the Tēvāram hymns.

*[திரு + நெறி + தமிழ்]*

**திருநேத்திரசிந்தாமணி** *tiru-nēttira-sindāmaṇi,* பெ. (n.) கண் நோய்கள் 96 வகையும், அவைகளின் பெயர் குணம் முதலான விளத்தங்களையும் பற்றி கூறும் ஒரு ஆயுர் வேத மருத்துவ நூல்; an Āyurvēdic science dealing about the 96 kinds of diseases of the eyes thier names qualities etc. (சா.அக.).

**திருநொந்தாவிளக்கு** *tiru-nondā-viḷakku,* பெ. (n.) திருநந்தாவிளக்கு பார்க்க; see *tiru-nandā-viḷakku.*

**திருநோக்கம்** *tiru-nōkkam,* பெ. (n.) திருநோக்கு பார்க்க; see *tiru-nōkku.*

*[திரு + நோக்கம்]*

**திருநோக்கு** *tiru-nōkku,* பெ. (n.) கடவுள், குரு முதலாயினாரது அருட்பார்வை; gracious look of a deity; auspicious look of a guru in the administration of tīṭcai (செ.அக.).

*[திரு + நோக்கு]*

**திருப்பட்டம்**[1] *tiru-p-paṭṭam,* பெ. (n.) திருமுடி (S.I.I.ii. 9); sacred diadem.

*[திரு + பட்டம்]*

**திருப்பட்டம்**[2] *tiru-p-paṭṭam,* பெ. (n.) **நெற்றியில் அணிவிக்கும் பொற்பட்டை. இதனை வீரபட்டம் என்றும் கூறுவர்;** thin plate of metal (gold) worn on the forehead, as an ornamental badge of distinction. "இராசராச தேவர் குடுத்த பொன்னின் திருப்பட்டம் ஒன்று" *(தெ. கல். தொ. 2. கல். 1).*

*[திரு + பட்டம்]*

**திருப்பட்டிகை** *tiru-p-paṭṭigai,* பெ. (n.) **மேகலை போன்ற ஒருவகை அணிகலன்;** a kind of ornament. *"திருப்பூட்டிகை நாணும், அரசி மாணிக்கமும், படுகண்ணுங் கள்ளீப் பூவுங் கிண்கிணி பேரும், நாணும்" (தெ. கல். தொ. 2, கல். 93).*

*[திரு + பட்டிகை]*

*மேகலை வகையான இவ்வகைக் கச்சையணியை, இராசராசர் தாம் எழுந்தருளுவித்த தேவிக்கு (உமாபரமேசுவரி யார்க்கு) செய்தளித்தார்.*

**திருப்படி** *tiru-p-paḍi,* பெ. (n.) **கோயிலின் வாயிற்படி** (நாஞ்.); step at the entrance of a temple.

*[திரு + படி]*

**திருப்படிக்கம்** *tiru-p-paḍikkam,* பெ. (n.) *1.* **இறை வழிபாட்டிற்குப் பயன்படும் ஏனங்கள்;** a large vessel to receive the water used in worshipping an idol. *2.* **திருவடிக்கம்** *பார்க்க;* see *tiruvaḍikkam.*

*[திரு + படிக்கம்]*

**திருப்படிமாற்று** *tiru-p-paḍi-māṟṟu,* பெ. (n.) **கோயில் திருமேனிகளை வழிபடுவதற்காக வழங்கப்படும் அரிசி முதலிய பண்டம்;** articles of offering of a deity. *"செய்யி லுகுத்த திருப்படிமாற்ற தனையைய விதுவமுது செய்யென்று" (திருக்களிற்றுப். 19).*

*[திரு + படிமாற்று]*

**திருப்படிமாறு-தல்** *tiru-p-paḍi-māṟu-,* 5 செகுவி. (v.i.) **இறைத்திருமேனிக்கு வழிபாட்டுப் பொருள் அமைத்தல்;** to provide for the offerings to a deity. *"விண்ணக ராழ்வார்க்குத் திருப்படி மாற அள்ளிட்டு" (கல்).*

*[திரு + படிமாறு-]*

**திருப்படையெழுச்சி** *tiru-p-paḍai-y-eḻucci,* பெ. (n.) **மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தின் ஒரு பகுதி;** a part of Tiruvāšagam written by Māṇikka-vāšagar.

*[திரு + படையெழுச்சி]*

**திருப்படைவீடு** *tiru-p-paḍai-vīḍu,* பெ. (n.) **கடவுள் கோயில் கொண்டுள்ள தலம்** (T.A.S.); place sacred to a deity.

*[திரு + படை + வீடு]*

**திருப்பண்ணிகாரப்புறம்** *tiru-p-paṇṇi-kāra-p-puṟam,* பெ. (n.) **இறைவனுக்கு அமுது படைக்க வருவாயாக வைத்த நிலம்** *(தெ.கல்.தொ. 12, பகுதி. 1. கல். 160);* temple land.

**திருப்பணி**[1] *tiru-p-paṇi,* பெ. (n.) *1.* **கோயிற் பணி** (S.I.I.i.126); service in a temple. *2.* **கோயில் கட்டுதல், புதுப்பித்தல்களாகிய வேலை;** work of a temple-building, repairing, etc. *திருப்பணி செய்யக் கருத்திருந்தால், கருப்படியின் பேரிலே விருப்பிருக்கும் (பழ.).* *3.* **நெற்களத்தில் திருப்பணிக்காகப் பெறப்படும் கோயில் வருமானம்** (G.Tn. D. I. 313); temple-income derived from harvest field.

*[திரு + பணி]*

**திருப்பணி**[2]**-த்தல்** *tiru-p-paṇi-,* 4 செகுவி. (v.i.) **யானையை நிற்கப் பண்ணுதல்** *(யாழ்.அக.);* to make an elephant stand.

**திருப்பணிமாலை** *tiru-p-paṇi-mālai,* பெ. (n.) **கோயிற்றிருப்பணி விளக்கங் கூறும் நூல்;** poem which describes the tiru-p-paṇi of a temple.

*[திருப்பணி + மாலை]*

**திருப்பணிமாற்று** *tiruppaṇi-māṟṟu,* பெ. (n.) **கோயில் மராமத்து;** repairs in temple.

*[திரு + பணிமாற்று]*

**திருப்பணிமுட்டு** tiruppaṇi-muṭṭu, பெ. (n.) *திருப்பணிப் பொருள்கள் (வின்.);* materials for building a temple; temple utensils, implements, vessels.

*[திருப்பணி + முட்டு]*

**திருப்பதி** *tiruppadi,* பெ. (n.) *1.* **இறைவன் கோயில் கொண்ட திருத்தலம்;** any sacred shrine. திருப்பதிக்குப் போனாலும் துடுப்பு ஒருகாசு *(பழ.),* திருப்பதிச் சொட்டு படிப்படியாக எரித்தது *(பழ.). 2.* **திருவேங்கடம் என்னும் மாலியத் தலம்;** Tiruppadi, a Thirumāl shrine திருப்பதியில் மொட்டைத் தாதனைக் கண்டாயா? *(பழ.).*

*[திரு + பதி]*

**திருப்பதிக்கல்** *tiruppadi-k-kal,* பெ. (n.) *1. திருவேங்கடத்திற்கருகில் கிடைக்கும் கரும்பச்சை நிறமுடைய ஒருவகைச் சாணைக் கல்;* inferior species of hone-stone of a dark-green colour, novaculite, found near Tiruppadi *(செ.அக). 2.* **முகமழிப்போர் பயன்படுத்தும் சாணைக்கல்;** stone used by barbars for sharpening razors.

*[திருப்பதி + கல்]*

**திருப்பதிகம்** *tiruppadigam,* பெ. (n.) *1.* **பெரும்பாலும் பத்து அல்லது பதினோரு செய்யுட்கள் கொண்டதாய்த் தேவாரத்துள்ளது போல இறைவனைப் புகழ்ந்துரைக்கும் பாடற்றொகை;** poem generally containing 10 or 11 stanzas in praise of a deity, as in Tēvāram. *2.* **புத்தரின் அருமை பெருமைகளைப் பாராட்டும் ஒரு நூல்** *(சி.சி. பர. சௌத். 2, ஞானப்.);* a poem in praise of Buddha.

*[திரு + பதிகம்]*

**திருப்பதியக்காணி** *tiru-p-patiya-k-kāṇi,* பெ. (n.) **சிவன் கோயில்களில் திருப்பதிகமெனும் தேவாரப் பாடல்களை நாளும் பாடுதற்கு அமர்த்தப் பெற்றவர் பெறுவதற்குரியதாக விடப்படும் இறையிலி நிலம்;** tax free land. "இக்கோயில் திருப்பதியக் காணி இவங் கைக்கொண்டு இவன் இட்டாரே திருப்பதியம் பாடவும்" *(தெ. கல். தொ. 17. கல். 453).*

*[திரு + பதிகம் + காணி]*

**திருப்பதியம்** *tiru-p-padiyam,* பெ. (n.) திருப்பதிகம் பார்க்க; see *tiru-p-padigam.* "திருப்பதியம் பாடுவாருள்ளிட்ட பலபணி செய்வார்க்கு" *(S.I.I.iii, 94).*

*[திரு + பதியம்]*

**திருப்பம்** *tiruppam,* பெ. (n.) *1.* **திரும்புகை;** turning, averting. "வடபத்திரசாயி முகத் திருப்பங்கொண்டு" *(குருபரம். 77). 2.* **திரும்பு கோடி;** turning, as in a street, crossway. *3.* **பணப்பரிமாற்றம்;** money-dealing. *4.* **சமையலறை** (நெல்லை); kitchen. *5.* பொய்முடி *(சவரி) (இ.வ.);* false hair.

*[திரும்பு → திருப்பம்]*

**திருப்பரங்குன்றம்** *tirup-p-araṅ-kuṉṟam,* பெ. (n.) **முருகக்கடவுளின் அறுபடை வீடு என்பவற்றுள் ஒன்றும், மதுரைக்குத் தென் மேற்கில் உள்ளதுமான குன்று** *(திருமுரு.);* a hill south-west of Madura, sacred to Murugan, one of six paṭai-vīḍu.

> இக்குன்று சிவக்கொழுந்து (லிங்க) வடிவில் காட்சி தருகின்றது. பரன் எனும் சொல் சிவனைக் குறிப்பதால் இக்குன்று பரன்குன்று ஆகி பரங்குன்று ஆயிற்று. இதனைச் சார்ந்த ஊராதலால் திரு என்னும் அடையுடன் "திருப்பரங்குன்றம்" ஆயிற்று.
>
> "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல் சினமிகு முருகன் தண்பரங்குன்றத்து"

என இவ்வூரை அகநானூறு குறிக்கின்றது.

*[திரு + பரன் + குன்றம்]*

**திருப்பரம்** *tiru-p-param,* பெ. (n.) **சோறு;** cooked rice *(சா.அக.).*

**திருப்பராய்த்துறை** *tiru-p-parāy-t-tuṟai,* பெ. (n.) **திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள ஊர்;** a village in Tiruccirāppaḷḷi district. முந்தைய காலத்தில் இப்பகுதியில் பராய் மரங்கள் நிறைந்து இருந்ததால் பராய்த்துறை எனப்பட்டுப் பின் திரு அடை பெற்றது. நாவுக்கரசர் இவ்வூரை

"சிட்டனார்தென் பராய்த்துறைச் செல்வனார்" எனப் பாடி உள்ளார்.

*[திரு + பராய்த்துறை]*

**திருப்பரிச்சட்டம்வாட்டும்வண்ணத்தான்** *tiruppari-c-caṭṭam-vāṭṭum-vaṇṇattāṉ,* பெ. (n.) இறைவன் திருமேனிக்கு அணிவிக்கும் ஆடையினைத் தூய்மை செய்து உலர்த்தும் வண்ணான்; a washerman.

இவர்கள் "திருப்பரி சட்டங் கழுவுவார்" எனறுக் கூறப்பெறுவர். 'திருப்பரிச் சட்டம் வாட்டும் வண்ணத்தானுக்கு நெல் குறுணி" (தெ. கல். தொ. 7: கல். 485. புதுக்கல். 90).

*[திரு + பரிச்சட்டம் + வாட்டும் + வண்ணத்தான்]*

**திருப்பரிவட்டம்** *tiru-p-pari-vaṭṭam,* பெ. (n.) 1. இறைவர் திருமேனிக்கு அணிவிக்கும் ஆடை; a small piece of cloth for dressing an idol. 2. கோயிலில் (மரியாதைக்காகப்) பெரியோர் தலையிற் சுற்றப்படும் கடவுளின் ஆடை; temple cloth tied on the head of a person by the priest, as a mark of honour (செ.அக.).

*[திரு + பரிவட்டம்]*

**திருப்பருத்திக்குன்றம்** *tiru-p-parutti-k-kuṉṟam,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Kañjipuram district.

இது ஒரு சமணத் திருப்பதி. 1. இப்பகுதியில் குன்றம் ஒன்று விளங்குகின்றது. இதனைச் சார்ந்து, பருத்தி வயல்கள் நிறைந்து இருந்தமையால் பருத்திக் குன்றம் எனப் பெயர் பெற்றது என்பர். 2. பரிதி என்பது கதிரவனைக் குறிக்கும் சொல். பரிதிக் குன்றம் என்பதே நாளடைவில் பருத்திக் குன்றம் ஆயிற்று என்பர். 3. முன்பு செம்பொன்குன்றம் என்று வழங்கப்பட்டு பொற்குன்றமாகி நாளடைவில் பருத்திக் குன்றமாயிற்று என்பாரும் உளர். கல்வெட்டுகளில் இனக் காஞ்சி (சமண காஞ்சி) என்று குறிக்கப்பட்டு உள்ளது. திரு + பரிதி + குன்றம் = திருப்பரிதி குன்றம். திரு + பொற் + குன்றம் = திருப்பொற் குன்றம் → திருப்பருத்திக் குன்றம்.

*[திரு + பருத்தி + குன்றம்]*

**திருப்பல்லாண்டு** *tiru-p-pallāṇḍu,* பெ. (n.) 1. சிவனைப் புகழ்ந்து சேந்தனார் பாடிய சிற்றிலக்கியம்; a poem in the ninth tiru-muṟai by Šēndaṉār in praise of Šiva. 2. நாலாயிரத் தெய்வப் பனுவலுள் பெரியாழ்வார் பாடிய ஒரு பகுதி; a poem in Nālāyira-t-tivya-p-pirapandam.

*[திரு + பல்லாண்டு]*

**திருப்பலிகொட்டு-தல்** *tiru-p-pali-koṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கோயிலில் வழிபாடு நிகழும்பொழுது செகண்டி காளம் முதலிய இசைக் கருவிகளை இசைத்தல்; to sound as a musical instrument at temple. "இத்தேவர்க்குத் திருப்பணி மூன்று தேச காலமும் செகண்டிகை உட்பட ஐஞ்சான் கொண்டு திருப்பலி கொட்டுவதற்கு வைத்த நிலம். இவ்வூரில் உவச்சர்க்குரியது" (தெகல். தொ.).

*[திருப்பலி + கொட்டு]*

**திருப்பவித்திரமாலை** *tiru-p-pavittira-mālai,* பெ. (n.) கோயில் திருமேனிக்குச் சார்த்தி மாலியர் அணியும் பட்டு முடிச்சு மாலை; sacred garland of silk-knots worn by Vaiṣṇavar after first being worn by the idol.

*[திரு + பவித்திரமாலை]*

**திருப்பள்ளித்தாமம்** *tiru-p-paḷḷi-t-tāmam,* பெ. (n.) கோயில் சிலைகளுக்குச் சூட்டும் மாலை; garland for an idol. 'திருப்பள்ளித் தாமத் திருநந்தவனஞ் செய்யவும்' (S.I.I.iii. 211).

*[திரு + பள்ளி + தாமம்]*

**திருப்பள்ளித்தொங்கல்** *tiru-p-paḷḷi-t-toṅgal,* பெ. (n.). திருப்பள்ளித்தாமம் பார்க்க; see *tiruppaḷḷi-t-tāmam.*

*[திரு + பள்ளி + தொங்கல்]*

**திருப்பள்ளித்தொங்கல்மகுடம்** *tiru-p-paḷḷi-t-toṅgal-maguḍam,* பெ. (n.) முகப்பில் பொன் காசுத் தொங்கல்களால் அணிசெய்யப்பட்ட திருமுடி போன்ற வடிவிலமைந்த மகுடம். முதல் இராசராசன் தஞ்சை பெருவுடையாருக்கு அளித்த சின்னங்களுள் சிறந்த வேலைப்பாடு அமைந்த விருதுச் சின்னம் இம்மகுடங்களே யாகும். அடுத்து விளக்கின மொட்டும், பறளையும் உள்பட திருப்பள்ளித் தொங்கல்

மகுடங்கள் பொன் நூற்று நாள்பத்து ஒன்பதின் கழஞ்சரையே இரண்டு மஞ்சாடியுங் குன்றி (தெ. கல். தொ. 2, கல். 1).

*[திருப்பள்ளி + தொங்கல் + மகுடம்]*

**திருப்பள்ளிபடுத்து-தல்** *tiru-p-paḷḷi-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **துறவியை அடக்கஞ் செய்தல்;** to bury an ascetic. "*சரம கைங்கிரியங் களைச் செய்வித்துத் திருப்பள்ளி படுத்தி*" *(குருபரம். 184).*

*[திரு + பள்ளிபடுத்து-.]*

**திருப்பள்ளியறை** *tiru-p-paḷḷi-y-aṟai,* பெ. (n.) **இறைத் திருமேனி இரவிற் பள்ளிக்கு எழுந்தருளும் அறை;** bed chamber of a deity.

*[திருப்பள்ளி + அறை]*

**திருப்பள்ளியுணர்த்து-தல்** *tiru-p-paḷḷi-y-uṇarttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **வைகறையிற் றுயிலெழுமாறு இறைவனைப் பாடுதல்;** to sing aubade and request a deity to wake-up early in the morning.

*[திரு + பள்ளி + உணர்த்து-.]*

**திருப்பள்ளியெழுச்சி** *tiru-p-paḷḷi-y-eḻucci,* பெ. (n.) **கடவுளைத் துயிலெழுப்பும் பாடல்கள் அமைந்த சிற்றிலக்கியம்** (திவ்.); poem sung for waking up the deity in a temple.

*[திரு + பள்ளியெழுச்சி]*

சிற்றிலக்கிய வகையுள் ஒன்று; மாணிக்க வாசகராலும், தொண்டரடிப் பொடியாழ் வாராலும், இராமலிங்க அடிகலாலும் எழுதப்பட்டது *(சிற்.அக.).*

**திருப்பளிக்கம்** *tiru-p-paḷikkam,* பெ. (n.) **திருப்படிக்கம்** பார்க்க; see *tiru-p-paḍikkam.*

**திருப்பன்** *tiruppaṉ,* பெ. (n.) **திருப்பம்** பார்க்க (நாஞ்.); see *tiruppam.*

*[திருப்பம் → திருப்பன்]*

**திருப்பறையறைவு** *tiruppaṟai-y-aṟaivu,* பெ. (n.) **திருக்கோயில்களில் நிகழும் நிகழ்ச்சிகளை நாளும் பறையறைவித்து ஊரவர்க்கு அறியச் செய்யும் செய்கை;** to publish the temple rows by boat of drum.

ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார் ஆட்டைப் பெரிய திருவிழாவுக்குத் திருக்கொடி யேற்று நான்று திருப்பறை யறைவு கேட்பிக்கும் கடிகையார். *(தெகல். தொ.2. கல். 1).*

*[திரு + பறை + அறைவு]*

**திருப்பனந்தாள்** *tiru-p-paṉandāḷ,* பெ. (n.) **தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்திலுள்ள ஊர்;** the small town in Tanjavure district.

பண்டைக் காலத்தில் இப்பகுதியில் பனை மரங்கள் நிறைந்திருந்தமை யாலும், கோயில் மரம் பனை மரமாதலாலும், ஞான சம்பந்தரால் பாடல் பெற்ற தலமாத லாலும் திரு எனும் அடை பெற்று இப்பெயர் பெற்றது. "பிரித்தவன் செஞ்சடைமே னிறை பேரொலி வெள்ளத்தன்னைத் தரித்த வனூர் பனந்தாட்டிருத்தாடகை யீச்சரமே" எனச் சம்பந்தர் பாடியுள்ளார்.

*[திரு + பனம் + தாள்]*

**திருப்பனையூர்** *tiru-p-paṉaiyūr,* பெ. (n.) **திருவாரூர் மாவட்டத்தில் உள்ள ஊர்;** the village in Thiruvarūr district.

பண்டைக் காலத்தில் பனை மரங்கள் மிகுந்திருந்தமையால் பனையூர் ஆகி ஞானசம்பந்தர், சுந்தரர் பாடல் பெற்ற தலமாதலாலும் திரு எனும் அடைபெற்று இப்பெயர் பெற்று திருப்பனையூர் எனப் பெயர்பெற்றது. "சிலரென் றுமிருந் தடிபேணப் பலரும் பரவும் பனையூரே" எனச் சம்பந்தர் இத்தலத்தைப் போற்றியுள்ளார்.

*[திரு + பனை + ஊர்]*

**திருப்பாசூர்** *tiru-p-pāśūr,* பெ. (n.) **செங்கல்பட்டு மாவட்டம் திருவள்ளூர் வட்டத்திலுள்ள ஊர்;** the village in Chengai district.

பாசு என்னும் சொல் மூங்கிலைக் குறிக்கும் மூங்கிலடியில் இறைவன் தோன்றியதால் இப்பெயர் பெற்று சம்பந்தர் நாவுக்கரசரால் பாடல் பெற்றதால் திரு எனும் அடை பெற்று திருப்பாசூர் எனப் பெயர் பெற்றது. கல்வெட்டில் இவ்வூர், "தொண்டை மண்டலத்து ஈக்காடு தோட்டத்துக் காக்கலூர் நாட்டுத் திருப்பாசூர்" எனக் குறிக்கப்பட்டுள்ளது.

*[திரு + பாசு + ஊர்]*

**திருப்பாட்டு** *tiru-p-pāṭṭu,* பெ. (n.) 1. கடவுளைப் பற்றிப் பெரியோர் பாடிய பாடல் (பாசுரம்); hymns or songs of a saint in praise of a deity. இவ்விரண்டு திருப்பாட்டுத் தலைமகள் கூற்றாதலே பொருத்தம் *(திருக்கோ. 86 உரை).* 2. தேவாரம் (தொல்.பொருள் 461. நச்.); Tēvāram.

*[திரு + பாட்டு]*

**திருப்பாண்டிக்கொடுமுடி** *tiru-p-pāṇḍi-k-koḍumuḍi,* பெ. (n.) பெரியார் மாவட்டத்தில் உள்ள ஊர்; the village in Periyar district.

பண்டைக் காலத்தில் இவ்வூர் கறையூர் என வழங்கியது. இங்குள்ள கோயில் திருப்பாண்டிக் கொடுமுடி. நாளடைவில் கறையூர் மறைந்து, கொடுமுடி என்னும் கோயில் பெயரே ஊருக்கும் வழங்கலாயிற்று. மூவரால் பாடல் பெற்ற ஊர். 'கொம்பின் மேற்குயில் கூவ மாமயில் ஆடு பாண்டிக் கொடு முடி" எனச் சுந்தரர் இத்தலத்தைப் பாடுகின்றார்.

*[திரு + பாண்டி + கொடு + முடி]*

**திருப்பாணாழ்வார்** *tiru-p-pāṇāḷvār,* பெ. (n.) ஆழ்வார் பதின்மருள் ஒருவரும் நாலாயிரத் தெய்வபனுவலுள் அமலனாதிப் பிரான் என்ற பகுதியைப் பாடியவருமான திருமாலடியார்; a canonized Vaiṣṇava saint, author of Amalanādi-piraṉ in Nalāyira-t-tivviya-p-pirapandam, one of ten āḻvārs (செ.அக.).

**திருப்பாவாடை** *tiru-p-pāvāḍai,* பெ. (n.). ஆடைமேல் கோயில் திருமேனிகளுக்குப் படைக்கும் சோற்றுக் குவியல் (கோயிற்பு. திருவி. 24. உரை) (I.m.p. S.A. 59); heap of boiled rice spread on a cloth, as offering to an idol.

*[திரு + பாவாடை]*

**திருப்பாவாடைப்புறம்** *tiruppāvāḍai-p-puṟam,* பெ. (n.) தில்லை அம்பல பெருமானுக்கு சுறவக்கொடித் (தைப்பூச)த் திருநாளில் இட்டுப்படைக்குஞ் சிறப்பான அமுது படையலுக்குத் திருப்பாவாடை என்று பெயர். இதற்குத் தானமாக அளிக்கப்பட்ட நிலம் திருப்பாவாடைப் புறம்; tax free land.

*[திரு + பாவாடை + புறம்]*

**திருப்பாவை** *tiru-p-pāvai,* பெ. (n.) நாலாயிரத் தெய்வப் பனுவலுள் ஆண்டாள் பாடிய பகுதி (திவ். திருப்பா. தனியன்); a poem in Nalāyira-t-teiva-p-paṉuval by Āṇḍāḷ.

*[திரு + பாவை]*

**திருப்பாற்கடல்** *tiru-p-pāṟ-kaḍal,* பெ. (n.) திருமால் பள்ளி கொண்டருளும் பாற்கடல்; the ocean of milk, where Thirumāl sleeps.

*[திரு + பாற்கடல்]*

**திருப்பி**[1] *tiruppi,* பெ. (n.) திருப்புணி பார்க்க; see *tiru-p-puḷi.*

*[திருப்பு → திருப்பி]*

**திருப்பி**[2] *tiruppi,* பெ. (n.) 1. வட்டத்திருப்பி (பாலவா. 896); worm-killer.

**திருப்பு-தல்** *tiruppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. திரும்பச் செய்தல்; to cause to return to send back. அக்கூட்டத்தைத் திருப்பினான். 2. இருக்கும் அல்லது செல்லும் திசையிலிருந்து மாற்றுதல்; to turn, deflect, cause to turn in a different direction. சுயவர் குணமட்டுந் திருப்ப வசமோ *(குமரே. சத. 39).* 3. முறுக்குதல்; to twist, wring, distort, as a limb. அவன் கையைத் திருப்பினான். 4. மொழிபெயர்த்தல்; to translate, render into another language. திருக்குறளைப் பல மொழிகளில் திருப்பி யிருக்கிறார்கள். 5. பாடத்தை மறுமுறை ஓதுதல் அல்லது ஓதுவித்தல்; to revise, as a lesson. இரண்டாம் முறையாகப் பாடத்தைத் திருப்புகிறார். 6. கவிழ்த்தல்; to turn upside down, invert. 7. மணிப்பொறிக்குத் திருகு கொடுத்தல்; to wind up a clock or watch. கடிகாரத்தைத் திருப்பினான் *(இ.வ.).* 8. மீட்டல்; to redeem, as a mortgage. ஒற்றியைத் திருப்பினான். 9. திருப்பிக் கொடுத்தல்; to give back, return, restore. சரக்கைத் திருப்பிவிட்டான். 10. விதிர்த்தல்; to shake, revolve. "திருப்புறு சூலத்தினோன்" *(திருக்கோ. 315).* 11. நோய் முதலியன தணித்தல்; to cure a disease; to avert a calamity by magic. 'கொடிய பல விட நோய்களியாவு ... கொடுத்துத் திருப்பி விடலாம்' *(குமரே. சத. 39).* 12. செய்வினையைத் திரும்பச் செலுத்துதல்; to send back an evil spirit

against one who sent it, by counter magic. 13. ஏட்டின் பக்கத்தைத் தள்ளுதல்; to turn over, as the leaves of a book, ஆடை திருத்தி நின்றாள் அவன் ஆயிரம் ஏடு திருப்புகின்றான்'. (பாரதிதாசன்).

[திரும்பு → திருப்பு]

**திருப்பு²** *tiruppu,* பெ. (n.) 1. தடவை; turn. 2. ஒருமுறை போய் வருகை; trip.

க. திருகு

[திரும்பு → திருப்பு]

**திருப்புகலூர்** *tiru-p-pukalūr,* பெ. (n.) திருவாரூர் மாவட்டம் நன்னிலம் வட்டத்திலுள்ள ஊர்; a village in Thiruvārūr district, Nannilam taluk.

[திரும்பு → திருப்பு]

புகல் என்னும் சொல் விருப்பம், இருப்பிடம், அடைக்கலம் எனப் பல பொருள்படும். மக்கள் இப்பகுதியில் விரும்பிவந்து வாழ்ந்ததால் இப்பெயர் பெற்றது. மேலும், இது திருநாவுக்கரசு நாயனார் முத்திபெற்ற திருத்தலம்.

[திரு + புகல் + ஊர்]

**திருப்புகழ்** *tiru-p-pukal,* பெ. (n.) 1. தெய்வப் புகழ்ச்சியான பாடல்; songs in praise of a deity. "தொண்டர் தங்கள் குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி" (திவ். பெருமாள். 1:9). 2. அருணகிரியார் முருகப் பெருமான் மீது பாடிய சந்தப்பாடல்களாலான நூல்; a poem in various šandam verses in praise of Lord Murugan by Aruṇa-kiri-nādar.

[திரு + புகழ்]

**திருப்புகழ்ப்பதிகம்** *tiru-p-pukal-p-padigam,* பெ. (n.) தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Daṇḍapāṇi-Aḍigaḷ in 19th century.

[திருப்புகழ் + பதிகம்]

**திருப்புகழ்பஞ்சரத்தினம்** *tiru-p-pukal pañjarattinam,* பெ. (n.) அருணகிரிநாதரால் 15ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Aruṇa-kiri-nādar in 15th century.

[திருப்புகழ் + பஞ்சரத்தினம்]

**திருப்புகழ்விலாசம்** *tiru-p-pugal-vilāšam,* பெ. (n.) இராமலிங்க அடிகள் 19ஆம் நூற்றாண்டில் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Rāmaliṅga-Aḍigaḷ in 19th century..

[திருப்புகழ் + விலாசம்]

**திருப்புகை** *tiru-p-pugai,* பெ. (n.) புகை போடப் பயன்படும் ஏனம் (தூபக்கால்) (இ.வ.); vessel for burning incense. "திருப்புகைக்குக் குங்கிலியம் காசு அரைக்கு நெல்லு இருகலம்" (தெ. கல். தொ. 5. கல். 677).

[திரு + புகை]

சோழர் காலத்தில் திருக்கோயில்களில் இறைவனுக்கு வழிப்பாட்டின்போது இடும் சந்தனம், அகில், குங்கிலியத் துகள்களிலிருந்து கிளம்பும் நறும்புகையே 'திருப்புகை' எனப்பட்டது. அதற்குப் பயன்பட்ட ஏனமும் திருப்புகை எனப்பட்டது.

**திருப்புட்குழி** *tiru-p-puṭ-kuḻi,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்தில் உள்ளவூர்; the village in Kañjeepuram district. திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதி.

[திரு + புள் + குழி]

1. புள்ளைக் குழியிலிட்டு மூடியது போல இறைவன் சேவை சாதிப்பதால் புட்குழி என ஆயிற்று என்பர்.

2. புள் என்பது சடாயு. பாடல் பெற்ற தலம் ஆதலால் திருப்புட்குழி ஆயிற்று என்பர். திருமங்கை ஆழ்வார் இப்பதியை "புலங்கெழு பொருநீர்ப் புட்குழிபாடும் போதுமே நீர்மலைக் கென்னும்" என்று பாடுகின்றார் (தமி.ஊர்.பெ.).

**திருப்புடைமருதூர்** *tiru-p-puṭai-marudūr,* பெ. (n.) நெல்லை மாவட்டம் அம்பா சமுத்திரம் வட்டத்தில் உள்ள ஊர்; the village in Nellai district.

[திரு + புடை + மருதூர்]

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் மருத மரங்கள் நிறைந்திருந்த தாகவும், அவற்றில் ஒன்றில் ஒரு புடை காணப் பட்டதாகவும், அதனுள் சிவலிங்கம் காட்சி அளித்ததாகவும், அதனால் இப்பெயர் பெற்றது என்றும் கூறுவர் (தமி. ஊர். பெ.).

**திருப்புமுனை** *tiru-p-pu-muṉai,* பெ. (n.) குறிப்பிடத் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்துவது; turning point. அகரமுதலி தமிழ் வளர்ச்சிக்கு ஒரு திருப்பு முனையாக அமையும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

*[திருப்பு + முனை]*

**திருப்புல்லாணி** *tiruppullāṇi,* பெ. (n.) இராமநாதபுரத்துக்கருகிலுள்ள ஒரு மாலிய தலம்; a Thirumāl shrine near Rāmanādapuram district.

1. புல்லாரணிய முனிவர் வழிபட்டுப் பேர் பெற்ற தலமாதலால் இப்பெயர் பெற்றது என்பர்.

2. இராமபிரான் இலங்கைக்குச் செல்ல கடல் கடக்க ஏழுநாட்கள் வருணனை வேண்டித் தவம் கிடந்தார். அப்பொழுது தருப்பைப் புல்லையே தலையணையாகக் கொண்டதால் இப்பகுதி புல்லணை ஆகிப் பின் புல்லாணி ஆயிற்று என்பர்.

"தணரில் ஆவி தளரும் என அன்பு தந்தான் இடம்
புணரியோதம் பணிலம் மணியுந்து புல்லாணியே'

எனத் திருமங்கையாழ்வார் பாடுவார்.

*[திரு + புல்லாணி]*

**திருபுல்லாணிநொண்டிநாடகம்** *tirupullaṇi noṇḍi-nāḍagam,* பெ. (n.) வீரராகவர் 19ஆம் நூற்றாண்டில் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Virarāgavar.

*[திருபுல்லாணி + நொண்டி + நாடகம்]*

**திருபுல்லாணியுப்பு** *tiru-p-pullāṇi-uppu,* பெ. (n.) இராமநாதபுரத்தைச் சேர்ந்த திருபுல்லாணி யென்னும் ஊரின் குளத்தில் இருந்து எடுக்கப்படும் பாறையுப்பு/இதற்குக் கல்லுப்பு என்றும் பெயர் (இராமத்தேவர் வைத்திய சிந்தாமணி. 700); rocksalt dugout from the bed or bottom of the tank at Tiruppuḷḷāṇi, a town in Ramanathapuram district. That salt is known as kalluppu.

*[திருப்புல்லணை → திருப்புல்வாணி + உப்பு]*

**திருப்புலம்பல்** *tiru-p-pulambal,* பெ. (n.) மாணிக்கவாசகரால் 9ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Māṇikka-vāšagar in 9th century.

*[திரு + புலம்பல்]*

**திருப்புவாரம்** *tiruppu-vāram,* பெ. (n.) கோயில் முதலிய அறநிலையங்களுக்கு நில வரியிலிருந்து கொடுக்கப்படும் பகுதி (நாஞ்.); portion of land revenue assigned to a temple or a charitable institution.

*[திருப்பு + வாரம்]*

**திருப்புள்ளம்பூதங்குடி** *tiru-p-puḷḷam-pūdaṅguḍi,* பெ. (n.) தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்திலுள்ள ஊர்; the village in Tanjavure district.

இராமன் சடாயுவைத் தகனம் செய்து அப் புள்ளரசனைப் பூதங்கள் விளியும் நாளும் போக்கிலா உலகம் புகச் செய்த பதி இதுவாதல் பற்றிப் புள்ளம் பூதங்குடி எனப் பெயர்பெற்றது என்பர். திருமங்கையாழ்வார் இப்பதியைப் "பொறிகொள் சிறைவன் டிசைபாடும் புள்ளம் பூதங்குடி தானே உயர்வாகப் பேசுவார்" எனப்பாடுகின்றார் (தமி.பெ.அக.).

**திருப்புளி** *tiru-p-puḷi,* பெ. (n.) திருகாணியின் தலைப்பகுதியில் பொருத்தித் திருக ஏந்தாகவுடைய, சற்றுக் கூரான பட்டை முனையும் கைப்பிடியும் உடைய கருவி; screw-driver.

*[திரு + புளி]*

**திருப்புற்குடலை** *tiru-p-puṟkuḍalai,* பெ. (n.). திருப்புற்கூடை பார்க்க; see *tiru-p-puṟ-kūḍai.*

**திருப்புற்கூடை** *tiru-p-puṟ-kūḍai,* பெ. (n.) மாலியர் (வைணவர்களின்) மடியாடை முதலியன வைக்கும் ஓலைப் பெட்டி (குருபரம். 490); ōla basket used by orthodox Vaiṣṇavas for carrying the cloth, etc., to be worn after bath.

*[திரு + புற்கூடை]*

**திருப்புறக்குடை** *tiru-p-puṟa-k-kuḍai,* பெ. (n.). **இறைவனுக்குப் பின்புறமாகப் பிடிக்கும் குடை;** parasol held over a deity from behind. பொன் கொடு செய்த திருப்புறக் குடையொன்று *(S.I.I.ii. 34).*

*[திரு + புறக்குடை]*



**திருப்புறவார்பனங்காட்டூர்** *tiru-p-puṟavār paṉaṅgāṭṭūr,* பெ. (n.) **தென்னார்காடு மாவட்டத்தில் உள்ள ஊர்;** the village in South Arcot district.

பனை மரங்கள் நிறைந்த காட்டுப் பகுதியில் இந்த ஊர் தோன்றியதால் பனங்காட்டூர் எனப் பெயர் பெற்றது. சிபி மன்னன் தன் ஒப்பற்ற தியாகத்தின் மூலம் புறாவிற்கு அடைக்கலம் தந்ததால் இறைவன் காட்சி கொடுத்தார். இதனால் திருப்புறாவார் பனங்காட்டூர் எனப் பெயர் பெற்றது என்பர். இப்பதியைப் "பாணில் யாழ்முரலும் புறவார் பனங்காட்டூர்" என ஞான சம்பந்தர் பாடியுள்ளார்.

**திருப்புன்கூர்த்தலபுராணம்** *tiru-p-puṉ-kūr-t-tala-purāṇam,* பெ. (n.) **கனகசபைக் கவிராயரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட தொன்மம்** (சிற்.அக.); A puranam written by Kaṉagašabai in 19th century.

*[திருப்புன்கூர் + தலப்புராணம்]*

**திருப்புனவாயில்** *tiru-p-puṉa-vāyil,* பெ. (n.). **இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டத்தில் உள்ள ஊர்;** a village in Ramanada puram district.

நீர் வளம் காரணமாக புனல்வாயில் என்றமைந்து பின் புனவாயில் ஆயிற்று. சுந்தரரால் பாடப்பெற்ற தலம். சுந்தரர் இத்தலத்தை,

"பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்திலாந் தைகள் பாட்டறாப் புனவாயிலே"

எனப் பாடியுள்ளார்.

*[திரு + புனல் + வாயில்]*

**திருப்பூட்டு-தல்** *tiru-p-pūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.i.) **மணமகள் கழுத்தில் தாலி கட்டுதல்;** to tie the tāli round the neck of a bride. நுஞ் சுற்றத்தார் முன்னம் நீ திருப்பூட்டியது *(தஞ்சைவா. 359, உரை).*

*[திரு + பூட்டு-]*

**திருப்பூட்டு²** *tiru-p-pūṭṭu,* பெ. (n.) *1.* **மண மகளுக்குத் தாலி கட்டுகை;** tying the wedding badge round the neck of a bride. *2.* **தாலி;** wedding badge.

*[திரு + பூட்டு]*

**திருப்பூவல்லி** *tiru-p-pū-valli,* பெ. (n.) **மகளிர் பூக்கொய்தலைப் பற்றிக் கூறும் திருவாசகப் பகுதி;** a poem of Tiruvāšagam purporting to be sung by girls collecting flowers.

*[திரு + பூ + அல்லி]*

**திருப்பூவணத்தீர்த்தவகுப்பு** *tiru-p-pūvaṇa-t-tīrtta-vaguppu,* பெ. (n.) **சாமிப் புலவர் அவர்களால் 17ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம்;** a literature composed by Šami pulavar in 17th century.

இவர் திருப்பூவணமூர்த்தி வகுப்பு என்னும் மற்றொரு சிற்றிலக்கியத்தையும் எழுதியுள்ளார் (சிற்.அக.).

*[திரு + பூவண + தீர்த்தம் + வகுப்பு]*

**திருப்பூவணம்** *tiru-p-pūvaṇam,* பெ. (n.) **சிவகங்கை வட்டத்தில் உள்ள ஊர்;** a village in Šivagaṅgai district.

மூவர் தேவாரம் பெற்ற பதி; இங்குப் பூக்கள் அக்காலத்தில் நிறையப் பூத்திருக்க வேண்டும். ஆதலால் பூவணம் எனப் பெயர் பெற்று இருக்கலாம். தேவாரத்திலும், கல்வெட்டிலும் திருப்பூவணம் என்றே குறிப்பிடப் பட்டுள்ளது.

"பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும் பொழில்திகழும் பூவணத்தெம்

புனிதனார்க்கே" என நாவுக்கரசர் இத் தலத்தைப் பற்றிப் பாடியுள்ளார்.

*[திரு + பூவணம்]*

**திருப்பூவணவண்ணம்** *tiru-p-pūvaṇa-vaṇṇam,* பெ. (n.) கந்தசாமி புலவர் அவர்களால் 17ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Kandaswami pulavar in 17th century.

*[திரு + பூவணவண்ணம்]*

**திருபெண்ணாகடம்** *tiru-peṇṇākaḍam,* பெ. (n.) தென்னார்காடு மாவட்டத்தில் உள்ள ஊர்; a small town in South Arcot district. இவ்வூர்; தேவகன்னியரும், தேவ ஆவும் (காமதேனுவும்) வெள்ளை யானையும் வழிபட்ட ஊர் என்றும். பெண் (தேவகன்னியர்), ஆ (காமதேனு), கடம் (வெள்ளையானை) மூன்றும் சேர்ந்து வழிபட்ட தலம் அப்பெயர் பெற்றதென்றும் கூறுவர். அப்பெயர் கல்வெட்டில் இவ்வூர், வடகரை இராசாதிராச வளநாட்டு மேற்காநாட்டுப் பிரமதேயமான முடி கொண்ட சோழ சதுர்வேதி மங்கலம் என குறிக்கப்பட்டுள்ளது.

*[திரு + பெண் + ஆ + கடம்]*

**திருபெருந்துறை** *tiru-p-peru-n-duṟai,* பெ. (n.) மாணிக்கவாசகர் அறிவொளி பெற்றதும் தஞ்சை மாவட்டத்தில் உள்ளதுமான ஒரு சிவத்தலம்; a Śiva shrine in Tanjavure district, the place of spiritual enlightenment of Mānikkavāšagar.

*[திரு + பெருந்துறை]*

**திருப்பேரெயில்** *tiru-p-pēreyil,* பெ. (n.) நெல்லை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Nellai district.

*[திரு + பேர் + எயில் = திருபேரெயில்]*

எயில் என்பது கோட்டையைக் குறிக்கும் சொல். அக்காலத்தில் இங்குக் கோட்டை இருந்திருக்க வேண்டும். இதைச் சுற்றி எழுந்த ஊர் பேரெயிலாயிற்று. மாலியத் திருப்பதியாகவும், சிவத்தலமாகவும் விளங்கு கின்றது. நாவுக்கரசரால் பாடல் பெற்றது. நம்மாழ்வார் இப்பதியை,

"போலச் செந்நெற்கள் கவரி வீசும்
கூடுபுனல் திருப்பேரெ யிற்கே"
என்று பாடியுள்ளார்.

**திருப்பேரைத்திருப்பணிமாலை** *tiru-p-pērai-t-tiru-p-paṇimālai,* பெ. (n.) இரத்தினக்கவிராயர் 17ஆம் நூற்றாண்டில் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Rattina-k-kavirāyar.

*[திருப்பேரை + திருப்பணிமாலை]*

**திருப்பொற்பூ** *tiru-p-poṟpū,* பெ. (n.) பொன்னாலும், மணி (இரத்தினங்)களாலும் தாமரைப்பூ போன்றும், செவ்வந்திப்பூ போன்றும் அழகாகச் செய்யப்பெறும் பொற்பூ (தெகல்.தொ. 2:2, கல். 39); a kind of golden flower.

*[திரு + பொன் + பூ]*

**திருப்பொறி** *tiru-p-poṟi,* பெ. (n.) வேந்தர் முதலியோருக்குரிய உடலியலிலக்கணம்; auspicious mark as of sovereignity. அரைசு வீற்றிருக்குந் திருப் பொறியுண்டு (சிலப். 30: 175).

*[திரு + பொறி]*

**திருப்போரூர்** *tiru-p-pōrūr,* பெ. (n.) செங்கல்பட்டு வட்டத்திலுள்ள ஊர்; a small town in Chengalpet taluk.

போர் காரணமாக இவ்வூர் போரூர் என வந்திருக்கலாம். முருகப்பெருமான் சூரபதுமனை விண்ணில் சென்று போர் புரிந்தது இவ்வூர் என்பது தொன்ம வரலாறு. கல்வெட்டில் இவ்வூர் போரியூர் என்று குறிக்கப்பட்டு உள்ளது (தமி. ஊர். பெ. அக.).

*[திரு + போர் + ஊர்]*

**திருப்போரூர்அட்டகம்** *tiru-p-pōrūr-aṭṭagam,* பெ. (n.) சர்க்கரையார் என்பவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the literature written by Šarkkaraiyār in 19th century.

*[திருப்போரூர் + அட்டகம்]*

**திருப்போரூர்ஆறுமுகக்கடவுள்துதி** *tiru-p-pōrūr-ārumuga-k-kaḍavuḷ-tuti,* பெ. (n.) சி. சுப்பிரமணிய பாரதியாரால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Subramaniya Parathiyar in 19-20th century.

*[திருப்போரூர் + ஆறுமுகக்கடவுள் + துதி]*

**திருப்போரூர்ஆறுமுகன்குறுங்கழிநெடில் விருத்தம்** *tiru-p-pōrūr-ārumugaṉ-kuṟuṅ-kaḻineḍil-viruttam,* பெ. (n.) சிதம்பர என்னும் புலவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); the minor literature written by chidambara samigal in l9th century.

**திருப்போரூர்கிள்ளைவிடுதூது** *tiru-p-pōrūr-kiḷḷai-viḍu-tūtu,* பெ. (n.) கந்தசாமி முதலியாரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); the literature written by Kandasami in l9th century.

*[திருப்போரூர் + கிள்ளை + விடுதூது]*

**திருப்போரூர்சிகையறுத்தான்வண்ணம்** *tiru-p-pōrūr-šigaiyaṟuttāṉ-vaṇṇam,* பெ. (n.) இராமசாமிக் கவிராயரால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற். அக.); the literature written by Rāmasāmi kavirāyar in 20th century.

**திருப்போரூர்தோத்திரமாலை** *tiru-p-pōrūr-tōttira-mālai,* பெ. (n.) முருகேசன் என்னும் அட்டியாரால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); the literature written by Murukēšaṉ in l9-20th century.

*[திருப்போரூர் + தோத்திரமாலை]*

**திருப்போரூர்வழிநடைப்பாசுரம்** *tiru-p-pōrūr-vaḻinaḍai-p-pāšuram,* பெ. (n.) சி. பொன்னுசாமி அட்டியாரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.).

**திருப்போனகம்** *tiru-p-pōṉagam,* பெ. (n.) கடவுளுக்குப் படைத்த அமுது (S.I.I.ii.82); offerings of boiled rice to a deity.

*[திரு + போனகம்]*

**திருபரணி** *tiruparaṇi,* பெ. (n.) களாவிழுதி; என்னும் சிறு குறிஞ்சா (சா.அக.); Indian ipecacuanda.

**திருபலை** *tirupalai,* பெ. (n.) கொடிவகை (யாழ். அக.); a kind of climber.

**திருபுடா** *tirupuḍā,* பெ. (n.) ஏலம்; cardamom.

**திருபுரை** *tirupurai,* பெ. (n.) சாரணை; one styled trianthema.

**திரும்ப** *tirumba,* கு.வி.எ. (adv.) திரும்பவும் பார்க்க, see *tirumbavum.* "திரும்ப வா" (உ.வ.).

**திரும்பத்திரும்ப** *tirumba-t-tirumba,* பெ. (n.). அடிக்கடி (சா.அக.); again and again, often, times.

**திரும்பவும்** *tirumbavum,* பெ. (n.) மேலும்; further more, moreover, again.

**திரும்பாக்கடி** *tirumbā-k-kaḍi,* பெ. (n.) நல்லப் பாம்பு; cobra.

**திரும்பிகம்** *tirumbigam,* பெ. (n.) பாதிரி; trumpet flower tree.

**திரும்பு[1]-தல்** *tirumbu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* புறப்பட்ட இடத்திற்கோ பழைய நிலைக்கோ வருதல் அல்லது மீளுதல்; to turn, turn back, return. *2.* மாறுதல்; to be changed as the mind. *3.* விலகுதல்; to be averted, as an evil; to abate as a disease. *4.* கதிரவன் சாய்தல்; to decline as the Sun. *5.* வளைதல்; to turn, as an angle; to bend as a road or river; to be refracted, as light.

க. திருகு; ம. திரும்புக

**திரும்பு[2]** *tirumbu,* பெ. (n.) பாம்பு; snake.

**திரும்புகால்** *tirumbu-kāl,* பெ. (n.) மீளுங் காலம் (இ.வ.); time of return.

*[திரும்பு + கால்]*

**திரும்புமுகமாயிரு-த்தல்** *tirumbu-mugamāy-iru-,* 3 செ.கு.வி. (v.i.) நலப்பட்டு வருதல்; taking a favourable turn said of diseases and chiefly of small pox and allied diseases.

*[திரும்பு + முகமாய் + இரு-.]*

**திருமகண்மைந்தன்** *tiru-magaṇ-maindaṉ,* பெ. (n.) திருமகளின் மகனான காமவேள் (பிங்.); kāma as the son of Lakṣmi.

*[திருமகள் + மைந்தன்]*

**திருமகள்** *tirumagaḷ,* பெ. (n.) செல்வத்திற்கான கடவுள் (இலக்குமி); Lakshmi. "புல்லலேற்ற திருமகளும்" *(கம்பரா. உருக்காட்டு. 58).*

*[திரு + மகள்]*

**திருமகள்கொழுநன்** *tiru-magaḷ-koḻunaṉ,* பெ. (n.) திருமகளின் கணவனாகிய திருமால்; Thirumāl, as the husband of Thirumagaḷ.

*[திருமகள் + கொழுநன்]*

**திருமகன்** *tiru-magaṉ,* பெ. (n.) 1. திருமகண் மைந்தன் பார்க்க; see *tiru-magaṇ-maindaṉ.* 2. திருமகள்கொழுநன் பார்க்க; see *tiru-magaḷ-koḻunaṉ.* 3. செல்வமகன்; darling son or prince. "திருமகனெழுந்து போகி" *(சீவக. 2094).*

*[திரு + மகன்]*

**திருமகுடம்** *tiru-maguḍam,* பெ. (n.) திருமேனிகளின் தலையில் அணியப்படும் திருமுடி (கிரீடம்); crown.

*[திரு + மகுடம்]*

**திருமங்கலம்** *tiru-maṅgalam,* பெ. (n.) மதுரை மாவட்டத்தில் உள்ள ஊர்; a small town in Madurai district. இவ்வூர் மண் வளத்தாலும், மட்கலத் தொழில் காரணமாகவும் இப்பெயர் பெற்று இருக்கலாம் என அறிஞர் சோமலெ கூறுவார் *(தமி. ஊர். பெ. அக.).*

*[திரு + மண் + கலம் → திருமட்கலம் → திருமங்கலம்]*

**திருமங்கலியம்** *tiru-maṅgaliyam,* பெ. (n.). திருமங்கிலியம் பார்க்க; see *tirumaṅgiliyam.*

**திருமங்கிலியம்** *tiru-maṅgiliyam,* பெ. (n.). தாலி; wedding badge. "பெண்கள் திருமங்கிலியத்திலிடும்" *(இராமநா. பாலகா. 20).*

*[திரு + மங்கிலியம்]*

**திருமங்கைநகர்** *tiru-maṅgai-nagar,* பெ. (n.). திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ஊர்; the village in Nellai district.

இன்று பாளையங்கோட்டை என்று வழங்கு கின்றது. நின்றசீர் நெடுமாறனாகிய பாண்டிய மன்னர் திருநெல்வேலிக்கு வருகை தந்தபோது அவருடைய தேவி மங்கையர்கரசியாரைப் மகளிர் பலரும் திரளாக வந்து வரவேற்ற ஊர் இவ்விடமாதலால் திருமங்கை ஊர் என்று பெயர்பெற்றது. பாளையன் என்னும் பெயருடைய கன்னடியன் மங்கை நகரில் தன் பெயரால் ஒரு கோட்டையைக் கட்டியதால் பாளையங்கோட்டையாக மாறித் திருமங்கை நகர் என்னும் பெயர் அடியோடு அழிந்து விட்டது எனச் சிறப்புப் பெயர் அகராதி கூறுகிறது.

*[திரு + மங்கை + நகர்]*

**திருமங்கைமன்னன்** *tiru-maṅgai-maṉṉaṉ,* பெ. (n.) திருமங்கையாழ்வார் பார்க்க; see *tirumaṅgai-āḻvār.*

*[திரு + மங்கை + மன்னன்]*

**திருமங்கையாழ்வார்** *tiru-maṅgai-y-āḻvār,* பெ. (n.) ஆழ்வார் பன்னிருவருளொருவரும் நாலாயிரத் தெய்வப் பனுவலுள் பெரிய திருமொழி முதலியன பாடியவருமாகிய திருமாலடியார்; a canonized Vaiṣṇava saint author of Periya-tirumoḻi and other works in nālāyira-t-teiva-p-paṉuval, one of ten āḻvārs.

**திருமஞ்சனக்கவி** *tiru-mañjaṉa-k-kavi,* பெ. (n.) கோயில் திருமேனிகளின் திருமுழுக்காட்டுக் காலங்களிற் பாடப்படும் பாட்டு (கோயிலொ. 68); verse recited while bathing a deity.

**திருமஞ்சனக்காவேரி** *tiru-mañjaṉa-k-kāvēri,* பெ. (n.) திருவரங்கத்துத் திருமாலைத் திருமுழுக்குச் செய்வதற்கு நீரெடுக்கும் காவேரியின் கிளை ஆறு; a branch of the Kāvēri from which water is carried for bathing the deity at Sriraṅgam.

*[திரு + மஞ்சனம் + காவேரி]*

**திருமஞ்சனசாலை** *tiru-mañjaṉa-śālai,* பெ. (n.) கடவுளர், அரசர் முதலியோர் திருமுழுக்காடு மிடம்; bathing place of a deity, king etc. கோயிலினுள்ளால் திருமஞ்சன சாலையில் எழுந்தருளியிருந்து (S.I.I.iii. 35).

*[திரு + மஞ்சனம் + சாலை]*

**திருமஞ்சனப்பட்டை** *tiru-mañjaṉa-p-paṭṭai,* பெ. (n.) வெள்ளிலோத்திரம்; lodhra-bark.

**திருமஞ்சனப்புறம்** *tiru-mañjaṉa-p-puṟam,* பெ. (n.) கோயில் திருமேனிகளுக்குத்

திருமுழுக் காட்டு செய்யும் திருமஞ்சன நீரில் செண்பக மொட்டு, ஏலம், விலாமிச்சை வேர் ஆகியவற்றை இட்டுக் கொண்டு வருபவனுக்கு வருவாயாகக் கோயில் நிலத்திலொரு பகுதியை இறையிலியாகக் கொடுக்கும் இடம்; tax-free land. "இந்நிலம் அரைமாவும், திருமஞ்சனப் புறமாக நனாங்கள் விட்டமையால். இதுக்குத் திருமஞ்சனம் எடுக்கும் திருமேனிக்கு ஜீவனத்துக்கு வேண்டுவது இன்னாயனார் திருநாமத்துக் காணி விளை நிலத்திலேவிட்டு" *(தெ.கல்.தொ. 5, கல். 649).*

*[திரு + மஞ்சனம் + புறம்]*

**திருமஞ்சனம்**[1] *tiru-mañjaṉam,* பெ. (n.) 1. திருமுழுக்கு. குறிப்பிட்ட இடத்திலிருந்து நீரைக் கொண்டுவந்து மந்திரம் சொல்லி வழிபாட்டிற்கான திருமேனியை (விக்கிரகத்தை) நீராட்டுகை; bath of an idol or a king. "திருமஞ்சனத்துக்கு . . . ஸ்தபந திரவியங்கள் வேண்டுவனவும்" *(S.I.I.iii, 187).* 2. கோயில் வழிபாட்டின் போது திருமேனியினை நீராடுவதற்காக எடுத்து வரப்பெறும் தூயநீர்; holy water for the bath of an idol or a king. 'திருமஞ்சனமுங் கொண்ர்ந்து' *(பெரியபு. சேரமா. 9).*

*[திரு + மஞ்சனம்]*

**திருமஞ்சனமாட்டு-தல்** *tiru-mañjaṉam-āṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருமுழுக்காட்டுகை, குறிப்பிட்ட இடத்திலிருந்து நீரைக்கொண்டு வந்து மந்திரம் சொல்லி வழிபாட்டிற்கான திருமேனியை (விக்கிரகத்தை) நீராட்டுகை; to bath of an idol *(செ.அக.).*

*[திரு + மஞ்சனம் + ஆட்டு-.]*

**திருமஞ்சனவேதிகை** *tiru-mañjaṉa-vēdigai,* பெ. (n.) திருமுழுக்காட்டும் இடத்திற்கு இறைத் திருமேனியை எழுந்தருளச் செய்யும் அடிமணை; a pedestal on which an idol in placed while being bathed.

*[திரு + மஞ்சனம் + வேதிகை.]*

**திருமடந்தை** *tiru-maḍandai,* பெ. (n.) திருமகள்; Lakshmi. "திருமடந்தை மண் மடந்தை இருபாலும் திகழ" *(திவ். பெரியதி. 3. 10:1).*

*[திரு + மடந்தை]*

**திருமடம்** *tiru-maḍam,* பெ. (n.) குருவின் மாளிகை; abode of a priest. "மண்ணுறுந் திருமடமெனு மித்தரை மருவி" *(உபதேசகா. சிவபுரா. 55).*

*[திரு + மடம்]*

**திருமடவளாகம்** *tiru-maḍa-vaḷāgam,* பெ. (n.) கோயிலைச் சுற்றியுள்ள இடம்; premises surrounding a temple *(செ.அக.).*

*[திரு + மடவளாகம்]*

**திருமடைப்பள்ளி** *tirumaḍai-p-paḷḷi,* பெ. (n.). சமையலறை; temple kitchen.

*[திரு + மடை + பள்ளி]*

**திருமடைவிளாகம்** *tiru-maḍai-viḷāgam,* பெ. (n.) திருமடவளாகம் (S.I.I. i, 119) பார்க்க; see *tiru-maḍai-vaḷāgam.*

*[திரு + மடை + விளாகம்]*

**திருமண்** *tirumaṇ,* பெ. (n.) 1. மாலியர் நெற்றியில் குறியிடு (திருநாமந்தரித்)தற்குரிய வெள்ளிய மண்கட்டி; white earth used by Vaiṣṇavas in marking their fore-heads. 2. திருமாலடியார் நெற்றியில் இட்டுக் கொள்ளும் குறி; Vaiṣṇava religious mark. "திருமந்திரமில்லை சங்காழியில்லை திருமணில்லை" *(அஷ்டப். திருவேங்கடத்தந். 99).*

*[திரு + மண்]*

**திருமண்காப்பு** *tirumaṇ-kāppu,* பெ. (n.) திருமண், 2 பார்க்க; see tiru-maṇ,2.

*[திருமண் + காப்பு]*

**திருமண்டலம்** *tiru-maṇḍalam,* பெ. (n.) துருவமண்டலம் (யாழ்.அக.); polar region.

*[திரு + மண்டலம்]*

**திருமண்பெட்டி** *tiru-maṇ-peṭṭi,* பெ. (n.) திருமண் முதலியன வைக்குஞ் சிறுபெட்டி; small basket for keeping the white earth and saffron used in religious marks *(செ.அக.).*

*[திருமண் + பெட்டி]*

**திருமணம்** *tiru-maṇam,* பெ. (n.) ஆணும் பெண்ணும் கணவன் மனைவியாகும் நிகழ்ச்சி

அல்லது சடங்கு செய்யும் விழா; marriage. திருமண வழைப்பு மடல்.

[திரு + மணம்]

**திருமணம்பரிமாறு-தல்** *tiru-maṇam-parimāṟu,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தாளித்தல் (மாலியர் வழக்கு); to season curry with fried spices. 2. பொய் கலந்து பேசுதல் (இ.வ.); to speak with falsehood.

[திருமணம் + பரிமாறு-.]

**திருமணிகுயிற்றுநர்** *tiru-maṇi-kuyiṟṟunar,* பெ. (n.) முத்துக்கோப்போர்; pearl - stringers, bead - workers. "திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொடு" (சிலப். 5:46).

[திருமணி + குயிற்றுநர்]

**திருமணுத்தானம்** *tiru-maṇu-t-tāṉam,* பெ. (n.) நீராடிய பின் செய்யும் கொடை; gift by person made after his bath. "மண்ணுநீ ராட்டின் திருமணுத்தான மரபுளிக் கழிந்தபின்" (பெருங். இலாவாண. 5:122).

[திரு + மண் + தானம்]

**திருமதி** *tiru-madi,* பெ. (n.) மதிப்புத் தரும் வகையில் திருமணமான பெண்ணின் பெயருக்கு முன்னால் இடப்படும் அடைமொழி; a title for a married woman; Mrs.

[திரு + மத் (Skt.) – மதி (tail)]

**திருமதில்** *tiru-madil,* பெ. (n.) கோயிலின் சுற்றுமதில் (I.M.P.S.A. 362); compound wall of a temple.

[திரு + மதில்]

**திருமதுரம்** *tiru-maduram,* பெ. (n.) பழம், நெய், சருக்கரை முதலியவற்றைச் சேர்த்துச் செய்யப்படும் படையல் பொருள் (நாஞ்.); a kind of sweet offering in temples.

[திரு + மதுரம்]

**திருமந்திரக்கொடி** *tiru-mandira-k-koḍi,* பெ. (n.) கொடிச் சீலை (S.I.I. vii, 439); flag on the flag - staff.

[திரு + மந்திரம் + கொடி]

**திருமந்திரஞ்சொல்(லு)-தல்** *tiru-mandirañ-jol-* 13 செ.குன்றாவி. (v.t.) அறிவுரை கூறுதல் (உபதேசஞ் செய்தல்); to impart religious instruction. குருவுக்குத் திருமந்திரஞ் சொல்லேன்.

[திரு + மந்திரம் + சொல்லு-.]

**திருமந்திரபோனகம்** *tiru-mandira-pōṉagam,* பெ. (n.) கடவுட்குப் படைக்கும் படையல்; food - offering to a deity. "சிறுகாலைச் சந்தி திருமந்திர போனகத்துக்கு அமுது செய்தருள" (S.I.I.vii,281).

[திரு + மந்திரம் + போனகம்]

**திருமந்திரபோனப்புறம்** *tiru-mandira-pōṉa-puṟam,* பெ. (n.) கோயில் படையல் செலவுக்கு விடப்பட்ட (நிவேதனத்துக்கு விடப்பட்ட) மானியம் (S.I.I. iv, 194); endowment of land for providing food, offerings to the deity in a temple.

[திருமந்திரபோனகம் + புறம்]

**திருமந்திரம்** *tiru-mandiram,* பெ. (n.) 1. சிவன், திருமால் இவர்களுக்குரிய ஐந்தெழுத்து, எட்டெழுத்து மந்திரங்கள்; mystic formula sacred to Siva and Viṣṇu, viz., pañjākṣaram and aṣṭākṣaram. "திருமந்திரமில்லை சங்காழியில்லை" (அஷ்டப். திருவேங்கடத்தந். 99). 2. திருமூலநாயனார் செய்த ஒரு சிவனியத் திருமுறை; a treatise on Šaiva-Šiddhanda philosophy by Tirumūla-nāyaṉār. 3. கோயில் (கல்.); temple.

[திரு + மந்திரம்]

**திருமந்திரவோலை** *tiru-mandira-v-ōlai,* பெ. (n.) அரசவை ஆள்வினை (நிர்வாக) அதிகாரி (இராச காரியஸ்தன்); king's ministerial officer. "திருமந்திரவோலை யுதாரவிடங்க விழுப்பரையர் (S.I.I. ii, 306).

[திரு + மந்திரம் + ஓலை]

**திருமந்திரவோலைநாயகம்** *tiru-mandira-v-ōlai-nāyagam,* பெ. (n.) அரசன் ஆணையைத் திருமந்திர ஓலை என்னும் அதிகாரி எழுதியபின் அதை அரசன் ஆணையோடு ஒப்பிட்டுப்பார்த்து இசைவு வழங்கும் அதிகாரி; chief ministerial oficer of a king.

"திருமந்திரவோலை நாயகம் அச்சுதன் இராசராசனான தொண்டை மானும் (S.I.I. iii, 35).

*[திரு + மந்திரம் + ஓலை + நாயகம்]*

**திருமயிலாடி** *tiru-mayilāḍi,* பெ. (n.) **நாகை மாவட்டம் சீர்காழி வட்டத்தில் உள்ள ஊர்;** the village in Tanjavure district.

*[திரு + மயிலாடி]*

அம்பிகை மயில் உருவங்கொண்டு இத்தலத்தில் வழிபட்டதால் இப் பெயர் ஏற்பட்டது (தமி. ஊர். பெ.).

**திருமரம்** *tiru-maram,* பெ. (n.) *அரச மரம் (சூடா.);* pipal.

*[திரு + மரம்]*

**திருமருதந்துறை** *tiru-marudan-durai,* பெ. (n.) திருமருதமுன்றுறை (பரிபா. 11:30) பார்க்க; see *tiru-maruda-muṉṟurai.*

*[திரு + மருதம் + துறை]*

**திருமருதந்துறைக்கா** *tiru-marudan-turai-k-kā,* பெ. (n.) **மதுரையில் வையைக் கரையிலிருந்த ஒரு பூஞ்சோலை;** an ancient pleasure grove on the banks of the Vaigai at Madurai. "திருமருதந்துறைக் காவே போலுங் காக்களினும் விளையாடி" (தொல்.பொருள். 199, உரை.).

*[திரு + மருதம் + துறை + கா]*

**திருமருதமுன்றுறை** *tiru-maru-muṉṟurai,* பெ. (n.) **மதுரையில் வையையாற்றுத்துறை;** a bathing ghat of the Vaigai at Madurai. "திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்னுறை" (கலித். 26).

*[திருமருதம் + முன்றுறை]*

**திருமல்** *tirumal,* பெ. (n.) **கடுக்காய் தோன்றிக்காய், நெல்லிக்காய்;** the three myrobalams - Gall nut, belleric myrobalan and Indian gooseberry.

**திருமலர்** *tiru-malar,* பெ. (n.) **தாமரைமலர்** (பிங்.); lotus. "திருமலரிருந்த முதியவன்போல" (கல்லா. 71).

*[திரு + மலர்]*

**திருமலை** *tirumalai,* பெ. (n.) 1. **தெய்வத் தன்மையுடைய மலை;** sacred mountain. "தீ விளையாட நின்றே விளையாடி திருமலைக்கே" (திருக்கோ. 133). 2. **கயிலை;** hill at Tirupati, sacred to Viṣṇu. "திருமலைச்சருக்கம் (பெரியபு.). 3. **திருமாலுக் குரிய திருவேங்கடம்;** Tirumāl's hill, tiruvēṅgaḍam. "சினவேங்கை பார்க்கும் திருமலையே" (திவ். இயற். 3, 7, 5).

*[திரு + மலை. திருமலை – திருவடிப்புண்]*

வடார்க்காடு மாவட்டம் போளூர் வட்டத்தில் ஓர் ஊரும், நெல்லைக் கட்டபொம்மன் மாவட்டத்தில் திருக்குற்றால மலைச்சாரலில் 6 கி.மீ. தொலைவில் ஓர் ஊரும் திருமலை என்னும் பெயரில் உள்ளன. போளூர் வட்டத்திலுள்ள திருமலை என்னும் ஊர் சமணத் திருப்பதியாக விளங்குகின்றது. நெல்லை வட்டத்திலுள்ள ஊர் முருகன் எழுந் தருளியுள்ள ஊர். இம்மலையில் சிறப்புப் பற்றி இப்பெயர் வந்திருக்கலாம் (தமி. ஊர். பெ.).

**திருமலைசுப்பிரமணியர்தோத்திரம்** *tirumalai-šubramaṇiyar-tōttiram,* பெ. (n.) **நெல்லையப்பர் அவர்களால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்** (சிற். அக.); a literature written by Nellaiyappar in 19-20th century..

*[திருமலை + சுப்பிரமணியர் + தோத்திரம்]*

**திருமலைதரிசனப்பத்து** *tirumalai-tarišaṉa-p-pattu,* பெ. (n.) **முனிசாமி முதலியாரால் 20ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்;** (சிற். அக.); the literature written by Munisami Pillai in 19-20th century.

*[திருமலை + தரிசனப்பத்து]*

**திருமலைநாயக்கர்** *tirumalai-nāyakkar,* பெ. (n.) **கி. பி. 1623 முதல் 1659 வரை மதுரையை அரசாண்ட நாயக்க அரசர்;** a Nāyak ruler of Madurai, A.D., 1623-59 (மதுரைத்திருப்.).

**திருமலைநொண்டிநாடகம்** *tirumalai-noṇḍi nāḍagam,* பெ. (n.) **மன்னர் பெருமாள் புலவரால் 18ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்** (சிற். அக.); the play composed by Maṉṉar Perumal pulavar in 18th century.

*[திருமலை + நொண்டி + நாடகம்]*

**திருமலைப்பதிகம்** *tirumalai-p-padigam,* பெ. (n.) 1. **திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகளால் 18–19ம் நூற்றாண்டில்**

எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற். அக.); the minor literature written by Tiru-k-kurugūr-ñāṉašitta-šuvāmigaḷ in 18-19th century. 2. மு. ஐயாச்சாமி முதலியார் அவர்களால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); the minor literature written by Mu. Iyā-c-cāmi mudaliyār in 19th century. 3. ஏகாங்குச் சுவாமிகளால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Ēgaṅgu-c-šuvāmigaḷ in 20th century.

[திருமலை + பதிகம்]

**திருமலையாழ்வார்** *tirumalai-y-āḻvār,* பெ. (n.) திருமலை, 3 பார்க்க; see *tirumalai-3* (செஅக.).

[திருமலை + ஆழ்வார்]

**திருமழபாடி** *tirumaḻa-pāḍi,* பெ. (n.) தஞ்சை மாவட்டம் திருவையாறு வட்டத்திலுள்ள ஊர்; a village in Thanjāvūr district.

[திரு + மழவர் + பாடி]

போரில் சிறந்து விளங்கிய படை வீரர்கள் மழவர் நிறைந்த பகுதி மழவர் பாடி எனப் பெற்றுப் பின் மழபாடியாகித் திரு எனும் அடை பெற்றது. கல்வெட்டில் இவ்வூர் மழுவாடி எனக் குறிக்கப்பட்டுள்ளது. மூவர் பாடல் பெற்ற தலம்.

"மன்னேமாமணியே மழபாடியுள்
மாணிக்கமே"

என்று சுந்தரர் இத்தலத்து இறைவனைப் பாடுகின்றார் (தமி. ஊர். பெ.).

**திருமழிசையாழ்வார்** *tiru-maḻišai-y-āḻvār,* பெ. (n.) ஆழ்வார்களுள் பதின்மருள் ஒருவரும் நாலாயிரத் தெய்வப்பனுவலுள் திருச்சந்த விருத்தம், நான்முகன்றிருவந்தாதி என்ற பகுதிகளைப் பாடியவருமாகிய திருமால் அடியார்; a canonized Vaishnava saint author of Tiruccanda-viruttam and Nāṉmugaṉ-tiruvandādi, one of ten āḻvārs (செஅக.).

[திருமழிசை + ஆழ்வார்]

**திருமறுமார்பன்** *tiru-maṟu-mārbaṉ,* பெ. (n.) 1. மார்பில் அழகிய மறுவையுடையவனாகிய திருமால்; Tirumāl, as having a mole on his chest. "திருமறுமார்பன்போற் றிறல்சான்ற காரியம்" (கலித். 104, 10). 2. அருகன்; Arhat (சூடா.).

[திரு + மறு + மார்பன்]

**திருமறைக்காடு** *tirumaṟai-k-kāḍu,* பெ. (n.) இந்நாளில் வேதாரணியம் என்றழைக்கப் படும் இவ்வூர் நாகை மாவட்டத்திலுள்ளது; the village in Nagapattinam district.

[திரு + மறை + காடு]

மான்கள் மிகுந்திருந்தமை பற்றி மரைக்காடு என்றழைக்கப்பட்ட இவ்வூரை, மரை என்பதனை மறை என பிறழவுணர்ந்து அதை வடமொழியில் வேதம் என மொழிபெயர்த்து வேதாரண்யம் என ஆக்கிவிட்டனர்.

**திருமனசு** *tiru-maṉašu,* பெ. (n.) படர்க்கை முன்னிலையராகிய பெரியோர்கட்கு வழங்கு மொரு மதிப்புரவுச்சொல் (நாஞ்.); His, Her or your highness, a term of respect.

[திரு + மனசு. மனம் → மனசு]

**திருமாடம்பு** *tiru-māḍambu,* பெ. (n.) திருவிதாங்கூர் அரசரதம் புதல்வர்களின் பூணூல் கலியாணம் (நாஞ்.); Upanayanam ceremony of the princes of Travancore.

**திருமாமகள்** *tiru-mā-magaḷ,* பெ. (n.) திருமகள்; Lakṣmi. "திருமாமகள் புல்ல நாளும்" (சீவக. 30).

[திரு + மாமகள்]

**திருமாணிக்குழி** *tirumāṇi-k-kuḻi,* பெ. (n.) தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் வட்டத்திலுள்ள ஊர்; a village in Cuddalore district.

[திரு + மாணிக்குழி]

மாணி என்பது பிரமச்சாரியைக் குறிக்கும். வாமனர் மாவலியிடம் மண் பெற்றார். திருமால் வாமணராக தோற்றரவு நிகழ்த்திய (அவதரித்த) போது இத்தலத்தில் வழிபட்டதாகக் கூறுவர். எனவே மாணிக்குழி எனப் பெயர் பெற்றுப் பாடல் பெற்ற தலமாதலால் 'திருமாணிக்குழி' ஆயிற்று. கல்வெட்டுக்களில் இவ்வூர்ப் பெயர் விருதராச பயங்கர வளநாட்டு மேற்காநாட்டு உதவித் திருமாணிக்குழி என்று குறிக்கப்பட்டுள்ளது (தமி. ஊர். பெ.).

**திருமாந்துறை** *tirumānturai*, பெ. (n.) திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tiruchirappalli district.

*[திரு + மா+ துறை]*

பண்டைக்காலத்தில் இப்பகுதியில் மாந் தோப்புகள் நிறைந்திருந்ததாலும் கோயில் மரமாக மாமரம் விளங்குவதாலும் மாந்துறை எனப்பெயர் பெற்றுள்ளது. ஞானசம்பந்தரால் பாடல் பெற்ற தலம் *(தமி. ஊர். பெ.)*.

**திருமாமணிமண்டபம்** *tiru-māmaṇi-maṇḍabam*, பெ. (n.) (பரமபதத்துள்ள திருவோலக்க மண்டபம்) (மாலுலகத் திலுள்ள) இறைவன் எழுந்தருளும் மண்டபம்; Tirumāl's presence chamber in His heaven *(ஈடு. 10, 9, 11.)*.

*[திரு + மாமணி + மண்டபம்]*

**திருமால்** *tiru-māl*, பெ. (n.) *1.* மாலவன்; Tirumāl; "திருமால் சீர் கேளாத செவியென்ன செவியே" *(சிலப். ஆய்ச்சி. படர்க்கை. 1)*. *2.* வேந்தன்; king. "தேர் முழங்கு தானைத் திருமாலின் முன்றறுப்பான்" *(சீவக. 2981)*.

*[திரு + மால்]*

**திருமால்கரந்தை** *tirumāl-karandai*, பெ. (n.) திருமால்காந்தி பார்க்க; see *tirumal-kāndi* *(சா.அக.)*.

**திருமால்காந்தி** *tirumāl-kāndi*, பெ. (n.) விட்டுணு காந்தி என்னும் செடி; Tirumāl's plant *(சா.அக.)*.

**திருமால்குன்றம்** *tirumāl-kunram*, பெ. (n.) அழகர் மலை; Alagar hill. "திருமால் குன்றத்துச் செல்குவி ராயின்" *(சிலப். 11, 91)* (செ.அக.).

*[திருமால் + குன்றம்]*

**திருமால்கொப்பூழ்** *tirumāl-koppūḻ*, பெ. (n.) மாலவனின் கொப்பூழிலிருந்து உண்டான தாகக் கருதப்படும் தாமரை *(பிங்.)*; lotus as arising from the navel of Tirumāl.

*[திருமால் + கொப்பூழ்]*

**திருமால்கொம்பர்** *tirumāl-kombar*, பெ. (n.) திருமால்கொப்பூழ் பார்க்க; see *tirumāl-koppūḻ*.

*[திருமால் + கொம்பர்]*

**திருமால்கோலம்** *tirumāl-kōlam*, பெ. (n.) காலக்கிராமம்; white see *(சா.அக.)*.

*[திருமால் + கோலம்]*

**திருமால்தோற்றரவு** *tirumāl-tōrraravu*, பெ. (n.) *1.* மீன் (மத்ஸ்யம்), ஆமை (கூர்மம்), பன்றி (வராகம்), நரஅரி (நரசிங்கம்), வாமனன், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், கற்கி என்னும் திருமாலின் பத்துத் தோன்றல்கள்; the ten avatars of Viṣṇu, viz., Matsyam, Kūrmam, Varāgam, Narasiṅgam, Vamanan, parasuraman, Raman, Balarāman, Kriṣṇan, Karki. *2.* சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன், மோகினி, வேள்வியின் பதி, வியாதன், தன்வந்தரி, புத்தன் என்னும் பதினைந்து குணத்தோன்றல்கள் *(அம்சாவதாரங்கள்)*; secondary incarnations of Viṣṇu, being 15 viz, Sanagan, Sanandanan, Sanarkumāran, Naranārāyaṇan, Kabilan, Iḍaban, Nāradan, Ayakkirīvan, Tattāttirēyan, Mohini, Vēlviyin padi, Viyādan, Tanvandiri, Buttan.

*[திருமால் + கோலம்]*

**திருமால்நிலை** *tirumāl-nilai*, பெ. (n.) ஐவகைத் திருமால் வடிவங்கள் (பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை); manifestations of Tirumāl in five forms viz., param, viyugam, vibavam, antaryāmittuvam. *(அஷ்டாதச. தத்வத். 3, 4, 1)* (செ.அக.).

**திருமால்புதல்வன்** *tirumāl-pudalvan*, பெ. (n.) *1.* மாலவனின் மகனான காமன்; kāmā as the son of Tirumāl. *2.* நான்முகன்; Brahmā (செ.அக.).

*[திருமால் + புதல்வன்]*

**திருமால்மூலிகை** *tirumāl-mūligai*, பெ. (n.) துளசி; holy basil.

*[திருமால் + மூலிகை]*

**திருமால்வடிவம்** *tirumāl-vaḍivam*, பெ. (n.) திருமால்நிலை பார்க்க; see *tirumāl-nilai* (செ.அக.).

*[திருமால் + வடிவம்]*

**திருமாலவதாரம்** *tirumāl-avadāram,* பெ. (n.) திருமால்தோற்றரவு பார்க்க; see *tirumāl-toṟṟaravu* (செ.அக.).

*[திருமால் + அவதாரம்]*

**திருமாலாயுதம்** *tirumāl-āyutam,* பெ. (n.) மாலவனின் ஐம்படைகள்; Tirumāl's weapons being five.

*[திருமால் + ஆயுதம்]*

ஐம்படைகளாவன: சங்கு, சக்கரம், தண்டு, வில், வாள்.

**திருமாலிகம்** *tirumāligam,* பெ. (n.) காட்டு முருங்கை; wild Indian horse radish (சா.அக.).

**திருமாலிருஞ்சோலை** *tirumāl-iruñ-cōlai,* பெ. (n.) மதுரை மாவட்டத்திலுள்ள அழகர் மலை என்னும் மாலியவூர் (வைணவத்தலம்); Tirumāl's shrine Aḻagarmalai in Madurai.

*[திருமால் + இருஞ்சோலை]*

**திருமாலின்கண்ணன்** *tirumāliṉ-kaṇṇaṉ,* பெ. (n.) கரிசலாங்கண்ணி; eucalyptus plant (சா.அக.).



**திருமாலின்தேவி** *tirumāliṉ-dēvi,* பெ. (n.) அரிதாரம்; orpiment (சா.அக.).

**திருமாலுந்தி** *tirumāl-undi,* பெ. (n.) திருமால் கொப்பூழ் பார்க்க; see *tirumāl-koppūḻ.*

*[திருமால் + உந்தி]*

**திருமாலை**[1] *tirumālai,* பெ. (n.) 1. தெய்வத்திற்குத் தொடுக்கும் பூமாலை; garland for an idol. 2. தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச் செய்ததும் நாலாயிரத்தெய்வப்பனுவலுட் சேர்ந்ததுமான ஒரு சிற்றிலக்கியம்; a poem in Nalāyira-t-teyva-p-paṉuval by Toṇḍaraḍi-p-poḍi-āḻvar.

**திருமாலை**[2] *tirumālai,* பெ. (n.) மணிகள் வைத்திழைக்கப்பெற்ற நெடிய மணி மாலை; a long chain made up of gems (கல்.வெ.அக.).

*[திரு + மாலை]*

**திருமாலைகட்டி** *tirumālai-kaṭṭi,* பெ. (n.) கோயில்மாலை தொடுப்போன்; maker of garland for idols.

*[திரு + மாலை + கட்டி]*

**திருமாலைவடை** *tirumālai-vaḍai,* பெ. (n.) 1. மாலை வேளையில் இறைவனுக்குப் படைக்கப்படும் வடைத் திருப்பணியாரம்; cakes of black gram offered in the evening in temples. 2. திருமேனிக்குச் சார்த்தப்படும் வடைமாலைக்கான வடை; cakes of black-gram garland for idol.

*[திரு + மாலை + வடை]*

**திருமாளிகை** *tiru-māḷigai,* பெ. (n.) 1. திருமாளிகைப்பத்தி பார்க்க; see *tirumāḷigai-p-patti.* "செம்பொனம்பலஞ்சூழ் திரு மாளிகையும்" (S.I.I. iii. 183). 2. பெரியோர் வாழும் இல்லம்; house of respectable person.

*[திரு + மாளிகை]*

**திருமாளிகைக்கூறு** *tiru-māḷigai-k-kūṟu,* பெ. (n.) கோயில் சுற்றுப்பகுதிகளில் அமைக்கப் படும், தெய்வங்கட்குரிய பூசகர்கட்குக் கோயில் ஆள்வினையாளர்கள் (நிர்வாகத்தினர்), பிரித்து அளிக்கும் பங்கு; a share given to the priests of demigods of a temple. "அருளுடையான் கோயிலுக்குச் சமுதாயத் திருமாளிகைக் கூறுதில்லையம் பலப்பல்லவ ராயனும்" (தெ. கல்.தொ. 4. கல் 222).

*[திரு + மாளிகை + கூறு]*

**திருமாளிகைச்சுற்று** *tiru-māḷigai-c-cuṟṟu,* பெ. (n.) திருச்சுற்றுமாளிகை பார்க்க; see *tiru-c-cuṟṟu-māḷigai.*

*[திரு + மாளிகை + சுற்று]*

**திருமாளிகைத்தேவர்** *tiru-māḷigai-t-tēvar,* பெ. (n.) திருவிசைப்பாவின் ஒரு பகுதியை

இயற்றிய ஆசிரியர்; the author of a section of Tiruvišaippā (செ.அக.).

*[திரு + மாளிகை + தேவர்]*

**திருமாளிகைப்பத்தி** *tiru-māḷigai-p-patti,* பெ. (n.) கோயில் திருமதிலையொட்டி உட்புறத்து அமைந்துள்ள கட்டடவரிசை; series of buildings along side the compound wall of a temple.

*[திரு + மாளிகை + பத்தி]*

**திருமாளிகைப்பிள்ளையார்** *tiru-māḷigai-p-piḷḷaiyār,* பெ. (n.) சண்டீசர் (கல்.); saṇḍēšā, Šivan's seneschal.

*[திரு + மாளிகை + பிள்ளையார்]*

**திருமாற்பேறு** *tirumāṟ-pēṟu,* பெ. (n.) காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Kāñjipuram district.

*[திருமால் + பேறு]*

இத்தலத்தில் சிவபெருமான் திருமாலுக்குச் சக்கரப்படை அருளினார். திருமால் வழிபட்டுப் பேறு பெற்ற தலமாதலால் திருமாற்பேறு என்று பெயர் பெற்றுள்ளது என்பர்.

கல்வெட்டில் "இந்த ஊர்ப்பெயர் செயங் கொண்ட சோழமண்டலத்திலுள்ள காமக் கோட்டத்தின் பகுதியான வல்லநாட்டிலுள்ள திருமாற்பேறு" என்று குறிக்கப்பட்டுள்ளது (தமி. ஊர். பெ.).

**திருமு[1]-தல்** *tirumu-,* 5 செ.குவி. (v.i.) திரும்புதல்; to turn, return, go back. "ஓடித் திருமி" (கம்பரா. மாரீச. 136).

*[திரு → திருமு]*

**திருமு[2]-தல்** *tirumu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நன்றாகத் தேய்த்தல்; to rub hard. "விளக்கைச் சாம்பலால் திருமு" (நாஞ்.).

**திருமுக்காணம்** *tiru-mukkāṇam,* பெ. (n.) திருமுகக்காணம் பார்க்க; see *tiru-muga-k-kāṇam* (S.I.I. ii 509).

*[திருமுகக்காணம் → திருமுக்காணம்]*

**திருமுக்கால்** *tiru-mukkāl,* பெ. (n.) இசைப் பாட்டு வகை (தேவா.); a kind of song.

*[திரு + முக்கால்]*

**திருமுகக்கணக்கு** *tirumuga-k-kaṇakku,* பெ. (n.) திருவிதாங்கூர் அரண்மனையிலுள்ள கணக்குப் பதவி (நாஞ்.); an accountant's post in the Travancore palace.

*[திருமுகம் + கணக்கு]*

**திருமுகக்காணம்** *tiru-muga-k-kāṇam,* பெ. (n.) பழைய வரி வகை; an ancient tax (S.I.I.ii 521).

*[திருமுகம் + காணம். காணம் = பொன், பொருள்]*

**திருமுகத்துறை** *tiru-muga-t-tuṟai,* பெ. (n.) காவிரி கடலுடன் கலக்கும் துறை (சிலப். 10, 33, உரை.); mouth of Cauvery river.

*[திருமுகம் + துறை]*

**திருமுகத்தேவை[1]** *tiru-muga-t-tēvai,* பெ. (n.) அரண்மனைகளிற் செய்யும் வேலை; personal services in a temple or palace. "திருமுகத்தேவை செய்யுமிடத்து" (S.I.I.vi. 27).

*[திரு + முகம் + தேவை]*

**திருமுகத்தேவை[2]** *tiru-muga-t-tēvai,* பெ. (n.) அரசு வழி உரிமை பெற்ற சிற்றூரரையோ, ஊரரையோ, கண்காணித்துக் குற்றவாளி களைச் சிறைபிடிக்கும் உரிமை; the right of government to imprisonment the accused in village or city. "திருமுகத் தேவைக்கு ஆளாய் வந்தது - பெருங்குடிகள் பேரால் கடமைக்கு வெள்ளாழரைச் சிறைபிடித்தல் இவர்கள் அகங்களில் ஒடுக்குதல் செய்யக் கடவ தல்லாதாகவும்" (தெ. கல். தொ. 6. கல். 48-50).

*[திரு + முகம் + தேவை]*

**திருமுகப்பாசுரம்** *tiru muga-p-pāšuram,* பெ. (n.) திருமுகமுதற்செய்யுள் பார்க்க; see *tirumuga-mudaṟ-c-ceyyuḷ.*

*[திருமுகம் + பாசுரம்]*

**திருமுகம்[1]** *tiru-mugam,* பெ. (n.) அரசன் ஓலை வழி இடும் கட்டளை; order of the king through ōlā documents. திரு. இராசராசதேவர்க்கு யாண்டு இருபத்தொன்றாவது நாட்டோருக்குத் திருமுகம் வர நாட்டோரும் திருமுகம் கண்டு எதிரெழுந்து சென்றுதொழுது வாங்கித் தலை மேல் வைத்துப் பிடிசூழ்ந்து பிடாகை எல்லை தெரித்து -

அறவோலை செய்த நிலம் (பெரிய லெய்டன் செப்பேடுகள்) (கல். வெ. அக.).

[திரு + முகம்]

**திருமுகம்²** *tirumugam*, பெ. (n.) 1. பெரியோரின் கடிதம்; letter form a great person. "உலகு தொழு நிறைஞ்சுந் திருமுகம் போக்குந் செவ்வியளாகி" (சிலப். 8, 53). 2. அரசனது ஆவணம்; royal order. "திருமுகம் மறுத்துப் போனவர்க்கு எத்தைச் சொல்லுவது (ஈடு. 1, 4, 4). 3. தெய்வத்திருமுன் (வின்.); divine presence.

**திருமுகமருளு-தல்** *tirumukam-arulu-*, செ.கு.வி. (v.i.) அரசன் ஓலை வழிக் கட்டளையிடுதல்; to order of the king through ōlā documents. "அந்நிலத்திற்குக் கல்நாட்டுச் சிவலேகை செய்து கொள்க என்று சபை திருமுக மருளிச் செய்த திருமுகப்படி" (திருப்பாற் கடல் கல்வெட்டு)

[திருமுகம் + அருளு-.]

**திருமுகமண்டலம்** *tiru-muga-mandalam*, பெ. (n.) கோயின்மூர்த்தி அல்லது பெரியோரின் ஒளிவட்டம் (முகமுன்); hallowed face of idols or great men (செ.அக.).

[திருமுகம் + மண்டலம்]

**திருமுகமுதற்செய்யுள்** *tirumuga-mudar-ceyyul*, பெ. (n.) பதினோராந் திருமுறையில் மதுரைச் சொக்கநாதக் கடவுள் இயற்றியதாகக் கருதப்படும் முதற் செய்யுள்; the first poem in padinōrān-tiru-murai, believed to have been composed by the god at Madura (செ.அக.).

[திருமுகம் + முதல் + செய்யுள்]

**திருமுகத்தானம்** *tiru-muga-t-tānam*, பெ. (n.) வேந்தரால் நேரில் அமர்த்தப்படும் மதிப்புறு பதவி (நாஞ்.); a post of honour to which appointment is directly made by a king.

[திருமுகம் + தானம்]

**திருமுட்டு** *tiru-muttu*, பெ. (n.) பூசைத்தட்டு முதலியன; plates and vessels used in worship. "இலங்கு நற்றிருமுட்டிவை முதலிய வீந்தார்" (வேதாரணி. மேன்மை. 52).

[திரு + முட்டு]

**திருமுடி** *tiru-mudi*, பெ. (n.) 1. கோயில் திரு மேனியின் (மூர்த்தியின்) தலைப்பகுதி; head of the chief idol in a temple. 2. திருநாமம் 3 பார்க்க; see *tiru-nāmam* 3. "நாரணன் கடிமைத் திருமுடியா யிரர்க்கு" (அரிசமய பரகா. 28). 3. வேட்டுவர் அல்லது கைக்கோளருக்குள் கொத்துவேலை செய்வோர்; caste of brick layer's among vēttuvar or kaikkolar (S.I.I.vii, 35).

[திரு + முடி]

**திருமுடிக்கலசம்** *tiru-mudi-k-kalaśam*, பெ. (n.) திருமுழுக்குச் சடங்கு வகை; a kind of anointing ceremony (நாஞ்.).

[திருமுடி + கலசம்]

**திருமுடிச்சாத்து** *tiru-mudi-c-cāttu*, பெ. (n.) தலைப்பாகை; turban. "சட்டை சாத்தித் திருமுடிச் சாத்துஞ் சாத்தி" (திருவாலவா. 16, 19).

[திருமுடி + சாத்து]

**திருமுடிச்சேவகர்** *tiru-mudi-c-cēvagar*, பெ. (n.) ஐயனார்; Aiyanār (செ.அக.).

[திருமுடி + சேவகர்]

**திருமுடித்திலகம்** *tiru-mudi-t-tilagam*, பெ. (n.) திருமுடியிற் சூட்டு மணி; jewel for the head. "திருமுடித் திலகங் கொண்டார்" (சீவக. 787).

[திருமுடி + திலகம்]

**திருமுடியடைவு** *tiru-mudi-y-adaivu*, பெ. (n.) கொடிவழி, சரவடி, கால்வழி; pedigree. "பெரிய திருமுடியடைவு".

[திரு + முடியடைவு]

**திருமுடியோன்** *tiru-mudiyōn*, பெ. (n.) வேந்தன்; king. "தீதிலன்கொ திருமுடியோ னென்றான்" (கம்பரா. பள்ளி. 2).

[திரு + முடியோன்]

**திருமுத்து** *tiru-muttu*, பெ. (n.) வேந்தன் முதலிய பெரியோர்களது பல்; tooth of a king or a great person, a term of respect (செ. அக.).

[திரு + முத்து]

**திருமுருகர்பதிகம்** *tirumurugar-padigam*, பெ. (n.) பூபாலப்பிள்ளை அவர்களால்

19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்; the literature written by Pūpālappiḷḷai of 19-20th century (சிற்.அக.).

[திருமுருகர் + பதிகம்]

**திருமுருகன்பூண்டி** *tirumurugaṉ-pūṇḍi* பெ. (n.) கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Coimbatore district.

[திரு + முருகன் + பூண்டி.]

முருகப்பெருமான் சிவபெருமானை வேண்டிப் பேறு பெற்ற தலமாதலால் முருகன்பூண்டி என்று பெயர் பெற்றுள்ளது என்பர். சுந்தரரால் பாடல் பெற்ற தலமாதலால் திருமுருகன் பூண்டி என்றழைக்கப்படுகின்றது. மாதவி மரங்கள் நிறைந்திருந்தமையால் மாதவிவனம் என்ற பெயரும் உண்டு.

**திருமுருகன்பூண்டித்தலபுராணம்** *tirumurugaṉ pūṇḍi-t-talapurāṇam* பெ. (n.) வாசுதேவ முதலியார் என்பவரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற சிற்றிலக்கியம்; the literature composed by Vāsudēva-mudaliyār.

[திருமுருகன்பூண்டி + தலபுராணம்]

**திருமுருகாற்றுப்படை** *tiru-murukāṟṟu-p-paḍai* பெ. (n.) முருகக்கடவுளைப் பற்றி நக்கீரர் இயற்றியதும் பத்துப்பாட்டினுள் ஒன்றும் பன்னிரு திருமுறைகளுள் பதினோராந் திருமுறை நூல்களுள் ஒன்றுமான சிற்றிலக்கியம் ஆகிய கழக நூல்; a sangam literature in pattu-p-pāṭṭu composed by Nakkīrar in honour of Lord Murugaṉ (செ.அக.).

[திருமுருகன் + ஆற்றுப்படை]

**திருமுல்லைவாயில்மாசிலாமணிஈசர்பதிகம்**[1] *tirumullai-vāyil-māśilāmani īsar-padigam,* பெ. (n.) தாச்சி அருணாச்சலம் அவர்களால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by tacci-aruṇāccala-mudaliyār in 19th century.

[திருமுல்லைவாயில் + மாசிலாமணி + பதிகம்]

**திருமுல்லைவாயில்மாசிலாமணிஈசர்பதிகம்**[2] *tirumullai-vāyil-māśilāmani-īśar-padigam,* பெ. (n.) பூவை கல்யாண சுந்தரர் அவர்களால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Pūvai-kalyāṇa-sundarār of 19-20th century.

[திருமுல்லைவாயில் + மாசிலாமணி + பதிகம்]

**திருமுழுக்கு** *tiru-muḷukku* பெ. (n.) 1. இறைத் திருமேனி அல்லது அரசரின் குளியல்; bath of an idol or a king. 2. சிலை (மார்கழி) மாதத்தில் மலைமகள் நோன்பிருந்து மகளிர் முழுகும் நீராட்டு; bath taken by woman after fasting in honour of Pārvadi in the month of Markaḻi (செ. அக.).

[திரு + முழுக்கு]

**திருமுளைப்பாலிகை** *tiru-muḷai-p-pāligai* பெ. (n.) மணவிழா முதலிய சிறப்பு நாள்களில் தவசங்களை முளைவிட்டு வளர்க்கப் பெறும் மண்பாலிகை; pots of sprouting seeds kept on important occasions like marriage. "திருமுளைப்பாலிகை முப்பத்தானுக்கு" (S. I. I. iii, 187) (செ.அக.).

[திரு + முளை + பாலிகை]

**திருமுற்றத்தார்** *tiru-muṟṟattār* பெ. (n.) கோயிற் பணி செய்வோர்; temple-servants. "அதைக் கவனித்த அருச்சகருந் திருமுற்றத் தாரும்" (குருபரம். 77)

[திருமுற்றம் + ஆர்].

**திருமுற்றம்** *tiru-muṟṟam* பெ. (n.) 1. இறைவன் திருமுன்; court-yard in front of the chief idol of a temple. அணியரங்கன் திருமுற்றத்தடியார் (திவ். பெருமாள். 1, 10). 2. குதிரை வையாளி வீதி; open square for equestrian excercises race-course, hippodrome (குடா.).

[திரு + முற்றம்]

**திருமுறை** *tirumuṟai* பெ. (n.) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், பதினோராந்திருமறை, பெரிய புராணம் எனும் சிவநெறி நூல்கள்; Tamil Šaiva scriptures, 12 in number, viz., Tēvāram, Tiru-vāšagam, Tiru-v-išaippā, Tiru-p-pallāṇḍu, Tiru-mantiram, patinōrān-tirumuṟai, Periya-purāṇam (செ.அக.).

[திரு + முறை]

**திருமுறைகண்டசோழன்** *tirumuṟai-kaṇḍa-cōḻaṉ* பெ. (n.) தேவாரமாகிய திருமுறைகளைக் கண்டு வெளிப்படுத்திய சோழன்; a Chola king, who was the discoverer of Tēvāram (செ.அக.).

[திருமுறை + கண்ட + சோழன்]

**திருமுறைகண்டபுராணம்** *tirumuṟai-kaṇḍa-purāṇam* பெ. (n.) தேவாரம் முதன்முதற் கண்டுபிடிக்கப்பட்ட வரலாற்றினைக் குறித்து உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய தொன்மம்; a poem by Umā-padi-civāccāriyar describing the discovery of Tēvāram (செ. அக.).

[திரு + முறை + கண்ட + புராணம்]

**திருமுறைத்தேவாரச்செல்வன்** *tirumuṟai-t-tēvāra-c-celvaṉ,* பெ. (n.) திருமறைகளாக வகுக்கப்பட்ட தேவாரத் திருப்பதிகங்களை அருளிச்செய்த திருஞானசம்பந்தர்; Gñāṉa-sambandar, as composer of the tēvāram which included as tirumuṟais.

"திருக்கழுமல நாட்டு திருக்கழு மலத்து (சீர்காழி) உடையார் திருத்தோணீ சுரமுடைய நாயனார் திருக்கோயிலின் வடக்கில் திருமடை வளாகத்து திருமுறைத் தேவாரச் செல்வன் திருமடத்து" (தெ. கல். தொ. 8. கல். 205).

[திரு + முறை + தேவாரம் + செல்வன்]

**திருமுறைமண்டபம்** *tiru-muṟai-maṇḍabam,* பெ. (n.) திருமறைகளை ஓதுங் கோயின் மண்டபம்; temple-hall where the tirumurai is recited. "எந்தை கோயிலும் திருமுறை மண்டபமெடுத்து" (உபதேசகா. சிவபுரா. 48).

[திருமுறை + மண்டபம்]

**திருமுன்**[1] *tiru-muṉ,* பெ. (n.) திருமுன்பு பார்க்க; see *tirumuṉbu.* "விழுந்தவர் திருமுன் சென்று" (திருவாலவா. 27, 28).

[திரு + முன்]

**திருமுன்**[2] *tiru-muṉ,* கு.வி.எ. (adv.) திருமுன்னர் பார்க்க; see *tirumuṉṉar.*

[திரு + முன்]

**திருமுன்காட்சி** *tiru-mun-kāṭci,* பெ. (n.) வரிவகை (S.I.I.iv.122); a tax.

[திருமுன் + காட்சி]

**திருமுன்பு** *tiru-muṉbu,* பெ. (n.) இறைமுன்பு; divine presence, royal presence, presence of a great person (செ.அக.).

[திரு + முன்பு]

**திருமுன்னர்** *tiru-muṉṉar,* கு.வி.எ. (adv.) முன்னிலையில்; in the august presence. "மன்னன் றிருமுன்னர் வைத்தலுமே" (நள. சுயம்வர. 26).

[திரு + முன்னர்]

**திருமுனைப்பாடிநாடு** *tiru-muṉai-p-pāḍi-nāḍu,* பெ. (n.) திருக்கோவலூரைச் சார்ந்துள்ள நடு நாடு; the country surrounding Tirukkōvalūr "திருமுனைப்பாடி நாட்டுப் பாண்டையூர் மங்கலங்கிழான்" (S. I. I. i 101) (செ.அக.).

[திரு + முனைப்பாடிநாடு]

**திருமூப்பு** *tiru-mūppu,* பெ. (n.) மூப்பினால் எய்தும் அரச பதவி; king-ship, as attained by right of seniority. "விசாகந் திருநாள் திருமூப்பு ஏற்றார்" (நாஞ்.).

[திரு + மூப்பு]

**திருமூர்த்தி** *tiru-mūrtti,* பெ. (n.) ஆயுர்வேத முறைப்படி செய்த ஒரு வகைச் செந்தூரம்; a red oxide perhaps with three ingredients prepared as per process of Ayurveda (சா.அக.).

**திருமூர்த்திபற்பம்** *tiru-mūrtti-paṟpam,* பெ. (n.) சித்தமுறைப்படி வீரம், பூரம், இளங்கம் ஆதியாகப் புடமிட்டெடுத்த வேதைக்குதவும் பற்பம்; in Siddhar's medicine a white oxide calcined prepared with the aid of corrosive sublimate, sub choloride of mercurry and vermilion as chief ingredients which is useful in alchemy.

[திருமூர்த்தி + பற்பம்]

**திருமூலட்டானம்** *tiru-mūlaṭṭāṉam,* பெ. (n.) திருவாரூர்ச் சிவதலம்; the sacred shrine of Tiruvārūr. "திருவாரூரிற்றிரு மூலட்டானத் தெஞ்செல்வன்றானே" (தேவா. 725, 4).

**திருமூலநாயனார்** *tiru-mūla-nāyaṉār,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவரும்

திருமந்திரம் இயற்றியவருமாகிய சிவத்துறவி; a canonized Saiva saint, author of Thirumandiram, one of 63 Nāyanmārs *(பெரியபு.).*

*[திருமூலம் + நாயனார்]*

**திருமூலநாயனார்குருமுறை** *tiru-mūla-nāyanār-kurumurai,* பெ. (n.) 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த திருமூலர் இயற்றிய முறை எனும் சிற்றிலக்கிய வகையைச் சார்ந்த நூல் *(சிற். அக.);* a minor literature book written by tirumūlar in 5th century.

*[திருமூலம் + நாயனார் + குருமுறை]*

**திருமூலர்** *tiru-mūlar,* பெ. (n.) திருமூலநாயனார் பார்க்க; see *tirumūla-nāyanār.* 'திருமூலர் சொல்லும் ஒரு வாசக மென் றுணர்" *(நல்வழி 40).*

*[திரு + மூலர்]*

**திருமூலர்அகவல்** *tiru-mūlar-agaval,* பெ. (n.) மாணிக்கவாசகர் என்பவரால் 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற சிற்றிலக்கியம் *(சிற். இல. அக.);* a minor literature written by Māṇikka-vāšagar in l8th century.

*[திருமூலர் + அகவல்]*

**திருமூலவர்க்கம்** *tiru-mūla-varkkam,* பெ. (n.) சடை, புலித்தோல் முதலிய சின்னங் களுடன் மலையில் வாழும் திருமூலர் மரபைச் சேர்ந்த சித்தர்கள்; Siddhars living on the mountain tops with their symbolic vestures as entangled lock hair, tiger's skin etc., and who claim to be members of Tirumūlar's school of thought *(சா. அக).*

*[திருமூலர் + வர்க்கம்]*

**திருமெய்காப்பு** *tiru-mey-kāppu,* பெ. (n.) கோயில் காப்போன் (S.I.I.ii, 328); temple watchman.

*[திரு + மெய் + காப்பு]*

**திருமெய்ப்பூச்சு** *tiru-mey-p-pūccu* பெ. (n.) கோயின் திருமேனி (மூர்த்தி)களின் மேற் பூசும் பூச்சு; anointing of an idol (S.I.I. iii, 94).

*[திருமெய் + பூச்சு]*

**திருமெய்ப்பூச்சுச்சந்தனம்** *tiru-mey-p-pūccu-c-cantanam,* பெ. (n.) திருமேனிகட்குச் சிறப்புத் திருநாளில் அணிவிக்கும் சந்தனம்; sandal paste anointed to idol on special occasion. "திருமெய்பூச்சுச் சந்தனஞ் ஸ்ரீ கண்டத்து ஓராண்டைக்குக் காசு அரையும்" *(தெ. கல். தொ. 5, கலி பு 24)* (கல். வெ. அக.).

*[திரு + மெய் + பூசு + சந்தனம்]*

**திருமெழுக்கு** *tiru-meḻukku,* பெ. (n.) 1. கோயிலிடத்தை மெழுகுகை; cleansing the temple floor with cow-dung dissoved in water. "திருமெழுக்குஞ் சாத்தி" *(சி. சி. 8, 19).* 2. சாணம்; cow-dung (இ.வ.).

*[திரு + மெழுக்கு]*

**திருமெழுக்குப்புறம்** *tiru-meḻukku-p-puṟam,* பெ. (n.) கோயிற் பகுதிகளையும், திருமுற்றத்தினையும் நாளும் தண்ணீர் தெளித்தும் சாணமிட்டும் மெழுகுவார்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்; tax free land given to people who cleanse the temple and smear the temple floors with cowdung dissolved in water. "திருமெழுக்கு இடுவாளொருத்திக்கு நெல்லு நாழி உரியும்" *(தெ. கல். தொ. 5, கல் 578).*

*[திரு + மெழுகு + புறம்]*

**திருமெழுகு[1]-தல்** *tiru-meḻugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கோயிலிடத்தைச் சாணத்தால் மெழுகித் தூய்மை செய்தல்; to cleanse the temple - floor (செ. அக.).

*[திரு + மெழுகு-.]*

**திருமெழுகு[2]** *tiru-meḻugu,* பெ. (n.) திருமெழுக்கு பார்க்க; see *tiru-meḻukku* (செ.அக.).

*[திரு + மெழுகு]*

**திருமேற்கட்டி** *tiru-mēṟ-kaṭṭi,* பெ. (n.) கோயில் திருமேனி (மூர்த்தி) எழுந்தருளியிருக்கு மிடத்துக் கட்டப்படும் மேற்கட்டி; canopy over an idol in a temple (S I I ii 76).

*[திரு + மேல் + கட்டி]*

**திருமேற்பூச்சு** *tiru-mēṟ-pūccu,* பெ. (n.) 1. களபம்; sandal perfume *(தத்துவப். 66, உரை)* 2. திருமெய்ப்பூச்சு பார்க்க; see *tiru-mey-p-puccu* (யாழ்.அக.).

*[திருமேல் + பூச்சு]*

**திருமேனி** *tiru-mēṉi,* பெ. (n.) 1. இறையுரு; idol. "எழுந்தருளியிருக்கும் செப்புத் திருமேனிகள்" *(S.I.I.ii. 134).* 2. கடவுள், முனிவர் முதலியோரது உடல் (திவ்விய சரீரம்); sacred person of a deity. "அங்கமலத்திலை போலுந் திருமேனி யடிகளுக்கே" *(திவ். திருவாய், 9, 7, 3).* 3. பெண்களின் காதணி *(வின்.);* women's ornament. 4. குப்பைமேனி *(சங்.அக.);* Indian acalypha.

*[திரு + மேனி]*

**திருமேனிக்கடுக்கன்** *tiru-mēṉi-k-kaḍukkaṉ,* பெ. (n.) கைம்பெண்கள் அணியும் காதணி வகை; an ear-ornament worn by widows *(யாழ்.அக.).*

*[திருமேனி + கடுக்கன்]*

**திருமேனிக்கீடு** *tiru-mēṉi-k-kīḍu,* பெ. (n.) கவசம்; coat of mail. "நற்றிருமேனிக்கீடு நவையற விட்டு" *(திருவாலவா. 28, 90).*

*[திருமேனி + இடு]*

**திருமேனிகண்டன்** *tirumēṉi-kaṇḍaṉ,* பெ. (n.) திருமேனி பார்க்க; see *tirumēṉi* *(சா.அக.).*

*[திருமேனி + கண்டன்]*

**திருமேனிகள்** *tiru-mēṉigaḷ,* பெ. (n.) திருநீறு அணிந்துத் திருத்தொண்டு செய்யும் சிவனடி யார்கள், நந்தவனக்குடிகள்; Šaiva devotees. "நந்தவனம் செய்யும் திருமேனிக்கு" *(தெ. கல். தொ. 8. கல். 194).*

*[திரு + மேனிகள்]*

**திருமேனிகாவல்** *tiru-mēṉi-kāval,* பெ. (n.) கோயிற் காவல்; temple guard. "திருமேனி காவல் காணியாட்சி" *(I.M.P.N.A. 227).*

*[திருமேனி + காவல்]*

**திருமேனிச்சாறு** *tirumēṉi-c-cāṟu,* பெ. (n.) குப்பைமேனிச்சாறு; juice of rubbish plant *(சா.அக.).*

*[திருமேனி + சாறு]*

**திருமேனிபத்திரி** *tirumēṉi-pattiri,* பெ. (n.) குப்பைமேனியிலை; leaf of rubbish plant *(சா.அக.).*

*[திருமேனி + பத்திரி]*

**திருமேனிப்புழு** *tirumēṉi-p-puḻu,* பெ. (n.) ஒருவகைக் குடற்புழு; a kind of intestinal worm.

*[திருமேனி + புழு]*

**திருமேனியழகி**[1] *tirumēṉi-y-aḻagi,* பெ. (n.) திருமேனிபத்திரி பார்க்க; see *tirumeṉi-pattiri* *(சா.அக.).*

*[திருமேனி + அழகி]*

**திருமேனியழகி**[2] *tiru-mēṉi-y-aḻagi,* பெ. (n.) திருமேனி 4 (மலை) பார்க்க; see *tiru-mēṉi 4.*

*[திருமேனி + அழகி]*

**திருமை** *tirumai,* பெ. (n.) அழகு; beauty. "திருமை பெற்ற தொரு தேரினை நல்கி" *(கந்தபு. முதனாட். பானு. 35).*

**திருமொழி** *tiru-moḻi,* பெ. (n.) 1. சான்றோர் சொல்; word or utterance of great persons. "ஒரு மூன்றவித்தோன் . . . திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா" *(சிலப். 10, 195).* 2. நாலாயிரத் தெய்வப் பனுவலுள் உள்ள ஒரு பகுதி; a portion of Nālāyira-t-teyva-p-paṉuval (வைணவ). 3. தோன்றியம் (ஆகமம்); agamās. "அறவோன் றிருமொழி' *(சிலப். 10, 12).* 4. அறம் *(சிலப். 10, 12. அரும்.);* dharma.

*[திரு + மொழி]*

**திருமோகூர்** *tirumōgūr,* பெ. (n.) மதுரை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Madurai district.

> தேவர்களும், அசுரர்களும் பாற் கடலைக் கடைந்த பொழுது கிடைத்த அமுதத்தைத், திருமால் அசுரர்களிடம் இருந்து, மோகினித் தோற்றரவு எடுத்து மயக்கிப் பெற்று, தேவர்களுக்குக் கொடுத்தார். மோகினி தோற்றரவு எடுத்தப்பகுதியாதலால் மோகனூர் எனப்பட்டு பின் மோகூர் என்று குறுகியது என்பர். திருமங்கை யாழ்வாராலும், நம்மாழ் வாராலும் பாடப் பெற்ற தலம். "தாளத் தாமரைத் தடமணி வயல்திரு மோகூர்" என்பது நம்மாழ்வார் பாசுரங்களில் ஒன்று *(தமி. ஊர். பெ.).*

**திருரசம்** *tiru-rašam,* பெ. (n.) கலப்பற்ற இதளியம் (பாதரசம்); purified mercury, un adultered mercury.

*[திரு + ரசம்]*

**திருவக்கரை** *tiruva-k-karai*, பெ. (n.) தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள சிவத் தலம்; a Siva shrine in South Arcot district.

"கோராசராசகேசரி வந்மற்கு யாண்டு 16வது கண்டராதித்த தேவர் நம்பிராட்டியார் திரு உத்தமச் சோழரைத் திருவயிறு வாய்த்த உடைய பிராட்டியார் செம்பியன் மாதேவியார் எடுப்பித்தருளின திருவக்கரை திருக்கற்றளி சிவலோகம் *(தெ. கல். தொ. 17. கல். 222).*

இக்கோயிலைச் செம்பியன் மாதேவியார் கி.பி. 1001ல் - 'சிவலோகம்' என்ற பெயரால் கற்றளியாகக் கட்டியுள்ளார்.

**திருவக்கிரம்** *tiruva-k-kiram*, பெ. (n.) படையல்; offerings to the deity in the temple. "திருவயிந்திர புரத்தாழ்வானுக்குத் திருநாட் களில் எழுந்தருளவும் இக்கோயிலில் நித்தம் பத்துக்கலம் திருவக்கிரம் உண்ணக் கடவதாகவும்" *(முதற் குலோத்துங்கன் - கி. பி. 1092, தெ. கல். தொ. 7. கல். 760).*

*[திரு + அக்கிரம்]*

**திருவகுப்பு** *tiruvaguppu*, பெ. (n.) அருணகிரி நாதரால் 15ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட வகுப்பு என்னும் சிற்றிலக்கிய வகையைச் சார்ந்த நூல் *(சிற்அக.)*; a minor literature written by Aruṇagirinādar in 15th century.

*[திரு + வகுப்பு]*

**திருவங்கமாலை** *tiruvaṅgamālai*, பெ. (n.) 7ஆம் நூற்றாண்டில் திருநாவுக்கரசரால் எழுதப் பட்ட சிற்றிலக்கிய வகையிலான தேவாரப் பகுதி *(சிற்அக.)*; a minor literature written by Tirunāvukkarasar of 6th century.

**திருவஞ்சகம்** *tiru-vañjakam*, பெ. (n.) சிவனார் வேம்பு; Sivan's neem.

**திருவட்டபிசின்** *tiruvaṭṭa-piśiṉ*, பெ. (n.) விளாம்பிசின்; gum of wood-apple *(சாஅக).*

**திருவட்டம்** *tiru-vaṭṭam*, பெ. (n.) திருகுவட்டம் பார்க்க; see *tiruku-vaṭṭam* *(யாழ்அக).*

**திருவட்டமணி** *tiru-v-aṭṭamaṇi*, பெ. (n.) திருவட்டமணிவடம் பார்க்க; see *tiru-vaṭṭa-maṇi-vaḍam* (S. I. I. iii, 474).

*[திரு + வட்டம் + மணி]*

**திருவட்டமணிவடம்** *tiru-vaṭṭa-maṇi-vaḍam*, பெ. (n.) கழுத்தணி வகை; a kind of necklace *(S.I.I.iii, 474).*

*[திரு + வட்டம் + மணிவடம்]*

**திருவட்டி** *tiru-v-aṭṭi*, பெ. (n.) திருகுகள்ளி,1 பார்க்க; see *tirugu-kaḷḷi.*

**திருவடி**[1] *tiru-v-aḍi*, பெ. (n.) 1. திருப்பாதம் *(சீவடி)*; sacred feet, as of a deity, saint, etc., "திருவடி யென்றலைமேல் வைத்தார்" *(தேவா. 415, 1).* 2. இறையுரு; the deity. "திருவடிதன் னாமம்" *(திவ். இயற். நான்மு. 68).* 3. துறவி, முனிவர்; ascetic, saint, sage. "படராத் திருவடி" *(T.A.S. ii 139).* 4. மாலவனின் திருவடியாயுள்ள அனுமன்; Hanumān, regarded as the feet of Viṣṇu. "உவமையாளுந் திருவடி யென்னுந் தன்மை யாவர்க்குந் தெரிய நின்றான்" *(கம்பரா. மகேந். 26).* 5. மாலவனின் திருவடியான கலுழன் (கருடன்); Garuda, regarded as the feet of Viṣṇu. "திருவடி யொருவனுமாயிருந்தது" *(ஈடு. 1.4.6).* 6. திரு விதாங்கூர் அரசர்; title of the kings of Travancore. "இராமன் கோதை வர்மத் திருவடி" *(T.A.S. i 290).*

*[திரு + அடி]*

**திருவடி**[2] *tiru-vaḍi*, பெ. (n.) நோவில்லாத புண் *(யாழ்ப்.)*; indolent sore.

*[திரு + வடி + வடு → வடி]*

**திருவடி**[3] *tiru-vaḍi*, பெ. (n.) கோமாளிக் கூத்து *(யாழ்ப்.)*; tricks of a buffoon *(செஅக.).*

*[திருகு → திரு + அடி]*

**திருவடி**[4] *tiru-v-aḍi*, பெ. (n.) ஆறாதகலும் புண், சா (மரண)ப்புண்; a chroni culcer or in curable ulcer which may ultimately cause death. 2. ஒரு வகைக் கள்ளி; a spurge in general *(சாஅக.).*

**திருவடிக்கம்** *tiru-vaḍikkam*, பெ. (n.) மாலவன் கோயிலிற் படிக்கத்தினின்று எடுத்து வழங்கும் நீர் (தீர்த்தம்); water used in the worship of an idol and distributed of worshippers *(வைணவ).*

*[திருபடிக்கம் → திருவடிக்கம்]*

**திருவடிக்காறை** *tiru-v-aḍi-k-kāṟai,* பெ. (n.) காலணி வகை (S.I.I.ii, 144); anklet of an idol.

[திருவடி + காறை]

காறை என்பது கை, கால், கழுத்து ஆகிய உறுப்புகளிலும் மணிக் கற்களாலும், முத்துகளாலும், செய்யப்பட்டுக் கைக்காறை, அடிக்காறை, பட்டைக் காறை என்ற பெயர் பெற்றதை தஞ்சைக் கோயில் கல்வெட்டு உணர்த்துகின்றது.

"திருக்கைக்காறை ஒன்று பொன் அறு கழஞ்சே கால்" (கல். வெ. அக.).

**திருவடிகள்தேவதானம்** *tiruvaḍikaḷ-tēvadāṉam,* பெ. (n.) திருமால் கோயிலுக்குரிய இறையிலி நிலங்கள்; tax free land of Tirumāl temple. "மஹாதேவர் தேவதானங்களும், திருவடிகள் தேவதானங்களும்" (முதல் இராசராசன், கிபி. 1014, தெகல்.தொ. 2. கல்பு). சிவனிய, மாலியக் கோயில் இறையிலி நிலங்களுக்கான பொதுச்சொல்.

[திருவடிகள் + தேவதானம்]

**திருவடிசநிலம்** *tiru-vaḍiša-nilam,* பெ. (n.) பச்சைப் பாம்பு; green snake. whip snake (சா.அக.).

**திருவடிசம்பந்தம்** *tiru-v-aḍi-šampandam,* பெ. (n.) தொண்டன் (சீடனாந்) தொடர்பு (வைணவ.); discipleship.

[திருவடி + சம்பந்தம்]

**திருவடித்தலம்** *tiru-v-aḍi-t-talam,* பெ. (n.) திருவடிநிலை பார்க்க; see *tiru-v-aḍi-nilai* "செம்மையின் றிருவடித் தலந் தந்தீகென வெம்மையு நல்குவ விரண்டு நல்கினான்" (கம்பரா. கிளைகண்டு. 135).

[திருவடி + தலம்]

**திருவடிதீட்சை** *tiru-v-aḍi-t-tiṭcai,* பெ. (n.) மாணாக்கன் (சீடன்) தலையில் குரு தன் பாதத்தை வைத்து அருள் புரியுந் தீக்கை வகை; a mode of religious initiation in which a guru places his feet on the head of his disciple (செ.அக.).

[திருவடி + தீட்சை]

**திருவடிதேசம்** *tiru-v-aḍi-tēšam,* பெ. (n.) திருவிதாங்கூர்ச் சீமை; a Travancore state. "திருவடிதேசமொரு செங்கோல் செலுத்தும்" (பணவிடு. 29).

[திருவடி + தேசம்]

**திருவடிதொழு-தல்** *tiru-v-aḍi-toḻu-,* 1 செ.குன்றாவி. (v.t.) கடவுள் முதலியோரை வணங்குதல்; to worship a deity or a holy person. "திவ்ய தேசங்களெங்குந் திருவடி தொழுதுரை" (குருபரம். 168).

[திருவடி + தொழு-]

**திருவடிநிலை** *tiru-v-aḍi-nilai,* பெ. (n.) கடவுளர் முதலியோர் பாதுகை; sandals of an idol or a great person. "திருவடி நிலை . . . பிறவித் துன்பத்தைக் கெடுக்கும்" (சிலப். 11, 137, உரை). 2. இறையுருவின் பீடம் (S.I.I. iii. 142); pedestal for an idol.

[திருவடி + நிலை]

**திருவடிப்பந்தம்** *tiru-v-aḍi-p-pandam,* பெ. (n.) கோயில் திருமேனி (மூர்த்தி)யின் புறப்பாட்டில் முன்பாகப் பிடித்துச் செல்லும் தீப்பந்தம் (வைணவ.); a torch carried before an idol in procession.

[திருவடி + பந்தம்]

**திருவடிப்பாதுகை** *tiru-v-aḍi-p-pādugai,* பெ. (n.) திருவடிநிலை பார்க்க; see *tiru-v-aḍi-nilai* (செ.அக.).

[திருவடி + பாதுகை]

**திருவடிப்புண்** *tiruvaḍi-p-puṇ,* பெ. (n.) திருவடி,4 பார்க்க; see *tiru-v-aḍi,4* (சா.அக.).

[திருவடி + புண்]

**திருவடிபிடிப்பான்** *tiru-v-aḍi-piḍippāṉ,* பெ. (n.) கோயிலருச்சகன் (சிலப். 30, 52, அரும்.); temple priest. "பூபால சுந்தர விண்ணகர், எம்பெருமாள் கோயில் திருவடி பிடிக்கும் காஸ்யபன் திருகிருட்ணபட்ட நின்ற நம்பி" (தெ. கல். தொ. 8, கல் 340).

[திருவடி + பிடிப்பான்]

**திருவடிமார்** *tiru-v-aḍi-mār,* பெ. (n.) அரசர், பார்ப்பன அதிகாரிகள், திருமடத்துத் தலைவர்கள், கோயில் பூசாரி முதலாயினோருக்கு வழங்கிய பழைய

*சிறப்புப் பெயர்;* ancient honorific tittle of rulers of countries, brahmin officers, heads of mutts and officiating priests in temples *(T. A. S. ii 141).*

*[திருவடி + மார்]*

**திருவடிராச்சியம்** *tiruvaḍi-rācciyam,* பெ. (n.) *திருவடிதேசம் பார்க்க;* see *tiruvaḍi-tēśam*.

*[திருவடி + இராச்சியம்]*

**திருவடையாளம்** *tiru-v-aḍaiyāḷam,* பெ. (n.) *சிவசமயத்திற்குரிய திருநீறு முதலிய பொருள்கள்;* holy ashes and rudrākṣa beads as the peculiar emblems of Saiva religion *(சங்.அக.).*

*[திரு + அடையாளம்]*

**திருவண்டுதுறை** *tiruvaṇḍu-tuṟai,* பெ. (n.) **தஞ்சை மாவட்டத்தில் உள்ள இராச மன்னர் குடிக்குக் கிழக்கே உள்ள ஒரு தேவாரம் பெற்ற சிவப்பதி;** a village in Tanjavore district.

பிருங்கி முனிவர் இறைவனை மட்டும் வணங்க, அவரைப் பிரியாத அம்மையாரை வணங்க மனமின்றி வண்டுரு கொண்டு, அவர்களுக்கிடையே ஊடுருவிச் சென்று வழிபட்ட தலம் என்பர் *(சிற. பெ. அக.).*

*[திரு + வண்டு + துறை]*

**திருவண்ணாமலை** *tiru-v-aṇṇāmālai,* பெ. (n.) *திருவண்ணாமலை மாவட்டத் தலைநகர்;* capital of Thiruvaṇṇāmalai district.

*[திரு + அண்ணாமலை]*

ஐம்பூதத் தலிங்களுள் நெருப்புக்குரிய திருக்கோயில் அரியும் அயனும் தம்மில் யார் உயர்ந்தவர்கள் எனத் தம் பேதைமையால் போரிட்டுக் கொண்ட பொழுது சிவபெருமான் அவர் செருக்கடக்கி பேரொளிப் பிழம்பாய்த் தோன்றியருளிய மலையே அண்ணாமலை. சிவனே உயர்ந்தவர். அவரே இப்பகுதியில் மலையாகக் காட்சி தந்ததால் இப்பெயர் பெற்று இம்மலையைச் சேர்ந்த பகுதிக்கு இப்பெயர் வந்தது.

இம்மலையின் சிறப்பினை விளக்கும் முறையில் பழமொழிகள் பலதோன்றி யுள்ளன.

சோணாசலத்தில் சிறந்த தலமுமில்லை
சோமவாரத்தில் சிறந்த விரதமுமில்லை *(பழ.).*
அண்ணா மலையாரின் அருள் உண்டானால்
மன்னார் சாமியைக் கேட்பானேன் *(பழ.).*

என்ற பழமொழிகள் இம்மலைச் சிறப்பை உணர்த்தும் *(தமி. ஊர். பெ.).*

**திருவண்பரிசாரம்** *tiruvaṇparišāram,* பெ. (n.) **திருவிதாங்கூர்ச் சீமையிலுள்ளதும், நம்மாழ்வாரின் தாயார் பிறந்த இடமுமான திருப்பதிசாரம் என்னும் திருமால்தலம்** *(திவ். திருவாய்.);* Tiruppadi-cāram a Viṣṇu shrine in Travancore and the birth place of Nammāḻvār's mothers.

**திருவணுக்கன்றிருவாயில்** *tiru-v-aṇukkaṉ-ṟiru-vāyil,* பெ. (n.) *கருவறையை அடுத்துள்ள வாயில்;* door of the inner shrine of a temple. "அங்கணெய்திய திருவணுக்கன்றிருவாயிலின்" *(பெரியபு. வெள்ளானை. 41).*

*[திருவணுக்கன் + திருவாயில்]*

**திருவணை** *tiru-v-aṇai,* பெ. (n.) **பாலம் (சேது);** Adam's bridge between Ramesvaram and Ceylon. "திருவணைக்கும் . . . . உதயகிரி அதமனகிரிகளுக்கும் மத்யத்தில்" *(குருபரம். 194).*

*[திரு + அணை]*

**திருவணைக்கரை** *tiru-v-aṇai-k-karai,* பெ. (n.) **இராமேசுவரத்திற்குத் தென்கிழக்காக நீண்ட தரைமுனையிலுள்ள புகழ்பெற்ற ஊர்;** the promontory in the South-east of Rāmēsvaram and the bay enclosed thereby, being one of the most sacred places in India *(அக.நா. 70. உரை).*

*[திரு + அணை + கரை]*

**திருவத்தவர்** *tiruvattavar,* பெ. (n.) **அருளாளர்கள் (பாக்கியவான்கள்);** blessed, fortunate persons. "நல்லொழுக்கங் காக்குந் திருவத்தவர்" *(நாலடி. 157).*

**திருவதாங்கோடு** *tiruvadāṅkōḍu,* பெ. (n.) **சுறாமீன்;** shark, a sea fish *(சா.அக.).*

**திருவதாங்கோட்டுநெய்** *tiruvadāṅkōṭṭu-ney,* பெ. (n.) **மாலைக் கண் நோய்க்கு மருந்தாகப் பயன்படுவதும் சிறப்பான மருத்துவ குணங்களைக் கொண்டது எனக்கருதப் படுவதுமான சுறாமீன் ஈரலிலிருந்து வடிக்கும் நெய்;** oil extracted from the liver of shark which cures night blindness as considered it has peculiar virtues in medicine.

*[திருவதாங்கோடு + நெய்]*

**திருவதிகை**[1] *tiruvadigai*, பெ. (n.) விழுப்புரம் – மயிலாடுதுறை வழியில் பண்ருட்டி அருகில் கெடில ஆற்று வடகரையில் உள்ள ஊர்; a of village Māyavaram Taluk in Tañjāvūr district.

*[திரு + அதிகை]*

மற்றைய சிவப் பதிகளைவிடப் பெருமையில் அதிகமுடைய பதியாகையால் திருவதிகை என்று பெயர் பெற்றது. திருநாவுக்கரசருடைய தமக்கையார் திருத்தொண்டு செய்தபதி; நாவுக்கரசர் சூலைநோய் தீர்த்த பதி. இந்நோய் தீர்த்தக் கிணறு ஒன்றும் இங்கே உள்ளது.

"சித்த வடமும் அதிகைச் சேணுயர் வீரட்டஞ் சூழ்ந்து தத்துங் கெடிலப் புனலும் உடையா ரொருவர் தமர்நாம்" *(சிற. பெ. அக.)*.

**திருவதிகை**[2] *tiru-v-adigai*, பெ. (n.) அதிகை பார்க்க; see *adigai* (செ.அக.).

*[திரு + அதிகை]*

**திருவந்திகாப்பு** *tiru-v-andi-k-kāppu*, பெ. (n.) திருவிழாப் புறப்பாடுகளின் முடிவிற் கண்ணூறு போகச் செய்யும் சடங்கு; ceremonial rites for averting the evil eye at the close of daily worship or festival in a temple. "திருமலை யிலெழுந்தருளி யிருக்கிற வனுக்குத் திருவந்திக்காப்பு ஸமர்ப்பிகைக் காக *(திவ். இயற். 4, 43, வியா)*.

*[திரு + அந்தி + காப்பு]*

**திருவம்பலம்** *tiru-v-ambalam*, பெ. (n.) சிற்றம்பலம் (சிதம்பரம்); Chidambaram. "திருவும் பெரும் புகழுந்தருந் திருவம்பலந் திருவம்பலம்" *(திருவாலவா. கடவு. 3)*.

*[திரு + அம்பலம்]*

**திருவமால்** *tiruva-māl*, பெ. (n.) மாயோன்; Tirumāl. "திருவமாற் கிளையாள்" *(சிலப். 12, நாகநாறு)*.

*[திருமால் → திருவமால்]*

**திருவமுது** *tiru-v-amudu*, பெ. (n.) படைக்கப் பட்ட உணவு (நிவேதன உணவு); boiled rice offered to an idol or a great person. "திருவமுதுக்கு வைத்த காசு பத்தும்" *(S.I.I.i. 98)*.

*[திரு + அமுது]*

**திருவயந்தீசுவரமுடையநாயனார்கோயில்** *tiruvayantīśuvaram-uḍaiya-nāyaṉār-kōyil*, பெ. (n.) காஞ்சி மாவட்டத்திலே உள்ள வல்லம் என்னுஞ் சிற்றூர் குன்றின் மேற் பாறையில் அமைந்திருக்கும் கோயில்; a temple in Kānjeepuram district.

மகேந்திரவர்மன் கீழ்ச் சிற்றரசனாக இருந்து அரசாண்ட வயந்தப் பிரியன் என்பவன் இக்கோயிலை நிறுவியதால் இப்பெயர் பெற்றது *(சிற. பெ. அக.)*.

**திருவரங்கத்தமுதனார்** *tiru-v-araṅga-t-t-amudaṉār*, பெ. (n.) இராமனுசாசாரியாரின் காலத்தவரும், இராமானுச நூற்றந்தந்தாதியை இயற்றியவருமான பெரியார் (திவ்.); author of Ramanuca-nūṟṟandādi a contemorary of Ramanuja.

*[திருவரங்கத்து + அமுதனார்]*

**திருவரங்கத்துப்பதிகம்** *tiruvaraṅgattu-p-paḍigam*, பெ. (n.) மு. ஐயாச்சாமி முதலியார் அவர்களால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Aiyāccāmi Mudaliyār of 19th century.

*[திரு + அரங்கம் + பதிகம்]*

**திருவரங்கம்**[1] *tiru-v-araṅgam*, பெ. (n.) காவிரிக் கரையிலுள்ள மாலிய (வைணவ)த் தலம்; a Thirumal shrine in the banks of Cāuvēry.

*[திரு + வரங்கம்]*

**திருவரங்கம்**[2] *tiruvaraṅgam*, பெ. (n.) திருச்சிராப்பள்ளிக்கருகில் திருவரங்கன் கோவில் உள்ள ஊர்; the village near Trichirappalli where a Thirumāl shrine situated.

*[திரு + அரங்கம்]*

இவ்வூர் இப்பெயர் பெற்றது. பன்னீராழ் வார்களுள் மதுரகவி ஆழ்வார் தவிர மற்ற பதினாரேர் ஆழ்வார்களும் இப்பதியைப் பாடியுள்ளனர். ஆண்டாள் இப்பதியை

"எழிலுடைய அம்மனைமீர் என்னரங்கத் தின்னமுதர்
குழலகர் வாயழகர் கண்ணழகர் . . ."
எனப் பாடுவார்.

**திருவரங்கன்** *tiru-v-araṅgaṉ,* பெ. (n.) சம்பா நெல்வகை (குருகூர்ப். 58); a kind of cambā paddy.

*[திரு + அரங்கன்]*

**திருவரங்கு** *tiru-v-araṅgu,* பெ. (n.) கோயிலிலுள்ள முதன்மை மண்டபம் (S. I. I. ii, 69); the sacred hall in a temple.

*[திரு + அரங்கு]*

**திருவரசிலி** *tiruvarašili,* பெ. (n.) புதுச்சேரிக்கு வடகிழக்கில் பத்துக்கல் தொலைவிலுள்ள ஊர்; a village, 10 k.m. away from Puduccēri.

*[திரு + அரசிலி]*

இன்றைய பெயர் ஒழிந்தியாப்பட்டு. அரச மரத்தை இருப்பிடமாகக்கொண்டு தங்கியதால் இப்பெயர் பெற்றது (சிறபெஅக).

**திருவருட்டுறை** *tiru-v-aruṭṭuṟai,* பெ. (n.) திருவெண்ணெய் நல்லூரிலுள்ள சிவன் கோயில்; The Siva shrine at Tiru-veṇṇay-nallūr. "திருவருட்டுறையே புக்கார்" (பெரியபு. திருத்தாட். 65).

*[திருவருள் + துறை]*

**திருவருட்பயன்** *tiru-v-aruṭpayaṉ,* பெ. (n.) மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஒன்றும் உமாபதியரால் இயற்றப்பட்டது மாகிய சிவனியக் கொண்முடிபு (சைவ சித்தாந்த) நூல்; a text book of Saiva Siddhanda philosophy by Umapadiyar, one of 14 mey-kaṇda-cāttiram (செஅக.).

*[திருவருள் + பயன்]*

**திருவருட்பா** *tiru-v-aruṭpā,* பெ. (n.) கி. பி. 19ஆம் நூற்றாண்டில் இராமலிங்க அடிகளார் இயற்றிய வழிபாட்டு நூல்; a collection of devotional poems by Irāmaliṅga Aḍigalār, 19th c (செஅக.).

*[திரு + அருள் + பா]*

**திருவருட்பிரகாசவள்ளலார்நாமாவளி** *tiru-varuṭ-pirakāša-vaḷḷalār-nāmāvaḷi,* பெ. (n.) கந்தசாமிப்பிள்ளையால் 19–20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); a literature composed by Kandasāmi-p-pillai of 19-20th century A.D.

*[திருவருட் பிரகாச வள்ளலார் + நாமாவளி]*

**திருவருள்** *tiru-v-aruḷ,* பெ. (n.) கடவுள் அருள்; divine grace. 'திருவருள் மூழ்கி" (திவ். திருவாய். 8, 9, 6).

*[திரு + அருள்]*

**திருவல்லிக்கேணி** *tiru-v-alli-k-kēṇi,* பெ. (n.) சென்னையிலுள்ள திருமால் தலம் (திவ். பெரியதி. 2, 3, 1); an ancient Thirumāl shrine in Chennai (செஅக.).

*[திரு + அல்லி + கேணி]*

கேணி என்பது குளத்தைக் குறிக்கும். அல்லி மலர்கள் படர்ந்துள்ள குளம் இப்பகுதியில் விளங்குவதால் அல்லிக்கேணி என்று பெயர் பெற்றது. அதனைச் சார்ந்த ஊரும் இப்பெயர் பெற்றது. திருமங்கை யாழ்வார் இப்பகுதியை,

"சிற்றனை பணியால் முடிதுறந்தானைத்
திருவல்லிக்கேணிகண் டேனே"

என்று பாடியுள்ளார் (தமி. ஊர். பெ.).

**திருவல்லிக்கேணிவேதவல்லித்தாயார் திருப்பதிகம்** *tiruvalli-k-kēṇi-vēdavalli-t-tāyār-tiru-p-padigam,* பெ. (n.) சி. இராமானுசப் பாவலர் அவர்களால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்அக.); a minor literature composed by Ramānuša-p-pāvalar of 20th century.

*[திருவல்லிக்கேணி + வேதவல்லித் தாயார் + திருப்பதிகம்]*

**திருவலகிடு-தல்** *tiru-v-alagiḍu-,* 17 செகுன்றாவி. (v.t.) கோயிலைப் பெருக்கித் தூய்மை செய்தல்; to sweep and clean a temple (செஅக.).

*[திரு + அலகிடு-.]*

**திருவலகு** *tiru-v-alagu,* பெ. (n.) கோயில் பெருக்குந் துடைப்பம்; broom used in temples. "அலகைத் திருவலகென்றும்" (திருக்கோ. 1, உரை) (செஅக.).

*[திரு + அலகு]*

**திருவலகுசேர்-த்தல்** *tiru-v-alagu-cēr-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருவலகிடு-தல் பார்க்க; see *tiru-v-alagiḍu-.*

*[திரு + அலகு + சேர்-.]*

**திருவலஞ்சுழி** *tiru-valañjuḻi,* பெ. (n.) தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்திலுள்ள ஊர்; a village in Tanjavur district.

*[திரு + வலம் + சுழி]*

*காவிரியாறு இப்பகுதியை வலமாகச் சுழித்துச் செல்வதால் இப்பகுதியில் தோன்றிய ஊர் வலஞ்சுழி என்று பெயர் பெற்றுள்ளது. நாவுக்கரசர் ஞான சம்பந்தரால் பாடல் பெற்ற தலம் (தமி. ஊர். பெ.).*

**திருவலஞ்சுழிமும்மணிக்கோவை** *tiru-valañjuḻi-mummaṇi-k-kōvai,* பெ. (n.) 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நக்கீர தேவநாயனார் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Nakkīra-dēva-nāyaṉār of 8th century.

*[திருவலஞ்சுழி + மும்மணிக்கோவை]*

**திருவலம்புரம்** *tiruvalampuram,* பெ. (n.) சோழவள நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற சிவத்திருப்பதி; a village in Cōḻa country.

*[திரு + வலம் + புரம்]*

*திருமால் சிவபிரானை வழிபட்டு வலம்புரிச் சங்கைப் பெற்ற படியால் இப்பெயர் பெற்றது என்பர். நாவுக்கரசருக்குச் சிவபிரான் வலிந்தழைத்துக் காட்சி கொடுத்த இடம் (சிற.பெ.அக.).*

**திருவலர்** *tiruvalar,* பெ. (n.) சேலம் மாவட்டத்து வேடர் பிரிவினர் (E. T. vii, 332); a class of vēḍar in Salem District (செ.அக.).

**திருவழுந்தூர்** *tiru-vaḻundūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கும் மயிலாடுதுறைக்கும் இடையே உள்ள ஊர் சிறந்த சிவத்தலமாகவும், மாலிய (வைணவ)த் தலமாகவும் உள்ளது; a village in Tanjavur district.

*[தேர் + அழுந்து + ஊர் – தேரழுந்தூர் → திருவழுந்தூர்]*

*"தவறான தீர்ப்பு வழங்கிய அரசன் உபரிசுவசு என்னும் அரசனின் தேர், வானவீதியில் உருண்டோடும் தன்மையுடையதால், நிலத்தில் அழுந்தட்டும் என முனிவர்கள் சாபம் கொடுக்க இப்பகுதியில் அழுந்தியது. தேரழுந்தூர் என்பதே திருவழுந்தூர் ஆயிற்று" என்பர்.*

*2. நீர்வளம், நிலவளம் மிகுந்து, அழுத்தமான செல்வம் (திரு) நிலை பெற்றிருப்பதால் திருவழுந்தூர் ஆயிற்று என்பர்.*

*கம்பன் பிறந்த ஊர்*

*"சோழநாட்டுத் திருவழுந்தூர் உவச்சன் கம்பன்" என இராமாயணச் சிறப்புப் பாயிரத்தில் வருகின்றது. கல்வெட்டில் இவ்வூர்.*

*"செயங்கொண்ட சோழ வளநாட்டுத் திருவழுந்தூர் என்று குறிக்கப்பட்டுள்ளது.*

**திருவழுவூர்** *tiru-vaḻvūr,* பெ. (n.) சிவன் கோயில் கொண்ட அட்ட வீரட்டங்களுள் தஞ்சை மாவட்டத்துச் சிவத்தலம்; a Siva shrine in Tanjore District, one of aṭṭa-viraṭṭam, q.v. (செ.அக.).

**திருவள்ளுவப்பயன்** *tiru-vaḷḷuva-p-payaṉ,* பெ. (n.) திருக்குறள் (தொல். பொ. 76, உரை); Tiruk-kuṟal (செ.அக.).

*[திருவள்ளுவம் + பயன்]*

**திருவள்ளுவமாலை** *tiru-vaḷḷuva-mālai,* பெ. (n.) திருக்குறளைப் புகழ்ந்து கழகப் புலவர்கள் பாடியனவாகக் கருதப்படும் செய்யுட்களமைந்த நூல்; verses in praise of the Tirukkuṟal attributed to Sangam poets (செ.அக.).

*[திருவள்ளுவம் + மாலை]*

**திருவள்ளுவர்**[1] *tiru-vaḷḷuvar,* பெ. (n.) 1. திருக்குறளாசிரியர்; the author of the kuṟal. "திருத்தகு தெய்வத் திருவள்ளுவரோடு" (வள்ளுவமா. 1). 2. திருக்குறள்; the kuṟal. "தொல்காப்பியந் திருவள்ளுவர் கோவையார் மூன்றினுடத" (இலக். கொத். 1) (செ.அக.).

**திருவள்ளுவர்**[2] *tiru-vaḷḷuvar,* பெ. (n.) ஞானவெட்டியான் என்னும் நூலை இயற்றிய ஆசிரியர்; the author of Nanavettiyan. (இவர் திருவள்ளுவர் பெயர் தாங்கிய பிற்காலப் புலவர்)

**திருவள்ளுவர்கோயில்** *tiru-vaḷḷuvar-koil,* பெ. (n.) திருவள்ளுவர் எழுந்தருளியிருக்கும் கோயில்; the temple of Tiruvaḷḷuvar.

சென்னை மயிலாப்பூரில் அமைந்திருப்பதும், திருவுண்ணாழிசையில் மூலவராகத் திருவள்ளுவர் திருவுருவம் எழுந்தருளச் செய்யப்பெற்றிருப்பதும், அம்மன் பெயர் வாசுகி என்றிருப்பதும், இருப்பை மரத்தைக் கோயில் மரமாகக் கொண்டதும், திருவள்ளுவரைப் பற்றி வழங்கப்பெற்றுவரும் கதியின் அடிப்படையில் பிற்காலத்தில் எழுப்பப் பெற்றிருக்கலாம் எனக் கருதப்படுவதுமான கோயில்.

**திருவள்ளுவர்திருநாள்** *tiru-vaḷḷuvar-tirunāḷ*, பெ. (n.) திருவள்ளுவரைச் சிறப்பிக்கும் முறையில் ஆண்டுதோறும் சுறவ (தை) மாதம் இரண்டாவது நாள் (மாட்டுப் பொங்கல் நாள்) திருவள்ளுவர் திருநாளாகத் தமிழ் நாட்டில் அறிவிக்கப்பட்டுக் கொண்டாடப் படுகிறது; the festival of Tiruvaḷḷuvar.

*[திருவள்ளுவர் + திருநாள்]*

**திருவள்ளுவராண்டு** *tiru-vaḷḷuvarāṇḍu*, பெ. (n.) திருவள்ளுவர் பெயரால் வழங்கப் பெற்றுவரும் ஆண்டு திருவள்ளுவர் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு என்பதும் அடிப் படையில், கிறித்துப் பிறப்பு ஆண்டொடு முப்பத்தோராண்டு கூட்பின் திருவள்ளுவர் ஆண்டாகும்; tiruvalluvar year.

விக்கிரம சகம், சாலிவாகன சகம் என வடபுல மன்னர்கள் பெயரால் வழங்கப் பெற்று, பிரபவ முலான அறுபது ஆண்டுச் சுழற்சி முறை கொண்டு ஆண்டுமானம் தமிழாண்டு என்று வழங்கப்பெற்றாலும், அதன் பொருந்தாமையும் பெரும்பயனின்மை யும் கருதித் திருவள்ளுவர் பெயரால் தொடராண்டுமானம் வகுக்கப்பட்டுள்ளது.

தவத்திரு மறைமலையடிகளார் தலைமை யில் ஒருங்கு குழுமிய தமிழறிஞர் பெருமக்க ளால் முடிவு செய்யப்பட்ட திருவள்ளுவர் தொடராண்டே தமிழாண்டாகத் தமிழிகம் கடைப்பிடித்து வருகிறது.

திருவள்ளுவர் ஆண்டுமுறையில் ஆண்டுத் தொடக்கம் சுறவ (தை) மாதம் ஆகும்; இறுதிமாதம் சிலை (மார்கழி)

கிறித்துப் பிறப்புக்கு முன் – பின் எனென்பன கி.மு – கி.பி. என்று வழங்கப்பெறுவது போலத் திருவள்ளுவருக்கு முன் பின் என்பனவும் தி.மு. – தி.பி. என வழங்கப் பெறுகிறது.

*[திருவள்ளுவர் + ஆண்டு]*

**திருவள்ளூர்** *tiru-vaḷḷūr*, பெ. (n.) திருவள்ளூர் மாவட்டத்தி தலைநகர்; head quarter of Thiruvaḷḷūr.

கிழஅந்தணர் வடிவம் கொண்ட பெருமாள் சாலிகோத்திர முனிவரிடம் அமுது செய்தருளிய பின் படுத்துறங்க எவ்வுள்? எனக் கேட்டார். இப்பகுதியில் இந்நிகழ்ச்சி நடந்ததால் இவ்வூர் எவ்வுள்ளூர் ஆகி திருவள்ளூர் ஆயிற்று என்பர். இது ஒரு மாலிய திருப்பதி. திருமங்கையாழ்வார், திருமழிசை ஆழ்வார் ஆகியோரால் பாடல் பெற்ற தலம் *(தமி. ஊர். பெ.)*.

*[திரு + எவ்வளூர்]*

**திருவற்கள்ளி** *tiruvaṟkaḷḷi*, பெ. (n.) முரித்தற் கள்ளி; triangular spurge *(சா.அக.)*.

*[திருவல் + கள்ளி]*

**திருவறம்** *tiru-v-aṟam*, பெ. (n.) சமய வறம்; sacred duties prescribed by a religion 'திருவறமெய்யுறுதல்' *(சித்தம்/மணி. 10,85)*.

*[திரு + அறம்]*

**திருவறையணிநல்லூர்** *tiru-vaṟaiyaṇi-nallūr*, பெ. (n.) திருக்கோவிலூர்ப் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே உள்ள ஊர்; a village near Tiru-k-kōvilūr.

*[திருஅறை + அணி + நல்லூர்]*

அறை – சிறுபாறை. சிறுசிறு கற்பாறைகள் கொண்ட மலைப்பகுதியாதலால் அறையணி நல்லூர் எனப்பட்டது; திரு என்னும் அடைமொழி பெற்ற சிவத்தலம்.

**திருவன்**[1] *tiruvaṉ*, பெ. (n.) *1.* வளத்தான்; wealthy person, blessed person. *2.* திருமால்; Tirumāl (Viṣṇu). சிங்கமாய்க் கீண்ட திருவன் *(திவ். இயற். 2, 84)* (செ.அக.).

*[திரு + அன்]*

**திருவன்**[2] *tiruvaṉ*, பெ. (n.) *1.* பகடிசெய்வோன் (விகடக்காரன்); buffon, jester of a king. *2.* புரட்டன்; rogue. *3.* ஆறு விரல நீளம் வளர்வதும் சாம்பல் நிறமுடையதுமான மீன்வகை; grey mullett, attaining 6 in, in length (செ.அக.).

**திருவன்கோலா** *tiruvaṉ-kōlā,* பெ. (n.) கொழுத்த மூரல்; half beak (செஅக).

**திருவனந்தல்** *tiru-v-aṉandal,* பெ. (n.) கடவுளின் திருப்பள்ளியெழுச்சிப் பூசனை; morning ceremony when the god is awakened from sleep, aubade (செஅக.).

*[திரு + அனந்தல்]*

**திருவனந்தற்கட்டளை** *tiru-v-aṉandaṟ-kaṭṭaḷai,* பெ. (n.) கோயிலிற் காலை வழி பாட்டிற்கு விடப்பட்ட இறையிலி; endowment for the morning oblations in a temple (செஅக.).

*[திருவனந்தல் + கட்டளை]*

**திருவனந்தாழ்வான்** *tiru-v-aṉandāḻvāṉ,* பெ. (n.) தொன்மக் கதையின்படி ஆயிரம் தலைகளைக் கொண்டதும் நிலபுலத்தைத் தாங்குவதும் திருமால் படுத்திருக்கும் படத்தினைக் கொண்டதுமான பாம்பு; a mythological thousand headed serphent who supports the earth on his hoods and on whom Tirumāl reclines.

*[திரு + அனந்தன் + ஆழ்வான்]*

**திருவனுக்கவாசல்** *tiru-vaṉukka-vāšal,* பெ. (n.) கோயில் கருவறை வாயில் (பொ.வழ); door of sanctum sanctorum.

*[திரு + அனுக்கம் + வாசல்]*

**திருவாக்கினிப்பூடு** *tiru-vākkiṉi-p-pūḍu,* பெ. (n.) கொட்டைக் கரந்தை; Indian globe-thistle.

**திருவாக்கு** *tiru-vākku,* பெ. (n.) தெய்வம் பெரியோர்களின் வாய்மொழி; sacred word, utterance or order, as of a deity. guru, king. திருவாக்குக்கு எதிர்வாக்குண்டோ?

*[திரு + வாக்கு]*

**திருவாங்கோட்டுமின்னல்** *tiru-vāṅgōṭṭu-miṉṉal,* பெ. (n.) பழைய காசு (நாணய) வகை (பணவிடு. 137); an ancient coin, as from Travancore.

*[திருவாங்கோடு + மின்னல்]*

**திருவாசகம்** *tiru-vāšagam,* பெ. (n.) மாணிக்கவாசகர் (வாதவூரடிகள்) அருளிய வழிபாட்டு நூல்; the celebrated poem in praise of Sivaṉ by Māṇikka-vāšagar. வாதவூ ரெங்கோன் றிருவாசக மென்னுந்தேன் (திருவாச. நூற்சிறப்பு) (செஅக.).

*[திரு + வாசகம்]*

சிவனியத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாந் திருமுறையாக விளங்குவது இந்நூல். திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக் கும் உருகார்" என்னும் பழமொழி இதன் சிறப்பைக் காட்டும்.

**திருவாசல்** *tiru-vāšal,* பெ. (n.) 1. கோயிற் கருவறை (சந்நிதி) வாயில்; gate or door way of a temple directly in front of the chief idol. திருவாசல் காக்கும் முதலிகளும். 2. திருமால் கோயிலில் வடபுறமுள்ள துறக்க (சொர்க்க) வாசல்; gate of heaven, usually an the north side of a Viṣṇu temple. 3. வழிச்செல்வோர் தங்குதற்கு அமைந்த இடம்; rest house built from religion motives. 4. ஊர் ஆள்வி என (நிருவாக) அலுவலரின் அலுவலகம்; village munsiff's office (செஅக.).

*[திரு + வாசல்]*

**திருவாசி** *tiru-vāši,* பெ. (n. ) திருவாசிகை பார்க்க; see *tiru-vāšigai.*

**திருவாசிகை** *tiru-vāšigai,* பெ. (n.) 1. தெய்வத் திருமேனிக்கு மேல் அமைக்கும் அணிகல வளையம் முதலியன; ornamental arch over the head of an idol, ornamental orch under which anything sacred is carried. "பகர்திருவாசிகை பதிப்பில் பீடம்" (கோயிற்பு. திருவிழா, 28). 2. ஒரு வகை மாலை; a kind of garland.

*[திரு + வாசிகை]*

**திருவாசிரியம்** *tiru-vāširiyam,* பெ. (n.) நம்மாழ்வார் அருளியதொரு நூல் (திவ்.); a poem by Nammāḻvār.

*[திரு + ஆசிரியர்]*

**திருவாட்சி** *tiru-vāṭci,* பெ. (n.) திருவாசி பார்க்க; see *tiru-vāši.*

**திருவாட்டாறு** *tiru-vāṭṭāṟu,* பெ. (n.) கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம்

வட்டத்திலுள்ள ஊர்; the village in Kanniyākumari district.

*[திரு + வட்டம் + ஆறு - திருவட்டாறு → திருவாட்டாறு]*

1. இவ்வூரில் ஆறு வளைந்து வட்டமாக ஓடுவதால் ஆறு வாட்டாறு என்று பெயர் பெற்றது.

2. முப்புறங்களிலும் ஆறு சூழ இப்பகுதி அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது. புறநானூற்றில் 396ம் பாடலில் வாட்டாற் றெழினியாதன் என்பான் பாடப்பட்டுள்ளான்.

"வானேற வழிதந்த வாட்டாற்றான் பணிவகையே"

என நம்மாழ்வார் இப்பதியைப் பாடியுள்ளார் *(தமி. ஊர். பெ.).*

**திருவாட்டி** *tiru-v-āṭṭi,* பெ. (n.) 1. செல்வநங்கை; lady of wealth and position. கயிலைக்கட் பயிலுந் திருவாட்டியை *(திருக்கோ. 294, உரை).* 2. மணமானவர் என்பதை உணர்த்தும் மகளிர்க்கான அடைமொழி; (செ. அக.).

*[திரு + ஆட்டி. ஆள் + தி - ஆட்டி]*

**திருவாடானை** *tiru-vāḍāṉai,* பெ. (n.) இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Ramanāda puram district.

*[திரு + ஆடு + யானை]*

வருணனின் மகனுக்கு துருவாச முனிவர் ஆட்டுத்தலையும், யானை உடலும் ஆகுக் என சபித்தார். அவ்வுருவுடன் இத்தலத்தில் அவன் வழிபட்டுப் பேறு பெற்றதால் இப்பெயர் பெற்றது என்பர். ஞான சம்பந்தரால் பாடல் பெற்ற தலம் *(தமி. ஊர். பெ.).*

**திருவாடானைஆதிரத்தினேசுவரர்பதகம்** *tiru-vāḍāṉai-ātirattinēšuvarar-padagam,* பெ. (n.) இராம. அருணாசலம் செட்டியார் அவர்களால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the minor literature written by Aruṇāšalam Cheṭṭiyār in 20th century.

*[திருவாடானை + ஆதிரத்தினேசுவரர் + பதிகம்]*

**திருவாடுதண்டு** *tiru-v-āḍu-taṇḍu,* பெ. (n.) 1. கோயில் ஊர்திக் காவுதண்டு; poles of temple vehicles. 2. பல்லக்கு வகை; a kind of palanquin. "சேமத் திருவாச தண்டினுமேற் செல்ல" *(பூவண. உலா. 64. 89).*

*[திருவாடு + தண்டு]*

**திருவாண்டெழுத்திடு-தல்** *tiru-v-āṇḍeḻut-t-tiḍu-,* 20 செ.குவி. (v.i.) அரசன் முடிசூடிய காலந்தொடங்கி ஆண்டு (வருட)க்கணக் கிட்டெழுதுதல்; to date an event from the time of a king's accession (செ.அக.).

*[திரு + ஆண்டு + எழுத்து + இடு-.]*

**திருவாணல்** *tiru-v-āṇal,* பெ. (n.) உடம்பின் கொழுப்பு; body fat (சா.அக.).

**திருவாணை** *tiru-v-āṇai,* பெ. (n.) அரசாணை; royal order. "திருவாணைக்குந் திருவோலைக்கும் உரியவண்ணம்" *(S. I. I. iii, 102).*

*[திரு + ஆணை]*

**திருவாத்தி** *tiru-v-ātti,* பெ. (n.) ஆத்தி; holy mountain ebony. "கடிசேர் திருவாத்தியி னீழல்" *(பெரியபு. சிறுத். 46).*

*[திரு + ஆத்தி]*

**திருவாதவூர்** *tiru-vāda-vūr,* பெ. (n.) மதுரை மாவட்டத்திலுள்ளதும் மாணிக்கவாசகர் பிறந்தவிடமுமான இடம்; the birth place of Maṇikka-vāšagar in Madurai District. "திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவர்" *(திருக்கோ. 1, உரை).*

1. அக்காலத்தில் இப்பகுதியில் அடிக்கடி வாதங்கள் புரிந்ததால் இப்பெயர் பெற்றது என்பர்.

2. வாயு வழிபட்டுப் பேறு பெற்ற தலம் என்பதால் வாதவூராயிற்று என்றும் தொன்மம் கூறுகின்றது (தமி. ஊர். பெ.).

**திருவாதவூரர்புராணம்** *tiru-vādavūrar-purāṇam,* பெ. (n.) மாணிக்கவாசகர் வரலாறு பற்றிக் கடவுண்மா முனிவர் இயற்றிய தொன்ம நூல்; a poem on the life and history of Māṇikkavāšagar by Kadavuṇmā muṉivar. (செ.அக.)

*[திருவாதவூரர் + புராணம்]*

**திருவாதி** *tiruvādi,* பெ. (n.) *1.* பழம் புளி; old tamarind. *2.* ஆண்டு சென்ற புளி; tamarind preserved for over a year. *3.* ஆதனை; purging nut (சா.அக.).

**திருவாதிரை** *tiruvādirai,* பெ. (n.) *1.* ஆறாவது விண்மீன் (பிங்.); the 6th viṇmīṉ, part of orion. *2.* யாழ் விண்மீன் நாளில் அம்பலவாணரின் அருட்காட்சி; a festival in the month of Markali *3.* திருமணத்திற்கு முன்பு யாழ் விண்மீன் தோற்ற நாளன்று கன்னிப் பெண்ணை நீராட்டி ஒப்பனை செய்யுங் சடங்கு; a special ceremony observed on the day of āruttira - tarišaṉam, before a girl's marriage when she is given a bath and decorated (செ.அக.).

*[திரு + ஆதிரை]*

**திருவாதிரைக்களி** *tiru-v-ādirai-k-kaḷi,* பெ. (n.) திருவாதிரைத் திருநாளில் அரிசி வெல்லம் தேங்காய் முதலியவற்றாற் செய்யப்படும் ஒருவகை இனிய சிற்றுண்டி; a savoury dish of rice, jaggery and other ingredients specially prepared for the Tiruvādirai festival (செ.அக.).

*[திருவாதிரை + களி]*

**திருவாதிரைநாச்சியார்** *tiru-vādirai-nācciyār,* பெ. (n.) மலைமகள் (பார்வதிதேவி); Pārvadi (செ.அக.).

**திருவாதிரைமூலி** *tiru-vādirai-mūli,* பெ. (n.) சிற்றாமணக்கு; small seeded casteor oil plant (சா.அக.).

**திருவாப்பனூர்** *tiruvā-p-paṉūr,* பெ. (n.) மதுரை மாவட்டத்திலுள்ள ஊர்; the village in Madurai district.

> சோழாந்தகன் என்னும் பாண்டிய மன்னனுக்கு, இறைவன் ஆப்பினிடத்துத் தோன்றிக் காட்சி அளித்ததால் இப்பகுதி கோயில் ஆப்புடையார் கோயில் ஆயிற்று. கோயிலுள்ள ஊர் சம்பந்தரால் பாடல்பெற்ற தலமாதலால் திருவாப்பனூர் ஆயிற்று (தமி. ஊர். பெ.)

**திருவாம்பல்** *tiru-v-āmbal,* பெ. (n.) கீழ்க்காய் நெல்லி; Indian phyllanthus (சா.அக.).

**திருவாமணை** *tiruvā-maṇai,* பெ. (n.) தேங்காய் துருவுங் கருவி; coconut. scraper (செ.அக.).

*[துருவு → திருவு + மணை → திருவா மணை]*



**திருவாமாத்தூர்அழகியநாதர்பஞ்சரத்தினம்** *tiruvāmāttūr-aḻagiyanadar-pañjarattiṉam,* பெ. (n.) மனோன்மணி அம்மையாரால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the literature written by Maṉōṉmaṇi-y-ammaiyār in 19-20th century.

*[திருவாமாத்தூர் + அழகிய நாதர் + பஞ்ச ரத்தினம்]*

**திருவாமாத்தூர்த்தலபுராணம்** *tiruvāmāttūr-t-tala-purāṇam,* பெ. (n.) இச்சிற்றிலக்கியம் தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது (சிற்.அக.); the literature written by Dhaṇḍapāṇi šwamigaḷ in 19th century.

*[திருவாமாத்தூர் + தலபுராணம்]*

**திருவாய்க்கேள்வி** *tiruvāy-k-kēḷvi,* பெ. (n.) *1.* அரசாணை; royal order. "அருமொழி விழுப்பரயர் எழுத்தினாற் புகுந்த திருவாய்க் கேள்விப்படி" (S.I.I. iii, 135). *2.* அரச உசாவல்; investigation by a king. "உலகம் வாழும் பரிசு திருவாய்க்கோள்வி செய்த கதை" (திருவாரூர். 181).

*[திருவாய் + கேள்வி]*

**திருவாய்ப்பாடி** *tiru-vāy-p-pāḍi,* பெ. (n.) கண்ணன் இளமையில் வாழ்ந்து வந்த ஆயர் குலம்; the village where krishna spent his youth. "திருவாய்ப் பாடியிற் பெண்பிள்ளைகள் ... அனுப விக்கப் பெற்றவர்கள்" (திவ். திருவாய். வ்யா. அவ.).

*[திரு + ஆய்ப்பாடி]*

**திருவாய்மலர்-தல்** *tiru-vāy-malar-*, 2 செகுன்றாவி. (v.t.) மதிப்புமிக்கவர், பெரியோர் பேசுதல்; to utter, declare, speak, used in reference to great person (செ.அக.).

*[திருவாய் + மலர்-.]*

**திருவாய்மொழி** *tiru-vāy-moḻi*, பெ. (n.) நம்மாழ்வார் அருளிச் செய்த தொகை நூல்; திருநாலாயிரப் பனுவற் பகுதி; a poem of 1000 stanza by Nammalvar (செ.அக.).

*[திரு + வாய்மொழி]*

**திருவாய்மொழிநூற்றந்தாதி** *tiru-vāy-moḻi-nūṟṟandādi*, பெ. (n.) திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகக் கருத்தையும் ஒவ்வொரு வெண்பாவிற்குச் சுருக்க அந்தாதியாக மணவாள முனிகள் இயற்றிய சிற்றிலக்கிய நூல்; a compendium of Tiru-vāymoḻi which gives the purport of each decade in a single veṇba by Maṇavāḷa-muṉigaḷ (செ.அக.).

*[திருவாய்மொழி + நூற்றந்தாதி]*

**திருவார்த்தைவாட்டம்** *tiru-vārttai-vāṭṭam*, பெ. (n.) நெருஞ்சில்; caltropes (சா.அக.).

**திருவாரூர்** *tiru-vārūr*, பெ. (n.) மாவட்டத் தலைமையகம்; district head quarters of the Thiruvarur district.

*[திரு + ஆர் + ஊர்]*

ஐம்பூதத் தலங்களுள் மண்ணுக்குரிய திருக்கோயில்

1. ஆர் என்பது ஆத்திமரத்தைக் குறிக்கும். இப்பகுதியில் இம்மரங்கள் நிறைத்திருந்ததால் ஆரூர் ஆகி, பாடல் பெற்ற தலமாதலால் திருவாரூர் ஆயிற்று.

2. ஆர் என்பது தங்குதல் என்ற பொருள் பட (திரு) செல்வம் தங்கும் ஊர் என்பதால் திருவாரூர் ஆயிற்று.

3. திருமகள் இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றதால் திருவாரூர் ஆயிற்று.

கல்வெட்டில் இவ்வூர்ப்பெயர் திருவாரூர் என்றே குறிக்கப்படுகின்றது.

திருவாரூர்த் தேர் புகழ்பெற்று விளங்குவது. "திருவாரூர்த் தேரழகு திருவிடைமருதூர் தெருவழகு" என்னும் பழமொழி இவ்வூர்த் தேரழகைக் காட்டும். நால்வராலும் பாடப் பெற்ற திருத்தலம்.

**திருவாரூர்த்தியாகேசர்பதிகம்** *tiru-vārūr-t-tiyākēšar-padigam*, பெ. (n.) இராம. அருணாசலம் அவர்களால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); the literature written by Arunachalam in 20th century.

**திருவாரூர்த்தியாகராசதேசிகர்** *tiru-v-ārūr-t-tiyagarāša-dēšigar*, பெ. (n.) அன்பர் போற்றிக்கவி வெண்பா என்னும் நூலைச் செய்தவர்; author of Aṉbar-pōṟṟi-k-kavi-venba.

**திருவாரூர்த்தியாகராசர்லீலை** *tiru-vārūr-tiyāgarāšar-līlai*, பெ. (n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a book wirtten by Mīṉāṭci-šundaram-pillai in 19th century.

**திருவாரூர்நான்மணிமாலை** *tiru-v-ārūr-nāṉmaṇimālai*, பெ. (n.) திருவாரூர்ச் சிவபெருமான் மீது குமரகுருபரர் இயற்றிய சிற்றிலக்கிய நூல்; a poem in praise of Siva at Tiruvārūr, by Kumara-kuruparar (செ.அக.).

**திருவாரூர்ப்பள்ளு** *tiru-v-ārūr-p-paḷḷu*, பெ. (n.) சிவபெருமான்மேல் ஞானப்பிரகாசர் பாடிய சிற்றிலக்கியம் (செ.அக.); a pallu-p-pirapantam on Siva at Tiruvārur by Ñāṉa-p-pirakāšar.

*[திருவாரூர் + பள்ளு]*

**திருவாரூர்ப்பன்மணிமாலை** *tiru-v-ārūr-p-paṇmaṇi-mālai*, பெ. (n.) திருவாரூர்ச் சிவபெருமான் மீது வைத்தியநாதர் இயற்றிய சிற்றிலக்கியம்; a poem praise of Šiva at Tiruvārūr by Vaittiyanāda dēšigar.

**திருவாரூர்ப்பிறந்தார்** *tiru-v-ārūr-p-piṟandār*, பெ. (n.) தொகையடியாருள் ஒரு சாராராகிய திருவாரூரிற் பிறந்தவர்கள்(தேவா. 733, 10); those who are born at Tiruvārūr one class of tokai-y-aḍiyār.

**திருவாரூர்மும்மணிக்கோவை** *tiru-v-ārūr-mummaṇi-k-kōvai*, பெ. (n.) பதினோராந்

திருமுறையுளடங்கியதும் சேரமான் பெருமாள் நாயனாரருளிச் செய்ததுமான வழி பாட்டு நூல்; a poem in padinōran - tirumurai by Cēramān perumāḷ-nāyanār (செ.அக.).

**திருவாலங்காடு** *tiruvālaṅgāḍu,* பெ. (n.) காரைக்காலம்மையார் முத்தி பெற்றதும் மணியம்பலம் விளங்குவதுமான ஊர்; the village in Chengalpattu district.

*[திரு + ஆலங்காடு]*

அக்காலத்தில் இங்கு ஆலமரங்கள் நிறைந்திருந்திமையால் ஆலங்காடு என்றும் பெயர் பெற்றது. சுந்தரரும் நாவுக்கரசரும் பாடிய தலமாகையால் திரு அடைபெற்று திருவாலங்காடாயிற்று. காரைக்காலம்மை யார் தலையால் நடந்து சென்று திருக்கூத்து கண்டு இன்புற்ற இடமும் இதுவே.

"அட்டமே பாயநின் றாடும் எங்கள்
அப்பன் இடந்தரு ஆலங்காடே"

என்று காரைக்காலம்மையார் பாடியுள்ளார்.

"வடகரை மணவிற் கோட்டத்து மேல் மாலை பழையனூர் நாட்டுத் திருவாலங்காடு" என்பது கல்வெட்டுப் பெயர். (தமி. ஊர். பெ.).

**திருவாலத்தட்டி** *tiru-v-āla-t-taṭṭi,* பெ. (n.) கோயில் விளக்குத் தட்டு வகை (புதுகல். 300); a kind of plate used for waving lights in temple service.

*[திரு + ஆலம் + தட்டி]*

**திருவாலமூலி** *tiru-v-āla-mūli,* பெ. (n.) செவ்வாமணக்கு; a red variety of castor oil plant (சா.அக.).

**திருவாலவாய்** *tiru-v-āla-vāy,* பெ. (n.) (பாம்பினாற் சூழப்பெற்ற) மதுரை; Madura, as encircled by a serpent. "திருவாலவாயர னிற்கவே" (தேவா. 858, 1).

*[திரு + ஆலவாய்]*

**திருவாலவாய்ச்சொக்கலிங்கப்பதிகம்** *tiru-v-ālavāy-c-cokkaliṅga-p-paḍigam,* பெ. (n.) காரைக்கால் அம்மையாரால் 5ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Kārai-k-kāl-ammaiyār.

*[திருவாலவாய் + சொக்கலிங்கம் + பதிகம்]*

**திருவாலவாயுடையார்திருவிளையாடற் புராணம்** *tiru-v-ālavāyauḍaiyār-tiru-viḷai-y-āḍaṟ-purāṇam,* பெ. (n.) பெரும்பற்றுப் புலியூர் நம்பியால் இயற்றப்பட்டதும் மதுரைச் சிவபெருமானின் 64 விளையாடல்களைக் கூறுவதுமான தொன்ம நூல்; a purāṇa on the 64 sports of Śiva at Madurai by Perumparrup-puliyūr-nambi (செ.அக.)

**திருவாலி** *tiru-v-āli,* பெ. (n.) புரட்டன் (வின்.); rogue, knave (செ.அக.).

**திருவாலிப்பூடு** *tiru-vāli-p-pūḍu,* பெ. (n.) 1. கணைப்பூடு; an unknown plant. 2. திருவால மூலி பார்க்க; see *tiru-v-āla-mūli* (சா.அக.).

**திருவாலியமுதனார்** *tiru-v-ali-y-amudaṉār,* பெ. (n.) திருவிசைப்பாவில் அடங்கிய சிற்றிலக்கியமொன்றின் ஆசிரியர் (திருவிசைப் பா.); the author of a portion of Tiru-v-išai-p-pā.

**திருவாவடுதுறைஇராமலிங்கத்தம்பிரான்** *tiru-v-avaḍuturai-irāmaliṅga-t-tambirāṉ,* பெ. (n.) வாட்போக்குப் புராணத்தில் ஒரு பகுதியைச் செய்யுளாகப் பாடியவர்; composer of a portion of vāṭ-pōkku-p-purāṇam.

*[திருவாவடுதுறை + இராமலிங்கத் தம்பிரான்]*

**திருவாவடுதுறைச்சுப்பிரமணியத்தம்பிரான்** *tiru-v-āvaḍuturai-c-cubbiramaṇiya-t-tambirāṉ,* பெ. (n.) தொண்டை நாட்டு ஆயலூர் முருகன் மீது பிள்ளைத்தமிழ் பாடியவர்; composer of the Piḷḷai-t-tamiḻ literature on Tonḍai-nāṭṭu-āyalūr-murugaṉ.

**திருவாவடுதுறைநமச்சிவாயத்தம்பிரான்** *tiru-v-āvaḍuturai-namaccivāya-t-tambirāṉ,* பெ. (n.) திருக்களிற்றுப் பாடியாருக்கும், இருபாவிருபஃதிற்கும் வினா வெண்பாவிற்கும், கொடிக்கவிக்கும் உரை செய்தவர். (பிற்கா.புல.); commentator of tirukaḷirru-p-pāḍiyār, irubāvirubakdu and viṉā-veṇbā.

**திருவாவினன்குடி** *tiru-v-āviṉaṉ-kuḍi,* பெ. (n.) மதுரை மாவட்டத்தைச் சார்ந்ததும் முருகக் கடவுள் படைவீடுகளுள் ஒன்று எனப்படுவது மாகிய பழனியென்னும் தலம் (திருமுரு.);

Palaṉi a skanda shrine in Madurai district, one of six paḍai vīḍu (செ.அக.).

*[திரு + ஆவி + நன்குடி]*

**திருவாழி** *tiru-v-āḻi*, பெ. (n.) 1. **திருமாலின் படைக்கலம்;** discus of Viṣṇu. "திருவாழிசங்கு திருவாழி வாழி" (அஷ்டத். திருவிரங்கத்து.1). 2. **கணையாழி;** signet-ring. "திருமுகத்தையும் திருவாழியையும் தந்தருளென்று கூற" (சீவக. 1032, 2உரை.).

*[திரு + ஆழி]*

**திருவாழிக்கல்** *tiru-v-āḻi-k-kal*, பெ. (n.) **சக்கர முத்திரையிட்ப்பட்ட கல்;** boundary stone with the seal of discus. "கொற்றமங்கலத்து எல்லை ஆசறுதியினிட்ட திருவாழிக்கல்லுக்குக் கிழக்கும்" (S.I.I,i, 89).

*[திருவாழி + கல்]*

**திருவாழித்தண்டு** *tiru-v-āḻi-t-taṇḍu*, பெ. (n.) **கோயில் ஊர்திகளின் காவுதண்டு** (யாழ்.அக.); poles attached to the temple vehicles for carrying them.

*[திருவாழி + தண்டு]*

**திருவாளர்** *tiru-v-āḷar*, பெ. (n.) **ஒருவர் பெயர்க்கு முன்னால் வழங்கப் பெறும் மதிப்புரவுச் சொல்;** title prefixed to a man's name (செ.அக.).

*[திரு + ஆளர்]*

**திருவாளன்** *tiru-v-āḷaṉ*, பெ. (n.) திருவன் பார்க்க; see *tiruvaṉ*. 2. **திருமால்;** Tirumāl (Viṣṇu). "ஒலிதிரைநீர்ப் பௌவங் கொண்ட திருவாளன்" (திவ். பெரியதி. 5,5).

**திருவாறாட்டு** *tiru-v-āṟāṭṭu*, பெ. (n.) **ஆறாட்டு;** bathing of in idol. "வியனமடந் திருவாறாட்டு" (குற்றா. தல. வட வருவி. 37).

*[திரு + ஆறு + ஆட்டு. ஆடு → ஆட்டு]*

**திருவாறாடல்** *tiru-v-āṟāḍal*, பெ. (n.) திருவாறாட்டுப் பார்க்க; see *tiru-v-āṟāṭṭu*. "திறுவாறாட லாதியந் தீர்த்தவேலை" (திருக்காதை பு. 7, 34) (செ.அக.).

*[திருவாறு + ஆடல். ஆடு → ஆடல்]*

**திருவான்மியூர்** *tiruvāṉmiyūr*, பெ. (n.) **காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள ஊர்;** a village in Kāñjee puram district.

*[திரு + வால்மீகி + ஊர்]*

வான்மீகி முனிவர் தென்றிசை வந்து வன்னிமரத்தடியில் சிவபூசை செய்து தவமியற்றியதால் இப்பகுதியிலுள்ள இவ்வூர் வான்மீகியூர் ஆயிற்று என்பர். ஞான சம்பந்தரும், நாவுக்கரசரும் பாடிய தலம். (தமி. ஊர். பெ.)

**திருவானிலை** *tiru-v-āṉilai*, பெ. (n.) **கருவூர் சிவன்கோயில்;** Šivaṉ shrine at Karūr. "இந்நாட்டுக் கருவூர்த் திருவானிலை மகாதேவர்க்கு" (S.I.I. iii, 35).

**திருவானைக்கா** *tiru-v-āṉaikkā*, பெ. (n.) **திருச்சிக்கு அண்மையிலுள்ள புகழ்பெற்ற சிவன்கோயில்;** a famous Šivaṉ shrine near Trichy. ஐம்பூதத்தலங்களுள் நீருக்குரிய ஊர் (செ.அக.).

**திருவானைக்காப்பதிகம்** *tiruvāṉai-k-kāp padigam*, பெ. (n.) **தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்** (சிற்.அக.); a literature written by Dhaṇḍapāṇi-Aḍigal in 19th century.

*[திருவானைக்கா + பதிகம்]*

**திருவானைக்காயமகஅந்தாதி** *tiru-v-āṉaikka yamaga-andādi*, பெ. (n.) **தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற். எழுதப்பட்டது;** a literature written by Dhaṇḍapāṇi-Aḍigal in 19th century.

**திருவானைக்காவல்** *tiru-v-āṉai-k-kāval*, பெ. (n.) திருவானைக்கா பார்க்க; see *tiru-v-āṉai-k-kā* (செ.அக.).

**திருவானைக்காவுலா** *tiru-v-āṉai-k-kā-v-ulā*, பெ. (n.) **காளமேகப் புலவர் இயற்றிய உலா;** a poem written by Kaḷamēgam (செ.அக.).

*[திருவானைக்கா + உலா]*

**திருவி** *tiru-vi*, பெ. (n.) **செல்வம் உடையவள்;** wealthy lady. "பெருந்திருவி யார் மகள்கொல்" (சீவக. 1968).

*[திரு + இ]*



**திருவிசை** *tiru-v-išai,* பெ. (n.) திருவிசைப்பா பார்க்க; see *tiru-v-išai-p-pā.* "சங்கத் தமிழமுதம் மண்டுந் திருவிசையு மந்திரமும்" (சொக்க. உலா, 36).

*[திரு + இசை]*

**திருவிசைப்பா** *tiru-v-išai-p-pā,* பெ. (n.) சிவனடியார் ஒன்பத்தின்மரால் அருளிச் செய்யப்பட்டனவும் ஒன்தாம் திருமுறையிற் சேர்ந்ததுமான சிவனிய வழிபாட்டு நூல்; a collection of poems by nine saiva saints.

*[திரு + இசைப்பா]*

**திருவிட்டிக்கண்ணி** *tiru-v-iṭṭi-k-kaṇṇi,* பெ. (n.) வளி (வாயு) விளங்கம்; small elliptic-cuspidate-leaved wind-berry (L.).

**திருவிடு** *tiru-v-iḍu,* பெ. (n.) அறக்கொடை ஆவணம்; deed of endowment. "திருவிடு இட்டுக்கொடுத் தமைக்கு" (S.I.I. VII, 46.).

*[திரு + இடு]*

**திருவிடைக்கழிமுருகர்பதிகம்** *tiru-v-iḍai-k-kaḻi-murugar-padigam,* பெ. (n.) சேந்தனார் என்பவரால் 10-11ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Sēndaṉār of 10-llth century.

**திருவிடைப்பற்று** *tiru-viḍai-p-paṟṟu,* பெ. (n.) கோயில் நிலம்; temple land. "திருவிடைப்பற்று குவளை கழலச் சேரியான திருவெண்ணாவல் நல்லூர்" (திவ்.பெரியதி. 1,1,2, வ்யா, ப. 24).

*[திரு + இடை + பற்று]*

**திருவிடைமருதூர்நொண்டிநாடகம்** *tiru-v-iḍai-marutūr-noṇḍi-nāḍagam,* பெ. (n.) அனந்த பாரதி என்னும் புலவரால் 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்; a literature composed by Ananda Barathi of 19th century.

*[திருவிடை மருதூர் + நொண்டி + நாடகம்]*

**திருவிடைமருதூர்பள்ளு** *tiru-viḍai-marudūr paḷḷu,* பெ. (n.) வெளிமங்கை பாகக் கவிராயரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம்; a literature composed by Veṟimaṅgai-bāga-k-kavirāyar of 19th century.

*[திருவிடைமருதூர் + பள்ளு]*

**திருவிடையாட்டம்** *tiru-v-iḍaiāṭṭam,* பெ. (n.) 1. கோயில் இறையிலி (தேவதான மானியம்); temple endowment. "திருவிடை யாட்டமாக இறையிழிச்சிக் கொடுத்தோம்" (S.I.I. i, 69). 2. திருவிளை (Inre.); temple business.

**திருவிண்ணகர்** *tiru-viṇṇagar,* பெ. (n.) தஞ்சை மாவட்டம், கும்பகோணம் வட்டத்திலுள்ள ஊர்; a village in Tanjavur district.

*[திரு + விண் + நகர்]*

விண்டு (விஷ்ணு) நகர் விண்ணகர் ஆயிற்று. மாளிகையைக் குறிக்கும் நகர் என்னுஞ் சொல் ஈங்குக் கோயிலைக் குறித்தது. விண்ணகர் - திருமாள் கோயில். நம்மாழ்வார் இப்பதியை 'மின்னிப்பொன் மதில் சூழ்திரு விண்ணகர் சேர்ந்த அப்பன்" என்று பாடுகின்றார்.

**திருவிருக்குக்குறள்** *tiru-virukku-k-kuṟaḷ,* பெ. (n.) ஓரடி இருசீராக நாலடியான் வருஞ் செய்யுள் வகை (தேவா. 1238); a kind of metre.

*[திரு + இருக்கு + குறள்]*

**திருவிருந்து** *tiru-virundu,* பெ. (n.) நல்விருந்து; sacred feast commemorating the lords supper. 2. நல்லருள்; holy communion (செ.அக.).

*[திரு + விருந்து]*

**திருவிருப்பு** *tiru-viruppu,* பெ. (n.) கோயில் அமைந்த இடம்; temple premises temple site. "இந்நாயனார் திருவிப்புக்கு வடபாற்செல்லை" (S.I.I. i, 119).

*[திரு + இருப்பு]*

**திருவிரையாக்கலி** *tiru-viraiyā-k-kali*, பெ. (n.) சிவனின் ஆணையைக் குறிக்குஞ் சொல்; the sacred oath on God Sivaṉ. "சிந்தையாற்றா நினைவார் திருவிரையாக்கலி யென்று" *(பெரியபு. கோட்டி, 4) (S.I.I. vii, 398).*

*[திரு + விரை + ஆ + கலி]*

**திருவில்** *tiru-vil*, பெ. (n.) (அழகிய வில்) வானவில்; rainbow, beautiful. "திருவிலட்டுத் திகழ்தரு மேனியன்" *(சிலப். 15, 156).*

*[திரு + வில்]*

**திருவில்லிபுத்தூர்** *tiru-villiputtūr*, பெ. (n.) காமராசர் வட்டம் திருவில்லிபுத்தூர் வட்டத்திலுள்ள ஊர்: தமிழக அரசின் அரசுச் சின்னமாக இவ்வூர்க்கோபுரம் விளங்குகின்றது; ஆண்டாள் பிறந்த ஊர்;

தமிழ்நாட்டிலுள்ள உயரமான கோபுரங்களுள் மூன்றாவது இடத்தைப் பெற்றுள்ளது. ஆயிரம் ஆண்டுகளுக்க முன் கட்டப்பட்ட இக்கோயிலிலுள்ள பூந்தோட்டத்தில் ஆண்டாளைத் துழாய்ச் செடியின் நிழலில் பெரியாழ்வார் குழந்தையாகக் கண்டெடுத்ததாக வரலாறு

*[திரு + வில்லி + புத்தூர்]*

1. வில்லி என்னும் வேடரால் இந்த ஊர் உருவாக்கப்பட்டதால் இப்பெயர் பெற்றதென்பர்

2. செண்பகக் காடாக இருந்த இப்பகுதியை மல்லி என்னும் வேடப் பெண்ணரசி ஆண்டு வந்தாள், அதனால் மல்லி நாடு என்ற பெயர் இதற்கு உண்டு என்று கூறுவர்.

3. வில்லியர் என்னும் மரபினர் இப்பகுதியில் மிகுதியாக வாழ்ந்ததால் இப்பெயர் பெற்றது என்பது அறிஞர் கருத்து

கல்வெட்டில் இவ்வூர்ப்பெயர் மல்லிப்புத்தூர் என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

**திருவிலான்** *tiru-vilāṉ*, பெ. (n.) நல்லூழ் இல்லாதவன் (பாக்கிய மற்றவன்); god forsaken person. "உருவிலான் பெருமையை யுளங் கொளாத வத்திருவிலார்" *(தேவா. 345, 2).*

*[திரு + இல் + ஆன்]*

**திருவிலி** *tiru-vili*, பெ. (n.) 1. ஏழை; unfortunate or poor person. "இருபதுகரம் தலையீரைந் தென்னுமத் திருவிலிக்கு" *(கம்பரா. உபிடணை. 39).* 2. கைம்பெண் *(அகநி.)*; widow, as having lost her sacred thread.

*[திரு + இலி]*

**திருவிலை** *tiru-vilai*, பெ. (n.) கீரிப்பூடு; Indian snake wort *(சா.அக.).*

**திருவிழா** *tiru-viḻā*, பெ. (n.) கோயிலில் நிகழ்த்தும் விழா; festival in a temple. "திருவிழாச் சுருக்கம்" *(கோயிற்பு.).*

*[திரு + விழா]*

**திருவிழாப்புறம்** *tiru-viḻā-p-puṟam*, பெ. (n.) திருவிழாவிற்கென விடப்பட்ட இறையிலி நிலம்; endowments for temple festivals. "திருவிழாப் புறமாக அட்டிக் கொடுத்தன" *(T.A.S. i, 7).*

*[திருவிழா + புறம்]*

**திருவிளக்கம்மை** *tiru-viḷakkammai*, பெ. (n.) திருவிளக்குநாச்சியார் பார்க்க; see *tiru-viḷakku-nācciyār.*

**திருவிளக்கு** *tiru-viḷakku*, பெ. (n.) 1. கோயிற்றிரு விளக்கு; light burnt in the presence of a deity. திருவிளக்கு இல்லா வீடுபோல *(பழ.).* "தீத் திருவிளக்கிட்டு" *(சிசி.8, 19).* 2. மங்கள விளக்கு; lighted lamp in a house, regarded as auspicious. "உதவுவாய்த் தன்முனைத் திருவிளக்கு வைத்தார்" *(பிரபுலிங். சூனிய சிங்காதனத. 14).*

*[திரு + விளக்கு]*

**திருவிளக்குடையார்** *tiru-viḷakkuḍaiyār*, பெ. (n.) கோயிலில் விளக்கேற்றுவோர்; lamp lighters in a temple. "திருவிளக்குடை யார்கள் குழாய் பன்னிரண்டுக் கெண்ணெய் முந்நாழியும்" *(S.I.I.iii, 188).*

*[திருவிளக்கு + உடையார்]*

**திருவிளக்குநகரத்தார்** *tiru-viḷakku-nagarattār*, பெ. (n.) எண்ணெய் பிண்டரத்து பட்டப் பெயர் வகை (E.T. vii, 36); a litle of the Vaniyar caste.

*[திருவிளக்கு + நகரத்தார்]*

**திருவிளக்குநாச்சியார்** *tiru-viḷakku-nācciyār*, பெ. (n.) 1. விளக்குத் தேவதை; lamp in a house, regarded as a deity. 2. கையில் விளக்கை

யேந்திய சிலை; metallic image holding a lamp in its hand.

*[திருவிளக்கு + நாச்சியார்]*



**திருவிளம்** *tiru-viḷam,* பெ. (n.) *1.* திராய்; Indian cickweed. *2.* சிவதை; true jalap (செ.அக.).

**திருவிளையாட்டு** *tiru-viḷai-y-āṭṭu,* பெ. (n.) திருவிளையாடல் பார்க்க; see *tiru-viḷaiyāḍal.*

**திருவிளையாடல்** *tiru-viḷai-y-āḍal,* பெ. (n.) *1.* தெய்வ விளையாட்டு; sacred sports of a deity. *2.* திருவிளையாடற்புராணம் பார்க்க; see *tiru-viḷaiyāḍar-purāṇam.* *3.* சிற்றின்ப விளையாட்டு; amorous acts.

*[திரு + விளையாடல்]*

**திருவிளையாடல்சரணமஞ்சரி** *tiru-vilaiyāḍal šaraṇa-mañjari,* பெ. (n.) பள்ளத்தூர் முருகப்பர் அவர்களால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம்; a minor literature written by Paḷḷattūr-murugappar of 20th century (சிற்.அக.).

**திருவிளையாடற்புராணம்** *tiru-viḷai-y-āḍar purāṇam,* பெ. (n.) சிவபெருமானின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் பாடிய தொன்மம்; a purana on the 64 sports of Siva at Madura by Parañjōdi muṉivar.

*[திருவிளையாடல் + புராணம்]*

**திருவினாள்** *tiruviṉāḷ,* பெ. (n.) திருமகள் (இலக்குமி); Lakṣhmi. "போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்" *(சிலப். 1,26).*

**திருவிடையூர்த்தலபுராணம்** *tiru-vidaiyur-t-tala-purāṇam,* பெ. (n.) அசலாம்பிகை அம்மையார் எழுதிய இச்சிற்றிலக்கியம் 20ஆம் நூற்றண்டைச் சேர்ந்தது (சிற்.அக.); a minor literature written by Asalāmbigai-ammaiyār of 20th century.

*[திருவிடையூர் + தலபுராணம்]*

**திருவிற்சுப்பிரமணியர்பதிகம்** *tiru-viṟ šubbiramaṇiyar-padigam,* பெ. (n.) உடுப்பிட்டி குமாரசாமி முதலியார் அவர்களால் 18-19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Uḍu-p-piṭṭi-kumārasami of 19-20th century.

**திருவினை** *tiru-viṉai,* பெ. (n.) நல்வினை; good karma. "திருவினை யாண்பாலாக" *(உபதேசகா. பஞ்சாக். 58).* (செ.அக.).

**திருவினைக்கால்** *tiru-viṉai-k-kāl,* பெ. (n.) கத்திரிக்கோல்; scissors (சா.அக.).

**திருவீங்கோய்நாதர்பதிகம்** *tiru-viṅgōy-nadar-padigam,* பெ. (n.) சொக்கலிங்கம் செட்டியார் அவர்களால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Sokkaliṅga-chettiyār of 20th century.

**திருவீதிநாயகர்** *tiru-vīdi-nāyagar,* பெ. (n.) திருவிழாவின்போது வீதி வழியே உலாவரும் திருமேனி; deity of a temple intended for carrying out in procession during festivals. "ராஜாக்கள் தம்பிரான் திருவீதிநாயகர் திருப்பவனி எழுந்தருளும்போது" *(S.I.I. viii, 21).*

*[திரு + வீதி + நாயகர்]*

**திருவீதிப்பந்தம்** *tiru-vīdi-p-pandam,* பெ. (n.) தெய்வ ஊர்வலத்தில் பயன்படுத்தும் தீவட்டி வகை; a kind of torch for procession in temple festivals (S.I.I. viii, 21).

*[திரு + வீதி + பந்தம்]*

**திருவீதியலங்கரி-த்தல்** *tiru-vīti-y-alaṅgari-,* 4 செ.குன்றாவி. (v.i.) கோயிற்றிருவுரு புறப்பாடாக வருதல்; to go out in procession, as a deity

gracing the streets by his presence. பெருமான் திருவீதி யலங்கரிக்கிறார்.

*[திருவீதி + அலங்கரி]*

**திருவுக்கரியதேவி** *tiruvu-k-kariya-tēvi*, பெ. (n.) தாளகம்; orpiment (சா.அக.).

**திருவுசாத்தானதோத்திரம்** *tiruvu-šāttāna-tōttiram*, பெ. (n.) அழகிய சிற்றம்பல தேசிகரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட, சிற்றிலக்கியம் (சிற்.அக.); a minor literature written by Alagiya-sirrambala-tēšigar of 19th century.

*[திருவுசாத்தான + தோத்திரம்]*

**திருவுடம்பு** *tiru-v-udambu*, பெ. (n.) 1. நல்லுடல்; kindly beautifuly body. "திருவுடம்பலச நோற்கின்றான்" (கம்பரா. சூர்ப்ப. 18). 2. திருமேனி; idol. "திருப்பள்ளியறை நாச்சியார் முதலாகவுள்ள திருவுடம்புகளும்" (T.A.S. i, 91).

*[திரு + உடம்பு]*

**திருவுண்ணாழி** *tiru-v-unnāli*, பெ. (n.) திருவுண்ணாழிகை (Inse.) பார்க்க; see *tiru-v-unnāligai.*

**திருவுண்ணாழிகை** *tiru-v-unnāligai*, பெ. (n.) திருக்கோயில் கருவறை; inner most sanctuary of a temple. "திருவுண்ணாழிகை யுடையார் வசமே நாள்தோறும் அளக்கக்கடவேம்" (S.I.I. i, 143).

*[திரு + உண்ணாழிகை]*

**திருவுத்திரகோசமங்கைப்பதிகம்** *tiru-v-uttirakōša-mangai-p-padigam*, பெ. (n.) பூ. ஆறுமுகம்பிள்ளை அவர்களால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Ārumugam-pillai of 19th century.

*[திரு + உத்திரகோசமங்கை + பதிகம்]*

**திருவுதரமாலை** *tiru-v-udara-mālai*, பெ. (n.) கோயில் திருமேனியின் இடையில் அணியும் அணிகலன் வகை (S.I.I.vii, 209); ornament for the waist of a deity.

*[திரு + உதரம் + மாலை]*

**திருவுந்தியார்** *tiru-v-undiyār*, பெ. (n.) மெய்கண்ட சாத்திரம் பதினான்கினுள் ஒன்றும் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் இயற்றியதுமாகிய சைவசித்தாந்த நூல்; a text book of the saiva siddhanda philosophy Tiruviyalor Uyyavandaleva nāyanār (செ.அக.).

*[திரு + உந்தியார்]*

**திருவுலகள-த்தல்** *tiru-v-ula-kala-*, 3 செ.குன்றாவி. (v.t.) நிலத்தையளந்து கணக்கிடுதல்; to survey or measure land. "திருவுலகளந்தபடி நலம் எழுமா" (S.I.I. vii, 309).

*[திரு + உலக + அள-.]*

**திருவுலாச்செய்-தல்** *tiru-v-ulā-c-cey-*, 1 செ.கு.வி. (v.i.) வலம் வருதல் (இ.வ.); to go out in procession, as a deity in a temple.

*[திரு + உலா + செய்-.]*

**திருவுலாப்புறஞ்செய்-தல்** *tiru-v-ulā-p-puran-cey-*, 1 செ.கு.வி. (v.i.) திருவுலாச்செய்-தல் பார்க்க; see *tiru-v-ulā-c-cey.*

*[திரு + உலா + புறம் + செய்-.]*

**திருவுலாப்புறம்** *tiru-v-ulā-p-puram*, பெ. (n.) திருக்கயிலாய ஞானவுலா; tiru-k-kailāya-ñāna-v-ulā, a poem by Cēramān-perumāl. "சேராகாவலர் பரிவுடன் கேட்டித்த திருவுலாப் புறம்" (பெரியபு. வெள். 48).

*[திரு + உலா + புறம்]*

**திருவுரு** *tiru-v-uru*, பெ. (n.) நல்லுடல் (திவ்ய சரீரம்); divine form; divine presence. "அருளாயுன் றிருவுருவே" (திவ். திருவாய். 5,10,7). 2. திருமேனி; idol Image. "காரணங் கற்பனை கடந்த கருணை திருவுருவாகி" (கோயிற்பு. பாயி. 2).

*[திரு + உரு]*

**திருவுழுத்து** *tiru-v-uluttu*, பெ. (n.) அணிவகை; an ornament. "இரட்டை திருவுழுத்து ஓரணையினால்" (S.I. I. ii, 16).

*[திரு + உருட்டு - திருவுருட்டு - திருவுழுத்து]*

**திருவுள்ளக்கலக்கம்** *tiru-v-uḷḷa-k-kalakkam,* பெ. (n.) பெரியோர் மனவேறுபாடு; displeasure of great persons (செ.அக.).

*[திரு + உள்ளம் + கலக்கம்]*

**திருவுள்ளக்கேடு** *tiru-v-uḷḷa-k-kēḍu,* பெ. (n.) திருவுள்ளக்கலக்கம் பார்க்க; see *tiru-v-uḷḷa-k-kalakkam.*

*[திரு + உள்ளம் + கேடு]*

**திருவுள்ளம்** *tiru-v-uḷḷam,* பெ. (n.) அரசன், குரு முதலிய பெரியோரது உள்ளக் கருத்து; will or pleasure of God , king, guru or other-great person (செ.அக.).

*[திரு + உள்ளம்]*

**திருவுளக்குறிப்பு** *tiru-v-uḷa-k-kurippu,* பெ. (n.) திருவுள்ளம் (சி.லோ. பா. 2, பக். 318) பார்க்க; see *tiru-v-uḷḷam.*

*[திரு + உள்ளக்குறிப்பு]*

**திருவுளச்சீட்டு** *tiru-v-uḷa-c-cīṭṭu,* பெ. (n.) குலுக்கிப் போட்டெடுத்தல் முதலிய வகையால் தெய்வச் சித்தமறியுஞ் சீட்டு; lot cast or drawn, believed to the disclose the divine will (செ.அக.).

*[திருவுளம் + சீட்டு]*

**திருவுளச்செயல்** *tiru-v-uḷa-c-ceyal,* பெ. (n.) தெய்வச் செயல் (வின்.); God's will, providence, providential occurrence (செ.அக.).

*[திருவுளம் + செயல்]*

**திருவுளத்தடை-த்தல்** *tiru-v-uḷa-t-taḍai-,* 5 செ.குன்றாவி. (v.t.) மனத்திங்கொண்டரு ளுதல் (சிலப். 13, 88, அரும்); to keep in mind; to intend said of a deity or a great person (செ.அக.).

*[திருவுளம் + தடை]*

**திருவுளப்பாங்கு** *tiru-v-uḷa-p-pāṅgu,* பெ. (n.) திருவுள்ளம் பார்க்க; see *tiru-v-uḷḷam.* "எவ்வகை நின் றிருவுளப் பாங்கிருப்ப தெளியேனளவில்" (அருட்பா. vi. குருதரிசனம். 4) (செ. அக.).

*[திருவுளம் + பாங்கு]*

**திருவுளம்** *tiru-v-uḷam,* பெ. (n.) திருவுள்ளம் பார்க்க; see *tiru-v-uḷḷam.* "திருவுளமெனின் மற்றென் சேனையு முடனே" (கம்பரா. கங்கை. 67).

*[திரு + உளம்]*

**திருவுளம்பற்று-தல்** *tiru-v-uḷam-paṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஏற்றுக் கொள்ளுதல்; to accept graciously. 2. திருவுளத்தடை (சிலப். 13, 97, உரை) பார்க்க; see *tiru-v-uḷḷa-t-taḍai.* 3. கேட்க மனங்கொள்ளுதல் (சீவக. 430, உரை); to be pleased to hear. 4. உட்கருத்துக் கொள்ளுதல்; to consider to tent. 5. பணிந்து சொல்லுதல் (ர); to be pleased to speak; as a deity, to speak (செ.அக.).

*[திருவுளம் + பற்று-.]*

**திருவுளம்வை-த்தல்** *tiru-v-uḷam-vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அருளுதல்; to bestow, vouchsafe, grace, as a deity or guru. 2. விருப்பங்கொள்ளுதல்; to conceive desire, said of a great person (செ.அக.).

*[திருவுளம் + வை-.]*

**திருவுளமடு-த்தல்** *tiru-v-uḷam-aḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) எண்ணுதல்; to intend, consider. "அரசர் திருவினை முகப்பதொரு திருவுளமடுத் தருளியே" (கலிங். 236, புதுப்.).

*[திருவுளம் + மடு-.]*

**திருவுளமறிய** *tiru-v-uḷam-aṟiya,* வி.எ. (adv.) கடவுளறிய; calling God to witness, before God. திருவுள மறியச் சொல்லுகிறேன். (செ. அக.)

*[திருவுளம் + அறிய]*

**திருவுறந்தைகாந்திமதியம்மைபிள்ளைத்தமிழ்** *tiru-v-uṟandai-kāndimadi-y-ammai-piḷḷai-t-tamiḻ,* பெ. (n.) மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப் பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature authored by Mēnāṭci-sundaram-piḷḷai of 19th century.

**திருவுறுப்பு** *tiru-v-uṟuppu,* பெ. (n.) மகளிர் நெற்றியிலணியும் அணி (பிங்.); a gold ornament worn by women on the fore head (செ.அக.).

*[திரு + உறுப்பு]*

**திருவுறை** *tiru-v-urai*, பெ. (n.) கோயில்; temple. "கரியோன் திருவுறை" *(கல்லா.)*

*[திரு + உறை]*

**திருவூசல்** *tiru-v-ūsal*, பெ. (n.) கோயில் திருமேனிகள் (மூர்த்திகள்) எழுந்தருளியிருந்து ஆடும் ஊசல்; swing for the temple-idols. "திருவூசற் றிருநாமம்" *(ரஷ்டப் பீரங்க நாயக. 33)*

*[திரு + ஊசல்]*

**திருவூரகவரதராசப்பெருமாள்பஞ்சரத்தினம்** *tiru-v-ūraga-varadarāsa-p-perumāḷ-pañjarattiṉam*, பெ. (n.) நாதமுனிப்பிள்ளை என்பரால் 20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற். அக.); a literature authored by Nādamuṉi-p-piḷḷai of 20th century.

*[திருவூரக + வரதராசப் பெருமாள் + பஞ்சரத்தினம்]*

**திருவூறல்** *tiru-v-ūṟal*, பெ. (n.) 1. ஊற்றுநீர் (கோயிலொ. 64); spring water. 2. வெயிற் காலத்திலே ஆற்றிடைக் குறையில் நடத்துந் திருவிழா; temple festival held in an islet of a river during summer (செ.அக.).

*[திரு + ஊறல்]*

**திருவூறல்திருநாள்** *tiru-v-ūṟal-tirunāḷ*, பெ. (n.) ஊற்றுப் பறித்து அதில் முதலில் ஒரு கட்டையைப் போட்டு, அருகில் யானையை நிறுத்தி நடத்தும் திருவிழா (சம.செ.அக.);

*[திருவூறல் + திருநாள்]*

**திருவெஃகா** *tiru-vekkā*, பெ. (n.) காஞ்சிபுரத்தில் உள்ள பழைய திருமால் கோயில்; an ancient Tirumāl shrine in Kāñjipuram (S.I.I. iii.41).

**திருவெஞ்சமாக்கூடல்** *tiru-v-eñjamā-k-kūḍal*, பெ. (n.) கரூர் மாவட்டத்திலுள்ள ஊர் (தமி.ஊர்.பெ.); a village in Karūr district.

*[திரு + வெஞ்சமர் + கூடல்]*

1. குடவனாறும், நங்காஞ்சியாறும் இப்பகுதியில் கூடுவதால் கூடல் எனப்பட்டது. வெஞ்சமன் என்னும் வேட்டுவ அரசன் இப்பகுதியை ஆண்டமையால் வெஞ்சமன் கூடல் ஆகி நாளடைவில் வெஞ்சமாக் கூடல் ஆயிற்று.

2. சேரமான் வஞ்சன் என்னும் அரசன் இப்பகுதியை ஆண்டதால் வெஞ்சமாக் கூடல் என்று பெயர் பெற்றது என்பர். (திரு + வஞ்சன் + கூடல்) சுந்தரரால் பாடல்பெற்ற தலம்.

**திருவெண்காட்டுநங்கை** *tiru-veṇ-kāṭṭu-naṅgai*, பெ. (n.) சிறுத்தொண்ட நாயனாரின் தேவியார் (S.I.I. ii, 173); wife of Ciṟu-t-toṇḍar (செ.அக.).

**திருவெண்காடர்** *tiru-v-eṇkāḍar*, பெ. (n.) பட்டினத்தார்; the sage Paṭṭiṇattār.

*[திரு + வெண்காடர்]*

**திருவெண்காடு** *tiru-v-eṇkāḍu*, பெ. (n.) நாகை மாவட்டம், சீர்காழி வட்டத்திலுள்ள ஊர்; a village in Nāgai district.

*[திரு + வெண்மை + காடு]*

சிறந்த சிவத்தலமாகும், பட்டினத்தடிகள் மெய்கண்ட தேவர் ஆகியோர் பிறந்த ஊர்

'பண்காட்டு மிசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டி லுறைவானும் விடைகாட்டுங் கொடியானே"
(அப். திரு. மு.)

வெண்மை நிறம் வாய்ந்த நிலம் வெண்காடு ஆயிற்று. பாடல்பெற்ற தலமாதலால் திருவெண்காடு ஆயிற்று. நால்வர் பாடல் பெற்ற தலம். (தமி. ஊர். பெ.).

**திருவெண்ணாழி** *tiru-v-eṇṇaḻi*, பெ. (n.) திருவுண்ணாழிகை பார்க்க; see *tiru-v-uṇṇāḻigai* *(கோயிலொ.1).*

*[திருவுண்ணாழிகை → திருவெண்ணாழி]*

**திருவெம்பாவை** *tiru-vem-pāvai*, பெ. (n.) சிலை (மார்கழி)த் திங்களில் ஓதப்படும் திருவாசகப் பகுதி; a poem in Tiruvašagam, specially recited in the month of Mārkaḻi.

**திருவெண்ணெய்நல்லூர்** *tiru-v-eṇṇey-nallūr*, பெ. (n.) கடலூர் மாவட்டம், திருக்கோவிலூர் வட்டத்தில் உள்ள ஊர்; a village in Cudalore district.

*[திரு + வெண்ணெய் + நல்லூர்]*

இப்பகுதியில் உமாதேவியார் வெண்ணெயினால் ஒரு கோட்டைக் கட்டி

*அதனிடையே கிளியை வளர்த்துத் தவம் புரிந்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. சுந்தரர் பாடல்பெற்ற தலம்.*

*"வைத்தாய் பெண்ணைத் தென்பால்*
*வெண்ணெய்நல்லூர் அருட்டுறையுள்*
*அத்தாவுனக் காளாயினி அல்லேனெனலாமே"*

*என்று பாடுவார். (தமி. ஊர். பெ.).*

**திருவெழுச்சி** *tiru-v-eḷucci,* பெ. (n.) *திருவிழா;* temple festival. "எந்தைபிரான் றிருவெழுச்சி யின்ப மெய்த" *(கோயிற்பு. திருவிழா. 25).*

*[திரு + எழுச்சி]*

**திருவெழுத்து** *tiru-v-eḷuttu,* பெ. (n.) *1. அரசன் கையெழுத்து;* king's handwriting or signature. "ஏட்டின்மேற் நீட்டித் திருவெழுத்திட்டு" *(சீவக. 2110). 2.* **கொச்சி திருவிதங்கூர் அரசர்களின் கட்டளை;** writ or warrant of the kings of Cochin and Travancore. *3. ஐந்தெழுத்து;* sacred mantra of five letters. "இது திருவெழுத்தி னீடே" *(சிவப்பிர. 10, 13).*

*[திரு + எழுத்து]*

**திருவெழுத்துவிளம்பரம்** *tiru-v-eḷuttu-viḷambaram,* பெ. (n.) **திருவிதாங்கூர் அரசு விளம்பரம்;** royal prodamation issued by the kings of Travancore (R.F.).

*[திரு + எழுத்து + விளம்பரம்]*

**திருவெள்ளக்குளம்** *tiru-v-eḷḷa-k-kuḷam,* பெ. (n.) **நாகை மாவட்டம் சீர்காழி வட்டத்தில் உள்ள ஊர்;** a village in Nagai district.

*[திரு + வெள்ள + குளம்]*

இப்பகுதியிலுள்ள நீர் (தீர்த்த) வெள்ளக் குளம் என்று போற்றப்படும். இதன் பெயரால் வெள்ளக்குளம் என இவ்வூர் வழங்கப் படுகின்றது. திருமங்கையாழ்வார் இப்பதியைத்

"திண்ணார் மதில்சூழ் திருவெள்ளக் குளத்துள்
அண்ணா அடியேன் இடரைக் களையாயே"
என்று பாடியுள்ளார் (தமி. ஊர். பெ.).

**திருவெள்ளறை** *tiru-v-eḷḷaṟai,* பெ. (n.) **திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள ஊர்;** a village in Tiruchirā-p-paḷḷi district.

*[திரு + வெண்மை + அறை]*

*திருவெள்ளறை அறை என்பது பாறை என்று பொருள்படும். இக்கோயில் 100 அடி உயரமுள்ள வெண்மையான குன்றின்மீது அமைந்திருப்பால் வெள்ளறை என்று வழங்கப் பெறுகின்றது. பெரியாழ்வார் இப்பகுதியை*

*"மன்றில்நில் லேல்அந்திப் போது*
*மதில்திரு வெள்ளறை நின்றாய்"*

*என்று பாடியுள்ளார். (தமி. ஊர்.பெ.).*

**திருவெள்ளியங்குடி** tiru-v-eḷḷiaṅkuḍi, பெ. (n.) **தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்;** a village in Tanjāvur district.

*[திரு + வெள்ளி + குடி]*

திருமங்கை யாழ்வாரால் பாடப்பெற்ற தலம். பார்க்கவபுரி என்றும் வேறுபெயர் இவ்வூருக் குண்டு.

**திருவேகம்பம்** *tiru-v-ēgambam,* பெ. (n.) காஞ்சியிலுள்ள சிவன் கோயில் ஏகம்பம் (தேவா.); the chief saiva shrine in Kānjipuram (சா.அக.).

*[திரு + ஏகம்பம்]*

**திருவேங்கடநாதர்** *tiru-vēṅgaḍa-nādar,* பெ. (n.) **12ஆம் நூற்றாண்டினரும் மாதையூரினரும் வைத்தியநாத தேசிகரைக் கொண்டு இலக்கண விளக்கம் இயற்றுவித்தவரும் நாயக்க அரசர்களின் நிகராளியாயிருந்தவருமாகிய ஒரு பிராமணர்;** a Brahmin governor under the Nayak kings, native of Madai, patron of Vaittiyanada dēsigar who wrote Ilakkaṇa-viḷakkam in 17th century.

**திருவேங்கடநாதன்வண்டுவிடுதூது** *tiru-v-eṅgaḍa-nādaṉ-vaṇḍu-viḍu-tūdu,* பெ. (n.) **அமிர்தசுந்தரநாதம்பிள்ளை என்பவரால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது** *(சிற்.அக.);* a literature written by Amirda-sundaranādam-piḷḷai in 19-20th century.

*[திருவேங்கடநாதன் + வண்டுவிடு +தூது]*

**திருவேங்கடம்** *tiru-vēṅgaḍam,* பெ. (n.) திருப்பதியென வழங்குந் தலம்; Tirupati. "மண்ணளந்த சீரான் றிருவேங்கடம்" *(திவ். இயற். முதற். 76).*

*[திரு + வேங்கடம்]*

**திருவேங்கடமுடையான்பஞ்சரத்தினம்** *tiru-vēṅgaḍa-muḍaiyāṉ-paññjarattiṉam,* பெ. (n.) வீரராகவ முதலியாரால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Virarāgava-mudaliyār 19th century.

[திருவேங்கடமுடையான் + பஞ்சரத்தினம்]

**திருவேங்கடவருக்கமாலை** *tiru-vēṅgaḍa varukka-mālai,* பெ. (n.) வேங்கடசலதாசர் இயற்றிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Vēṅgaḍasaladāsar.

**திருவேடகம்** *tiru-vēḍagam,* பெ. (n.) மதுரை மாவட்டத்தில் சோழவந்தான் சாலையில் உள்ள ஊர்; a village in Madurai district.

சமணர்களுடன் திருஞானசம்பந்தர் செய்த சொற்போரில், சம்பந்தர் எழுதிய ஏடு நீரை எதிர்த்துச் செல்ல, சமணர்கள் எழுதிய ஏடு ஆற்றோடு அடித்துச் செல்லப்பட்டு மறைந்தது. ஞான சம்பந்தர் வன்னியும் மத்தமும் எனத் தொடங்கும் பதிகம் பாடிய வுடன் அவ்வேடு அப்படியே நின்று விட்ட தால் ஏடு நின்ற இடம் ஏடகம் எனப்பட்டது. அப்பகுதிலமைந்த ஊரும் திருவேடகம் என்றழைக்கப்பட்டது. இங்குள்ள கோயிலி லுள்ள இலிங்கம் சம்பந்தரால் வழிபாடு செய்யப்பட்ட தென்பர். 'மன்னிய மறையவர் வழிபட வடியவர் இன்னிசை பாடலரேடகத் தொருவனே என்று இப்பகுதியைச் சம்பந்தர் பாடி யுள்ளார். (தமி. ஊர். பெ).

[திரு + ஏடகம்]

**திருவேடம்** *tiru-vēḍam,* பெ. (n.) திருநீறு, அக்கமணி (உருத்திராக்கம்) முதலிய சிவக் கோலம்; sacred dress and emblems of Śiva and his devotees, as sacred ashes, beads etc. 2. சிவனடியார்; Šaiva devotee. "திருவேடங் கண்டால்" (சி.சி. 8,19). 3. சிவ மடங்களிலுள்ள துறவிகள் அணியும் காதணிவகை (வின்.); ear-rings worn by the Saivite ascetics in mutts.

[திரு + வேடம்]

**திருவேரகநான்மணிமாலை** *tiru-v-ēraga nāṉmaṇi-mālai,* பெ. (n.) 20ஆம் நூற்றாண்டில் சுப்பராயபிள்ளை எழுதிய சிற்றிலக்கியம்; a literature composed by Subbarāya-piḷḷai.

[திருவேரக + நான்மணிமாலை]

**திருவேரகப்பதிகம்** *tiru-vēraga-p-padigam,* பெ. (n.) மணிவாசகசரணாயலய அடிகளால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Maṇivāšaga-saraṇāyalaya-aḍigal of 19-20th century.

**திருவேரகம்** *tiru-vēragam,* பெ. (n.) முருகக் கடவுள் கோயில் கொண்ட ஆறுபடை வீடுகளுள் ஒன்று எனப்படுவது (திருமுரு.); a skanda shire, one of six paḍai-vīḍu, Murugan.

குடந்தை அருகில் உள்ள சாமிமலையே திருவேரகம் என்று கூறப்படுகின்றது.

**திருவேரகவருக்கமாலை** *tiru-vēraga-varukka -mālai,* பெ. (n.) வே. இராமநாதன் செட்டியார் 20ஆம் நூற்றாண்டில் எழுதிய "வருக்கமாலை" என்னும் சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature written by Rāmanāda-ceṭṭiyār of 20th century.

**திருவேள்-தல் (திருவேட்டல்)** *tiruvēḷ-,* 16 செ.குன்றாவி. (v.i.) திருமணம் புரிதல்; to marry. "தென்னவர் கோன் மகனாரைத் திருவேட்டு" (பெரியபு. சேரமான். 92).

[திரு + வேள்-.]

**திருவை** *tiruvai,* பெ. (n.) 1. திரிவை பார்க்க; a mode of learning of rote. 2. அரைகல் இயந்திரம்; crinding machine (செ.அக.).

[திரி → திரிவை]

**திருவைகுண்டம்** *tiru-vaiguṇḍam,* பெ. (n.) நெல்லை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tirunelvēli district.

[திரு + வை குண்டம்]

திருமாலின் தலைமை இடம் வைகுண்டம் - இறைவனின் தலைமை இடம் கயிலாயம். இவ்விரண்டு இடங்களின் சிறப்புகள் இவ்வூரில் விளங்குவதால் இவ்வூர் திருவை குண்டம் என்றழைக்கப்படுகிறது.

**திருவைசாதம்** *tiruvai-šadam,* பெ. (n.) நள்ளிரவில் கடவுளுக்கென்று வழங்கும் சோற்றுத் திரள்; offering of food to a deity at midnight at the close of the daily worship.

**திருவையாற்றுச்சக்கரம்** *tiru-vai-y-āṟṟu-c-cakkaram,* பெ. (n.) காசு வகை (பணவிடு. 145); a kind of coin.

*[திரு + ஐயாறு + சக்கரம்]*

**திருவையாறு** *tiruvai-y-āṟu,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tanjavūr district.

*[திரு + ஐயாறு]*

இப்பகுதியில் வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி, கொள்ளிடம் ஆகிய ஐந்து ஆறுகள் பாய்ந்து வளம் பெருக்குவதால் இந்த ஊர் ஐயாறு என்று பெயர் பெற்று, மூவராலும் பாடல் பெற்ற தலமாதலால் திரு அடைபெற்றுத் திருவையாறு ஆயிற்று.

*[திரு + ஐ + ஆறு - திருவையாறு]*

கல்வெட்டில் இந்த ஊர்ப்பெயர் "இராசேந்திர சிங்கவளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு என்று வழங்கப்படுகின்றது. ஆங்கிலேயர் காலத்தில் இவ்வூர் திருவாதி என வழங்கியது.

**திருவொற்றாடை** *tiru-v-oṟṟāḍai,* பெ. (n.) திருமஞ்சனம் செய்ததும் ஆண்டவன் திருமேனியில் திருக்குளியலுக்குப் பின் ஒற்றியெடுக்கப்படும் நல்லாடை; cloth for wiping the body of an idol after bathing. "திருவொற்றாடை சாத்தி" (குற்றா. தல. சிவபூ. 432).

*[திரு + ஒற்று + ஆடை]*

**திருவொற்றியூர்** *tiru-v-oṟṟiyūr,* பெ. (n.) செங்கல்பட்டு மாவட்டம் சைதாப்பேட்டை வட்டத்தில் உள்ள ஊர்; a village in Cengalpaṭṭu district. சுந்தரர் சங்கிலியாரை மணம் புரிந்த இடம்.

*[திரு + ஒற்றியூர்]*

1. திருவொற்றீசர் என்னும் பெயருமுடைய இறைவன் இப்பகுதியில் கோயில் கொண்டிருப்பதால் திருவொற்றியூர் என்று பெயர் பெற்றுள்ளது.

2. ஊழியை மேல்வரவொட்டாது தடுத்தமையால் ஒற்றியூர் ஆயிற்று என்றும் கூறுவர்.

தமிழ்நாட்டிலுள்ள மிகத் தொன்மையான ஊர் என்பதால் ஆதிபுரி என்ற பெயரும் உண்டு. (தமி. ஊர். பெ.)

**திருவொற்றியூர்ப்பதிகம்** *tiru-v-oṟṟiyūr padigam,* பெ. (n.) தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature composed by Daṇḍapāṇi-Adigaḷ of 19th century.

*[திருவொற்றியூர் + பதிகம்]*

**திருவொற்றியூர்வடிவுடையம்மன்ஆசிரிய விருத்தம்** *tiru-v-oṟṟiyūr-vaḍivuḍai-y-ammaṉ āśiriya-viruttam,* பெ. (n.) சுப்பிரமணிய சுவாமிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature authored by Subiramaṇiya-swamigal of 19th century.

**திருவொற்றியூர்வடிவுடையம்மை நவரத்தினம்** *tiru-v-oṟṟiyūr-vaḍivuḍai-y-ammai-navarattiṉam,* பெ. (n.) கருப்பையாப் பாவலர் என்பவரால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature authored by Karuppaiyā-p-pāvalar of 19-20th century.

*[திருவொற்றியூர் + வடிவுடையம்மை + நவரத்தினம்]*

**திருவோட்டுக்காய்** *tiru-v-ōṭṭu-k-kāy,* பெ. (n.) திருவோட்டுக்காக உதவும் மரம்; west Indian clabash.

*[திருவோடு + காய்]*

**திருவோடு** *tiru-v-ōḍu,* பெ. (n.) இரந்துண்பார் கலம் (பெரியபு. வசன. திருநீலகண்ட.59); shell of coco-de-mer, used as begging bowl by religious mendicants (செ.அக.).

*[திரு + ஓடு]*

**திருவோணம்** *tiru-v-ōṇam,* பெ. (n.) இருபத்திரண்டாவது நாண்மீன் (நட்சத்திரம்); the 22nd naksatra constellation of Aquila in makara-raši (செ.அக.).

*[திரு + ஓணம்]*

**திருவோத்தூர்** *tiru-v-ōttūr,* பெ. (n.) காஞ்சி மாவட்டம் செய்யாறு வட்டத்திலுள்ள ஊர்; a village in Kāñjipuram district.

இவ்வூரில் இறைவன் தேவர்களுக்கும், முனிவர்க்ளுக்கும் வேதத்தின் பொருளை அருளிச் செய்த இடமாதலால் இப்பெயர் பெற்றது. ஞானசம்பந்தரால் ஆண்பனை பெண்பனையாக மாறிய தலம். (தமிஊர்.பெ.)

*[திரு + ஓது + ஊர் – திருவோத்தூர்]*

**திருவோலக்கம்** *tiru-v-ōlakkam,* பெ. (n.) *1.* **அத்தாணியிருப்பு;** durbar, presence - chamber. *2.* **தெய்வ இருப்பு (தெய்வ சன்னிதானம்);** the presence of a deity. "திருவோலக்கஞ் சேவிக்க" *(திருவாச. 21, 6).* *3.* திருமுன் இருக்கும் குழு (சன்னிதி கோஷ்டி); assembly of devotees in rows before a deity. "அப்போதே திருவோலக்கத்தி னின்றும் எழுந்தருளி" *(குருபரம். 213).*

*[திரு + ஓலக்கம்]*

**திருவோலை** *tiru-v-ōlai,* பெ. (n.) **திருமுகம்;** royal letter (S.I.I. ii, 182) *(செ.அக.).*

*[திரு + ஓலை]*

**திரேந்தி** *tirēndi,* பெ. (n.) திராய் *(மலை);* Indian chickweed.

**திரை-தல்** *tirai-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* **அகவை (வயது) முதிர்வால் தோல் திரங்குதல்;** to become wrinkled, as skin by age. "தோறிரை செம்முக வெங்க ணோக்கின்" *(சீவக. 431).* *2.* சுருங்குதல்; to be wrinkled, creased, as cloth, as a flag in the wind. ஆடை திரைந்து விட்டது. *3.* அலை எழுதல் *(வின்.);* to roll as waves; to heave up, as the sea; to break in ripples. *4.* **மிதந்தாடுதல்;** to float in water, as a vessel. "கார்த்தரங்கம் திரை தோணி" *(திருக்கோ. 187).* *5.* **திரிதல்;** to coagulate, form into clots, as milk. பால் திரைந்துவிட்டது. *6.* **திரளுதல்;** to be drifted by the wind into heaps as seaweed; to gather, bees round a flower. "சில்லம் போதின்மேற் றிரைந் தேறுலாம்" *(சீவக. 413).* *7.* **ஆடைநூல் இழை விலகுதல்;** to be threadbare. *8.* மெதுவாதல் *(வின்.);* to become smooth, as an earthen vessel turned by a potter.

**திரை²-த்தல்** *tirai-,* செ.கு.வி. (v.i.) *1.* **அலையெழுதல்;** to roll or rise as waves. "திரைத்தெழுந்து ... வீழ்வ தேய்க்கு மறிகடலே" *(கம்பரா. கடல்காண். 9).* *2.* திரை¹,1 பார்க்க; see *tirai¹,1* *(செ.அக.).*

**திரை³-த்தல்** *tirai-,* 2 செ.குன்றாவி. (v.t.) *1.* சுருங்குதல் *(வின்.);* to gather up, contract, close, as the mouth of a seck. *2.* **தன்னுளடக்குதல்;** to cover, contain. "நிலந்திரைக்குங் கடற்றானை" *(புறநா. 97).* *3.* **ஆடை கொய்தல்;** to plait the ends of a cloth, as in dressing. "கலிங்கந் தாண்மேற் திரைத் துடுத்து" *(சூளா. கல்யா. 16).* *4.* **ஒதுக்குதல்;** to tuck up, as one's cloth; to cause to gather, as moss or scum on the water. "நீரிற் சீலையைத் திரைத்துக் கொண்டான்". *5.* **அணைத்தல்;** to hug, strain. "மாயக் குழவி யெடுத்து மடித்திரைத்து" *(சிலப். 9, 27).*

*[திரை → திரைத்தல்]*

**திரை⁴** *tirai,* பெ. (n.) *1.* **உடற்றோலின் சுருங்கல்;** wrinkle, as in the skin through age. "நரைதிரையொன் றில்லாத நான்முகனே" *(கம்பரா. சூர்ப்ப. 124).* *2.* **திரைச் சீலை;** curtain, as rolled up. "உருவுதிரையாகப் பொருமுக வெழினியும்" *(சிலப். 3, 109, உரை).* *3.* **அலை;** wave, billow, ripple. "தெண்கடலழுவத்துத் திரை நீக்கா வெழுதரூஉம்" *(கலித். 121).* *4.* **ஆறு;** river, brook. "திரையுலா முடியினர்" *(தேவா. 912, 7).* *5.* **கடல்;** sea. "திரைவள ரிப்பி" *(சீவக. 2645).* *6.* ஏழென்னுங் குழூஉக்குறி; seven, a slang term. *7.* **வெற்றிலைச் சுருள்;** roll of betel leaves. *8.* **வெற்றிலை;** betel. "இளிந்தகாய் கமழ்திரை வாசம்" *(சீவக. 1479).* *9.* **வைக்கோற் புரி** *(வின்.);* roll of twisted straw. *10.* **பஞ்சுச் சுருள்** *(வின்.);* roll of cotton prepared for spinning.

**திரை⁵** *tirai,* பெ. (n.) **நிலம்** *(அக.நி.);* earth.

க. திரெ

**திரை-த்தல்** *tirai-,* 11 செ.கு.வி. (v.i.) **படுத்தல்;** to lie, as in bed. "திரைப்ப மெல்லணை செய்வ விழுத்தலம்" *(நீலகேசி. 251).*

**திரைக்காசு** *tirai-k-kāšu,* பெ. (n.) **பழைய வரிவகை** (I.M.p. cg. 1065); an ancient tax.

*[திரை + காசு]*

**திரைக்கடற்பாசி** *tirai-k-kaḍaṟpāši,* பெ. (n.) *கடற்பாசி;* sea weed *(சா.அக.)*

*[திரை + கடல் + பாசி]*

**திரைச்சீலை** *tirai-c-cīlai,* பெ. (n.) *இடுதிரை;* curtain cloth; veil; cloth of a tent *(செ.அக.).*

*[திரை + சீலை]*

**திரைசல்** *tiraišal,* பெ. (n.) *குயவன் மட்பாண்டத்தை மழமழப்புச் செய்யப் பயன்படுத்தும் சிறுசீலை;* small cloth used by potter in giving polish to mud pots *(செ.அக.).*

*[திரை + சல்]*

**திரைத்தவிர்-தல்** *tirai-t-tavir-,* 4 செ.கு.வி (v.i) *விட்டுவிட்டொளிர்தல்;* to dazzle, twinkle "தரைத்தவிர் பண்மான்" *(தண்கைப்பு. அகத். 20).*

*[திரை + அவிர்]*

**திரைத்துப்பாடு-தல்** *tirai-t-tu-p-pāḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *திரும்பத் திரும்ப நீட்டிப் பாடுதல்;* to sing elaborately with frequent repetitions. "திரைத்துப்பாடி திரிதருஞ் செல்வரே" *(தேவா. 168, 6).*

**திரைந்துபோ-தல்** *tiraindu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) *1. உரசுதல் முதலியவற்றால் தோல் அழிந்து போதல்;* to be abraded. *2. திரை¹-5 பார்க்க;* see *tirai¹-5.*

**திரைநுரை** tirainurai, பெ.(n.) *கடல்நுரை;* sea froth, cullte fesh bone.

*[திரை + நுரை]*

**திரைப்பு** *tiraippu,* பெ. (n.) *1. சுருங்குகை;* wrinkling. *2. அலையெழுகை;* rolling, ripling. *3. திரையால் மறைந்த இடம்;* place screened by a curtian. "திரைப்பில் வதுவையு மீங்கே யயர்ப" *(கலித். 115, 19).*

*[திரை + பு]*

**திரைப்புழு** *tirai-p-puḻu,* பெ. (n.) *குழந்தைகளை இளைக்கச் செய்யும் குடற்பூச்சி;* round worm found in the small intestines especially in childeren causing progressive emaciation *(சா.அக.).*

*[திரை + புழு]*

**திரைபோக்கி** *tirai-pōkki,* பெ. (n.) *மிளகு;* black pepper *(சா.அக.).*

*[திரை + போக்கி]*

**திரைமடக்கு** *tirai-maḍakku,* பெ. (n.) *அலை மறிந்து விழுகை (நாஞ்.);* rolling of waves. *நீந்துகிறவர்கள் திரைமடக்கில் அகப்படக் கூடாது* (செ.அக.).

*[திரை + மடக்கு]*

**திரையல்¹** *tiraiyal,* பெ. (n.) *1. சுருங்குகை;* wrinkling. *2. வெற்றிலை (சூடா.);* betel. *3. வெற்றிலைச் சுருள்;* roll of betel prepared for chewing. "திரையலோ டடைக்கா யீத்த" *(சிலப். 16, 55).*

*[திரை + அல்]*

**திரையல்²** *tiraiyal,* பெ. (n.) *திரையன் பார்க்க;* see *tiraiyaṉ.* "சேரல் என்றது . . . . திரையல் இளவல் என்றாற்போல்வதோர் லகர வீற்றுப் பெயர்ச்சொல்" *(சிலப். பதி. 1, 2, உரை)* (செ.அக.)

*[திரையன் → திரையல்]*

**திரையரங்கம்** *tirai-y-araṅgam,* பெ. (n.) *திரைப்படக்காட்சிகள் நடத்துதற்கேற்ற இடம்;* theatre *(பொ.வழி).*

*[திரை + அரங்கம்]*

**திரையன்** *tiraiyaṉ,* பெ. (n.) *1. நெய்தனிலத் தலைவன் (அக. நி.);* ruler for chief in a maritince tract. *2. கடல்வழியாக வந்து தொண்டை நாட்டை ஆண்டதாகக் கருதும் பழைய அரச வகுப்பினர்;* an ancient chief of Toṇḍai nāḍu, who was believed to have come from across the sea. "வென்வேற்றிரையன் வேங்கட நெடுவரை" *(அகநா. 85).*

*[திரை + அன்]*

**திரையில்லான்** *tirai-y-illāṉ,* பெ. (n.) *கரிசலங் கண்ணி;* eclypse plant *(சா.அக.)*

*[திரை + இல்லான்]*

**திரையுறி** *tirai-y-uṟi,* பெ. (n.) *1. பெரிய உறி;* net work of rope for keeping big pots suspended. *2. பின்னல் உறி;* ptaited network of rope. *திண்ணக் கலத்தில் திரையுறி மேலவைத்தே வெண்ணெய் விழுங்கி (திவ். பெரியாழ். 2, 5, 3).*

*[திரை + உறி]*



**திரைவிழு-தல்** *tirai-viḻu-, 2* செ.கு.வி. (v.i.) தோல் சுருக்கு விழுதல்; to become wrinkled, as skin by age.

*[திரை + விழு-.]*

**திரைவு** *tiraivu-,* பெ. (n.) *1.* தோல் சுருங்குகை; wrinkling, as by age. *2.* அலையெழுகை; rolling as of waves.

*[திரை + விழு-.]*

**தில்** *til,* இடை. (part.) விழைவு, காலம், ஒழியிசை என்னும் பொருள்களில் வரும் ஓரிடைச்சொல் (தொல். சொல். 255); expletive signifying a desire, time or a suggestion (செ.அக.).

**தில்ல** *tilla,* இடை (part.) தில் பார்க்க; see *til.* "தீயேன் றில்லா மலைகிழ வோற்கே" (ஐங்குறு. 204)

**தில்லகம்** *tillagam,* பெ. (n.) விளா (தைலவ. தைல. 74); wood apple (செ.அக.).

**தில்லம்**[1] *tillam,* பெ. (n.) காடு (சூடா.); forest, jungle. தில்லமும் பலதேசமுங் கடந்து (சேதுபு. மங்கல. 73). (செ. அக.)

**தில்லம்**[2] *tillam,* பெ. (n.) தில்லை மரத்தின் விதை; பாம்பு, பூச்சி ஆகியவற்றின் கடிக்கும் குட்டத்திற்கும் மருந்தாகப் பயன்படுவது; seed of Tigers milk tree cures insect and snake bites, leprosy etc. (சா.அக.).

**தில்லாயம்** *tillāyam,* பெ. (n.) புரட்டு; deception. "தில்லாய்க் கட்டுமொழி செப்புகிறாய்" (பஞ்ச. திருமுருக. 1220).

**தில்லி** *tilli,* பெ. (n.) மிகச்சிறிய நிலப் பகுதி; a very small plot of land. ஒரு தில்லிமட்டும் நீர்பாயவில்லை.

**தில்லியம்**[1] *tilliyam,* பெ. (n.) நல்லெண்ணெய் (தைலவ. தைல.); gingili oil (செ.அக.).

**தில்லியம்**[2] *tilliyam,* பெ. (n.) புதிதாகத் திருத்தப்பட்ட விளை புலம் (பிங்.); land newly brought under cultivation.

**தில்லியம்பில்லியம்** *tilliyam-pilliam,* பெ. (n.) தில்லுமுல்லு பார்க்க; see *tillu-mullu.* அவன் தில்லியம் பில்லியம் திரியாவரக்காரன் (பழ.).

**தில்லுப்பில்லு** *tillu-p-pillu,* பெ. (n.) தில்லுமுல்லு பார்க்க; see *tillu-mullu* (செ.அக.).

**தில்லும்பில்லும்** *tilllum- pillum,* பெ. (n.) தில்லுமுல்லு பார்க்க; see *tillu-mullu.* தில்லும் பில்லும் திருவாதிரை (பழ.).

**தில்லுமல்லு** *tillu-mallu,* பெ. (n.) தில்லுமுல்லு பார்க்க; see *tillu-mullu* (செ.அக.).

**தில்லுமுல்லு** *tillu-mullu,* பெ. (n.) பொய் புரட்டு; deceit, trick, deceiful words. ties. "தில்லுமுல்லு பேசி" (இராமநா. ஆரணி. 8).

**தில்லெரி** *tilleri,* பெ. (n.) படைக்கலக் கொட்டில்; artillery (செ.அக.).

**தில்லேலம்** *tillēlam,* பெ. (n.) தில்லேல என்று முடியும் பாட்டுவகை; a kind of song ending in tillela (செ.அக.).

**தில்லை**[1] *tillai,* பெ. (n.) *1.* மரவகை; blinding tree. "தில்லையன்ன புல்லென் கடையோடு" (புறநா. 252). *2.* தில்லை மரவகை; mountain slender tiger's milk. *3.* சிற்றம்பலம் (சிதம்பரம்); town of Chidambaram. "தில்லைநகர்புக்குச் சிற்றம்பலமன்னும் . . . விடையானை" (திருவாச. 8,5). *4.* தில்லைநாயகம் பார்க்க; see tillai-nāyagam.

**தில்லை**[2] *tillai,* பெ. (n.) தில் (தொல்.சொல். 397, சேனா) பார்க்க; see *til.*

**தில்லைக்கட்டி** *tillai-k-katti,* பெ. (n.) ஒருவகைச் சம்பா நெல்; a kind of campā paddy (செ.அக.).

*[தில்லை + கட்டி]*

**தில்லைக்கட்டை** *tillai-k-kaṭṭai,* பெ. (n.) செம்பாளை நெல்; G.Tp.D..i. 132; cempālai paddy.

**தில்லைச்சிலேடைவெண்பா** *tillai-c-ciléḍai venbā,* பெ. (n.) 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கந்தசாமிக் கவிராயர் எழுதிய சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature authored by Kandasāmi-k-kavirayer of 19th century A.D.

**தில்லைத்திருச்சித்திரகூடம்** *tillai-tiru-c-cittira-kūḍam,* பெ. (n.) சிதம்பரத்திலுள்ள திருமால் கோயில் (திவ். பெரியதி. 3, 3, 1); the Tirumāl shrine at Chidambaram (செ.அக.).

**தில்லைத்திருப்புகழ்** *tillai-t-tiru-p-pugaḻ,* பெ. (n.) தண்டபாணி அடிகளால் 19ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இலக்கியம் (சிற்.அக.); a literature authored by Daṇḍapāṉi-Aḍigal.

*[தில்லை + திருப்புகழ்]*

**தில்லைநண்டு** *tillai-naṇḍu,* பெ. (n.) தில்லை மரத்தடியில் காணப்படும் ஒருவகைக் கரிய நண்டு; a black lobster; as found under the tillai tree (செ.அக.).

**தில்லைநாயகம்** *tillai-nāyagam,* பெ. (n.) சம்பா நெல்; a variety of campā paddy (செ.அக.).

*[தில்லை + நாயகம்]*

**தில்லைநாயகன்** *tillai-nāyagaṉ,* பெ. (n.) சிதம்பரத்திலுள்ள சிவன் (வின்.); Sivaṉ, the lord of Chidambaram.

*[தில்லை + நாயகன்]*

**தில்லைநெல்** *tillai-nel,* பெ. (n.) தில்லை நாயகம் பார்க்க; see *tillai-nāyagam* (செ.அக.).

*[தில்லை + நெல்]*

**தில்லைமூவாயிரவர்** *tillai-mū-v-āyiravar,* பெ. (n.) தில்லைவாழந்தனர் பார்க்க; see *tillai-vāḻandaṉar.*

*[தில்லை + மூவாயிரவர்]*

**தில்லையம்பலம்** *tillai-y-ambalam,* பெ. (n.) சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலம் (கனக); the shrine of Nadarāja at chidambarm. "தில்லையம்பலத்தே யாடுகின்ற சிலம்பாடல்" (திருவாச. 11,20).

*[தில்லை + அம்பலம்]*

**தில்லையெண்ணெய்** *tillai-y-eṇṇey,* பெ. (n.) தில்லைமரப்பட்டையினின்று எடுக்கும் எண்ணெய் (வின்.); black oil from the green park of the tillai tree.

*[தில்லை + எண்ணெய்]*

**தில்லைவனம்** *tillai-vaṉam,* பெ. (n.) சிதம்பரம்; Chidambaram, as formerly a tillai grove. "தில்லைவனத் தண்டாதிப னாமமதே துணையா" (கோயிற்பு. வியாக்கர. 10).

*[தில்லை + வனம்]*

**தில்லைவாழந்தணர்** *tillai-vaḻ-andaṉar,* பெ. (n.) தொகையடியார்களுள் ஒருசாரரான சிதம்பரத்திற்குரிய அந்தணர் (தேவா. 736, 1); the class of officiating brahmins at the Chidambaram temple, one class of tōkai-y-adiyār.

*[தில்லைவாழ் + அந்தணர்]*

**தில்லைவிடங்கன்நொண்டிநாடகம்** *tillai-viḍaṅgaṉ-noṇḍi-nāḍagam,* பெ. (n.) மாரி முத்துப்பிள்ளை என்பவரல் 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட சிற்றிலக்கியம் (சிற்.அக.); a literature authored by Māri-muttu-p-piḷḷai of 18th century A.D.

*[தில்லை விடங்கன் + நொண்டி நாடகம்]*

**திலகம்** *tilagam,* பெ. (n.) 1. நெற்றிப்பொட்டு; tilka, a small circular mark on forehead. "திலகந் தொடும் . . . திருநுதல்" (நற். 62). 2. சிறந்தது; that which is excellent, eminent; any chrished clofect. "திலக நீண்முடித் தோடு" (சீவக. 246). 3. மஞ்சாடி மரம்; barbadoes pride. "மரவமும் நாகமுந் திலக மருதமும்" (சிலப். 13, 152). 4. திலதகக்கலித்துறை (இல.அக.) பார்க்க; see *tilataga-k-kali-t-tuṟai* (செ.அக.).

**திலகவதிஅம்மைதுதி** *tilagavati-ammai-tudi,* பெ. (n.) ஞானியாரடிகளால் 19-20ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது (சிற்.அக); a literature authored by Ñāniyāraḍigaḷ

*[திலகவதி + அம்மை + துதி]*

**திலகவதியார்** *tilagavatiyār,* பெ. (n.) திருநாவுக்கரசரின் தமக்கையார் (பெரியபு. திருநாவுக். 17); the elder sister of Tiru-nāvukaracar.

**திலம்** *tilam,* பெ. (n.) மஞ்சாடி (பிங்.); barbadoes pride.

**திலு** *tilu,* பெ. (n.) மூன்றினைக் குறிக்க வழங்கும் குழூஉக் குறி (யாழ்.அக.); three a slang term.

**திலுப்புலு** *tilu-p-pulu,* பெ. (n.) முப்பதைக் பெண்ணைக் குறிக்கும் குழூஉக்குறி; thirty; a slang term.

*[திலு → திலுப்புலு]*

**திலோத்தமை** *tilōttamai,* பெ. (n.) தெய்வ மகளிருளொருத்தி; a celestial nymph. "செருப்பனைத் தாங்கித் திருலோத்தமை சொல்". (கம்பரா. நித்னை. 2).

**திவண்டல்** *tivaṇḍal,* செ.குவி. (v.i.) துவளல்; staggering, relaxing (சா.அக.).

**திவம்**[1] *tivam,* பெ. (n.) 1. மேலுலகம் (பரமபதம்); heaven. "தவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி" (தவ்.திருவாய். 10,3,10). 2. வான் (யாழ்.அக.); sky.

**திவம்**[2] *tivam,* பெ. (n.) திவா பார்க்க (சங்.அக.); see *tivā.*

**திவரம்** *tivaram,* பெ. (n.) நாடு (சது.); country or rural tract.

**திவலை** *tivalai,* பெ. (n.) 1. சிதறுந்துளி (பிங்.); small drop; spray. "தெள்ளமுத முதவாமற் றிவலை காட்டி" (தாயு.பெற்றவட். 8). 2. மழைத் துளி (பிங்.); rain drop. 3. மழை (பிங்); rain.

*[துவலை → திவலை]*

**திவவு** *tivavu,* பெ. (n.) 1. யாழ்த்தண்டிலுள்ள நரம்புக் கட்டு; bands of catgut in a yāl. "செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்" (திருமுருகு. 140). 2. மலைமேலோரம் படிக்கட்டு (வின்.); slip cut on the sides of a mountain.

**திவள்(ளு)**[1]**-தல்** *tivaḷ-,* 2 செ.கு.வி. (v.i.) 1. துவளுதல்; to stagger, bend, as when unable to support a weight; to be supple or yielding. "திவளவன்னங்க டிருநன்ட காட்டுவ" (கம்பரா.பம்பை. 18). 2. வாடுதல்; to fade, wither. "அனங்க னெய்யக் குழைந்ததார் திவண்ட தன்றே" (சீவக. 2062). 3. கிடந்தசைதல்; to move, as on the ground; to swing. "குண்டலமும் . . . மணித் தொத்து நிலந்திவள" (சீவக. 3022). 4. விளங்குதல்; to shine. "திவளும் வெண் மதிபோல்" (திவ்.பெரியதி. 2, 7,1). 5. நீர்நிலை முதலிய வற்றிலே திளைத்தல்; to sport, as in water. "தன்மதந் திவண்ட வண்டு" (சீவக. 2313).

**திவள்(ளு)**[2]**-தல்** *tivaḷ-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தொடுதல் (பிங்.); to touch. 2. தீண்டி இன்புறுத்தல்; to gladden by touch. "திவண்டன . . . பூந்தழையே" (திருக்கோ. 200, உரை).

**திவறு-தல்** *tivaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சாதல் (சூடா.); to die.

*[தவறு → திவறு-.]*

**திவா** *tivā,* பெ. (n.) 1. பகல் (பிங்.); day-time. "திவாவி னந்தமாகிய மாலையே" (பிரமோத். 6, 2). 2. நாள் (திவா.); day. "நீ தகைமைகொண்ட திவாத்தினில்" (இரகு. அயனு. 14). 3. திவி² பார்க்க; see *tivi*².

**திவாகரம்** *tivāgaram,* பெ. (n.) அம்பர்ச் சேந்தன் வள்ளன்மையால் திவாகரமுனிவரியற்றியதும் இப்போது வழங்கும் தமிழ் நிகண்டுகளில் மிகப் பழமையானதுமான நிகண்டு; the earliest of the extent Tamil glossaries, composed under the patronage of Ambar-c-cēndaṉ by Tivākara-muṇivar.

**திவாகரன்** *tivāgaraṉ,* பெ. (n.) 1. திவாகர நிகண்டின் ஆசிரியர்; the author of Tivākaram. 2. ஞாயிறு (சூரியன்); sun. "திவாகரனே யன்ன பேரோளி வாணன்" (தஞ்சைவா. 119).

**திளுப்பு** *tiḷuppu,* பெ. (n.) கப்பலறைகட்கு ஏற உதவும் படி; cabin steps (செ.அக.).

**திளை**[1]**-த்தல்** *tiḷai-,* 11 செ.கு.வி. (v.i.) 1. நெருங்குதல் (சூடா.); to be close, crowded. "பன்மயிர் திளைத்திடில்" (காசிக. மகளிர். 8). 2. நிறைதல் (சூடா.); to be full; to abound, as water in a river. 3. அசைதல்; to swing to and fro; to move. 'தாமம் புறந்திளைப்ப' (பு.வெ. 1, 21). 4. விளையாடுதல்; to play. disport. 'எகினந்

துணையொடு திளைக்கும்' (அகநா. 34, 13). 5. முழுகுதல்; to dive, to sport in water. திளைக்குந் தீர்த்த மறாத' (தேவா. 533, 2). 6. இடைவிடாதொழுகுதல்; to flow, fall unceasingly. "தேனு மமிழ்துந் திளைத்தாங்கு" (சீவக. 519). 7. தொழிலில் இடைவிடாது பயிலுதல்; to practise constantly. "மட்டு வாக்கலிற்றிளைத் தவர்" (சீவக. 50). 8. மகிழ்தல்; to rejoice. 'மடந்தையர் சிந்தை திளைப்பன வாகாதே' (திருவாச. 49, 8). 9. பொருதல்; to fight. "ஈரெண்மர் திளைத்து வீழ்ந்தார்" (சீவக. 3076).

[துளை → திளை → திளை-. (வே.க. 275)]

**திளை²-த்தல்** *tiḷai-*, 8 செ.குன்றாவி. (v.t.) **துய்த்தல்;** to experience, enjoy, copulate with, "கன்னி நாரையைத் திளைத்தலின்" (சீவக. 50).

**திளை³-த்தல்** *tiḷai-*, 8 செ.குன்றாவி. (v.t.) **கொதிக்கக் காய்ச்சுதல்** (நாஞ்.); to boil.

**திளை⁴-த்தல்** *tiḷai-*, 8 செ.குன்றாவி. (v.t.) **துளைத்தல்** (சூடா.); perforate, bore.

[துளை → திளை]

**திற்றி** *tiṟṟi*, பெ. (n.) 1. **கடித்துத் தின்னற்குரிய உணவு** (பிங்.); eatables that must be masticated before being swallowed. 2. **இறைச்சி;** meat. "எறிக திற்றி" (பதிற்றுப். 18, 2).

[தின் → தின்றி → திற்றி]

**திற¹-த்தல்** *tiṟa-*, 12 செ.குன்றாவி. (v.t.) 1. **கதவு முதலியவற்றின் காப்பு நீக்குதல்;** to open, as a door, one's eyes. "துயில்கூர் நயனக் கடை திறவா மடவீர் கடைதிறமின்" (கலிங். 29). 2. **வழி முதலியவற்றின் அடைப்பு நீக்குதல்;** to lay open; to make an opening, avenue or passage, as in a wall. "பாதையைத் திறந்துவிட்டார்கள்". 3. **வெளிப்படுத்துதல்;** to divulge, disclose, unveil, reveal, as a secret. 'அவன் குட்டைத் திறந்துவிட்டான்'. 4. **தாள், பூட்டு முதலிய வற்றைத் திறத்தல்;** to unlock, unbar, unbolt. 5. **துளைத்தல்;** to make a breach; to bore. 'இளநீரின் கண்ணைத் திறந்தான்". 6. **பிளத்தல்;** to cut open. 'திறந்தன புண்களெல்லாம்' (கம்பரா. மாயாசனக. 56). 7. **நூல் முதலியவற்றை விரித்தல்;** to open as a book.

**திற²-த்தல்** *tiṟa-*, செ.குவி. (v.i.) **பிளவுபடுதல்;** to split open; to form a gap passage or breach. 'தடியடியால் தலை திறந்தது' (செ. அக.).

**திறக்க** *tiṟakka*, வி.எ. (adv.) **திறமையாக** (நாஞ்.); ability.

[திறம் → திறக்க]

**திறக்கு¹-தல்** *tiṟakku-*, 5 செ.குவி. (v.i.) **மீதுறல்** (யாழ். அக.); to be increased.

**திறக்கு²** *tiṟakku*, பெ. (n.) **செயல்;** one's concerns, affairs. 'அவன் திறக்கிலே போகக்கூடாது' (செ.அக.).

**திறங்கெட்டவன்** *tiṟaṅ-keṭṭavaṉ*, பெ. (n.) 1. **வலியற்றவன்;** weak person. 2. **பயனிலி;** incompetent, incapable man (செ.அக.).

[திறம் + கெட்டவன்]

**திறத்தகை** *tiṟattagai*, பெ. (n.) திறந்தவன் (வின்.) பார்க்க; see *tirantavaṉ*.

[திறம் → திறத்தகை]

**திறத்தவன்¹** *tiṟattavaṉ*, பெ. (n.) **செல்வ நிலையிலுள்ளவன்;** opulent, thriving, prosperous man (செ.அக.).

[திறம் + அத்து + அவன்]

**திறத்தவன்²** *tiṟattavaṉ*, பெ. (n.) 1. **வலியற்றவன்;** stout, strong person. 2. **திறனறிவன் (சமர்த்தன்);** clever, able person (செ.அக.).

[திறம் + அத்து + அவன்]

**திறத்தாம்பட்டி** *tiṟattāmpaṭṭi*, பெ. (n.) **கதவில்லாத வீட்டின் அறை** (முகவை. வழ.) (கட்டிட.); room which has no doors.

**திறத்தார்** *tiṟattār*, பெ. (n.) **ஒரு பகுதியார், பக்கத்தார்;** people of one side. "தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று காய்த்திய" (சிலப். வஞ்சின. 55).

**திறத்தி** *tiṟatti*, பெ. (n.) **மருத்துவச்சி;** mid-wife (செ. அக.).

[திறம் + அத்து + இ]

**திறத்திறம்** *tirattiram,* பெ. (n.) நான்கு சுரமுள்ள பண்வகை *(சிலப். 13, 106, உரை);* secondary melody type, quadratanic.

**திறந்தமனம்** *tiranta-manam,* பெ. (n.) **வெளிப்படையான மனம்;** open heart *(செ.அக.).*

*[திற → திறந்த + மனம்]*

**திறந்தவெளி** *tiranta-veli,* பெ. (n.) **வெளியான இடம்;** open place, plain *(செ.அக.).*

*[திற → திறந்த + வெளி]*

**திறந்தவெளிக்கூர்துளைஇணைப்பு** *tirandaveli-k-kūrtulai-inaippu,* பெ. (n.) **நீள் விசிப் பலகைகளில் நடுக்கால்களைப் பொருத்தப் பயன்படும் இணைப்பு வகை;** a joint in long bench. *(தச்சு).*

*[திறந்தவெளி + கூர்துளை + இணைப்பு]*

**திறந்தவெளிப்பருந்துவால்இணைப்பு** *tirantaveli-p-paruntuvāl-inaippu,* பெ. (n.) **மேசைகளில் நடுக்கால்களின் இணைப்பு;** a joint in table. *(தச். பொறி.)*

*[திறந்தவெளி + பருந்துவால் + இணைப்பு]*

**திறந்தறை** *tirantarai,* பெ. (n.) *1.* **காவலற்ற இடம்** *(யாழ். அக.);* open, unguarded place. *2.* **விளைவற்ற நிலம்;** barren country. *3.* **மந்திரத்தை வெளியிடுவோன்;** one who divulges; secrets; leaky person *(செ.அக.).*

**திறந்துகாட்டு-தல்** *tirantu-kāttu-,* 5 செகுன்றாவி. (v.t.) *1.* **வெளிப்படையாக்குதல்;** to lay open, divulge, disclose fully, as one's mind. *2.* **தெளிவாக விளக்குதல்;** to explain fully, illustrate clearly *(செ.அக.).*

*[திறந்து + காட்டு-.]*

**திறந்துபேசு-தல்** *tirantu-pēcu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **மனத்தை விட்டுச் சொல்லுதல்;** to speak, frankly or openly *(செ.அக.).*

*[திறந்து + பேசு-.]*

**திறப்படு-தல்** *tira-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) **கூறுபடுதல்;** to be formed into divisions; to be arrayed; to be classified. 'வந்தடை பிணிசெய் காலாட் டிறப்படப் பண்ணி' *(சீவக. 3075).*

**திறப்படு²-தல்** *tira-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) **சீர்ப்படுதல்;** to improve, as soil, health, strength, knowledge; to be prosperous. "வாழ்க்கை திறம்பட" *(ஞானா. பாயி. 5, 10).*

*[திறம் + படு]*

**திறப்பண்** *tira-p-pan,* பெ. (n.) **குறைந்த நரம்புள்ள பண்;** secondary melody types. "திறப்பண் பாடுகின்ற ஏல்வை" *(சிலப். 8. 43, அரும்.)*

*[திறம் + பண்]*

**திறப்பணம்** *tira-p-panam,* பெ. (n.) **துரப்பணம்;** timlet *(செ.அக.).*

*[துரப்பணம் → திறப்பணம்]*

**திறப்பாடு** *tira-p-pādu,* பெ. (n.) **கூறுபாடு;** necessary equipment, as discretion, strength of mind, etc.

*[திறம் + பாடு]*

**திறப்பாடு²** tira-p-padu, பெ. (n.) *1.* **சீர்ப்படுகை;** Improving, strengthening, enriching. *2.* **திறமை;** strength, ability. "வேலினையுடையான் திறப்பாட்டை நோக்கி" *(பு.வெ. 4, 16, கொளு, உரை).*

*[திறம் + பாடு]*

**திறப்பி¹-தல்** *tirappi-,* 11 செ.குன்றாவி. (v.t.) **உறுதிப்படுதல்;** to make firm, harder, consolidate *(செ.அக.).*

**திறப்பு** *tirappu,* பெ. (n.) *1.* **வெளியிடம்;** open, unfortified place. *2.* **திறவுகோல்;** key. *3.* **பிளப்பு;** cleft, opening. "மண் டிறப்பெய்த வீழ்ந்தான்" *(கம்பரா. கும்பக. 195).*

**திறப்பு²** *tirappu,* பெ. (n.) **அரசுத் தீர்வை நிலம்;** assessed lands *(செ.அக.).*

**திறபடு-தல்** *tira-padu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* **திறக்கப்படுதல்;** to be opened. *2.* **வெளியாதல்;** to be disclosed, revealed.

*[திற + படு-.]*

**திறம்¹** *tiram,* பெ. (n.) *1.* **கூறுபாடு;** constituents, component parts, necessary elements. "நிற்றிஞ் சிறக்க" *(புறநா. 6). 2.* **வகை;** kind, class, sort.

"முத்திற வுணர்வால்" *(தண்கைப்பு. நந்தியு. 120).* 3. **சார்பு;** party, side. "ஒருதிற மொல்காத நேர்கோல்" *(கலித். 42).* 4. **ஐந்து சுரமுள்ள இசை** *(சிலப். 4, 106, உரை);* a secondary melody type, pentatonic. 5. **பாதி** (தைலவ. தைல); half. 6. **வழி;** way, path, manner. "அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்" *(பொருந. 230).* 7. **வரலாறு;** history. "ஆபுத்திரன்றிறம்" *(மணிமே. 12: 27).* 8. **குலம்;** family. "கருங்கண்ணி திறத்து வேறாக் கட்டுரை பயிற்றுகின்றாள்" *(சீவக. 548).* 9. **சுற்றம்;** relatives. "புனைகடி மாலைமாதர் திறத்திது மொழிந்து விட்டார்" *(சீவக. 2071).* 10. **உடம்பு;** body. "உயிர்திறம் பெயர்ப்பான்போல்" *(கலித். 100).* 11. **புனைவு;** garb, costume. "தவத்திறம் பூண்டு தருமங் கேட்டு" *(மணிமே. பதி. 93).* 12. **கோட்பாடு;** doctrine. "சமயக்கணக்கர் தந்திறங் கேட்டதும்" *(மணிமே. பதி. 88).* 13. **இயல்பு;** quality, state, nature. "உன்றிற மறிந்தேன்" *(மணிமே. 4: 96).* 14. **செயற்பாடு** (விஷயம்); matter, affair. "பதைக்கின்ற மாதின்றி றத் தறி யேன் செயற்பாலதுவே" *(திவ். இயற். திருவிருத். 34).* 15. **செய்தி;** news, information. "அந்திறங் கேட்ட தோழி" *(காஞ்சிப்பு. வாணீச. 27).* 16. **வழிமுறை** (பிங்.); means, method. "உய்திற மில்லை" *(கம்பரா. திருவவ. 17).* 18. **நற்பேறு** (பாக்கியம்); opulence, wealth, fortune. "திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை *(கம்பரா. திருவவ. 104).* 19. **மிகுதி;** fullness, plenteousness. திறமாகக் கொடுத்தான். 20. **கூட்டம்;** multitude, crowd. "திறங்களாகி யெங்குஞ் செய்களூடுழல் புள்ளினங்காள்" *(திவ். திருவாய். 6, 1,3).* 21. **ஆடு 80, பசு80, எருமை 80, கூடின கூட்டம்** *(கணக்கதி. 19);* a herd of 80 sheep, 80 cows and 80 buffaloes. 22. **மருத்துவத் தொழில்** (வின்.); mitwifery.

*[துற → திற → திறம் (வே.க. 279)]*

**திறம்²** *tiṟam,* பெ. (n.) 1. **நிலைபேறு** (பிங்.); firmness, stability. 2. **வலிமை;** strength, power. "திறமிருக்கும் புயத்தில்" *(அரிச்.பு.நகர. 15).* 3. **திறமை;** ability, cleverness, dexterity. 4. **மேன்மை;** goodness, excellence. "சோதி திறம்பாடி" *(திருவாச. 7, 14).* 5. **கற்பு;** chastity. "தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்னும்" *(சிலப்.மங்கல 27).* 6. **ஒழுக்கம்;** moral conduct; established order. "திறத்துளி வாழ்து மென்பார்" *(ஆசாரக். 89).* 7. **நேர்மை;** uprightness. "திறத்துழியன்றி வஞ்சித் தெய்துதல்" *(கம்பரா. மாரீச. 206).*

**திறம்பு¹-தல்** *tiṟambu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **மாறுபடுதல்;** to change; to be over-turned; to be sub-verted. "நியாயமே திறம்பினும்' *(கம்பரா. மந்தரை. 66).* 2. **நரம்பு முதலியன பிறழ்தல்;** to sprain.

**திறம்பு²-தல்** *tiṟambu-,* 5 செ.குன்றாவி. (v.t.); **தவறுதல்;** to swerve from , from deviate.

**திறமாய்** *tiṟam-āy,* வி.எ. (adv.) **உறுதியாய்;** certainly. திறமாய் முப்பது கோட்டை நெல் விளையும்.

*[திறம் + ஆய்]*

**திறமை¹** *tiṟamai,* பெ. (n.) **நற்பேறு** (வின்.); good fortune, wealth.

**திறமை²** *tiṟamai,* பெ. (n.) 1. **அறிவுத்திறம்;** ability, cleverness. "உண்ணமைப் பெருக்கமாந் திறமை காட்டிய" *(திருவாச. 42, 7).* 2. **வலிமை;** strength, vigour, power. 3. **துணிவு;** bravery, courage, manliners. 4. **மேன்மை** (வின்.); goodness, excellence.

*[திறம் + மை]*

**திறமைக்காரன்** *tiṟamai-k-kāraṉ,* பெ. (n.) **பணக்காரன்** (வின்.); wealthy person.

*[திறமை + காரன்]*

**திறமைசாலி** *tiṟamai-cāli,* பெ. (n.) **ஆற்றல் பொருந்தியவன்;** able man.

*[திறமை + சாலி]*

**திறல்** *tiṟal,* பெ. (n.) 1. **வலி;** strength, vigour. "துன்னருந் திறல்" *(புறநா. 3, 8).* 2. **துணிவு;** bravery, courage, valour. 3. **வெற்றி;** victory. "திறல் வேந்தன் புகழ்" *(பு.வெ. 9, 31, கொளு).* 4. **ஒளி;** lustre, as of precious stones. "திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்" *(பதிற்றுப். 463).* 5. **போர்** (யாழ்.அக.); battle; war. 6. **பகை** (யாழ்.அக.); hostility, enmity.

க. திருளு

*[திறம் → திறல்]*

**திறலோன்** *tiralōṉ,* பெ. (n.) *1.* **பதினைந் தாண்டுள்ளவன்;** a male person aged fifteen years. "திறலோன் யாண்டே பதினைந் தாகும்" *(பன்னிருபா. 230). 2.* **திறவோன்**[2] பார்க்க; see *tiravōṉ.* "திறலோனகலஞ் செருவின் முந்நாள் புண்படப் போழ்ந்த பிரான்" *(திவ்.பெரியதி, 2, 9, 6).*

*[திறல் → திறலோன்]*

**திறவது** *tiravadu,* பெ. (n.) *1.* **செவ்விது;** that which is proper; that which is complete. "திறவதி னாடி" *(தொல்.பொருள். 521). 2.* **உறுதியானது;** that which is certain, permanent. "திறவதிற் றீர்ந்த பொருள்" *(திரிகடு. 72).*

*[திறம் → திறவது]*

**திறவறி-தல்** *tira-v-ari-,* 2 செ.குவி. (v.i.) *1.* **வழி வகையறிதல்;** to know ways and means. *2.* **மந்தணத்தை வெளியிடுந் தகுதியறிதல்** *(வின்.);* to know how to disclose secret things. *3.* **பட்டறிவெய்தல்** *(வின்.);* to be experienced.

*[திறவு + அறி-.]*

**திறவன்** *tiravaṉ,* பெ. (n.) **திறத்தவன்; வகையறிந்தவன்; உடையன்;** skilled person.

**திறவாளி** *tiravāḷi,* பெ. (n.) **திறவான்** *(யாழ்.அக.)* பார்க்க; see *tiravāṉ.*

*[திறம் → திறவாளி]*

**திறவான்** *tiravāṉ,* பெ. (n.) **திறமுடையான்** *(யாழ்.அக.);* ableman.

*[திறம் → திறவான்]*

**திறவிது** *tiravidu,* பெ. (n.) **திறவது** பார்க்க; see *tiravadu.* "திறவிதின் மொழிவாம்" *(சீவக. 124).*

*[திறம் → திறவிது]*

**திறவு** *tiravu,* பெ. (n.) *1.* **திறக்கை** *(சது.);* opening unveiling. *2.* **வாயில்;** gate-way. *3.* **வழி;** way. *4.* **வெளியிடம்;** open space. "திறவிலே கண்ட காட்சியே" *(திவாசக. 37, 6). 5.* **காரணம்;** reason, cause. "அதுதனை நேருந் திறவியாது" *(ஞானவா. மாவலி. 28). 6.* **உளவு;** spying.

*[திற → திறவு]*

**திறவுக்கோல்** *tiravu-k-kōl,* பெ. (n.) **திறவுகோல்** பார்க்க; see *tiravu-kōl.* "திறக்கும் பெருந் திறவுக்கோலும்" *(அருட்பா, 6, திருவருட்போ. 2).* 'திறந்த கதவுக்குத் திறவுகோல் தேடுவான் ஏன்?' *(பழ.).*

*[திறவு + கோல்]*

**திறவுகுச்சி** *tiravu-kucci,* பெ. (n.) **திறவுகோல்** பார்க்க; see *tiravukōl.*

*[திறவு + குச்சி]*

**திறவுகோல்** *tiravu-kōl,* பெ. (n.) **பூட்டைத் திறக்க உதவுங்கருவி;** key.

*[திறவு + கோல்]*

**திறவோன்**[1] *tiravōṉ,* பெ. (n.) **மெய்யறிவு உள்ளவன்;** person of discernment or discrimination. "திறவோர் காட்சியிற் றெளிந்தனம்" *(புறநா. 192).*

*[திறம் → திறவோன்]*

**திறவோன்**[2] *tiravōṉ,* பெ. (n.) **வலிமையுடையவன்;** person of strength or capacity.

*[திறம் → திறவோன்]*

**திறன்** tiraṉ, பெ. (n.) **திறம்**[1] பார்க்க; see *tiram*[1]. "திறனறிந்தேதிலா ரிற்கட் குருடனாய்" *(நாலடி, 158).*

*[திறம் → திறன்]*

**திறனில்யாழ்** *tiraṉ-il-yāḻ,* பெ. (n.) **நெய்தல் யாழ்த் திறத்தொன்று** *(சூடா.);* an ancient secondary melody type of maritime tract.

*[திறன் + இல் + யாழ்]*

**திறாணி** *tiṟāṇi,* பெ. (n.) **திறமை;** ability.

*[திறன் → திறனி → திறானி → திறாணி]*

**திறவிச்சதா** *tiravicadā,* பெ. (n.) **மூக்கிரட்டை** *(மலை.);* pointed leaved hoyweed.

**திறுதட்டம்** *tirutaṭṭam,* பெ. (n.) **திறுதிட்டம்** பார்க்க; see *tirutiṭṭam.*

**திறுதிட்டம்** *tirutiṭṭam,* பெ. (n.) **நேர்நிற்கை;** straightness; steepness; perpendicular position, erectness, as of a person stunned by surprise *(செ.அக.).*

*[திறுதிட்டம் → திறுதிட்டம்]*

**திறுதிறு-க்கல்** *tiṟu-tiṟu-*, 11 செ.கு.வி. (v.i.) அஞ்சிவிழித்தல் (யாழ்.அக.); to stare, look wild, as one in fear.

**திறுதிறெனல்** *tiṟu-tiṟeṉal*, பெ. (n.) அச்சத்தோடு நோக்கற் குறிப்பு; expr. of staring, looking wild with fear.

*[திறு + திறு + எனல்]*

**திறை** *tiṟai*, பெ. (n.) கப்பம்; tribute. "திறைசுமந்து நிற்குந் தெவ்வர் போல" (சிலப். 25: 50).

**திறையள-த்தல்** *tiṟai-y-aḷa-*, 3 செ.குவி. (v.i.) கப்பங்கட்டுதல்; to pay tribute. "தீர்ந்து வணங்கித் திறையளப்ப" (பு.வெ. 10, 3).

*[திறை + அள-]*

**தின்(னு)-தல்** *tiṉ-*, 13 செ.குன்றாவி (v.t.) 1. உண்ணுதல்; to eat, feed. "இரும்பே ரொக்கலொடு தின்மென" (புறநா. 150). 2. மெல்லுதல்; to chew. "உண்ணுஞ் சோறும் பருகுநீருந் தின்னும் வெற்றிலையும்" (திவ். திருவாய். 6, 7). 3. கடித்தல்; to bite, gnash, as one's teeth. "தின்று வாயை விழிவழித் தீயுக" (கம்பரா. ஒற்றுக். 45). 4. அரித்தல்; to eat away as white ants to consume, corrode, மரத்தைக் கறையான் தின்றுவிட்டது. 5. வருத்துதல்; to afflict, distress. "பிணிதன்னைத் தின்னுங்காள்" (திரிகடு. 88). 6. அழித்தல்; to destroy, ruin. 7. அராவுதல்; to file. "அரந்தின்ற கூர்வேல்" (கம்பரா. சம்புமா. 6). 8. வெட்டுதல்; to cut. "கோணந் தின்ற வடுவாழ் முகத்த" (மதுரைக். 597). 9. அரித்தல்; to cause irritating sensation, as in the skin. "தின்றுவவிடஞ் சொறிந்தாற் போல" (திவ். திருவாய். 4, 8,9), பன்னீ.) 10. பெறுதல்; to undergo, receive. "கானகம் போய்க்குமை தின்பார்கள்" (திவ். திருவாய். 4, 112).

**தின்பண்டநல்கல்** *tiṉpaṇḍa-nalkal*, பெ. (n.) முப்பதிரண்டறங்களுள் வழிச் செல்வோருக்கு உணவிடும் அறச்செயல் (பிங்.); providing food for travllers, regarded as an act of charity, one of muppattiraṇḍaṟam.

*[தின்பண்டம் + நல்கல்]*

**தின்பண்டம்** *tiṉ-paṇḍam*, பெ. (n.) 1. உணவுப் பொருள்; eatables. 2. பணியாரம்; sweetmeat, confection.

தெ. தின்பண்டமு

*[தின் + பண்டம்]*

**தின்பீர்க்கு** *tiṉpīrkku*, பெ. (n.) உண்பதற்குரிய பீர்க்கு; edible duffa as distinguished from பேய்ப்பீர்க்கு (சா.அக.).

*[தின் + பீர்க்கு]*

**தின்புடலை** *tiṉ-puḍalai*, பெ. (n.) தின்னத் தகுந்த புடலை, கறிப்புடலை; vegetable gourd distinct from பேய்ப்புடலை bitter gourd (சா.அக.).

*[தின் + புடலை]*

**தின்மை** *tiṉmai*, பெ. (n.) 1. தீமை; evil, misfortune. "தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே" (கம்பரா. தனியண்.). 2. சாவு; death. "நன்மை தின்மைகளுக்கு இரட்டைச் சங்கும்" (தெ.க.தொ. 3 கல். 47). 3. தீயசெயல்; evil deed. "அடியவர் நன்மைதின்மை யறிபவன்" (திருவாலவா. 35, 11).

**தின்றி** *tiṉṟi*, பெ. (n.) தின்பண்டம் பார்க்க (திவா.); see *tiṉ-paṇḍam*.

*[தின் → தின்றி]*

**தின்றிப்போத்தன்** *tiṉṟi-p-pōttaṉ*, பெ. (n.) அளவிறந்து உண்போன்; one who indulges to excess in eating (சா.அக.).

*[தின்றி + போத்து → போத்தன்]*

**தின்றிப்போத்து** *tiṉṟi-p-pōttu*, பெ. (n.) மிகுதியாக உண்பவன்; loc. glutton.

*[தின்றி + போத்து]*

**தின்றுப்பார்-த்தல்** *tiṉṟu-p-pār-*, 4 செ.குன்றாவி (v.t.) உருசித்தல்; tasting (சா.அக.).

*[தின் → தின்று + பார்-]*

**தின்றுருட்டி** *tiṉruṭṭi*, பெ. (n.) தின்றழிப்போன்; extravagent fellow, spendthrift, prodigal.

*[தின்று + உருட்டி]*

**தின்னாக்காய்** *tiṉṉākkāy*, பெ. (n.) பேய்ப் புடலை; wild snake gourd. 2. பேய்ப் பீர்க்கு; bitter luffa (சா.அக.).

*[தின் + ஆ + காய். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தின்னாத்தீனி** *tiṉṉāttīṉi*, பெ. (n.) 1. இழிந்த உணவு; unferior food. 2. உண்ணத் தகாத உணவு; food unfit for eating. (சா.அக.).

*[தின் + ஆ + தீனி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தின்னாச்சாதி** *tiṉṉā-c-cāti*, பெ. (n.) உடனுண்ணுதற்குத் தகுதியற்ற தாழ்ந்த சாதி; low castes with whose members commensality is prohibited (செ.அக.).

*[தின் + ஆ + சாதி.]*

**தின்னி** *tiṉṉi*, பெ. (n.) தின்னிமாடன் பார்க்க; see *tiṉṉimāḍaṉ*. 2. கண்டவிடங்களி லெல்லாந் தின்போன்; one who eats indiscriminately in all places (செ.அக.).

*[தின் + இ]*

**தின்னிமாடன்** *tiṉṉi-māḍaṉ*, பெ. (n.) அளவிறந்துண்போன்; glutton (செ.அக.).

**தினவு** *tiṉavu*, பெ. (n.) சொறி (சூடா.); itching sensation; eczema, scaly eruptions; psoriasis. "சொறிந்து தீர்வுறு தினவினர்" (கம்பரா. மூலபல. 10).

**தினவுச்சிரங்கு** *tiṉavu-c-ciraṅku*, பெ. (n.) நமைச்சலேடு கூடிய சிரங்கு; pruritis (சா.அக.)/

*[தினவு + சிரங்கு]*

**தினவுண்டாக்கு-தல்** *tiṉavuṇḍākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) நமைச்சல் எடுக்கும்படி செய்தல்; to cause itching sensation (சா.அக.).

*[தினவு + உண்டாக்கல்]*

**தினவுண்டாக்கி** *tiṉavuṇḍākki*, பெ. (n.) கள்ளு கள்ளென நமைச்சலுண்டாக்கும் பூண்டு; any sort of plant, causing prickly sensational (சா.அக.).

*[தினவு + உண்டாக்கி]*

**தினவுதின்னல்** *tiṉavu-tiṉṉal*, செ.குன்றாவி (v.t.) சொறிதல்; itching (சா.அக.).

*[தினவு + தின்னல்]*

**தினை** *tiṉai*, பெ. (n.) 1. சிறு தவச வகை; Indian millet, cereal, "தினைக்காலுள் யாய்விட்டகன்று மேய்க்கிற்பதோ" (கலித். 108: 33). 'தினை விதைத்தவன் தினை யறுப்பான், வினை விதைத்தவன் வினை யறுப்பான்' (பழ.). 2. தினைவகை; wild bermuda grass. 3. சாமை (அக.நி.); little millet. 4. ஒருவகைப் புல்; paddy field grass. 5. மிகச் சிறிய அளவு; a very small measure, as a grain of millet, a trifle. "தினைத்துணை நன்றி செயினும்" (குறள், 104).

*[துல் (→ தில்) → தின்→ தினை (மு.தா. 129)]*

**தினைக்குருவி** *tiṉai-k-kuruvi*, பெ. (n.) சிறு குருவி வகை; black headed munia (செ.அக.).

*[தினை + குருவி]*



**தினைச்சாமை** *tiṉai-c-cāmai*, பெ. (n.) தினை[3] பார்க்க; see *tiṉai*.

*[தினை + சாமை]*

**தினைத்துணை** *tiṉai-tuṇai*, பெ. (n.) தினை-5 பார்க்க; see *tiṉai 5*.

*[தினை + துணை]*

**தினைப்பிண்டி** *tiṉai-p-piṇḍi*, பெ. (n.) தினை மா; millet flour; millet meal (சா.அக.).

*[தினை + பிண்டி]*

**தினைப்புல்** *tiṉai-p-pul*, பெ. (n.) 1. தினை இனத்தைச் சேர்ந்த ஒருவகைப்புல்; a kind of

grass of the species of millet. *2.* திணை வைக்கோல்; millet grass *(சா.அக.).*

*[தினை + புல்]*

**தினைப்புனம்** *tiṉai-p-puṉam,* பெ. (n.) தினைவிளையும் புலம்; millet field.

*[தினை + புனம்]*

**தினைப்பொரி** *tiṉai-p-pori,* பெ. (n.) தினையை வறுத்த பொரி; parched millet *(சா.அக.).*

*[தினை + பொரி]*

**தினையரிசி** *tiṉai-y-ariši,* பெ. (n.) தினையின் அரிசி *(பதார்த்த. 831);* husked millet.

*[தினை + அரிசி]*

**தினையளவு** *tiṉai-y-aḷavu,* பெ. (n.) மிகச்சிறிய அளவு; very small quantity, as much as a grain of millet. "தங் காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை" *(குறள், 1252, உரை).*

*[தினை + அளவு]*

**தீ**[1] *tī,* பெ. (n.) 'த்' என்ற மெய்யெழுத்தும் 'ஈ' என்ற உயிரெழுத்தும் கூடிய கூட்டெழுத்து; the syllable formed by adding the long vowel 'ī' to the consonent 't'.

*[த் + ஈ]*

**தீ**[2]**-தல்** *tī-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* எரிந்து போதல்; to be burnt. "சிறைதீந்த பருந்து" *(கல்லா. 7).* *2.* பயிர் முதலியன கருகுதல்; to be withered or blighted, an growing crops in times of drought. *3.* சோறு முதலியன காந்துதல்; to be charred or burnt, as food in cooking. *4.* சீற்றங் கொள்ளுதல்; to be hot with anger; to be inflammed. *5.* அழிதல்; to perish; to be ruined. 'வினையாவுந் தீவதுசெய்யும்' *(இரகு. அயனுதய. 32).*

க. தீ.

*[தேய்தல் = உரசுதல். தே → தீ. தீதல் = எரிதல், கருகுதல் (வ.வ.17)]*

**தீ**[3]**-தல்** *tī-,* 11 செ.குன்றாவி. (v.t.) *1.* காந்த வைத்தல்; to allow food to be charred in cooking; to burn. *2.* காயச் செய்தல்; to dry up water, as the sun; to cause humours to be absorbed in the body by means of external application; to boil and dry fish so that it may keep. *3.* பயிர் முதலியன கருகச் செய்தல்; to cause to wither, an growing crops. *4.* சுடுதல் *(வின்.);* to scar, cauterise.

**தீ**[4] *tī,* பெ (n.) *1.* நெருப்பு; fire. "வளித்தலைஇய தீயும்" *(புறநா.2).* *2.* விளக்கு; lamp. "தீத்துரி இயற்று" *(குறள். 929).* *3.* வேள்வித்தீ; sacrificial fire. 'தீத்திறம் புரிந்தோன்' *(சிலப். 11,57).* *4.* செரிமானச் சூடு; digesiny heat. *5.* சினம்; anger. "மன்னர்தீ யீண்டு தங்கிளையோடு மெரித்திடும்" *(சீவக. 250).* *6.* தீமை; evil. "தீப்பால தான்பிறர்கட் செய்யற்க" *(குறள், 206).* *7.* நஞ்சு; poison. "வேகவெந் தீ நாகம்" *(மணி. 20,98).* *8.* நிரயம் (நரகம்); hell. "அழுக்காறு..... தீயுழி யுய்த்து விடும்" *(குறள். 168).*

ம., க. தீ

*[தேய்தல் = உரசுதல். தே → தீ = நெருப்பு, விளக்கு, சினம், தீமை, எரியகம் (நரகம்) (வ.வ. 16).]*

**தீ**[5] tī, பெ. (n.) அறிவு (ஞானம்); knowledge, understanding. "தீதாவசவரிமலர் செல்வா" (கந்தரந். 31).

**தீக்கஞ்சி** *tī-k-kañci*, பெ. (n.) ஆரத்திச் சூடம்; camphor, as fearing fire (செ.அக.).

*[தீ + கு - தீக்கு + அஞ்சி. நெருப்புக்கு அஞ்சுவது, அதாவது உடனே பற்றிக் கொள்வது.]*

**தீக்கட்டை** *tī-k-kaṭṭai*, பெ. (n.) எரிகட்டை; fire-wood.

*[தீ + கட்டை.]*

**தீக்கடவுள்** *tī-k-kaḍavuḷ*, பெ. (n.) நெருப்புக் கடவுள் (திவா.); fire-God. "தீக்கடவு டந்த வரத்தை" (நள. கலிநீங்5).

*[தீ + கடவுள்]*

**தீக்கடன்** *tī-k-kaḍaṉ*, பெ. (n.) 1. இறுதிச் சடங்கு; duty of performing the cremation ceremony, as of a son to his parents. "தீக்கடன் செய்திட்டாரே" (இரகு. இந்து. 63). 2. தீச்செயல்; worst deed. (செ.அக.).

*[தீ + கடன்]*

**தீக்கடை-தல்** *tī-k-kaḍai-*, செ.கு.வி. (v.i.) கடைந்து நெருப்பு உண்டாக்குவது; to produce fire by fire drill. "தீக்கடைந்து வைத்தேன்" (பெரியபு. விண்ணம். 415).

*[தீ + கடை-.]*

**தீக்கடைகோல்** *tīkkaḍai-kōl*, பெ. (n.) கடைந்து நெருப்புண்டாக்க உதவும் அரசு அல்லது வன்னிமரத்தின் சிறுகட்டை; fire-drill, piece of wood for producing fire by friction. "தீக்கடை கோலாலே........ கையாலே கடைந்து கொண்ட" (பெரும்பாண். 1172, உரை.)



மறுவ. நெலிகோல்

*[தீ + கடைகோல்]*

**தீக்கடுகால்வன்** *tī-k-kaḍukālvaṉ*, பெ. (n.) நெருப்பைப் போன்ற கொடிய நோய்; disease of firely poison (சா.அக.).

*[தீ + கடுகால்வன்]*

**தீக்கண்** *tī-k-kaṇ*, பெ. (n.) சினம் கொண்ட கண்; fire-eye.

*[தீ + கணம்]*

**தீக்கணம்** *tī-k-kaṇam*, பெ. (n.) செய்யுண் முதற் சீராக அமைக்கத் தகாததும் நிரை நேர் நிரையென வருவதுமாகிய செய்யுட்கணம் (திவா.); metrical foot of nirai-nēr-nirai considered inauspicious at the commencement of a poem.

*[தீ + கணம்]*

**தீக்கணமூலி** tīkkaṇamūli, பெ. (n.) கொப்புளத்தையெழுப்பு மூலி; any drug or drugs capable of raising blisters, blistering agents such as mustard seed, lead wort etc. (சா.அக.)

*[தீக்கணம் + மூலி. கடுகு, சித்தரமூலம் முதலியன கொப்புளத்தை உண்டாக்க வல்லன.]*

**தீக்கணாக்கனி** *tīkkaṇākkaṉi*, பெ. (n.) 1. கொடிய நெருப்பு; a great fire. 2. தோலைச் சிவக்கச் செய்து கொடிய எரிச்சலை உண்டாக்கும் நோய்; disease marked by redenning of the skin and great burning sensation as burns, erythema, crysipalas, herpes etc; 3. கொடிய நஞ்சு; virulent poison (சா.அக.).

*[தீக்கணம் + அக்கினி.]*

**தீக்கதி** tīkkadi, பெ. (n.) 1. நிரயம் (நரகம்); hell, as a world of evil. "தினையேனுந் தீக்கழிக்கட் செல்லார்" (திவ்.இயற். 1). 2. தீயூழ் (கொடிய விதி); evil fate (செ.அக.).

*[தீ + கதி]*

**தீக்கதிக்கும்பச்சை** *tikadikkum-paccai,* பெ. (n.) நாகப்பச்சை (வின்.); a variety of green stone.

**தீக்கதிகரும்பச்சை** *tikadikarum-paccai,* பெ. (n.) தீக்கதிக்கும்பச்சை (யாழ்.அக.) பார்க்க; see *tikadikkum-paccai.*

*[தீ + கதி + கருமை + பச்சை]*

**தீக்கதிர்** *ti-k-kadir,* பெ. (n.) *1.* உலையாணிக் கோல் *(வின்);* blacksmith's poker. *2.* தீச்சுடர்; flame.

*[தீ + கதிர்]*

**தீக்கரண்டி** *ti-k-karandi,* பெ. (n.) தீயெடுக்குங் கருவி *(வின்.);* small ladle for taking the charcoal.

*[தீ + கரண்டி]*



**தீக்கருந்தேன்** *tikaruntēn,* பெ. (n.) கொம்புத் தேன்; honey collected on branches of tree. 'இன்சுவைத்தேன்'. *(சா.அக.).*

*[தீம் + கருந்தேன்]*

**தீக்கரும்பு** *ti-k-karumbu,* பெ. (n.) விறகு; fire wood. "எருமுட்டையுந் தீக்ரும்பையும்... அடுக்குவதற்கு" *(மதி.க., ii. 91).*

*[தீ + கரும்பு]*

**தீக்கருமம்** *ti-k-karumam,* பெ. (n.) *1.* தீயசெயல்; evil deed. *2.* தீக்கடன் பார்க்க; see *ti-k-kadan. 3.* தீத்திறச்செயல்; fire sacrifice. 'நவையி றீக்கமம் யாவும்" *(கூர்மபு. அனுக்கிர. 25).*

*[தீ + கருமம்]*

**தீக்கரை** *ti-k-karai,* பெ. (n.) முண்முருங்கை *(மலை.);* common coral tree.

*[தீ + கரை]*

**தீக்கல்** *ti-k-kal,* பெ. (n.) *1.* தீத்தட்டிக்கல்; strike a light, flint stone. *2.* இரும்புச் சாரமுள்ள கல்; iron pyritest. *(செ.அக.).*

ம. தீக்கல்லு

*[தீ + கல்]*

**தீக்கலம்** *ti-k-kalam,* பெ. (n.) *1.* தீச்சட்டி பார்க்க; see *ti-c-catti. 2.* ஈமப் பள்ளி; funeral pure. "தீக்கலந் திருத்திச் செல்வனை வெய்திணேற்றினார்" *(கம்பரா. பள்ளி. 130).*

*[தீ + கலம்]*

**தீக்களி** *ti-k-kali,* பெ. (n.) மிக்க சூட்டைப் பொறுக்கக்கூடிய களிமண்; a kind of clay cpable of sustaining intense heat - fire clay *(சா.அக.).*

*[தீ + களி]*

**தீக்கறி** *ti-k-kari,* பெ. (n.) சுண்டற் கறி; madr.; a warmed up dish of the remnants of the day's curry.

*[தீ + கறி]*

**தீக்கனா** *ti-k-kanā,* பெ. (n.) தீமை விளைக்கும் கனவு; ominous dream, dream of coming evil. "இடருற்ற தீக்கனா...... நினைந்தாள்" *(சிலப. 19.72).*

*[தீ + கனா]*

**தீக்காப்புச்சட்டை** *ti-k-kāppu-c-cattai,* பெ. (n.) தீத்தடுப்புச் சட்டை; fire-proof shirt.

*[தீ + காப்பு + சட்டை]*

**தீக்காய்-தல்** *ti-k-kāy-,* செ.கு.வி. (v.i.) குளிர் காய்தல்; to warm oneself at the fire. "அகலா தணுகா துதீக்காய்வார் போல்க" *(குறள், 691).*

*[தீ + காய்தல்]*

**தீக்காரியம்** *ti-k-kāriyam,* பெ. (n.) வேள்வி; பொல்லாங்கு; calamity.

*[தீ + காரியம்]*

**தீக்கால்** *ti-k-kāl,* பெ. (n.) கொள்ளிவாய்ப் பிசாசு; a meteor flirting about in the right over marshy ground foslish fire *(சா.அக).*

*[தீ + கால்]*

**தீக்காலம்** *tī-k-kālam,* பெ. (n.) கேடு விளைக்குங் காலம்; evil times (செ.அக.).

[தீ + காலம்]

**தீக்காலி** *tī-k-kāli,* பெ. (n.) 1. தன்வரவால் குடிகேடு விளைப்பவளாகக் கருதப்படுபவள்; woman believed to bring misfortune to a family by her arrival. 2. ஓர் அசுரன் (பெரியபு. திருக்குறிப்பு. 30); an asura.

[தீ + காலி]

**தீக்காற்று** *tī-k-kāṟṟu,* பெ. (n.) நெருப்புக் காற்று (வின்.); scorching wind.

[தீ + காற்று]

**தீக்கி-த்தல்** *tīkki-,* 11 செ.கு.வி. (v.i.) சூளுரைத்தல்; to take a vow. "பின்னதன் வழியே யொழுகினர் தீக்கித்து" (திருக்காளத்.பு, 29, 23).

**தீக்கு-தல்** *tīkku-,* செ.குன்றாவி. (v.t.) தீயும்படி செய்தல்; scorching (சா.அக.).

**தீக்குச்சி** *tīkkucci,* பெ. (n.) 1. தேய்த்தால் தீயுண்டாக்கும் மருந்தை நுனியிற் கொண்ட குச்சி; match. 2. தீங்கு விளைப்போன்; mishcief maker. 3. காவலர்; police constable.

[தீ + குற்றி → தீக்குச்சி]



**தீக்குச்சு** *tīkkuccu,* பெ. (n.) தீக்குச்சி பார்க்க; see *tī-k-kucci.*

[தீ + குச்சி → குச்சு]

**தீக்குடர்க்கல்** *tīkkuḍarkkal,* பெ. (n.) பித்தக் குடல் ஊதை; a disease of the intestine (சா.அக.).

**தீக்கடுக்கை** *tikkaḍukkai,* பெ. (n.) வெடிகுண்டு; shell, bomb (செ.அக.).

[தீ + குடுக்கை]

**தீக்குண்டம்** *tī-k-kuṇḍam,* பெ. (n.) வேள்வித் தீ வளர்க்கும் ஓம குண்டம்; sacrificial pit (செ.அக.).

[தீ + குண்டம்]



**தீக்குண்டம்**[3] *tī-k-kuṇḍam,* செ.குன்றாவி. (v.t.) நோக்கம் தொடு உணர்வு, அறிவுரை முதலியவற்றால் குரு அருள்புரிதல் (குருதீட்சை செய்வித்தல்) (வின்.); to impart spiritual illimination to a disiple by look touch or teaching, as in religious initiation by a guru.

**தீக்குணம்**[1] *tī-k-kuṇam,* பெ. (n.) 1. தீயபண்பு; evil nature or disposition vice. 2. வெப்பம்; heat as the quality of fire. "தீக்குண மோரைந்து" (சிலப். 3, 26, உரை, பக்.103).

[தீ + குணம்]

**தீக்குணம்**[2] *tī-k-kuṇam,* பெ. (n.) பசி, சோம்பு, மைதுனம், காட்சி, நீர், வேட்கையென இவை தீக்குணம் அடிசிலம்பு (3:26).

**தீக்குணர்** *tī-k-kuṇar,* பெ. (n.) 1. தீவினைஞர்; wicked, evil persons. 2. கீழ்மக்கள் (சூடா.); base, vulger person.

[தீக்குணம் → தீக்குணர்]

**தீக்குதி-த்தல்** *tī-k-kuti-,* செ.கு.வி. (v.i.) 1. தீக்குளி-த்தல் பார்க்க; see *tī-k-kuḷi-.* 2. தீக்குழிபாய்-தல் பார்க்க; see *tī-k-kuḷipay-.*

[தீ + குதி-]

**தீக்குருவி** *tī-k-kuruvi*, பெ. (n.) *தீக்கோழி பார்க்க;* see *ti-k-kōḻi.*

*[தீ + குருவி]*

**தீக்குவெறுங்குகை** *tikkuverungugai*, பெ. (n.) *சவர்க்காரம் (யாழ்.அக.);* detergent soap.

**தீக்குழி** *tī-k-kuḻi*, பெ. (n.) வேள்விசெய்தற் பொருட்டேனும் உயிர்விடற் பொருட்டேனும் இறங்குவதற்கு அமைக்கப்படும் நெருப்புக் குண்டம்; pit with live charcoals for persons to walk on or to throw themselves into in self-immolation. (செ.அக.). "தீக்குழி வலித்தியாந் தீரினுந் தீந்தும்" *(பெருங். மக்த. 25, 138).*

*[தீ + குழி]*

**தீக்குழிபாய்-தல்** *tī-k-kuḻi-pāy*, செ.குவி. (v.i.) வேண்டுதலின் பொருட்டு தீக்குழியில் இறங்கி நடத்தல்; to walk on burning charcoals in a pit, as in fulfilment of a vow.

*[தீக்குழி + பாய்-.]*

**தீக்குளி-த்தல்** *tī-k-kuḷi-*, செ.குவி. (v.i.) உடம்பில் தியிட்டுக் கொள்ளுதல்; to plunge into flames, as in an ordeal. இந்தி ஒழிக, தமிழ்வாழ்க வென்று முழக்கமிட்டுக் கொண்டே அரங்கநாதன் தீக்குளித்தார் *(உ.வ.).*

*[தீ + குளி-.]*

**தீக்குறி** *tī-k-kuṟi*, பெ. (n.) தீநிமித்தம்; bad sign or symptom, unpropitious omen.

*[தீ + குறி]*

**தீக்கூர்மை** *tī-k-kūrmai*, பெ. (n.) *1.* இந்துப்பு; rock salt. *2.* *திலசாரம்;* salt extracted from sesame seed.

*[தீ + கூர்மை]*

**தீக்கையோன்** *tikkaiyōṉ*, பெ. (n.) *அரன்;* Lord Sivaṉ.

*[தீ + கையோன்]*

**தீக்கோட்டான்** *tikkōṭṭāṉ*, பெ. (n.) ஒரு காயகற்ப மூலிகை; a herbal used for rejuvenation. (சா.அக.).

*[தீ + கோட்டான்]*

**தீக்கொள்ளி** *tī-k-koḷḷi*, பெ. (n.) *1.* கொள்ளிக் கட்டை; fire wood. *2.* *தீக்கொளுத்தி பார்க்க;* see *tī-k-koḷutti.*

*[தீ + கொள்ளி]*

**தீக்கொளுத்தி** *tī-k-koḷutti*, பெ. (n.) *1.* நெருப்பிடுவோன்; incendiary. *2.* கலகமூட்டுவோன்; one who stirs up quarrels.

*[தீ + கொளுத்தி]*

**தீக்கோழி** *tī-k-kōḻi*, பெ. (n.) நெருப்புக் கோழி; ostrich.

*[தீ + கோழி]*



**தீக்கோள்**[1] *tī-k-kōḷ*, பெ. (n.) கேடு குறிக்கும் கோள்; malignant planet.

*[தீ + கோள்]*

**தீக்கோள்**[2] *tī-k-kōḷ*, பெ. (n.) கூரைவீடு முதலியவற்றில் மந்தணமாகத் தீப்பற்ற வைக்கை (இ.வ.); arson, incendiarism.

*[தீ + கோள்]*

**தீகுறு-தல்** *tīguṟu-*, பெ. (n.) தீயினால் அழிதல்; to be destroyed by fire. "அகிலந் தீகற் றிடர்ப்பட" *(இரகு.யாகப். 89).*

*[தீ + உறு - தீக்குறு → தீகுறு-.]*

**தீங்கனி** *tīṅ-kaṉi*, பெ. (n.) இனிய பழம்; delicious fruit. "தீங்கனி நாவல்" *(மணி. 9,10).*

*[தீம் + கனி - தீம்கனி → தீங்கனி]*

**தீங்கு** *tīṅgu*, பெ. (n.) *1.* தீமை (பிங்.); evil, injury, harm; crime. "தீங்கு செய்தன்னமே" *(அகநா. 112).* *2.* துன்பம்; misfortune, calamity, distress. "தீங்கணைந்தோ ரல்லுந் தேறாய்" *(திருக்கோ. 179).* *3.* குற்றம் (பிங்.); fault, defect, blemish.

*[தீ → தீமை → தீயின் தன்மை. தீ → தீங்கு]*

**தீச்சகுனம்** *ti-c-cagunam,* பெ. (n.) தீக்குறி *(சங்அக.);* evil omen.

*[தீ + சகுனம்]*

**தீச்சகுனப்பறவை** *ticcaguna-p-paravai,* பெ. (n.) *சாக்குருவி;* bird, foreboding one's approaching dealt by its peculiar cry.

*[தீ + சகுனப்பறவை]*



**தீச்சட்டி** *ti-c-catti,* பெ. (n.) *1. கணப்புச் சட்டி;* fire pan, chating dish. *2.* வேண்டுதலாக எடுக்கும் *தீச்சட்டி;* fire pet carried in fulfilment of a vow.

*[தீ + சட்டி]*



**தீச்சடம்** *ti-c-cadam,* பெ. (n.) சிறுநீர் *(சங்அக.);* urine.

*[தீ + சடம்]*

**தீச்சலம்** *ti-c-calam,* பெ. (n.) கடல் நுரை *(சாஅக.);* see froth *(மீன்பிடி. தொ.சொல்.).*

*[தீ + சலம்]*

**தீச்சனகம்** *ti-c-canagam,* பெ. (n.) இருப்பை *(சங்அக.);* South Indian mahua.

*[தீ + சனகம்]*

**தீச்சனம்** *ti-c-canam,* பெ. (n.) மிளகு *(மலை.);* pepper.

*[தீ + சனம்]*

**தீச்சார்பு** *ti-c-carbu,* பெ. (n.) *1. தீயோருடனாய தொடர்பு;* association with the wicked. *2. தீய குணம்;* vicious propensity evil tendencies.

*[தீ + சார்பு]*

**தீச்சுட்டகாந்தல்** *ti-c-cutta-kantal,* பெ. (n.) நெருப்பினால் நேர்ந்த *அழற்சி;* burning sensation due to fire-burns.

*[தீ + சுட்டசாந்தல்]*

**தீச்சுட்டபுண்** *ti-c-cutta-p-pun,* பெ. (n.) தீயினால் *நேர்ந்தபுண்;* ulcer caused by fire-burns. *(சாஅக.).*

*[தீ + சுட்டபுண்]*

**தீச்சுடர்** *ti-c-cudar,* பெ. (n.) *1. நெருப்புச் சுடர்;* flame. "தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்" *(நீதிநெறி. 19).* *2.* வெடியுப்பு *(மூஅ.);* saltpetre.

*[தீ + சுடர்]*

**தீச்சுரண்டி** *ti-c-curandi,* பெ. (n.) நெருப்பைச் *சுரண்டி எடுக்கப் பயன்படுத்தும் ஒரு கருவி;* an inrom grating used as a scrapper for removing fire from a furnace *(சாஅக.).*

*[தீ + சுரண்டி]*

**தீச்சுரம்** *ti-c-curam,* பெ. (n.) *1. பித்தக் காய்ச்சல்;* biblious ferver. *2. மிகுதியான காய்ச்சல்;* burning fever *(சாஅக.).*

*[தீ + சுரம்]*

**தீச்சொல்** *ti-c-col,* பெ. (n.) *பழிச்சொல்;* slander, evil word. "தாங்கல் கடனாகுந் தலைசாய்க்கவரு தீச்சொல்" *(சீவக. 498).*

*[தீ + சொல்]*

**தீசல்** *tišal,* பெ. (n.) *1. சமையலிற் கருகியது;* that which is overcooked or burnt. *2. தீய குணத்தினன்;* bad-tempered person.

*[தீயல் → தீசல்]*

**தீசற்றனம்** *tišarranam,* பெ. (n.) *1. தீக்குணம்;* wickedness. *2. தாராளமின்மை;* illiberal nature.

*[தீசல் + தனம்]*

**தீஞ்சுபோ-தல்** *tīñcu-pō-*, செ.கு.வி. (v.i.) தீ² பார்க்க; see *tī*; flame.

*[தீய்ந்து + போ → தீஞ்சுபோ-.]*

**தீஞ்சுவை** *tīñcuvai*, பெ. (n.) சுவைக்கத் தித்திப்பானது; நற்சுவை; sweet to taste (சா.அக.).

*[தீம் + சுவை]*

**தீஞ்சேற்றுக்கடிகை** *tīñ-cēṟṟu-kaḍikai*, பெ. (n.) கண்ட சருக்கரைத்தேறு; sugar candy. "அமிர்தியன் றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்" *(மதுரைக். 532).*

*[தீம் + சேற்றுக்கடிகை]*

**தீஞ்சேறு** *tīñ-cēṟu*, பெ. (n.) இனிய பாகு; molasses, treack, syrup. "கரையுறு கரும்பின் றீஞ்சேற் றியாணர்" *(பதிற்றுப். 75,6).*

*[தீம் + சேறு]*

**தீஞ்சொல்** *tīñcol*, பெ. (n.) இன்மொழி; sweet words. "இளிகொண்ட தீஞ்சொல்" *(பு.வெ. 1, 15).*

*[தீம் + சொல்]*

**தீட்டக்கல்** *tīṭṭa-k-kal*, பெ. (n.) 1. சாணைக்கல்; white stone. 2. மாக்கல்; marble stone (சா.அக.).

**தீட்டக்காரி** *tīṭṭa-k-kāri*, பெ. (n.) தீட்டுக்காரி பார்க்க; see *tīṭṭu-k-kāri*.

*[தீட்டுக்காரி → தீட்டக்காரி]*

**தீட்டடங்கல்** *tīṭṭaḍaṅkal*, பெ. (n.) மாதவிடாய் நின்றுபோகை; menopause, failure of menstrual discharge, amenorrhcea (செ.அக.).

*[தீட்டு + அடங்கல்]*

**தீட்டணசாரம்** *tīṭṭaṇa-šāram*, பெ. (n.) இலுப்பை (மலை.); South Indian mahua.

**தீட்டணம்** *tīṭṭaṇam*, பெ. (n.) கஞ்சாங்கோரை (மலை.); white basil.

*[தீட்டு + அணம்]*

**தீட்டம்** *tīṭṭam*, பெ. (n.) 1. தீட்டு1 பார்க்க; see *tīṭṭu*. 2. மலம், பீ; faeces.

*[தீட்டு + அம் - தீட்டம்]*

**தீட்டரிசி** *tīṭṭarici*, பெ. (n.) தவிடு நீக்கிய அரிசி; cleansed, polished rice (செ.அக.).

*[தீட்டு + அரிசி]*

**தீட்டல்** *tīṭṭal*, செ.குன்றாவி. (v.t.) 1. தடவுதல்; to massage. "செம்புனல் வந்தங் கடிவருட" *(தேவா. 112, 5).* 2. கோதுதல்; to smooth as the hair. (கழக.த.அக.). 3. அரிசியைத் தவிடு போகக் குற்றுதல்; to remove bran and polish as rice by pounding.

**தீட்டலரிசி** *tīṭṭalarišī*, பெ. (n.) தீட்டரிசி பார்க்க; see *tīṭṭarišī*.

*[தீட்டல் + அரிசி]*

**தீட்டா-தல்** *tīṭṭā-*, செ.கு.வி. (v.i.) 1. தூய்மை யின்மை அடைதல்; to be defiled, polluted. 2. மாத விடாயாதல்; to be in one's periods, as a woman (செ.அக.).

*[தீட்டு + ஆதல்]*

**தீட்டிப்பார்-த்தல்** *tīṭṭi-p-pār-*, செ.குன்றாவி. (v.tr.) கல்வி முதலியவற்றைச் ஆய்வு செய்தல்; to test, as one's learning by question (செ.அக.).

**தீட்டு¹-தல்** *tīṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கூராக்குதல்; to whet, as a weapon; to sharpen or rub lenies on a board. "தீட்டு மிலைவலி வேலண்ணலே" *(வெங்கைக்கோ. 232).* 2. துலக்குதல்; to purify, polish. 3. அரிசி குத்திச் தூய்மை செய்தல்; to remove bran and polish, as rice by pounding. 4. பூசுதல்; to rub; smear, anoint. "தீட்டினார் நறுஞ் சாந்தமும்" *(சூளா. தூது. 41).* 5. கோதுதல்; to smooth, as the hair. "கூந்த றீட்டி" *(புறநா. 62).* 6. எழுதுதல் (பிங்.); to write inscribe. "தொண்டையுந் தீட்டி" *(திருக்கோ. 79).* 7. சித்திரித்தல்; to paint, draw pictures. "உருவமெய்த் தோன்றத் தீட்டிரும் பலகையிற் றிருத்தி" *(பெருங். உஞ்சைக். 33, 112).* 8. சொல்லுதல்; to express. "தெவ்வ ரம்பனைய சொல் தீட்டினான்" *(கம்பரா. நகர்நீங். 1677).* 9. அடித்தல்; to belabour, thrash. அவனை நன்றாய்த் தீட்டினான் (செ.அக.).

**தீட்டு²-தல்** *tīṭṭu-*, செ.குன்றாவி. (v.t.) சாத்துதல்; to wear. "எழின்முடி தீட்டினானே" *(சீவக. 2641).*

*[தீண்டு → தீட்டு-.]*

**தீட்டு³** *tīṭṭu*, பெ. (n.) 1. கூராக்குகை; whetting, "தீட்டமை கூர்வாள்" *(பெருங். உஞ்சைக். 42, 22).*

2. சீட்டு; ola note, slip. "கையெழுத்திட்ட தீட்ட தன்றோ" (மதுரை. பதிற். 67). 3. பூச்சு; plastering. "தீட்டார் மதில்" (திருவாசக. 8,6). 4. அடி; blow, stroke, cut. அவனை நல்ல தீட்டுத் தீட்டினான். 5. தூய்மை; cleaning, polishing. இந்த அரிசிக்குத் தீட்டுப் போதாது (செ.அக.).

[தீண்டு → தீட்டு]

**தீட்டு**[4] *tittu*, பெ. (n.) 1. தீண்டுகை; touching. "ஒட்டுத் தீட்டுக் கலப்பினிர்" (சி.சி.பா. ஆசிவக. 8). 2. மகப்பேறு, சாவு முதலியவற்றால் உண்டாவதாகக் கருதப்படும் கெடுதல்; defilement, pollution, as from catanvin child birth, death of a relation. "பல தீட்டுக்கு முழுக்கொன்று" (இராமநா. உயுத். 113). 3. மாதவிடாய்; woman's monthly course (செ.அக.).

**தீட்டுக்கல்** *tittu-k-kal*, பெ. (n.) சாணைக்கல்; whet-stone, hone.

[தீட்டு + கல்]



**தீட்டுக்கவி** *tittu-k-kavi*, பெ. (n.) சீட்டுக்கவி; epistle in verse. "அந்தத் தீட்டுக்கவி காட்டுக்கெறிந்த நிலவாகிப்போம்" (தமிழ்நா. 255).

[சீட்டுக்கவி → தீட்டுக்கவி]

**தீட்டுக்கழித்தல்** *tittu-k-kalittal*, பெ. (n.) இறப்பு, மாதவிடாய் பிள்ளைப் பேறு காலங்களில் ஏற்படும் தூய்மைக்கேட்டைத் தலைமுழுக்கு, வீட்டைத் துப்புரவுபடுத்துதல், முதலிய முறையால் தூய்மையாக்குதல்; removing the pollution caused by child birth, death, puberty etc., ceremonically by bathing, cleaning, etc. (சா.அக.).

[தீட்டு + கழித்தல்.]

**தீட்டுக்காரி** *tittu-k-kāri*, பெ. (n.) 1. மாதவிடாய் கொண்டவள்; a woman in her periods. 2. தொற்றுள்ளவள்; a woman in pollution.

[தீட்டு + காரி]

**தீட்டுக்குற்றி** *tittu-k-kurri*, பெ. (n.) கருவி தீட்டுந் தடி (யாழ்.அக.); wood used as whetting-rod.

[தீட்டு + குற்றி]



**தீட்டுக்குறி** *tittu-k-kurri*, பெ. (n.) ஓலைச்சீட்டு வகை (T.A.S. V. 208.); ōla chit, note.

[தீட்டு + குறி]

**தீட்டுக்கோல்** *tittu-k-kōl*, பெ. (n.) எழுதுகோல்; brush used in painting (செ.அக.).

[தீட்டு + கோல்]



**தீட்டுத்தடி** *tittu-t-tadi*, பெ. (n.) தீட்டுக்குற்றி (யாழ்.அக.) பார்க்க; see *tittu-k-kurri*.

[தீட்டு + தடி]

**தீட்டுத்தொடக்கு** *tittu-t-todakku*, பெ. (n.) தீட்டு 3,2 பார்க்க; see *tittu 3, 2.*

[தீட்டு + தொடக்கு]

**தீட்டுப்பலகை** *tiṭṭu-p-palagai,* பெ. (n.) கத்தி முதலியன திட்டும் பலகை; a board of plap for sharpening drive or other instruments (செ.அக.).

[தீட்டு + பலகை]

**தீட்டுமரம்** *tiṭṭu-maram,* பெ. (n.) திட்டுப்பலகை பார்க்க; see *tiṭṭu-p-palagai.*

[தீட்டு + மரம்]

**தீட்டுமனை** *tiṭṭu-maṉai,* பெ. (n.) நாட்டு ஓடுகள் வளைவாக உருவாக்கப் பயன்படும் மரப் பலகை (செங்.வழ.); a wooden piece used for bending the earthern roof.

[தீட்டு + மனை]

**தீட்டுலக்கை** *tiṭṭulakkai,* பெ. (n.) அரிசிதிட்ட உதவும் உலக்கை வகை; pestle used for cleaning rice (செ.அக.).

[தீட்டு + உலக்கை]

**தீட்டுவீடு** *tiṭṭu-vīḍu,* பெ. (n.) பிள்ளைப் பிறப்பால் அல்லது இறப்பால் தூய்மை யிழந்த வருத்தந் தோய்ந்த வீடு; house considered polluted from child birth-death (சா.அக.).

[தீட்டு + வீடு]

**தீட்டொழிவு** *tiṭṭoḻivu,* பெ. (n.) மாதவிடாய் நின்று போகை; the stopping of the menses entiely, the change of life menopause.

[தீட்டு + ஒழிவு]

**தீட்பானவன்** *tiṭpāṉavaṉ,* பெ. (n.) இழிஞன் (ய); low degraded peoen; one who has disgraced himself.

[தீட்பு + ஆனவன்]

**தீட்பு** *tiṭpu,* பெ. (n.) 1. இழிவு (யாழ்.அக.); bascres, degradation; inferiority. 2. ஒழுக்கத்தில் உண்டான வடு; stizma an one's character (செ.அக.).

[தீண்டு → தீட்பு]

**தீண்டமாழ்கி** *tiṇḍa-māḻgi,* பெ. (n.) தொட்டால் வாடி (நீலகேசி, 365 உரை); a sensitive plant.



[தீண்ட + மாழ்கி]

**தீண்டல்**[1] *tiṇḍal,* பெ. (n.) தீட்டு, 3 பார்க்க; see *tiṭṭu* (செ.அக.).

[தீண்டு → தீண்டல்]

**தீண்டல்**[2] *tiṇḍal,* பெ. (n.) வயல்; field. "பிரமராயன் தீண்டலில்" (S.I.I. vii, 3).

[தீண்டு → தீண்டல்]

**தீண்டலதிகம்** *tiṇdal-adigam,* பெ. (n.) பெரும்பாடு என்னும் நோய்; excessive flow of the monthly courses, menorrhagia.

[தீண்டல் + அதிகம்]

**தீண்டாதபொழுது** *tiṇḍāta-poḻudu,* பெ. (n.) மகளிர் மாதவிடாய்க் காலம் (நேமி.நா. 10, உரை); the period of mensus, when pollution is observed.

[தீண்டாத + பொழுது]

**தீண்டாநெருப்பு** *tiṇḍā-neruppu,* பெ. (n.) கற்புக்கரசி; woman of unapproachable chastity தொடுதற்கரிய நெருப்புப் போல் தன் ஒழுக்கத்தில் மேம்பட்டு இருத்தலால் இவ்வாறு குறிக்கப் பட்டாள்.

[தீண்டு + ஆ + நெருப்பு]

**தீண்டியம்** *tiṇḍiyam,* பெ. (n.) பவளக்குறிஞ்சி (மலை.); small oval acute-leaved crape myrtle. .

**தீண்டு-தல்** *tiṇḍu-,* 5 செகுவி. (v.t.) 1. தொடுதல்; to touch, feel, come in contact with. "எங்கோலந் தீண்ட வினி" (பு.வெ. 9, 50). 2. தீட்டுப்படுத்துதல்; to pollute by contact; to defile, contaminate by

touching. 3. பாம்பு முதலியன அடித்தல்; to infuse poison, envenom, as a snake by biting. "பதுமையைப் பாம்பு தீண்டிற் றென்றலும்" (சீவக. 1273). 4. பற்றுதல்; to catch, seize, hold of "தீப்பிணி தீண்ட லரிது" (குறள். 227). 5. அடித்தல்; to beat. "கொம்பின் வீயுகத் தீண்டி" (அகநா. 21).

**தீத்தகம்** *tittagam*, பெ. (n.) பொன் (யாழ்.அக.); gold.

**தீத்தட்டி** *tī-tatti*, பெ. (n.) தீத்தட்டிக்கல் (யாழ்.அக.) பார்க்க; see *tī-tatti-k-kal.*

[தீ + தட்டி]

**தீத்தட்டிக்கல்** *tī-t-tatti-k-kal*, பெ. (n.) சிக்கி முக்கிக்கல் (சங்.அக.); strike-a-light, flint stone.

[தீத்தட்டி + கல்]

**தீத்தட்டிக்குடுக்கை** *tī-t-tatti-k-kudukkai*, பெ. (n.) தீத்தட்டிக்கல் (யாழ்.அக.) பார்க்க; see *tī-tatti-k-kal.*

[தீத்தட்டி + குடுக்கை]

**தீத்தட்டிவளையம்** *tī-t-tatti-valaiyam*, பெ. (n.) சிக்கிமுக்கி தட்டும் இரும்பு வளையம் (யாழ்.அக.); a bund piece of iron used with strike-a-light.

[தீத்தட்டி + வளையம்]

**தீத்தந்திடும்புண்** *tī-t-tantidum-pun*, பெ. (n.) நெருப்புச்சுட்ட புண்; ulcer caused by fire; burns (சா.அக.).

[தீ + தந்திடும் + புண்]

**தீத்தரசம்** *tittarašam*, பெ. (n.) நாங்கூழ் வகை (யாழ்.அக.); a kind of earth worm.

**தீத்தருகோல்** *tittaru-kōl*, பெ. (n.) தீக்கடை கோல் (சூடா.) பார்க்க; see *tikkadai-kōl.*

[தீ + தருகோல்]

**தீத்தலோகம்** *titta-lōgam*, பெ. (n.) 1. வெண் கலம்; bell-metal. 2. நிறம்; colour. 3. மாந்தளிர்க் கல்; a kind of green stone (செ.அக.).

**தீத்தா** *tittā*, பெ. (n.) வட்டத் திருப்பி (மலை.); kidney-leaved practeale moon-seed.

**தீத்தாங்கம்** *tittāṅgam*, பெ. (n.) மயில் (யாழ்.அக.); peacock.

**தீத்தாங்கி** *tittāṅgi*, பெ. (n.) 1. வாயில் நிலைமேல் படுத்தமைக்கப்பட்ட தீத்தடுக்கும் பலகை; fire fender, masonary projection to protect a door way from fire. 2. அடுப்பிலிருந்து எழும் தீயானது மேற்கூரையிற் சென்று தாக்காத படியும், விறகு முதலியன வைத்துக் கொள்ள உதவும் படியும் அடுப்பின்மீது சற்றொப்ப 5 அடி உயரத்தில், அமைக்கப்பட்டுள்ள பரண்; a mantelpiece or mantelshelf intended mainly for preventing the sparks shot off from the oven from reaching the roof and also for preserving cut fuel and other thing that require to be kept warm.

[தீ + தாங்கி]

**தீத்தி** *titti*, பெ. (n.) 1. ஒளி; brightness; 2. அழகு; beauty. 3. வெண்கலம்; bell-metal (செ.அக.).

**தீத்தியம்** *tittiyam*, பெ. (n.) அரத்தை (மலை); galangal.

**தீத்திரள்** *tittiral*, பெ. (n.) ஊழித் தீ (பிங்.); conflagration at the end of a karpam.

**தீத்திறம்** *tī-t-tiram*, பெ. (n.) 1. கொலை முதலிய தீச்செயல்; murder, heinous deed. "தீத்திறம் புரிந்தோன் செய்துயர் நீங்க" (சிலப். 115, 71). 2. தீவளர் செய்பாடு; fire sacrifice. "தீத்திறம் புரிந்தோன் செப்பக் கேட்டு" (சிலப். 11, 57).

[தீ + திறம்]

**தீத்தீண்டல்** *tī-t-tīndal*, பெ. (n.) மணச்சடங்கு வகை; a marriage ceremony (செ.அக.).

[தீ + தீண்டல்]

**தீத்தெய்வம்** *tī-t-teyvam*, பெ. (n.) தீக்கடவுள் (சூடா.) பார்க்க; see *tī-k-kadavul.*

[தீ + தெய்வம்]

**தீத்தொழில்** *tit-t-tolil*, பெ. (n.) 1. தீச்செயல்; evil deed, sinful deed. "தீத்தொழிலே கன்றி" (நாலடி. 551). 2. தீவளர் செய்கை; fire sacrifice. "மறைவல்லார்கள் தீத்தொழில் பயிலும்" (திவ். பெரியதி. 4, 5, 3).

[தீ + தொழில்]

**தீதி** *titi*, பெ. (n.) வேட்கை (யாழ்.அக.); thirst.

**தீது** *tītu,* பெ. (n.) *1.* தீமை; evil, vice. "நன்றிது தீதென" *(திருவாச. 49, 2).* **2.** குற்றம்; fault, blemish, defeat. "தீதுதீர் நியமத்து" *(திருமுரு. 70).* *3.* **தீச்செயல்;** sinful deed. "உள்ளத்தா லுள்ளலுந் தீதே" *(குறள். 282).* *4.* **துன்பம்;** suffering, distress. "தீதுண்டோ மன்னு முயிர்க்கு" *(குறள். 190).* *5.* இடையூறு; difficulty, hindrance. "தீதின் றுருள்கநீ யேந்திய திகிரி" *(மணி. 22, 16).* *6.* **சாவு;** death. "நின்மகன் றீதி னீங்கினான்" *(சிவக. 32).* **7.** கேடு; ruin. "அன்ல் கனற்றத் தீதுறும் பஞ்சியின் உபதேசகா" *(சிவவிரத. 160).* **8.** **உடம்பு** *(சிலப். 19, 66, உரை);* body.

*[தீமை → தீது]*

**தீதை** *tītai,* பெ. (n.) *1.* இளைஞை; girl. *2.* அறிவு; intelligence *(செ.அக.).*

**தீந்தமிழ்** *tīn-tamil,* பெ. (n.) இனிய தமிழ்; sweet elegant Tamil. "தீந்தமிழ் வேந்த னரிகேசர்" *(இறை. 3, பக்.47).*

*[தீம் + தமிழ்]*

**தீந்தா** *tīntā,* பெ. (n.) எழுதற்குரிய மசி; Ink.

**தீந்தாக்கூடு** *tīntā-k-kūḍu,* பெ. (n.) மசிக்கூடு; ink bottle *(செ.அக.).*

*[தீந்தா + கூடு]*

**தீந்தாச்சரக்கு** *tīntā-c-carakku,* பெ. (n.) அன்னபேதி (புதுவை.); green vitriol.

*[தீந்தா + சரக்கு]*

**தீந்துபோ-தல்** *tīntu-pō-,* செ.குன்றாவி (v.t.) கரிந்து போதல்; seething over the fire *(சா.அக.).*

*[தீர்ந்து + போதல் - தீர்ந்துபோதல் → தீந்துபோ-]*

**தீந்தொடை** *tīn-toḍai,* பெ. (n.) யாழ் நரம்பு; strike of a lute. "தீந்தொடை மகரவீணை" *(சீவக. 608).* *2.* **யாழ்;** lute. "தீந்தொடையின் சுவை" *(சீவக. 1328).* **3.** தேனடை; beehive. "தீந்தொடைத் தேனினம்" *(பெருங். வத்தவ. 3, 80).*

*[தீம் + தொடை]*

**தீநட்பு** *tī-naṭpu,* பெ. (n.) தீயாரொடுளதாகிய நட்பு (குறள். அதி, 32); evil association.

*[தீ + நட்பு]*

**தீநா**[1] *tīnā,* பெ. (n.) **1.** கப்பல் திசை தப்பாமலிருத்தற்காகப் பனைகளைக் காலாக நாட்டி அதன்மீதே மண்ணிட்டு எரிக்கும் விளக்கு *(சிலப். 6, 143, உரை);* a large lamp lighted on an earthen vessel and mouted on palmyra trunks, used in ancient days as a signal for mariners. *2.* கப்பலிலாவது கரையிலாவது கப்பலோட்டிகளுக்கு எச்சரிக்கை யடையாளமாக எரிக்கப்படும் தீப்பந்தம் *(வின்.);* lighted torch kept either on ships or on shore, as a signal *(செ.அக.).*

*[தீ + நா]*

**தீநாக்கு** *tī-nākku,* பெ. (n.) *1.* தீயின் நாக்கு; flame, as the tongue of fire. *2.* கருநாக்கு; tinn. evil tongue *(செ.அக.).*

*[தீ + நாக்கு]*

**தீநாய்** *tīnāy,* பெ. (n.) இடுகாட்டில் திரியும் நாய்; dog that frequents the burning ground. "தீநா யுடையக் கவ்வி" *(மணி. 6, 114).*

*[தீ + நாய்]*

**தீநாற்றம்** *tī-nāṟṟam,* பெ. (n.) முடை; bad smell *(கழ.தமி.அக).*

**தீநிமித்தம்** *tīnimittam,* பெ. (n.) தீக்குறி; evil omen *(செ.அக.).*

*[தீ + நிமித்தம்]*

**தீநிறம்** *tīniṟam,* பெ. (n.) துளிர்க்கல்; dark red stone *(சா.அக.)*

*[தீ + நிறம்]*

**தீநீர்** *tī-nīr,* பெ. (n.) *1.* **நன்னீர்;** sweet, pure water. "சுனைகொ டீநீர் சோற்றுலைக் கூட்டும்" *(அகநா. 169).* **2.** மருந்துக்குதவும் வடிநீர்; medicated, filtered water. *3.* இனிய இளநீர்; sweet liquid of the tender coconut. "தாழைத் தீநீரோடு" *(புறநா. 24).*

*[தீம் + நீர்]*

**தீநுரை** *tī-nurai,* பெ. (n.) கடல்நுரை (யாழ்.அக.); cuttle bane.

*[தீ + நுரை]*

**தீப்பசி** *tī-p-paši,* பெ. (n.) கொடும்பசி; pinching hunger. "தீப்பசி மாக்கட்குச் செழுஞ்சோ றீத்து" (மணி. 18, 117).

*[தீ + பசி]*

**தீப்படு-தல்** *tī-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) 1. நெருப்புப் பற்றுதல்; to catch fire. 2. இறத்தல்; to die, a term used in reference to kings. தீப்பட்டுப்போன மாமன்னர்!.

தெ. தீப்படுக

*[தீ + படு-]*

**தீப்படை** *tī-p-paḍai,* பெ. (n.) தீக்கடவுளின் அம்பு; missile of the fire-god. "தீப்படைப் பினை மாற்றிக் கந்தபு" (மூன்றாநாட்பானு. யுத். 93).

*[தீ + படை]*

**தீப்பந்தங்கோயில்** *tī-p-pandaṅ-kōyil,* பெ. (n.) உடன்கட்டையேறிய தொட்டிய மகளிர் பொருட்டு எடுக்கப்பட்ட மண்டபம்; tone erected in honour of tottia widows who have performed sati (செ.அக.).

*[தீ + பந்தங்கோவில்]*

**தீப்பள்ளயம்** *tī-p-paḷḷayam,* பெ. (n.) அம்மன் கோயில் திருவிழாவில் ஆண்டுதோறும் பூக்குழியிறங்கும் நிகழ்ச்சி (செந்., 10,24); the annual festival of walking on a fire-pit the presense of Tiraupadi-y-amman.

*[தீ + பள்ளயம்]*

**தீப்பற்று-தல்** *tī-p-paṟṟu-,* செ.கு.வி. (v.i.) நெருப்புப் பற்றுதல்; to catch fire, as a house. வீடு தீப்பற்றியது.

*[தீ + பற்று-]*

**தீப்பறக்கத்தேய்-த்தல்** *tī-p-paṟakka-t-tēy-,* செ.குன்றாவி. (v.t.) உடம்பில் சூடு உண்டாகும்படி தேய்த்தல்; body with oil as to cause heat on the body (சா.அக.).

*[தீ + பறக்கத்தேய்-]*

**தீப்பற-த்தல்** *tī-p-paṟa,* செ.கு.வி. (v.i.) 1. பரபரப்பாய் நடத்தல்; to proses in full vigour. 2. கடுமையாதல்; to be oppressive as the rule of a martinet.

*[தீ + பற-]*

**தீப்பறவை** *tī-p-paṟavai,* பெ. (n.) நெருப்புக் கோழி; ostrich (செ.அக.).

*[தீ + பறவை]*

**தீப்பாய்-தல்** *tī-p-pāy-,* செ.கு.வி. (v.i.) தீயிற் பாய்தல்; to pluge into flarres, as a wife on the funeral pure of her husband. "பெருங் கோப் பெண்டு தீப்பாய்வாள்" (புறநா.246ி).

*[தீ + பாய்-]*

**தீப்பால்** *tī-p-pāl,* பெ. (n.) தீவினைகள்; signful deed (கோ.தமி.அக).

**தீப்பி** *tippi,* பெ. (n.) நெருப்பு (யாழ்.அக.); fire.

**தீப்பிடி-த்தல்** *tī-p-piḍi-,* செ.கு.வி, (v.i.) தீப்பற்று பார்க்க; see *tī-p-paṟṟu.*

*[தீ + பிடி-]*

**தீப்பிணி** *tī-p-piṇi,* பெ. (n.) 1. கொடிய நோய்; malignant disease. "பசியென்னுந் தீப்பிணி" (குறள். 227). 2. காய்ச்சல்; fever. "தென்னட லுற்ற தீப்பிணி" (தேவா. 858, 11).

*[தீ + பிணி]*

**தீப்பியம்** *tippiyam,* பெ. (n.) 1. ஓமம் (மலை); bishop's weed. 2. தீச்சுடர் (யாழ்.அக.); flame.

**தீப்பிரகாசி** *tippirakāši,* பெ. (n.) குங்கிலியம் (மலை.); Australian dammer.

**தீப்பிரம்** *tippiram,* பெ. (n.) வெளிச்சம் (யாழ்.அக.); brilliance.

**தீப்பிரயகம்** *tippirayakam,* பெ. (n.) தீப்பியம் பார்க்க; see *tippiyam.*

**தீப்பு** *tippu,* பெ. (n.) தீயாற் கருக்குகை (சங்.அக.); seorching, blackening by fire.

*[தீ → தீப்பு]*

**தீப்புட்பம்** *tī-p-puṭpam,* பெ. (n.) சண்பகப்பூ (சங்.அக.); champak flower.

*[தீ + புட்பம்]*

**தீப்புண்** *tī-p-puṇ,* பெ. (n.) தீயாற் சுட்ட புண் (சங்.அக.); burn; scald. தீப்புண் ஆறும், வாய்ப்புண் ஆறாது.

*[தீ + புண்]*

**தீப்புண்களிம்பு** *tī-p-puṇ-kaḷimbu*, பெ. (n.) சுற்சுண்ணாம்பு தெளிந்த நீரும் தேங்காய் எண்ணெயும் சரி எடை எடுத்துக் குலுக்கித் துணியில் நனைத்துப் புண்ணுக்குப் போடும் மருந்து; an oinment or emulsion made of lime water calcium hydroxide and coconut oil in equal parts. This can be applied to burns or scalds (சா.அக.).

*[தீ + புண் + களிம்பு]*

**தீப்புத்தோளார்** *tī-p-pu-t-tōḷār*, பெ. (n.) உறுப்பாற் பெயர் பெற்ற கழகக் காலப் புலவர்; a poet who lived in sangam age.

குறுந்தொகையின் முதற் பாடல் இவர் எழுதியதேயாகும்.

**தீப்பூச்சி** *tī-p-pūcci*, பெ. (n.) மின்மினிப்பூச்சி; fire-fly.

*[தீ + பூச்சி]*

**தீப்பூடு** *tippūḍu*, பெ. (n.) 1. நீர்மேல் நெருப்பு; fire on water blishtering ammonia. 2. புல்லுருவி; stone melting plant. 3. கொப்புளம் எழுப்பும் பூடு; any plant the paste of which when applied causes blister cantharids. (சா.அக.)

*[தீ + பூடு]*

**தீப்பெட்டி** *tippeṭṭi*, பெ. (n.) தீக்குச்சியடைத்த பெட்டி; match box (செ.அக.).

ம. தீப்பெட்டி

*[தீ + பெட்டி]*

**தீப்பொறி** *tippoṟi*, பெ. (n.) அனற் பொறி; spark of fire. "தீப்பொறி யொன்றால்" (சீவரக. அபுத்திபூருவ. 4).

ம. தீப்பொறி

*[தீ + பொறி]*

**தீப்போக்கு** *tippōkku-cempon*, பெ. (n.) புடமிடப்பட்ட தூய பொன்; pure refined gold.

*[தீ + போக்கு]*

**தீப்போடு-தல்** *tippōḍu-*, செ.குன்றாவி. (v.t.); நெருப்பிற் சுடுதல்; to burn.

*[தீ + போடு-]*

**தீப்போடுதல்** *tī-p-pōḍudal*, பெ. (n.) 1. கொடுஞ் செயல் புரிதல்; to do cruel cets. 2. சினத்தல்; to be angry.

*[தீ + போடுதல்]*

**தீபம்** *tīpam*, பெ. (n.) தீவு (பிங்.) பார்க்க; see *tīvu*. "ஆறுந் தீபமு மடையா விடனும் பெருங்" (நரவாண. 4, 78).

*[தீ → தீபம்]*

**தீபு** *tīpu*, பெ. (n.) தீவு பார்க்க; see *tīvu*. "ஏழ்தீபாலடங்காத புகழ்வீர" (பாரத. இராச. 15).

**தீம்** *tīm*, பெ. (n.) 1. இனிமை; pleasantness, sweetness. "தீங்கதிர்த் தோற்றமென்னவே" (சீவக. 2415). 2. அமுது; nectar. வி.உ. (adj.) இனிய; sweet. "நெடுநலுந் தீம்பல மொழிந்த" (அகநா. 239).

*[தேம் → தீம் (வே.க. 161)]*

**தீம்பண்டம்** *tīm-paṇḍam*, இனிய தின்பண்டம்; sweets, eatables.

*[தீம் + பண்டம்]*

**தீம்பன்** *tīmbaṉ*, பெ. (n.) 1. கெட்டவன்; wicked man. "தீம்பரை நல்லவராக்கி" (தமிழ்நா. 236). 2. கீழ்மகன் (சூடா.); base fellow.

*[தீம்பு → தீம்பன்]*

**தீம்பி** *tīmpi*, பெ. (n.) தீயவள்; wicked woman.

*[தீம்பு → தீம்பி]*

**தீம்பு**[1] *tīmpu*, பெ. (n.) 1. குறும்பு; wickedness; mischief. "பிள்ளைகளும் நானுமாய்த் தீம்பு செய்து திரிகிற விடத்தில்" (ஈடு. 5, 6, 6). 2. கேடு; evil. "உன்றலை தனக்குத் தீம்புவரும்" (அருட்பா. 6, தான்பெற்ற. 17).

*[தீம்பு → தீம்பு]*

**தீம்பு**[2] *tīmpū*, பெ. (n.) 1. ஒருவகை மரம்; a tree. "தீம்பூமரக் கருப்பூரச் சோலை" (சீவக. 1497). 2. மணப் பொருட்களுளொன்று (சீவக. 838, உரை); a fragrant substance.

*[தீம் + பூ]*

**தீம்புகை** *tīmpukai,* பெ. (n.) நறும்புகை; sweet smell.

*[தீம் + புகை]*

**தீம்புழல்** *tīmpuḻal,* பெ. (n.) 1. இனிய பணியாரம்; sweet pastry. "தீம்புழல் வல்சி" *(மதுரைக். 395).* 2. இருப்பைப்பூ; mahua flower. "தீம்புழ லுணீஇயக் கருங் கோட்டிருப்பையூரும் பெருங் கை யெண்கின்" *(அகநா. 17).*

*[தீம் + புழல்]*

**தீம்புளி** *tīmpuḷi,* பெ. (n.) கருப்புக்கட்டி கூட்டிப் பொரித்த புளி; tamarind cured with jaggery. "இருங் கழிச் செறுவிற் றீம்புளி வெள்ளுப்பு" *(மதுரைக். 318).*

*[தீம் + புளி]*

**தீமகம்** *tīmagam,* பெ. (n.) எதிரி இறக்க வேண்டிச் செய்யும் வேள்வி (ஆபிசாரயாகம்); a kind of sacrificial rite for comparing the death of an enemy. "முனிவர் ... தீமகத்தைச் செய்தார்" *(கந்த. ததீசி. 99).*

*[தீ + மகம்]*

**தீமடு-த்தல்** *tī-maḍu,* செ.கு.வி. (v.i.) 1. நெருப்பு மூட்டுதல்; to kindle fire. "கொலைஞ ருலையேற்றித் தீ மடுப்ப" *(நாலடி. 331).* 2. நெருப்பிலிடுதல்; to throw into the fire.

*[தீ + மடு-]*

**தீமலம்** *tīmalam,* பெ. (n.) கரி (யாழ்.அக); coal.

*[தீ + மலம்]*

**தீமானம்** *tīmāṉam,* பெ. (n.) மானக்கேடு; disgrace, dishonour. "தம்பிமார் தீமானஞ் செய்ததனாற் றீங் குண்டோ" *(பாரதவெண். உத்தி 121).*

**தீமிதி** *tī-midi,* பெ. (n.) வேண்டுதலின் பொருட்டுத் தழல் பரப்பிய நெருப்புக் குழியில் நடக்கை; walking on a fire-pit, performed in fulfilment of a vow.

*[தீ + மிதி]*

**தீமுகம்** *tīmukam,* பெ. (n.) உலை முகம்; fire face.

*[தீ + முகம்]*

**தீமுரன்பச்சை** *tīmuraṉ-paccai,* பெ. (n.) சந்தனவகை (சிலப். 14, 108, உரை); a kind of sandal wood.

**தீமுறி** *tī-muṟi,* பெ. (n.) நச்சுப் பொருள்; phosperous.

*[தீ + முறி]*

**தீமுறுகல்** *tīmuṟugal,* பெ. (n.) வைப்புச் செய்நஞ்சு; a prepared arsenic.

*[தீ + முறுகல்]*

**தீமுறை** *tīmuṟai,* பெ. (n.) தீயிற் செய்யுமொரு வகைச் சடங்கு; fire-sacrifice. "நான்மறை மரபிற் றீமுறை யொருபால்" *(சிலப். 5, 175).*

*[தீ + முறை]*

**தீமூட்டு¹-தல்** *tī-mūṭṭu-,* செ.கு.வி. (v.i.) 1. தீயுண்டாக்குதல்; to kindle fire. 2. கலக மூட்டுதல்; to stir upa quarrel.

*[தீ + மூட்டு-]*

**தீமூட்டு²** *tī-mūṭṭu,* பெ. (n.) தீமூட்டுதற்குரிய பொருள்; lighting material. "யாஅத்து . . . கோதுடைத் தாரல் . . . தீமூட் டாகும்" *(அகநா. 257).*

*[தீ + மூட்டு]*

**தீமேனியான்** *tīmēṉiyāṉ,* பெ. (n.) சிவன்; Šivaṉ, as having the hue of fire. "தீமேனியானுக்கே சென்றூதாய்க் கோத்தும்பீ" *(திவாச. 10, 20).*

*[தீ + மேனியான்]*

**தீமை** *tīmai,* பெ. (n.) 1. குறும்பு (சேட்டை); mischief. "நிச்சலுந் தீமைகள் செய்வாய்" *(திவ். பெரியாழ். 2, 7, 3).* 2. குற்றம்; fault, guilt. "பெரியார்கட் டீமை கருநரைமேற் சூடேபோற் றோன்றும்" *(நாலடி. 186).* 3. கொடுமை; cruelty, injury. "நீ மெய்கண்ட தீமை காணின்" *(புறநா 10).* 4. தீய செயல்; sinful deed. "தீமை புரிந்தொழுகுவார்" *(குறள். 143).* 5. நன்றல்லா

நிகழ்வு; inauspicious occasions, as of death. அவன் நன்மை தீமைகளுக்கு வருவதில்லை.

[தீ → தீமை]

**தீமைத்தீவு** *tīmai-t-tīvu,* பெ. (n.) அந்தமான்; Andaman islands, as the place for criminals (செ.அக.).

[தீமை + தீவு]

**தீமொழி** *tī-moḻi,* பெ. (n.) 1. நன்றல்லாத சொல்; evil word. 2. சாவம் (சங்.); curse.

[தீ + மொழி]

**தீய்[1]-தல்** *tīy-,* 4 செ.குவி. (v.i.) 1. தீ பார்க்க; see *tī.* 2. பயனற்றுப் போதல்; . மின்கலம் தீய்ந்து விட்டது

[தீ → தீய்-.]

**தீய்[2]-த்தல்** *tīy-,* 4 செ.குன்றாவி. (v.t.) தீ[3] பார்க்க; see *tī.* "கொதித்திமை தீய்த்தொளிர் செங்கண்" (கூர்மபு. அட்டமூர். 3).

[தீ → தீய் → தீய்-த்தல்]

**தீய்வு** *tīyvu,* பெ. (n.) பயிர் கரிந்து போகை; blighting of crops.

[தீய் → தீய்வு]

**தீய** *tīya,* பெஅ. (adj.) 1. தீமையான; evil, wicked, sinful. 2. போலியான; fallacious. "தீய பக்கமுந் தீயவேதுவும்" (மணிமே. 29:143).

[தீ → தீய]

**தீயகம்** *tīyakam,* பெ. (n.) நிரயம் (நரகம்); hell, as a place of fire.

[தீ + அகம்]

**தீயணைப்புநிலையம்** *tīyaṇaippu-nilaiyam,* பெ. (n.) தீயணைப்பு நிறுவனம்; fire-station.

[தீயணைப்பு + நிலையம்]

**தீயணைப்புவண்டி** *tīyaṇaippu-vāṇḍi,* பெ. (n.) தீயணைப்புச்சீருந்து; fire-van.

[தீயணைப்பு + சீருந்து]

**தீயணைப்புவீரர்** *tīyanaippu-vīrar,* பெ. (n.) தீயணைப்பாளர்; fire-man.

[தீயணைப்பு + வீரர்]

**தீயது** *tīyadu,* பெ. (n.) 1. இனியது; that which is delicious. 2. மரக்கறி; vegetarian food.

[தீம் + அது]

**தீயபக்கம்** *tīya-pakkam,* பெ. (n.) பக்கப் போலி; ellacious minor term. "தீயபக்கமுந் தீயவேதுவும்" (மணிமே. 29, 143).

[தீய + பக்கம்]

**தீயபுட்பம்** *tīya-puṭpam,* பெ. (n.) சண்பகம் (மலை.); champak.

[தீய + புட்பம்]

**தீயம்** *tīyam,* பெ. (n.) இனிப்பு (யாழ்.அக.); sweetness, deliciouness.

[தீம் → தீயம்]

**தீயர்** *tīyar,* பெ. (n.) 1. ஒரு மலையாளச் சாதியினர்; a caste in malabar. 2. தீயோர்; wicked person.

**தீயல்** *tīyal,* பெ. (n.) 1. சமையலிற் கருகினது; that which is burnt in cooking, or over-cooked. 2. பொரிக்கறி; a thick dry curry. 3. குழம்பு வகை; a kind of sauce.

[தீய் → தீயல்]

**தீயல்வழி-த்தல்** *tīyal-vaḻi-,* செ.கு.வி. (v.i.) 1. வறுமை அல்லது கஞ்சத்தால் சட்டி சுரண்டிக் காந்தலுணவைத் தின்னுதல்; to scrape off and eat the burnt part of that which adheres to the pot, either from meanness or poverty.

[தீயல் + வழி-.]

**தீயவு** *tīyavu,* பெ. (n.) தீயல் பார்க்க; see **tīyal.**

[தீ → தீயவு]

**தீயவேது** *tīya-v-ētu,* பெ. (n.) ஏதுப்போலி; a fallacious middle-term. 'தீயபக்கமுந் தீயவேதுவும்' (மணி. 29, 143).

[தீ → தீயவேது]

**தீயவை[1]** *tīyavai,* பெ. (n.) 1. தீச்செயல்; evil deeds, sin. 'ஒருவமின் தீயவை' (நாலடி, 36). 2. துன்பம்; tribulation, suffering. 'எழுபிறப்புந் தீயவை தீண்டா' (குறள், 62).

[தீமை → தீயவை]

**தீயவை**[2] *tīyavai*, பெ. (n.) தீயோர் கூடிய சபை; Assembly of the wicked. *(யாப். வி. 96, பக். 515).*

*[தீ + அவை]*

**தீயழல்** *tī-y-aḻal*, பெ. (n.) தீப்பிழம்பு; flame. *'தீயழதுவைப்பு' (பரிபா, 5, 3).*

*[தீ + அழல்]*

**தீயளி** *tīyaḷi*, பெ. (n.) பசுங்காய்; green fruit. (திவா.).

*[தீய் + அளி]*

**தீயறம்** *tī-y-aṟam*, பெ. (n.) பொல்லாங்கு; evil (யாழ். அக.).

*[தீ + அறம்]*

**தீயாக்கீரை** *tīya-k-kīrai*, பெ. (n.) பொன்னாங்கண்ணி; small aquatic plant (மணி.).

*[தீ + ஆ + கீரை → தியாக்கீரை]*

**தீயாடி** *tī-y-āṭi*, பெ. (n.) ஈமத்தீயில் ஆடும் சிவன்; Siva, as dancing in the midst of burning funeral pyres. *'தீயாடி சிற்றம்பல மனையாள்' (திருக்கோ. 374).*

*[தீ + ஆடு → தீயாடு]*

**தீயார்** *tīyar*, பெ. (n.) தீயோர் பார்க்க; see *tīyōr*. *'தீயாரைக் காண்பதுவுந் தீதே' (மூதுரை).*

*[தீமை → தீயார்]*

**தீயாறுடையான்** *tīyāruṭaiyāṉ*, பெ. (n.) தீயவழியில் நடப்பவன்; Immoral man (w.,

*[தீ + ஆறு + உடையான்]*

**தீயின்வயிரம்** *tīyin-vayiram*, பெ. (n.) மீன்வயிற்றில் உள்ள மணப்பொருள்; Ambek gris.

*[தீ + இன் + வயிரம்]*

**தீயினம்** *tī-y-iṉam*, பெ. (n.) தீயோர் கூட்டம்; evil society. *'சான்றாண்மை தியினஞ் சேரக் கெடும்'*

*[தீமை → தீ + இனம்]*

**தீயுண்புள்** *tī-y-uṇ-puḷ*, பெ. (n.) நெருப்புக்கோழி; ostrich.

*[தீ + உண் + புள்]*

**தீயெச்சம்** *tī-y-eccam*, பெ. (n.) அவிக்கப்படாத நெருப்பின் மிச்சம்; remains of fire left unquenched. *'தீயெச்சம் போலத் தெறும்' (குறள், 674).*

*[தீ + எச்சம்]*

**தீயொழுக்கம்** *tī-y-oḻukkam*, பெ. (n.) கெட்ட நடத்தை; evil conduct. *'தீயொழுக்க மென்று மிடும்பை தரும்' (குறள், 138).*

*[தீமை + ஒழுக்கம்]*

**தீயோம்பு-தல்** *tī-y-ōmbu-*, செ.கு.வி. (v.i.) தீ வளர்த்தல்; to tend the sacred fiare. *'தீயோம்பு கைம் மறையோர்' (திவ். பெரியதி. 7, 9, 7).*

*[தீ + ஓம்பு-]*

**தீயோர்** *tīyōr*, பெ. (n.) 1. கொடியோர்; wicked persons. 2. கீழ்மக்கள்; vulgar persons (பிங்.). 3. வேடர்; hunters (ய.).

*[தீமை → தீயோர்]*

**தீர்**[1]**-தல்** *tīr-*, 4 செ.கு.வி. (v.i.) 1. உள்ளதொழிதல்; to end, expire. 2. முற்றுப் பெறுதல்; to be completed. 'வேலை தீர்ந்துவிட்டது' 3. நீங்குதல்; to leave, to separate. *'திருவினைத்திராமை யார்க்குங் கயிறு' (குறள், 482).* 4. போதல்; to go (பிங்.). 5. இல்லையாதல்; to be absent 'பாய்ந்தூதிப் படர் தீர்ந்து' (கலித். 66). 6. அழிதல்; to die 'சென்று தீர்வன வெனைப் பல கோடியுஞ் சிந்தி' (கம்பரா. முதற்போர். 238). 7. கழிதல்; to pass, to be spent. *'சில தினங்க பீர்ந்துழி' (கம்பரா. திருவவ. 43.)* 8. செலவாய்ப்போதல்; to be exhausted 'கைப்பணமெல்லாம் தீர்ந்தது'. 9. உரிமையாதல்; to belong absolutely. 'திருமகட்கே தீர்ந்தவாறென் கொல்' (திவ். இயற். 1, 42). 10. நிச்சயித்தல்; to determined, decided. 'தீர்ந்த வடியவர் தம்மை' (திவ். திருவாய், 3, 5, 11). 11. தீர்மானமாதல்; to be settled 'வழக்குத் தீர்ந்துவிட்டது'. 12. பட்டறிவு; experience 'தீர்ந்த கணக்கன்'. 13. நீளமாதல்; extended (சூடா.). 14. முதிர்தல்; to become ripe. செகுன்றாவி. (v.t.) 1. விடுதல்; to leave 'தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்' *(தொல். சொல், 318).* 2. சாணையிடுதல்; to polish, clean (வின்.). 3. வகுத்தல்; to divide. 'மூன்றுபேருக்கு ஒன்றைத் தீரு'. 4. விள்ளுதல்; to solve. 5. வரிபோடுதல்;

as tax, to assess. *6. சாயமிடுதல்;* to dye, umbue with colour. *(வின்.). 7. துணைவினை;* an auxiliary verb. *'தாமரைக் கண்கட் கற்றுத் திர்ந்தும்' (திவ். திருவாய். 7, 3, 3).*

**தீர்²-த்தல்** *tir-*, 11 செகுன்றாவி. (v.i.) 1. விடுதல்; to leave, quit. 'தீர்தலுந் விடற் பொருட் டாரும்' *(தொல். சொல். 318).* 2. முடித்தல்; to finish, complete. 'அவன் விசையந் தீர்த்தானெ அவந்தாடினர்' *(கம்பரா. முதற்போர். 178).* 3. அழித்தல்; to destroy. 'ஒரு பகலே தீர்ப்பான் படை தொடுப்போன்' *(கம்பரா. நீடும், 149).* 4. கொல்லுதல்; to kill. 5. நன்றாகப் புடைத்தல்; to beat severely. 6. போக்குதல்; to remove, cure. 'கருங்கா லொட்டகத் தல்குபசி தீர்க்கும்' *(அகநா. 245).* 7. கடன் முதலியன ஒழித்தல்; to clear off, pay off, as debt. 8. ஒருவன்தான் திருமணஞ் செய்து கொண்டவளை விலக்கி விடுதல்; to divorce. 9. வழக்கு முதலியன தீர்மானித்தல்; to settle, decide, as dispute.

**தீர்கடை** *tir-katai*, பெ. (n.) 1. தேர்ந்தவன்; skilful, expert. 'நண்பனங்கே வந்த தாலறத் தீர்ந்தவனே' *(மருதூரந். 2).* 2. துறந்தவன்; one who has renounced the world *(யாழ். அக.).* 3. ஒழிவுநேரம்; leisure. 'எனக்கு இப்போது தீர்கடையில்லை'.

*[தீர் + கடை]*

**தீர்ந்தவன்** *tirntavan*, பெ. (n.) 1. தேர்ந்தவன்; skilful, expert. 'நண்பனங்கே வந்த தாலறத் தீர்ந்தவனே' *(மருதூரந். 2).* 2. துறந்தவன்; one who has renounced the world. *(யாழ். அக.).*

*[தீர் → தீர்ந்தவன்]*

**தீர்ப்பான்** *tirppan*, பெ. (n.) மருத்துவன்; Physician. 'உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வான்' *(குறள் 950).*

*[தீர் → தீர்ப்பான்]*

**தீர்ப்பு** *tirppu*, பெ. (n.) 1. தீர்மானம்; settlement, conclusion. 2. முடிவு; completion, finality. 'தீர்ப்பான பேச்சு' (வின்.). 3. வழக்கின் தீர்ப்பு; judgement, decree. 'அந்த வழக்கில் தீர்ப்புச் சொல்லியாயிற்று' 4. தண்டனை; sentence. 'அவனுக்குப் பத்து வருடம் தீர்ப்பாயிற்று'. 5.. உறுதியுடைமை; determination, resolution. *(வின்.)* 6. நீக்கிவிடுதல்; removal, clearance. 7. கழுவாய்; antidote, atonement.

*[தீர் → தீர்ப்பு]*

**தீர்ப்புக்கட்டு-தல்** *tirppu-k-kattu*, பெ. (n.) 1. முடிவை உறுதிசெய்தல்; to make a decision. 2. விருப்பங்கொள்ளுதல்; to form an opinion or judgement. (வின்). 3. வரவு-செலவுக் கணக்கு முடிவு கட்டுதல்; to prepare a balance sheet, to draw up a profit and loss account.

*[தீர்ப்பு + கட்டுதல்]*

**தீர்பு** *tirpu*, பெ. (n.) தீர்கை; finishing. 'பாடின் மாயையாற் றீர்புரைப்பீர்' *(சேதுபு. இலக்கும. 13).*

*[தீர் → தீர்பு]*

**தீர்மானம்** *tirmanam*, பெ. (n.) 1. தீர்ப்பு பார்க்க; see *tirppu*. 2. இசையில் தானமுடிவு கொடுக்கை; flourish of drum at the close of a tālam. 3. முழுமை; absoluteness. 4. சுண்ணாம்பு மட்டிப் பூச்சின் மேல் வெள்ளையால் மெருகிடுகை; polishing with well macerated lime. 5. முட்டுச்சுவர்; buttress wall.

*[தீர் → தீர்மானம்]*

**தீர்மானி-த்தல்** *tirmāni-*, செகுன்றாவி. (v.t.) 1. உறுதிசெய்தல்; to determine. 2. முடித்தல்; finish, settle. 3. தாளந்தீர்த்தல்; to bring a tālam performance to a close.

*[தீர்மானம் → தீர்மானி-த்தல்]*

**தீர்வு** *tirvu*, பெ. (n.) 1. தீர்வை பார்க்க; see *tirvai*. 2. தீர்மானம் பார்க்க; see *tirmanam*. 3. நீக்குகை; removal. 'தீர்விலா நண்பு வேண்டி' *(சீவக. 1755).* 4. கைம்மாறு; expiation. 'இவளிந்தை செய்வாய்க் கிலை தீர்வ' *(பிரபுலிங். கைலாச. 40).* 5. கழுவாய்; remedy. 'நோய் தந்தவனே நுவறீர்வுமெனா' *(கம்பரா. இரணி. 113).*

*[தீர் → தீர்வு]*

**தீர்வை** *tirvai*, பெ. (n.) 1. முடிவு; conclusion, result, end. 'தீர்வையிற் சாக்காடுமின்றிச் சிறந்தார் கொல்லோ' *(பிரபோத. 13, 9).* 2. உறுதி; certainty. 'ஒன்றையே யடைகுவ ரிதுதீர்வை' *(கைவல். சந். 45).* 3. கைம்மாறு; expiation. 'சிந்தையாகுல மிதற்குத் தீர்வையன்று' *(திருவாலவா - 46, 8).*

4. தப்பும்வழி; escape. 5. தணியெழுத்து; divine, fate. (வின்.). 6. நீதித்தீர்ப்பு; Judgement. 7. திருமணஞ்செய்து கொண்டவளை விலக்கி விடுவதற்குரிய செலவுத் தொகை; divorce fee. 8. வரி; duty, tax, toll. 9. கணக்கு; sums. 'உபாத்தியாயர் இன்று எத்தனை தீர்வை போட்டார்?' 10. கீரிப்பிள்ளை; mongoose. (மலைபடு. 584). 11. ஈமச்சடங்கு; funeral rites. (வின்.).

*[தீர் → தீர்வை]*

**தீர்வைக்கம்மி** *tīrvai-k-kammi*, பெ. (n.) நன்செய் நிலத்தில் புன்செய்ச் சாகுபாடி செய்தற்கு ஏற்படுத்திய வரிக்குறைவு; remission granted on irrigable lands where dry crop is cultivated.

*[தீர்வை + கம்மி]*

**தீர்வைச்சரக்கு** *tīrvai-c-carakku*, பெ. (n.) சுங்கவரி இடுவதற்குரிய பொருள்; dutiable goods.

*[தீர்வை + சரக்கு]*

**தீர்வைசோறு** *tīrvai-cōṟu*, பெ. (n.) நள்ளிரவில் இறைவனுக்கு சமைத்து படைக்கும் சோறு; rice-offering in a temple made at midnight.

*[தீர்வை + சோறு]*

**தீர்வைத்துறை** *tīrvai-t-tuṟai*, பெ. (n.) செயற்றிறம் வாய்ந்த மதிப்பு (இவ.); influence.

*[சாள் → சாய் → சாய்கால் (வே.க.233.)]*

**தீர்வைதிட்டம்** *tīrvai-tiṭṭam*, பெ. (n.) திட்டமான வரியேற்பாடு; rate of assessment.

*[தீர்வை + திட்டம்]*

**தீர்வைதீர்-தல்** *tīrvai-tīr-*, செ.கு.வி. (v.i.) 1. பண்டங்கட்கு வரிவிதித்தல்; to levy duty on goods. (வின்.) 2. பண்டங்கட்குச் சுங்கவரி யிறுத்தல்; to pay duty on goods.

*[தீர்வை + தீர்-தல்]*

**தீர்வையிடு-தல்** *tīrvai-y-iḍu-*, செகுன்றாவி. (v.t.) 1. தீர்மானித்தல்; to settle, decide. 'தீராக் கருவழக்கைத் தீர்வையிட்டு' (தாயு. பைங்கிளி. 29). 2. முடிவுசெய்தல்; to end.

*[தீர்வை + இடு-தல்]*

**தீர்வையெடு-த்தல்** *tīrvai-y-eḍu-*, செகுவி. (v.i.) 1. வரி வாங்குதல்; to levy or collect duty. 2. தீர்ப்பு நகலெடுத்தல்; to obtain copy of a decree from court.

*[தீர்வை + எடு-த்தல்]*

**தீர்வைவிழுதல்** *tīrvai-viḻutal*, பெ. (n.) வழக்குத் தீர்ப்புச் செய்கை; passing of judgement or decree.

*[தீர்வை + விழுதல்]*

**தீர** *tīra*, வி.எ. (adv.) 1. முற்ற; entirely, perfectly. 'தலைப்பட்டார் தீரத் துறந்தார்' (குறள், 348). 2. மிக; exceedingly. 'மக்களிற் றீரக் குறியானைக் குறளன் என்றும்' (யாப். வி. 23, ப. 99).

*[தீர் → தீர]*

**தீரக்கழிய** *tīra-k-kaḻiya*, வி.எ. (adv.) மிகவதிகமாய்; excessively, to the utmost. 'தீரக் கழிய அபராதம் பண்ணின பின்பு' (ஈடு. 1, 1, 5).

*[தீர் → தீர → தீரக்கழிய]*

**தீரன்** *tīraṉ*, பெ. (n.) மனதிடமுள்ளவன்; bravem valiant person. 'திரரென்றமார் செப்பி' (கம்பரா., இந்திரசித். 30.

*[தீர் → தீர → தீரன்]*

**தீராந்தி** *tīrānti*, பெ. (n.) விட்டம்; beam of a building.

**தீராநோய்** *tīrā-nōy*, பெ. (n.) தீர்க்க இயலாத நோய்; incurable disease. 'தீராநோய் செய்தா னெனவுரைத்தாள்' (திவ். இயற். இறிய. ம. 52).

*[தீர் + ஆ + நோய்]*

**தீராமாற்று** *tīrā-māṟṟu*, பெ. (n.) ஈடில்லா செயல்; that which cannot be relieved or cured. 'பெண்களைத் தீராமாற்றாக நெஞ்சாரல் பண்ணுங் கிருஷ்ணன்' (திவ். திருப்பா. 12, வ்யா, 133).

*[தீர் + ஆ + மாற்று]*

**தீராமை** *tīrāmai*, பெ. (n.) 1. கொடுமை; cruelty. 2. கடுந்துரோகம்; heinous crime. 3. பேரநீதி; great injustice. 4. பொய்க்குற்றச்சாட்டு; false occusation. 5. வன்மத்தாற் சொல்லும் கோள்; malicious slander. 6. ஆற்றாமை; Inability to endure.

*[தீர் + ஆ + மை]*

**தீராவழக்கு** *tīrā-vaḻakku,* பெ. (n.) எளிதில் முடிவுறாத வழக்கு; intricate law suit, dispute which cannot be easily settled.

*[தீர் + ஆ + வழக்கு]*

**தீராவினா** *tīrā-viṉā,* பெ. (n.) இறுக்கமுடியாத கேள்வி; an insoluble problem.

*[தீர் + ஆ + வினா]*

**தீவட்டி** *tī-vaṭṭi,* பெ. (n.) 1. திப்பந்தம்; flambeall, torch. "இருளறு தீவட்டிக ணென்னில முன்செல்ல' *(பணவிடு. 76).* 2. தீவட்டியான் பார்க்க; see *tīvaṭṭiyāṉ.*

*[தீ → தீவட்டி]*

**தீவட்டிக்கள்ளன்** *tīvaṭṭi-k-kaḷḷaṉ,* பெ. (n.) திவட்டியைப் பிடித்துக்கொண்டு கொள்ளை யடிப்போன்; a dacoit who commits robbery with the help of torch light.

*[தீவட்டி + கள்ளன்]*

**தீவட்டிக்காரன்** *tīvaṭṭi-k-kāraṉ,* பெ. (n.) 1. தீவட்டி பிடிப்போன்; torch-bearer. 2. தீவட்டிக்கள்ளன்; see *tīvaṭṭi-k-kaḷḷaṉ.*

*[தீவட்டி + காரன்]*

**தீவட்டிக்கொள்ளை** *tīvaṭṭi-k-koḷḷai,* பெ. (n.) 1. தீவட்டியைப் பிடித்துக்கொண்டு செய்யும் கொள்ளை; a torch-light dacoity. 2. அநீதியான இலாபம்; unjust, exorbitant gain.

*[தீவட்டி + கொள்ளை]*

**தீவட்டிக்கொள்ளையடி-த்தல்** *tīvaṭṭi-k-koḷḷai-y-aṭi-,* செ.கு.வி. (v.i.) 1. தீவட்டியைப் பிடித்துக்கொண்டு கொள்ளையிடுதல்; to commit dacoity with the help of torch-light. 2. அநீதியாய் பொருள் திரட்டுதல்; to mass money by illegal means.

*[தீவட்டிக்கொள்ளை + அடி-]*

**தீவட்டித்தடியன்** *tīvaṭṭi-t-taḍiyaṉ,* பெ. (n.) பயனற்ற அறிவிலி; senseless, worthless fellow.

*[தீவட்டி + தடியன்]*

**தீவண்ணன்** *tī-vaṇṇaṉ,* பெ. (n.) சிவன் (அக்கினி நிறத்தோன்); Siva, as fire-coloured. "தீவண்ணர் திறமொரு காற் பேசாராகில்" *(தேவா. 1230, 6).*

*[தீ + வண்ணன்]*

**தீவத்தி** *tīvatti,* பெ. (n.) தீவட்டி பார்க்க; see *tīvaṭṭi.*

*[தீ + வத்தி → வட்டி]*

**தீவலஞ்செய்-தல்** *tīvalañ-cey-,* செ.கு.வி. (v.i.) திருமண விழாவில் தீச்சடங்கு செய்தல்; to circumambulate fire, as in a marriage ceremony. "தீவலஞ்செய்வது காண் பார்கணோன் பென்னை" *(சிலப். 1, 53).*

*[தீவலம் + செய்-]*

**தீவளர்-த்தல்** *tī-valar-,* செ.கு.வி. (v.i.) 1. நோன்புத் தீ வளர்த்தல்; to tend the sacred fire. 2. உடன்கட்டையேறல் முதலியவற்றிற்கு தீ வளர்த்தல்; to light a fire, as in sattee.

*[தீ + வளர்-]*

**தீவறை** *tī-vaṟai,* பெ. (n.) பெருநெருப்பு எரிக்குங் குழியடுப்பு; hole dug in the ground for fire.

*[தீ + அறை]*

**தீவனம்** *tīvaṉam,* பெ. (n.) 1. கால்நடைகளின் உணவு; food fpr animals, foder, as straw for cattle. 2. பசி; appetite.

**தீவிய** *tīviya,* பெ.எ. (adj.) இனிமை; sweetness. 'செவ்விய தீவிய சொல்லி' *(கலித். 19).*

*[தீம் → தீவிய]*

**தீவிழித்தல்** *tī-viḻi-,* செ.கு.வி. (n.) கோபத்துடன் பார்த்தல்; to look with fire-red eyes, as in anger. 'தீவிழித்து மேற்சென்ற வேழம்' *(சீவக. 783)*

*[தீ + விழி]*

**தீவினை** *tī-viṉai,* பெ. (n.) 1. கொடுஞ்செயல்; sinful deed. (சூடா.) 2. பாவம்; sin. 'தீவினை யென்னுஞ் செருக்கு' *(குறள். 201).* 3. தீக்குளித்தல்; fire sacrifice. 'செந்தீவினை மறைவாணனுக் கொருவன்' *(கம்பரா. இராவணன் வதை, 52).*

*[தீமை + வினை → தீவினை]*

**தீவு**[1] *tīvu,* பெ. (n.) 1. நான்கு பக்கமும் நீர் சூழ்ந்த நிலம்; island. 'பொலம்படு தீவிற்கு' *(பெருங். நரவாண, 1, 2, 3).* 2. தூரத்துநாடு; distant country. *(யாழ்.அக.).*

**தீவு**[2] *tīvu,* பெ. (n.) இனிமை; sweetness (யாழ்.அக.).

*[தீம் → தீவு]*

**தீவுக்குருவி** *tīvu-k-kuruvi,* பெ. (n.) வெளிநாட்டுப் பறவை; foreign bird.

*[தீவு + குருவி]*

**தீவுச்சரக்கு** *tīvu-c-carakku,* பெ. (n.) வெளிநாட்டுச் சரக்கு; foreign articles.

*[தீவு + சரக்கு]*

**தீவுதல்** *tīvutal,* பெ. (n.) இனிமை; pleasantness. (வேச. 161).

*[தீம் → தீவுதல்]*

**தீவுபற்று** *tīvu-paṟṟu,* பெ. (n.) தீவுப்புறம் (யாழ்.அக.); nighbouring lands.

*[தீவு + பற்று]*

**தீவேள்-தல் (தீவேட்டல்)** *tī-vēl-,* செ.கு.வி. (v.i.) வேள்வி செய்தல்; to perform vēdic sacrifice. 'செந்தீவேட்டு . . . புரிகடை புலர்த்துவோனே' (புறநா. 251. 2. மணம் புரிதல்; to marry. "பெண்டிருவை யுலகறியத் தீவேட்டான்" (திருவாச. 12, 13).

*[தீ + வேள்-தல்]*

**தீவேள்வி** *tī-vēḷvi,* பெ. (n.) தீ சாட்சியாகச் செய்யும் திருமணம் (திவா.); wedding as accompanied with fire-rite.

*[தீ + வேள்வி]*

**தீழ்ப்பு** *tīlppu,* பெ. (n.) 1. தீட்டு; pollution. 2. கீழ்மை; inferiority.

**தீற்றிப்போடு-தல்** *tīṟṟi-p-pōḍu-,* செ.கு.வி. (n.) கமுக்கமாக அறிவுரை செய்தல்; to give advice in secret.

*[தீற்று + போடு-]*

**தீற்று-தல்** *tīṟṟu,* பெ. (n.) 1. ஊட்டுதல்; to feed by small mouthfals. "நென்மா வல்சி தீற்றி" (பெரும்பாண். 343). 2. சுண்ணமுதலியவற்றால் துவாரமடைத்தல்; to cover and fill up a hole orcreive with mortar or clay. 3. பூசுதல்; to smear. "வெண்மை தீற்றிய . . . மாளிகை" (கம்பரா. நகரப். 27). 4. கயிற்றின் முறுக்காற்றுதல்; to stiffen a cord with glue. 5. பல் துலக்குதல்; to clean the teeth.

*[தீன் → தீற்று]*

**தீற்றுக்கல்** *tīṟṟu-k-kal,* பெ. (n.) மணியாசுக்கல்; mason's polishing stone.

*[தீற்று + கல்]*

**தீற்றுப்பலகை** *tīṟṟu-p-palakai,* பெ. (n.) மணியாசுப் பலகை (யாழ்.அக.); mason's plastering plane.

*[தீற்று + பலகை]*

**தீன்**[1] *tīṉ,* பெ. (n.) உணவு; food, victuals. "தீனுணாதன்" (கம்பரா. சேதுபந்தன. 28).

*[தீன் → தீன்]*

**தீனம்** *tīṉam,* பெ. (n.) 1. வறுமை; poverty. "தீனமறவுண்டுடுத்து" (திவாலவா. 55,2).. 2. கொடுமை; cruelty, harshness. 3. நோய்; disease. 'தீனம் வந்தால் மானம் போகும்'.

*[தீன் → தீனம்]*

**தீனன்**[1] *tīnan,* பெ. (n.) 1. வறியவன்; poorman. 'தீனரைத் தியக் கறுத்த திருவுடையார்' (தேவா. 477, 9). 2. இரப்போன்; beggar (சூடா.). 3. தீம்பன்; wicked person. (யாழ். அக.)

*[தீன் → தீனன் = தின்னுவதற்கு ஒன்றும் இல்லாதவன்]*

**தீனன்**[2] *tīnan,* பெ. (n.) பெருந்தீனிக்காரன்; glutton. (யாழ். அக.)

*[தீன் → தீனன்]*

**தீனிப்பை** *tīnippai,* இரைப்பை; stomach.

*[தீனி + பை]*

# து

**து** *tu,* த் என்னும் மெய்யும் உகர உயிரும் இணைந்த உயிர்மெய் எழுத்து; the compound of த் and உ.

*[த் + உ]*

**து²-த்தல்** *tu,* செ.குன்றா.வி. (v.t.) உண்ணுதல்; to eat, used generally in negative forms. "துவ்வளவா" *(நன்157, உரை).*

**து³** *tu,* பெ. (n.) *1.* உணவு *(இலக்.அக.);* food. *2.* பட்டறிவு *(யாழ்.அக.);* experience. *3.* பிரிவு; separation.

*[துய் → து (வே.க. 282)]*

**து⁴** *tu,* இடை (part.) *1.* சுட்டுப் பெயர் வினாப் பெயர்களில் ஒன்றன் பால் குறிக்கும் ஈறு; suffix added to the demonstrative and interrogative bases to form demonstrative neuter singular pronouns. *2.* தன்மையொருமை முற்றீறு *(தொல்.சொல். 204);* verbal termination denoting lst person singular, neuter as in varutu. *3.* ஒன்றன் பால் வினையீறு *(தொல்.சொல். 8);* verbal ending denoting 3rd person singular, neuter, as in வந்தது. *4.* பகுதிப் பொருளீறு *(குறள். 637);* an expletive added to basic forms, as in *kataittu.*

**து⁵** *tu,* பெ. (n.) *1.* வலிமை; strength. 'கெடலருந்துப் பின்' *(அகம். 108). 2.* திறமை; skill. 'ஆழ்கடலைக் கடைந்த துப்பனே' *(திவ்.திருவாய். 4,7,5). 3.* நுகர்தல்; to smell.

**துக்கடா** *tukktā,* பெ. (n.) *1.* சிறுதுண்டு; piece, bit. *2.* உணவுக்கு உரிய பச்சடி முதலிய தொடுகறி; any relish. *3.* தன்மையற்றது; unimportant. துக்கடாப் பயல்களெல்லாம் இன்று நம்மை எதிர்த்துப் பேசுகிறார்கள் *(உ.வ.).*

**துக்கடி** *tukkaḍi,* பெ. (n.) நிலப் பகுதி; division of a district.

**துக்காசிப்பயறு** *tukkāši-p-payaṟu,* பெ. (n.) சிறு துவரை; a small variety of dholl.

**துக்காணி** *tukkāṇi,* பெ. (n.) இரண்டு அல்லது நான்கு சல்லி மதிப்புக் கொண்ட சிறு செப்புக் காசு; a small copper coins = 2 or pies. "துக்காணிப் பொட்டுமிட்டு" *(திருக்கூட்டச்சதி).*

**துக்கிணி** *tukkiṇi,* பெ. (n.) துக்குணி பார்க்க; see tukkuṇi. "துக்குணி கிள்ளித்தா வம்மே" *(குற்றா.குற. 62,4).*

**துக்கு¹** *tukku,* பெ. (n.) *1.* கீழ்மை; meanness. *2.* பயனின்மை; worthlessness. *3.* உதவாதவன் -து; useless person or thing.

**துக்கு²** *tukku,* பெ. (n.) துரு; rust.

**துக்கு³** *tukku,* பெ. (n.) *1.* தோல்; skin. *2.* துவக்கு,3 பார்க்க; see *tuvakku. 3.* உடல்; body. "ஏறுந் துக்கிற் றொக்க பரத்தா லிடரெய்தி" *(இரகு. அயனுத. 27).*

**துக்கு⁴** *tukku,* பெ. (n.) சுறுசுறுப்பு; quickness, activity. "துக்காய்ப் புகுந்து நின்றாட வேண்டும்" *(பாடு. 70, வாழ்க்கைப்.).*

*[துடுக்கு → துக்கு]*

**துக்குடா** *tukkuḍā,* பெ. (n.) துக்கடா பார்க்க; see *tukkaḍā.*

**துக்குடி** *tukkuṭi,* பெ. (n.) துக்கடி பார்க்க; see *tukkaṭi.*

**துக்குணி** *tukkuṇi,* பெ. (n.) சிறிதளவு *(உவ.);* very small quantity.

**துக்குணிச்சித்தம்** *tukkuṇi-c-cittam,* பெ. (n.) பொறுமையற்ற குணம்; short temper.

**துக்குணித்துண்டு** *tukkuṇi-t-tuṇḍu,* பெ. (n.) மிகவும் கொஞ்சம்; very small.

**துக்குணிமருந்து** *tukkuṇi-maruntu,* பெ. (n.) மிக்க சிறுவளவாகக் கொடுக்கப்படும் பற்பம், செந்தூரம், கண்ணம் முதலியன; medicinal preparations as a metallic oxides red oxides and carbonates given in exceedingly small doses.

*[துக்குணி + மருந்து]*

**துக்குப்பிடித்தவன்** *tukku-p-piḍittavaṉ,* பெ. (n.) பயனற்றவன்; worthless fellow.

**துக-த்தல்** *tuka,* செ.கு.வி. (v.i.) கசத்தல் (இலஅக.); to be bitter.

**துகம்** *tugam,* பெ. (n.) 1. நிலத்தாக்கு; plot of land. 2. பங்கு; share, as in a partition or lottery. அந்தத் துகம் யாருக்கு விழுந்தது (உ.வ.).

**துகள்** *tugaḷ,* பெ. (n.) 1. தூசி, தூளி; dust, particle of dust. "இயங்கு தேர்வீதி யெழுதுகள் சேர்ந்து" (மணிமே. 4, 14). 2. பூந்தாது; pollen. "தாமரைத் தேனு மந்நுண்டுகளுஞ் சேறாம் பழனத் திருவெங்கை வாணர்" (வெங்கைக்கோ. 377). 3. குற்றம்; fault, moral defect. "துகளறுசீர் ... வேந்து" (பு.வெ. 7,1). 4. அணுத்துகள்; atomic particle.

[துகை → துகள் (வ.மொ.வ. 184)]

**துகளறுபோதம்** *tugaḷaṟu-pōdam,* பெ. (n.) சிற்றம்பல நாடிகளியற்றிய ஒரு சிவனியக் கொண் முடிபுநூல்; saiva siddhānta treatise in Tamil by Siṟṟambala nāḍigal.

**துகளவிடி-த்தல்** *tugaḷaviḍi-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. தூளாக இடித்தல்; pulverising. 2. பொடியாய்ச் செய்தல்; trilurating. 3. சூரணம் செய்தல்; perparing a medicinal substance in the form of fine dust (சா.அக.மு.).

**துகளிதம்** *tukaḷidam,* பெ. (n.) துகள் பார்க்க; see *tukaḷ.*

[துகள் → துகளிதம்]

**துகளிலி** *tukaḷ-ili,* பெ. (n.) இறைவன் (இலஅக.); God, as immaculate (குற்றமற்றவன்).

[துகள் + இலி]

**துகிடி** *tukiḍi,* பெ. (n.) துக்கடி பார்க்க; see *tukkaḍi.*

**துகிர்** *tukir,* பெ. (n.) 1. பவளம்; red coral. "பொன்னுந் துகிரு முத்தும்" (புறநா. 218). 2. பவளக் கொடி; coral seaweed. "செந்துகிர் படருந் திரைக்கடல்" (கல்லா.முருக.வண.).

தெ., க., து. தொகரு

[துவர் → துகர் → துகிர்]

**துகிர்த்தாளி** *tukir-t-tāḷi,* பெ. (n.) பவள மல்லிகை (மலை.) பார்க்க; see *pavaḷa-malligai.*

[துகிர் + தாளி]

**துகிரிகை** *tukirigai,* பெ. (n.) 1. துகிலிகை பார்க்க; see *tukiligai* (அக.நி.). 2. சித்திரம் (யாழ்.அக.); picture. 3. சாந்து (யாழ்.அக.); sandal paste.

**துகில்** *tugil,* பெ. (n.) 1. நல்லாடை; fine cloth, rich attire. "பட்டுந் துகிலு முடுத்து" (நாலடி. 264). 2. துகிற்கொடி பார்க்க; see *tukiṟkoḍi.* 3. விருதுக் கொடி (பிங்.); ensign. 4. புடைவை; saree. "திரௌபதையின் துகிலைத் துச்சாதனன் உரியும் காட்சி".

[துகிர் → துகில் (தமி.வ. 57)]

**துகில்பீசம்** *tugil-pīšam,* பெ. (n.) பருத்தி விதை; cotton seed.

[துகில் + பீசம்]

**துகில்வலை** *tugil-valai,* பெ. (n.) வலைவகை; a kind of net.

[துகில் + வலை]

**துகிலி** *tugili,* பெ. (n.) 1. பருத்தி இலை; cotton leaf. 2. விதை; testicle (சா.அக.).

[துகில் → துகிலி]

**துகிலிகை**[1] *tugiligai,* பெ. (n.) 1. எழுதுகோல்; painter's pencil. "சுவர்செய்தாங் கெழுதப்பட்ட துகிலிகைப் பாவை" (சீவக. 2542). 2. சித்திரம் (யாழ்.அக.); picture.

[துகில் → துகிலிகை (தமி.வ. 57)]

**துகிலிகை**[2] *tugiligai,* பெ. (n.) துகிற்கொடி பார்க்க; see *tugiṟkoḍi.* "புரிசைமேற் புனைந்த வாணிலா நெடுந்துகிலிகை" (கந்தபு. திருநகர. 20).

**துகிற்கிழி** *tugiṟ-kiḻi,* பெ. (n.) உறை; cover. "துகிற்கிழி பொதிந்து" (சீவக. 164).

**துகிற்கொடி** *tugiṟ-koḍi,* பெ. (n.) ஆடையாலி யன்ற கொடி; banner, flag. "வெள்ளருவித்திரள் யாவையும் குழுவின் மாடத் துகிற் கொடி போன்றவை" (சீவக. 34).

**துகின்மனை** *tugiṉ-maṉai,* பெ. (n.) கூடாரம்; tent. "துகின் மனையுட் கொடு போகி" (சேதுபு.அகத். 40).

[துகில் + மனை]

**துகின்முடி[1]-த்தல்** *tugiṉ-muḍi*, செ.கு.வி. (v.i.) *தலைப்பாகை கட்டுதல்;* to tie a turban on the head. "துகின் முடித்துப் போர்த்த . . . பெருமூதாளர்" *(முல்லைப். 53).*

*[துகில் + முடி-.]*

**துகின்முடி[2]** *tugiṉ-muḍi-*, பெ. (n.) *தலைப்பாகை;* head-dress. "பைந்துகின்முடி யணிந்தவர்" *(சீவக. 1558).*

*[துகில் + முடி]*



**துகினூல்** *tugiṉūl*, பெ. (n.) *வெண்ணூல்;* white thread. "பல்கிழியும் பயினுந் துகினூலொடு" *(சீவக. 235).*

*[துகில் + நூல்]*

**துகு[1]-தல்** *tugu-*, செ.கு.வி. (v.i.) *தொகுதியாதல்;* to be gathered in a mass, as the hair. "சலந்துக்க சென்னிச் சடையான் கண்டாய்" *(தேவா. 844, 3).*

*[தொகு → துகு-.]*

**துகு[2]-த்தல்** *tugu-*, செ.குன்றாவி. (v.t.) *தொகுதியாக்குதல்;* to bring together, gather in a mass, as hair. "அவிழ்ந்த புரிசடை துகுக்கும்" *(திருவிசை. கருவூ-7,3).*

*[தொகு → துகு-.]*

**துகுதுகுவெனல்** *tugu-tugu-v-veṉal*, பெ. (n.) *பெருங்கூட்டம் வருகையில் எழும் ஒலிக் குறிப்பு;* onom. expr. of the sound of the inflow of a big crowd.

*[துகு + துகு + எனல்]*

**துகூலம்** *tugūlam*, பெ. (n.) 1. *வெண்பட்டு;* white silk. 2. *நொய்ய புடைவை;* thin cloth.

*[ஒருகா. துகில் → துகு → துகூலம்]*

**துகை[1]-த்தல்** *tugai*, செ.குன்றாவி. (v.t.) 1. *மிதித்துழக்குதல்;* to tread down, trample on, bruise or destroy by treading. "துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான்" *(கம்பரா. பொழிலிறுத். 8).* 2. *இடித்தல்;* to pound in a mortar; to mash. 3. *வருத்துதல்;* to vex. "துன்பத்தாற் றுகைக்கப் பட்டார் துகைத்தவத் துன்பந் தாங்கி" *(சீவக. 1392).*

*[துவை → துகை. துகைத்தல் (வ.மொ.வ. 184)]*

**துகை[2]-த்தல்** *tugai*, செ.கு.வி. (v.i.) *உலவுதல்;* to roam about; to walk. "வாமனா றுகைக்கும் திருவாயில்" *(மருதூரந். 12).*

**துகைபலன்** *tugai-palaṉ*, பெ. (n.) *அறுவடை;* harvest. "துகைபலனில் வாருமென்று சொல்ல" *(சரவண. பணவிடு. 256).*

**துகையல்** *tugaiyal*, பெ. (n.) *தேங்காயுடன் காய்கறிகளை அரைத்துச் செய்யும் உணவு வகை;* a relish or mash of vegtables, coconuts, etc. "தேங்காய்த் துகையல், புதினாத் துகையல், இஞ்சித் துகையல்" *(பே.வ.).*

*[துகை → துகையல்]*

**துங்கதை** *tuṅgatai*, பெ. (n.) 1. *உயர்ச்சி;* height, elevation. 2. *பெருமை;* dignity, greatness. "துங்கதை தன்னொடு தண்ணென் றெய்திற்றே" *(கந்தபு. இரண்டாநாட். சூர. 225).*

**துங்கநதி** *tuṅga-nadi*, பெ. (n.) 1. *மூளைநீர்;* serum of the brain. 2. *குழந்தைகளைத் தாக்கும் ஒருவகை நோய்;* in the brain is a disease in the children.

**துங்கநாசி** *tuṅga-nāśi*, பெ. (n.) *நீண்ட மூக்கு;* long nose, erect nose.

**துங்கநாபம்** *tuṅganābam*, பெ. (n.) *நச்சுப் பூச்சி வகை;* a venomous insect.

**துங்கபத்திரா** *tuṅga-battirā*, பெ. (n.) *கிளி முருக்கு;* thorny coral tree.

மறுவ. கலியாண முருங்கை

**துங்கபத்திரி** *tuṅga-pattiri*, பெ. (n.) *துங்கபத்திரை பார்க்க;* see *tuṅgapattirai.*

"துங்கபத்திரி நிம்பாவி தூயதண் பொருநை" (திருவிளை. தலவி. 11).

**துங்கபத்திரை** *tuṅgapattirai*, பெ. (n.) ஓர் ஆறு; the river Tungabhadra. "துங்க பத்திரைச் செங்களத்திடை" (கலிங். 89).

**துங்கம்** *tuṅgam*, பெ. (n.) 1. உயர்ச்சி; height, devation. "துங்கமுகமாளிகை" (திவ்.பெரியதி. 3,4,6). 2. நுனி; tip edge. 3. பெருமை (பிங்.); dignity, excellence. 4. அகலம் (பிங்.); breadth. 5. மலை; mountain. 5. தூய்மை; purity. 6. வெற்றி (யாழ்.அக.); victory.

[உங்கு → துங்கு → துங்கம் (வே.க. 36)]

**துங்கமுகம்** *tuṅga-mugam*, பெ. (n.) 1. தாமரைத் தண்டு; lotus stamina. 2. இதளியம்; mercury.

**துங்கரிகம்** *tuṅgarigam*, பெ. (n.) காவிக்கல்; red ochre.

**துங்கரீமண்டம்** *tuṅgari-maṇḍam*, பெ. (n.) சரக்கொன்றை; purging cassia.

**துங்கன்** *tuṅgaṉ*, பெ. (n.) உயர்ந்தோன்; eminent man. "அபிமான துங்கன் செல்வனைப் போல" (திவ். திருப்பல். 11).

**துங்கி** *tuṅgi*, பெ. (n.) 1. இரவு; night. 2. நச்சுப் பூச்சி வகை; a venomous insect.

**துங்கீசன்** *tuṅgīšaṉ*, பெ. (n.) 1. கதிரவன்; Sun. 2. சிவன்; Šivaṉ. 3. திருமால்; Thirumāl. 4. திங்கள்; Moon.

[துங்கன் + ஈசன்]

**துச்சகம்** *tuccagam*, பெ. (n.) மணக் குழம்பு வகை; a kind of fragrant paste (யாழ்.அக.).

**துச்சத்துரு** *tucca-t-turu*, பெ. (n.) ஆமணக்கு (யாழ்.அக.); castor-plant.

**துச்சதாரு** *tucca-tāru*, பெ. (n.) 1. ஆமணக்கு; castor seed plant. 2. குறிஞ்சான்; indian ipecacuanha.

**துச்சதானியம்** *tucca-tāṉiyam*, பெ. (n.) பதர்; chaff (யாழ்.அக.).

**துச்சம்**[1] *tuccam*, பெ. (n.) 1. இழிவு; lowness, meanness, vileness. "வார்த்தையைத் துச்சமாக மதித்தானே" (இராமநா. உயுத். 81). 2. வெறுமை (யாழ்.அக.); emptiness. 3. இன்மை; non-existence. "விண்ணின் மலரெனத் துச்சமே யெனவும்" (வேதா.சூ. 59). 4. பதர்; chaff. 5. நிலையின்மை; instability. "உலகந் துச்சமென் றுணர்தல்" (திருப்போ.சந். குறுங்கழி. (9) 8). 6. பொய்; false hood (யாழ்.அக.).

**துச்சம்**[2] *tuccam*, பெ. (n.) 1. கொம்மட்டி; water melon. 2. பேய்க்கொம்மட்டி; bitter water melon.

**துச்சளை** *tuccaḷai*, பெ. (n.) துரியோதனன் உடன் பிறந்தாள்; sister of Duriyōdaṉaṉ. "தோள்களிற் கழையை வென்ற துச்சளை" (பாரதசம்பவ. 80).

**துச்சன்** *tuccaṉ*, பெ. (n.) இழிந்தவன் (யாழ்.அக.); mean, worthless fellow.

**துச்சாதனன்** *tuccātaṉaṉ*, பெ. (n.) துரியோதனன் தம்பியருள் ஒருவன்; a brother of Duriyōdaṉaṉ. "துரோபதையது துய்ய கூந்தலிலே கையை நீட்டிய துச்சாதனனுடைய" (கலித்.101, உரை).

**துச்சாரம்** *tuccāram*, பெ. (n.) மூங்கிலரிசி; bamboo seed.

**துச்சி** *tucci*, பெ. (n.) 1. பட்டறிவு; experience. 2. உண்ணுதல்; eating. 3. தேர்வு; examination. 4. பூநீறு; fuller's earth.

[துய் → துச்சி]

**துச்சிதம்** *tuccitam*, பெ. (n.) ஆமணக்கு; castor.

**துச்சிப்பொறுப்பு** *tucci-p-poṟuppu*, பெ. (n.) சிலை வங்கக் கல்; the principle ore of lead.

**துச்சிமம்** *tuccimam*, பெ. (n.) மயிற்கொன்றை; peacock flower tree.

**துச்சிமை** *tuccimai*, பெ. (n.) கீழ்மை; meanness, baseness.

[துச்சம் → துச்சிமை]

**துச்சிரம்** *tucciram*, பெ. (n.) நாயுருவி; Indian burn.

**துச்சில்**[1] *tuccil,* பெ. (n.) ஒதுக்கிடம்; place of retreat, shelter. "உடம்பினுட் துச்சிலிருந்த உயிர்க்கு" *(குறள். 340).*

**துச்சில்**[2] *tuccil,* பெ. (n.) மயில் கொண்டை (அகநி.); crest.

**துச்சு** *tuccu,* பெ. (n.) இழிவு; meanness, base deeds. "துச்சான செய்திடினும்" *(திருவிசை. வேணாட். 1).*

**துசகம்** *tušagam,* பெ. (n.) 1. மாதுளை பார்க்க (யாழ்.அக.); see *mādulai.* 2. கொம்மட்டி மாதுளை பார்க்க; see *kommaṭṭi-mādulai* (மூ.அ.)

**துசங்கட்டு-தல்** *tušaṅgaṭṭu-,* செ.கு.வி (v.i.) காரியத்தில் முனைந்து னிற்றல்; to engage eagerly in an enterprise as by hoisting a flag. கொடி கட்டுதல் "பத்தசனங்கள்ளைக் காக்கத் துசங்கட்டி" *(குற்றா.குற. 91-1).*

*[துசம் + கட்டு-]*

**துசபரிசம்** *tuša-parišam,* பெ. (n.) சிறுகாஞ்சொறி (தைலவ.தைல. 76) பார்க்க; see *šiṟukāñjoṟi.*



**துசம்**[1] *tušam,* பெ. (n.) கொடி; flag. "அடியார்க்கெலா மலகிலாவினை தீர்க்கத் துசங்கட்டு மப்பனே" *(தாயு.ஆசை. 7).*

**துசம்**[2] *tušam,* பெ. (n.) 1. உமி (யாழ்.அக.); husk. 2. தவிடு; bran.

**துசம்**[3] *tušam,* பெ. (n.) குங்குலியம்; bastard sal. 2. பல்; tooth.

**துசன்** *tušaṉ,* பெ. (n.) 1. அந்தணன்; brahmin. 2. தகரம்; tin.

**துஞ்சர்** *tuñjar,* பெ. (n.) அசுரர் (யாழ்.அக.); asuras.

**துஞ்சரி-த்தல்** *tuñjari-,* செ.கு.வி. (v.i.) கண் விழித்தல்; to wake up. "வஞ்சிக் கொம்பரிற் றுஞ்சரித் துளரி யொளிமயிர்கலாபம் பரப்பி" *(பெருங்.உஞ்சைக். 40, 118).*

**துஞ்சல்** *tuñjal,* பெ. (n.) 1. இறத்தல்; dying. 2. தூங்கல்; sleeping. 3. உறங்கல்; dosing drowsing.

**துஞ்சற** *tuñjaṟa,* எ.வி. (adv.) முழுதும்; entirely, wholly.

**துஞ்சினார்** *tuñjiṉār,* பெ. (n.) செத்தார் என்று பொருள்படும் மங்கல வழக்குச் சொல்; the dead, used elephemistically. "செத்தாரைத் துஞ்சினா ரென்றலும்" *(தொல்.சொல். 17, சேனா.).*

**துஞ்சு**[1]**-தல்** *tuñju-,* செ.கு.வி. (v.i.) 1. தூங்குதல்; to sleep, slumber, doze. "நெருப்பினுட் டுஞ்சலு மாகும்" *(குறள். 1049).* 2. தொழிலின்றியிருத்தல்; to rest without work. "உலகு தொழிலுலந்து நாஞ்சி றுஞ்சி" *(அகநா. 14:1).* 3. சோம்புதல்; sluggish. "நீ துஞ்சாய் மாறே" *(புறநா. 22, 38).* 4. சோர்தல்; to droop. "பயிர் துஞ்சிப் போயிற்று" 5. இறத்தல்; to die. "நிலமிசைத்துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப் பட்டாரல்லால்" *(நாலடி. 21).* 6. வலியழிதல்; to perish. "துஞ்சும் பிணியாயின தானே" *(தேவா. 494:4).* 7. குறைதல்; decrease. "பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே" *(சிலப். குன்றக்குரவை).* 8. தங்குதல்; stay. "புலிதுஞ்சு வியன்புலத் தற்றே" *(புறநா. 54).* 9. நிலைபெறுதல் (பிங்.); to settle permanently, endure. "துஞ்சு நீணீதியது" *(சூளா.நாட்.1).* 10. தொங்குதல்; to hang. "துஞ்சுகுழல்" *(பு.வெ. 9, 35, உரை).*

ம. துஞ்சுக

*[துஞ்சு → துஞ்சு-]*

**துஞ்சு**[2]**-தல்** *tuñju,* செ.கு.வி. (v.i.) நெய் முதலியன கட்டியாக உறைதல்; to become solidified, as ghee. "துஞ்சிய நெய்யும் காய்ந்த பாலும்" *(திவ்.பெரியாழ். 2,1,6, வ்யா, பக். 228).*

*[துகில் → துகிலி]*

**துஞ்சு²** *tuñju,* பெ. (n.) துஞ்சுகுழல் பார்க்க (கலித். 96); see *tuñjukuḻal.*

**துஞ்சுகுழல்** *tuñjukuḻal,* பெ. (n.) ஐம்பால்களுள் பின்னித் தொங்கவிட்ட கூந்தல் வகை (பு.வெ. 9, 45, உரை); woman's hair dressed by coiling and tying it up behind in a roll, one of aimpal of v.

*[துஞ்சு + குழல்]*



**துஞ்சுநிலை** *tuñju-nilai,* பெ. (n.) கட்டில் (யாழ்.அக.); cot, bed stead.

**துஞ்சுமரம்** *tuñjumaram,* பெ. (n.) மதில்வாயிற் கணையமரம்; wooden bar to fasten a door. "துஞ்சு மரக்குழா அந்துவன்றி" (பதிற்றுப். 16,3). 2. கழுக்கோல் (பதிற்றுப். 16, 3, உரை.); impaling stake.

*[துஞ்சு + மரம்]*

**துஞ்சுமன்** *tuñjuman,* பெ. (n.) சோம்பலுள்ளவன்; indolant person.

**துஞ்சை** *tuñjai,* பெ. (n.) துஞ்சுகுழல் பார்க்க; see *tuñju-kuḻal* "பனிச்சையையும் துஞ்சையையும் விரித்தும்" (சீவக. 2437, உரை).

*[துஞ்சு → துஞ்சை]*

**துட்கு¹-தல்** *tuṭku-,* செ.கு.வி. (v.i.) அச்சங் கொள்ளுதல்; to be alarmed, struck with fear or dismay. "கடற்றுட்கப் பொரும்வேலர்" (திருப்பு. 423).

*[துட்கெனல் → துட்கு-.]*

**துட்கு²** *tuṭku,* பெ. (n.) அச்சம்; fear, dismay. "துட்கோடுள மறுகும்படி" (பாரத பதினாறாம். 65).

**துட்கெனல்** *tuṭkeṉal,* பெ. (n.) அச்சக்குறிப்பு; expr. of sudden fear or dismay. "நெஞ்சு துட்கென்ன" (சீவக. 2059).

**துட்டலி** *tuṭṭali,* பெ. (n.) செடிவகை (யாழ்.அக.); plant.

**துட்டவி** *tuṭṭavi,* பெ. (n.) 1. தொடரி; prickly thron. 2. ஒரு முட்செடி; a thorny shrub. 3. புலித்தடுக்கி; tiger-stopper.

**துட்டாப்பு** *tuṭṭāppu,* பெ. (n.) 1. செரிமான நோய்; indigestion. 2. சிட்டை மரத்திடையே கட்டிய பாரத்தை சுமக்கை; carrying a load hung on a pole between two persons. 3. சிட்டைமரம் பார்க்க; see *šiṭṭai-maram.*

**துட்டி¹** *tuṭṭi,* பெ. (n.) மனநிறைவு; satisfaction. "நல்ல துட்டியாற் சமாதி தன்னிற் றூங்கிய தூயோர்" (சிவதரு. சிவபோ. 89).

**துட்டி²** *tuṭṭi,* பெ. (n.) பணிக்கு வாராமையின் பொருட்டு சம்பளம் பிடிக்கை; deduction from the wages of a person made because of his absence from work. "அவன் சம்பளத்தில் ஒருநாள் துட்டிபோட்டான்" (செட்டிநா.).

**துட்டிலம்** *tuṭṭilam,* பெ. (n.) இலுப்பை; mahwah flower.

**துட்டு** *tuṭṭu,* பெ. (n.) 1. 2 அல்லது 4 தம்படி மதிப்புக் கொண்ட பணம்; money of the value of 2 or 4 pies. 2. பணம்; money. "அவன் துட்டுள்ளவன்" 3. தொன்மக் காலத்துக் காசு வகை; an ancient copper coin.

*[துன் → துட்டு (மு.தா. 141)]*

**துட்டுக்கட்டை** *tuṭṭu-k-kaṭṭai,* பெ. (n.) துட்டுத்தடி பார்க்க; see *tuṭṭu-t-taṭi.*

**துட்டுக்காரன்** *tuṭṭu-k-kāraṉ,* பெ. (n.) பணக்காரன்; moneyed man.

**துட்டுத்தடி** *tuṭṭu-t-taḍi,* பெ. (n.) குறுந்தடி (யாழ்.அக.); short club.

*[துட்டு + தடி (மு.தா. 141)]*

**துட்டுத்துக்காணி** *tuṭṭu-t-tukkāṇi,* பெ. (n.) 1. சில்லறைப் பணம்; copper money, small change. 2. பணம்; money, wealth.

**துட்டுமாந்தம்** *tuttu-māndam*, பெ. (n.) குழந்தை நோய் வகை (பாலவா. 315); a disease of children.

[ஒருகா. துட்டு + மாந்தம்]

**துட்டுவட்டி** *tuttuvatti*, பெ. (n.) உரூபா ஒன்றுக்கு மாதம் ஒரு துட்டுமேனி வாங்கும் முறையல்லா வட்டி; interest at the rat of a tuttu per rupee per mensem, considered exorbitant.

[துட்டு + வட்டி]

**துட்டுவம்** *tuttuvam*, பெ. (n.) சிறுமை; little, insignificant.

**துட்டெடை** *tuttedai*, பெ. (n.) எண்ணெய் மருந்தெண்ணெய், மருந்து, நெய் இவைகளை உட்கொள்ளும் அளவு, அதாவது 4 பைசா எடை (சா.அக.); a quantity weighing 4 pies generally prescribed by vaidyans in case of liquid medicine, to be given internally as oil, medicated ghee or oil.

**துடக்கம்** *tuḍakkam*, பெ. (n.) தொடக்கம் பார்க்க; see *toḍakkam*.

க. தொடகுக; ம. துடக்கம்

[துடு → துடங்கு → துடக்கம்]

**துடக்கறுப்பான்** *tuḍakkaṟuppāṉ*, பெ. (n.) 1. பசுங்கொத்தான்; air creeper. 2. முடக் கொற்றான்; palsy curet.

[துடக்கு + அறுப்பான்]

**துடக்கு[1]-தல்** *tuḍakku-*, செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல்; to tie, bind. "நெடுங்கொடி யருவி யாம்ப லகலடை துடக்கி" (அகநா. 96). 2. அகப் படுத்துதல்; to entangle, inveigle. "தூண்டிலா விட்டுத் துடக்கி" (கலித். 85). 3. தொடர்ப் படுத்துதல்; to bring together. "குடரோடு துடக்கி முடக்கியிட" (தேவா. 945:1).

க. தொட

**துடக்கு[2]-தல்** *tuḍakku-*, செ.குன்றாவி. (v.t.) தொடக்குதல் (யாழ்.அக.); to begin.

க. தொடகு

[தொடக்கு → துடக்கு]

**துடக்கு[3]** *tuḍakku*, பெ. (n.) 1. தன்னகப் படுத்துவது; that which entangles. "தூண்டி விரையிற் றுடக்குள் ளுறுத்து" (பெருங்உஞ்சைக். 35, 108). 2. தொடர்பு; connection. துடக்குகள் தீர்த்துப் போட்டான். 3. மகளிர் தீட்டு; menses in woman. 4. மகப்பேற்றுத் தீட்டு; ceremonial impurity of child birth.

**துடக்குக்காரன்** *tuḍakku-k-kāraṉ*, பெ. (n.) தீட்டுக்காரன்; person ceremonially unclean, as from a birth or death.

[துடக்கு + காரன்]

**துடக்குவீடு** *tuḍakku-vīḍu*, பெ. (n.) குழந்தை பிறப்பு அல்லது இறப்பினால் தூய்மையற்ற வீடு; a house ceremonially unclean, as from child birth, death, etc.

[துடக்கு + வீடு]

**துடகம்** *tuḍagam*, பெ. (n.) தகரை; ring worm plant.

**துடங்கணம்** *tuḍaṅkaṇam*, பெ. (n.) வெண்காரம்; borax (சா.அக.).

**துடங்கு[1]-தல்** *tuḍaṅgu-*, செ.குன்றாவி. (v.t.) தொடங்கு; to begin.

ம. துடங்ஙுக

**துடங்கு[2]** *tuḍaṅku*, பெ. (n.) விலங்கு; shackles, stocks for confinement.

[துடக்கு → துடங்கு]

**துடப்பம்** *tuḍappam*, பெ. (n.) துடைப்பம்; broom.



**துடப்பம்புல்** *tuḍa-p-pam-pul,* பெ. (n.) துடைப்பப்புல் பார்க்க; see *tuṭaippa-p-pul.*

**துடம்** *tuḍam,* பெ. (n.) துடவு பார்க்க; see *tuṭavu.*

**துடம்பகாரி** *tuḍambakāri,* பெ. (n.) **சிறுதுவரை;** a small variety of dholl.

**துடர்[1]-தல்** *tuḍar,* செகுன்றாவி. (v.t.) *1.* **துடர்;** to follow one after another. "நெடுமரங்கள் சுற்றிச் சாம்புவன் கொல்ல" *(கம்பரா.நாகபா. 59). 2.* **தொடர்** பார்க்க; see *toḍar.*

**துடர்[2]** *tuḍar,* பெ. (n.) **தொடரி;** chain (அகநி).

*[துடு → துடர்]*

**துடர்க்கம்** *tuḍarkkam,* பெ. (n.) **நரி வழுக்கை அல்லது பிரமி வழுக்கை;** Indian bramy.

**துடர்ச்சி** *tuḍarcci,* பெ. (n.) **சண்பகம்;** champauk tree.

**துடராமுறி** *tuḍar-ā-muṟi,* பெ. (n.) **விடுதலை ஆவணம்;** release deed (யாழ்.அக.).

**துடரி** *tuḍari,* பெ. (n.) *1.* **திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒரு மலை;** a hill in Tinnevelly district. "மாறன் றுடரிவண் பொழிலே" *(மாறனலங். 96, 159). 2.* **சிறுவிலந்தை மரம்;** small jujube tree. "திம்புளிக் களாவொடு துடரி முனையின்" *(புறநா. 177).*

**துடரிக்கொழுந்து** *tuḍari-k-koḻuntu,* பெ. (n.) **இண்டங்கொழுந்து;** tender leaves of inddam.

**துடவர்** *tuḍavar,* பெ. (n.) **நீலப்பகுதி மலை இனத்தவர்;** todar of the Nilgiris.

**துடவு** *tuḍavu,* பெ. (n.) **ஓர் அளவு;** a liquid measure. "ஒரு துடவு நெயும்" *(T.A.S. ii, 86).*

*[ஒ.நோ. துழவு → துடவு]*

**துடவை** *tuḍavai,* பெ. (n.) *1.* **சோலை** (சூடா.); grove. *2.* **தோட்டம்;** garden. "தோன்றாத் துடவையி னிட்டன ணீங்க" *(மணிமே. 13,10). 3.* **விளைநிலம்;** cultivated field. "ஆத்தொழு வோடை துடவையுங் கிணறும்" *(திவ்.பெரியாழ். 5,1,5). 4.* **மயில்;** peacock.

*[துடு → துடா]*

**துடி[1]-த்தல்** *tuḍi,* செகுவி. (v.i.) *1.* **படபடவெனச் சலித்தல்;** to quiver, tremble. "வாய்திறந் தம்பவளந் துடிப்பப் பாடுமின்" *(திருவாச. 9,11). 2.* **மனம் பதைத்தல்;** to be in a great flurry or agitation. "துணுக்கத்தாற் துடிக்கின் றாரும்" *(கம்பரா. நீர் விளையாட்டு. 11). 3.* **பரபரத்தல்;** to be eager. "அவன் அங்கே போகத் துடிக்கிறான்". *4.* **பசி முதலியவற்றால் மிக வருந்துதல்;** to suffer acutely, as from the gnawings of hunger. "பசியால் துடிக்கிறான்". *5.* **துடுக்காதல்;** to be rude, roguish. *6.* **மின்னுதல்;** to shine, glitter.

*[துடு → துடி → துடி- (மு.தா. 62)]*

**துடி[2]** *tuḍi,* பெ. (n.) *1.* **சலிப்பு;** quivering. "ஒரு துடி துடித்தாள்". *2.* **வேகம்;** speed. "வித்தோங்கு பயிரைக் கிளைத்துவரு துடியினால் விளையு மென்றே யறியலாம்" *(அறப். சத. 31). 3.* **அறிவுக் கூர்மை;** cleverness. *4.* **சுறுசுறுப்பு;** industry. "பையன் துடியா யிருக்கிறான்". *5.* **மேன்மை;** superiority. *6.* **வலி;** strength. *7.* **உடுக்கை என்னும் பறை வகை;** a small drum shaped like an hour-glass. *8.* **துடி கொட்டுபவன்;** drummer. "துடிப்பண் புரைத்தன்று" *(பு.வெ. 1,19, கொளு). 9.* **உதடு;** lip (அகநி.).

**துடி[3]** *tuḍi,* பெ. (n.) *1.* **அகில் வகை;** salt swamp tiger's milk. *2.* **தூதுவளை** (திவா.) பார்க்க; see *tūduḷai. 3.* **கூதாளி** (யாழ்.அக.); convolvulus. *4.* **சங்கஞ்செடி** (மலை.); mistletoe berry thorn.

**துடி[4]** *tuḍi,* பெ. (n.) *1.* **கால நுட்பம்;** instant, minute. "துடியின் மாள" *(இரகு. யாகப். 67). 2. 4096* **கணங்கொண்ட காலவகை;** one of the ten varieties of kalam v., which consists of 4096 kaṇam. *3.* **சிறுமை;** littleness. *4.* **மயிர்ச் சாந்து;** unguent for perfuming the hair of women. "துடித்தலைக் கருங்குழல்" *(சீவக. 194).*

**துடி[5]** *tuḍi,* பெ. (n.) **திரியணுகம்;** molecule, as made up of three atoms. "துடிகொள் நுண்ணிடை" *(திவ்.பெரியதி. 1,2-3, வ்யா).*

**துடிக்கூத்து** *tuḍi-k-kūttu,* பெ. (n.) **பதினொரு வகை ஆடல்களுள் பகைவரை அழித்தபின் முருகக் கடவுளும் எழுமகளிரும் துடி**

கொட்டியாடிய கூத்து (சிலப். 6,51) (பிங்.); a dance of victory performed to the accompaniment of drum-beat, by skanda and the yeḷu-makaḷir one of ll kuttu of v.

**துடிகம்** *tuḍigam,* பெ. (n.) **தும்பை** (மலை.) பார்க்க; see *tumbai.*

*[துடு → துடிகம்]*

**துடிசாத்திரம்** *tuḍi-šāttiram,* பெ. (n.) **துடிநூல்** (யாழ்.அக.) பார்க்க; see *tuṭi-nūl.*

*[துடி + சாத்திரம்]*

**துடிதுடி-த்தல்** *tuḍi-tuḍi,* செ.குவி. (v.i.) *1.* **மனம் பதைபதைத்தல்;** to be in a great flurry. *2.* **கடுகடுத்தல்;** to fret and fume. "எதிருறத் துடிதுடித் தெரிவிழித் துணை சிவத்து" (பிரபோத 26, 21).

**துடிநாடி** *tuḍināḍi,* பெ. (n.) **வேகமாய்ப் பதைத்தோடும் நாடி;** forcible beating of the pulse (சா.அக.).

*[துடி + நாடி]*

**துடிநிலை** *tuḍi-nilai,* பெ. (n.) **போர்க்களத்தே மறவரது வீரம்பெருகத் துடி கொட்டுதலைக் கூறும் புறத்துறை;** theme of arousing the coverage of warriors by beating the tuḍi drum. "மறங்கடைக் கூட்டிய துடிநிலை" (தொல்.பொ. 59). *2.* **வழிவழியாய்த் துடிகொட்டி வருவோனது குணங்களைப் புகழும் புறத்துறை** (பு.வெ. 1,19); theme of praising the faithful services of a hereditary drummer.

*[துடி → துடிநிலை]*

**துடிநூல்** *tuḍi-nūl,* பெ. (n.) **உடலின் துடிப்புக்களினின்று அவற்றின் பயனான விளைவுகளைக் கூறும் நூல்** (யாழ்.அக.); treatise on the art of sooth saying from the quivering of different parts of the body.

*[துடி + நூல்]*

**துடிநோய்** *tuḍi-nōy,* பெ. (n.) **திடீரெனத் துடிக்கச் செய்தலினாலேற்படும் நோய்வகை;** sudden vital depression due to an injury of emotion which makes an untowerd impression upon the nervous system shock.

**துடிப்பு**[1] *tuḍippu,* பெ. (n.) *1.* **பரபரப்பு;** flurry, diligence. "துடிப்பே விஞ்சியிருக்கும்" (ஈடு. 8,4,10). *2.* **நடுக்கம்;** trembling. "தொண்டை வாயிற் றுடிப் பொன்று சொல்லவே" (கம்பரா. பூக்கொய். 38). *3.* **நாடியடிக்கை;** palpitation. "மார்பிடைத் துடிப்புண்டென்னா" (கம்பரா. நாகபாச. 223). *4.* **அகந்தை;** pride. "துடிப்பற்றுக் கேவலமாய் நிற்பதுபோல்" (ஒழுவி.பொது. 2). *5.* **சினம்;** anger. "பரவி யெல்லாம் படுத்தினான் றுடிப்புமாற" (கம்பரா. நிகும்பலை. 179). *6.* **பிரம்பு முதலியவற்றின் வீச்சு;** whirl, as of a whip. "சூரற் றுடிப்பினைத் திசை துழாவ" (இரகு. குறைகூ. 8).

*[துடு → துடி → துடிப்பு (மு.தா. 62)]*

**துடிப்பு**[2] *tuḍippu,* பெ. (n.) *1.* **விலை முதலியவற்றின் ஏற்றம்;** exorbitance as of price. "துடிப்பானதுமான விலையை ஏற்றுவார்கள்" (மதி. க. 173). *2.* **ஊற்றம்;** zeal. "சைவத் துடிப்புள்ளவர்" (மதி. க. 27).

**துடிபித்தம்** *tuḍipittam,* பெ. (n.) **உடம்பு துடித்தல், சண்டையிடல், மகளிரிடம் ஆசை கொள்ளல் முதலிய குணங்களை உண்டாக்கும் ஒரு வகைப்பித்தம்** (சா.அக.); a kind of bilious nature in men causing mischievous propensitus as tremor, inducing a desire to quarrel with others or promoting a carnal desire etc.

*[துடி + பித்தம்]*

**துடிபேதி** *tuḍibēti,* பெ. (n.) **கடுமையான வயிற்றுப் போக்கு;** drastic purgative.

*[துடி + பேதி]*

**துடியடங்கவரை-த்தல்** *tuḍiyaḍaṅga-varai-,* செ.குன்றாவி (v.t.) **உருவம் மாறும்படி அரைக்குதல்** (சா.அக.); grinding a thing so as to alter its shape or structure completely.

*[துடி + அடங்க + அரை-.]*

**துடியடி** *tuḍi-y-aḍi,* பெ. (n.) **துடி போன்ற காலுடைய யானைக் கன்று;** the young of an

elephant, as drum-footed. "கடிய துடியடி யினொடு மிடியி னதிர" (தேவா. 1157.4).

[துடி + அடி]

**துடியன்** *tuḍiyaṉ*, பெ. (n.) *1.* துடிகொட்டுஞ் சாதியான்; drummer who beats the tuḍi drum. "துடியன் பாணன் பறையன் கடம்பனென்று" (புறநா. 233,7). 2. சினமுள்ளவன்; man of irritable temper. *4.* சுறுசுறுப்புள்ளவன்; busy person industrious person.

[துடி → துடியன்]

**துடியாஞ்சி**[1] *tuḍiyāñji*, பெ. (n.) சங்கஞ்செடி பார்க்க; see *šaṅgañjeḍi*.

**துடிய'ாஞ்சி**[2] *tuḍiyāñji*, பெ. (n.) இசங்கு; mistle toe berry thorn (சா.அக.).

[துடி → துடிநிலை]

**துடியாட்டம்** *tuḍiyāṭṭam*, பெ. (n.) கிறுகிறுப்பு; giddiness.

**துடியாடல்** *tuḍi-y-āṭal*, பெ. (n.) துடிக்கூத்து பார்க்க; see *tuṭi-k-kūttu*.

**துடியிகம்** *tuḍiyikam*, பெ. (n.) நவரை வாழை; a variety of plantain.

**துடியிடை** *tuḍi-y-iḍai*, பெ. (n.) உடுக்குப் போன்ற இடுப்புடையவளாகிய பெண்; women, as having a waist slender like the middle of the tuti drum. "திறம்புவ தாய்விடிற் போலி துடியிடையே" (வீரசோ. யாப். 24).

**துடிவாதம்** *tuḍi-vādam*, பெ. (n.) நரம்புத் துளைகளில் கெட்ட நீர் தங்குவதால் உடம்பில் பலவிடங்களில் துடிதுடித்து அடங்கி, உடம்பில் அனல் பறந்து ஒடுங்கும் ஒரு ஊதைநோய் (சா.அக.); a kind of nervous disease more especially a functional disorder of the nervous system due to accumulation of moibid fluid in several parts of the body.

**துடிவாயு** *tuḍi-vāyu*, பெ. (n.) காற்று அடிக்கடி உடம்பில் பரந்தோடி, நாள்தோறும் அதிகரித்து, பலவிடங்களில் துடிப் புண்டாக்கும் ஒரு வளி (சா.அக.); a form of nervous disease due to the deranged humour vayu prevailing on several parts of the body.

**துடினம்** *tuḍiṉam*, பெ. (n.) விரைவு; haste.

**துடுக்கன்** *tuḍukkaṉ*, பெ. (n.) துடுக்குக்காரன் பார்க்க; see *tuḍukku-k-kāraṉ*.

**துடுக்கு** *tuḍukku*, பெ. (n.) *1.* குறும்புத்தனம்; insolence, surliness. "இந்தத் துடுக்கு நீர் செய்தீர்" (இராமநா. கிசு. 17). *2.* சுறுசுறுப்பு; activity, quickness. *3.* குறும்புச் செயல்; wicked act; mischief. "துன்மார்க்கர் . . . துடுக்கே செய்வர்" (தண்டலை. 52).

தெ., க. துடுக்கு

[துடு → துடுக்கு]

**துடுக்குக்காரன்** *tuḍukku-k-kāraṉ*, பெ. (n.) *1.* செருக்குள்ளவன்; insolent person. *2.* கொடுமையாளன்; wicked person; churl.

**துடுக்கெனல்** *tuḍu-k-keṉal*, பெ. (n.) *1.* அச்சக் குறிப்பு; expr. signifying fear. *2.* சிந்தனை யற்றுப் பேசுங்குறிப்பு; rashness in considerateness. "துடுக்கென்று பேசினான்".

[துடுக்கு + எனல்]

**துடுப்பாற்றி** *tuḍu-p-pāṟṟi*, பெ. (n.) கடல்மீன் வகை; a kind of sea-fish.



**துடுப்பு** *tuḍuppu*, பெ. (n.) *1.* சட்டுவம்; spatula. "இட்டார் தொடுகழலார் மூழை துடுப்பு" (பு.வெ. 6, 23). *2.* அகப்பை; ladle. "துடுப்பிற் றுழந்த வல்சி" (புறநா. 26, 10). *3.* காந்தண்மடல் (அகப்பை போல்வது); petal of kantal, as resembling a ladle. "பஃறுடுப் பெடுத்த வலங்கு குலைக்காந்தள்" (அகநா. 108) (மலைபடு. 336). *4.* பூங்கொத்து (யாழ்.அக.); bunch of flowers. *5.* வலிதண்டு; oar, paddle.

தெ. துடுப்பு; க. துடுப்பு; ம. துடுப்பு

[துள் → துளு → துளுப்பு → துடுப்பு (வேக. 276)]

**துடுப்புக்கீரை** *tuḍuppu-k-kīrai*, பெ. (n.) மருந்துச் செடிவகை; a small medicinal plant.

[துடுப்பு + கீரை]

**துடுப்புள்ளான்** *tuḍu-p-puḷḷāṉ-*, பெ. (n.) உள்ளான் வகை; snipe with paddle bill.

[துடுப்பு + உள்ளான்]



**துடும்பு-தல்** *tuḍumpu-*, செ.கு.வி. (v.i.) 1. ததும்புதல்; to have and flow, as sea-water. "துடும்பல் வேலை துளங்கிய தில்லையால்" (கம்பரா. சேதுபந்தன. 59). 2. கூடுதல்; to combine, come together. "வன்னியு மந்தமுந் துடும்பல் செய் சடை" (தேவா. 277, 6).

[துளும்பு → துடும்பு-. (மு.தா. 6)]

**துடுமெனல்** *tuḍum-eṉal*, பெ. (n.) 1. ஒலிக்குறிப்பு; onom. expr. signifying roaring. 2. நீரில் விழுதற்குறிப்பு; jumping sound, as into water. "தீம்பழ நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழூஉம்" (ஐங்குறு. 61).

க. துடும்

**துடுமை** *tuḍumai*, பெ. (n.) தோற்கருவி வகை (சிலப். 3, வரி, உரை, பக். 104); a kind of drum.

தெ. துடுமு; க. துடுபு

**துடுவை** *tuḍuvai*, பெ. (n.) நெய்த்துடுப்பு; wooden ladle for taking ghee. "துடுவையா னறுநெ யார்த்தி" (திருவிளை. திருமணப் 184).

[துளு → துடு → துடுவை (வேக. 277)]

**துடை[1]-த்தல்** *tuḍai-t-tal*, பெ. (n.) 1. தடவி நீக்குதல்; to wipe. "வான் றுடைக்கும் வகைய போல" (புறநா. 38). 2. பெருக்கித்தள்ளுதல்; to sweep, brush. "தூளி . . . ஆர்ப்பது துடைப்பது போன்ற" (கம்பரா. கும்பகருணன். 101). 3. துவட்டுதல்; to dry by wiping, as wet hair. தலையை ஈரம் போகத் துடை 4. ஒப்பமிடுதல்; to polish. "நன் பொன் மணியுறீஇப் பேணித் துடைத்தன்ன" (கலித். 117). 5. தீற்றுதல்; to rub, apply. "சோரியை வாரியைத் துடைத்தார்" (கம்பரா.அதிகாயன். 238). 6. நீக்குதல்; to remove, dispel, to expel dismiss. "தன்கேளிர் துன்பந் துடைத்தூன்றுந் தூண்" (குறள். 615). 7. அழித்தல்; to ruin, destroy. "படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி" (திருவாச. 4, 100). 8. கொல்லுதல்; to hill. "துடைத்த காலன்றனை" (ஞானவா. சுக்கி. 18). 9. கைவிடுதல்; to relinguish, desert. 10. காலியாக்குதல்; to exhaust.

தெ. துருட்சு; க. தொடெ; ம. துடெக்க

**துடை[2]** *tuḍai*, பெ. (n.) 1. தொடையென்னும் உறுப்பு; thigh. 2. சுவர்க்கட்டை; block built into a wall to support a beam. 3. சுவர்ப்புறத்து நீண்ட உத்திரம்; beam projecting from a wall. 4. விட்டம்; long cross beam. 5. அரசமரம்; pipal tree. 6. நச்சு மூங்கில்; poison bamboo.

[துடு → துடை (வ.மொ.வ. 182)]



**துடைக்கனம்** *tuḍai-k-kaṉam*, பெ. (n.) மூங்கில்; bamboo.

**துடைகாலன்** *tuḍaikālaṉ*, பெ. (n.) தன் குடும்பத்திற்குக் கேடு விளைவிக்கும் தீய குணாளன்; a man whose ill-luck is believed to bring ruin to his family.

**துடைகாலி** *tuḍai-kāli,* பெ. (n.) தன் குடும்பத்திற்கே கேடு விளைவிக்கும் நலமிலாப்பெண்; a woman whose ill-luck is believed to bring ruin to her family.

**துடைச்சவம்** *tuḍai-c-cavam,* பெ. (n.) எருக்கு; madar plant.

**துடைப்பக்கட்டை** *tuḍaippa-k-kaṭṭai,* பெ. (n.) 1. துடைப்பம் பார்க்க; see *tuṭaippam.* 2. தேய்ந்த துடைப்பம்; worn-out broom.

**துடைப்பப்புல்** *tuḍaipa-p-pul,* பெ. (n.) புல் விளக்குமாறு; broom-grass.

**துடைப்பம்** *tuḍaippam,* பெ. (n.) விளக்குமாறு; broom, beson. "உரோமநீள் வால்க ளற்றன துடைப்ப மொத்தலின்" (உத்தரரா.இலங்கையழி. 31).

ம. துடப்பம்

[துடை → துடைப்பு → துடைப்பம் (வே.க. 277)]

**துடைப்பமுள்** *tuḍai-p-pa-muḷ,* பெ. (n.) துடப்பத்திலுள்ள முள்; the thorn like subtances in the broom grass (சா.அக.).

[துடைப்பம் + முள்]

**துடைவாழை** *tuḍai-vāḻai,* பெ. (n.) 1. தொடையில் உண்டாகும் கட்டிவகை; inflammed glands, abscess on the thigh near the groin. 2. அரையாப்புக்கட்டி; bubo.

[தொடை → துடை + வாழை]

**துடைவி** *tuḍaivi,* பெ. (n.) நாயுருவி; indian burr.

[துடை → துடைவி]

**துடைவை** *tuḍaivai,* பெ. (n.) 1. உழவு; cultivation. 2. கொல்லை, பூந்தோட்டம்; cultivation, back-yard, flower garden.

[துடை → துடைவை]

**துண்டக்காணிமேரை** *tuṇḍa-k-kāṇi-mērai,* பெ. (n.) சிற்றூர்க் காணிகளையும் அவற்றின் விளைவையும் கணக்கிட்டுச் சிற்றூர் அலுவலர்களுக்குக் கொடுக்கப்படும் தவசச் சம்பளம்; fees in kind paid to the village officers calculated from the number of kani in a village and the average produce per kani M.N.A.D. I, 173.

**துண்டகவரசு** *tuṇḍagavarašu,* பெ. (n.) நச்சு மூங்கில்; poisonous bamboo.

[துடை → துடைவை]

**துண்டகன்** *tuṇḍagaṉ,* பெ. (n.) கபடன், வஞ்சகன்; trailor.

**துண்டகேரி** *tuṇḍakēri,* பெ. (n.) 1. பருத்தி; cotton. 2. கோவை; *kōvai.*

**துண்டதுண்டம்** *tuṇḍa-tuṇḍam,* பெ. (n.) சின்ன பின்னம்; very small pieces. "துண்ட துண்டங்கள் செய்தான்" (கம்பரா.சடாயுவுயிர். 109).

[துண்டம் + துண்டம்]

**துண்டம்**[1] *tuṇḍam,* பெ. (n.) 1. துண்டு; piece, slice. "மதித்துண்ட மேவுஞ் சுடர்த் தொல்சடை" (தேவா. 79,3). 2. சிறுதுணி; a small piece of cloth. 3. சிறுவாய்க்கால்; small canal. 4. பிரிவு; section, division. 5. சிறிய வயற்பகுதி; a small plot of field. 6. மீன் துண்டம்; a piece of fish-meat.

**துண்டம்**[2] *tuṇḍam,* பெ. (n.) 1. பறவை மூக்கு; beak, bill. "துண்டப்படையால்" (கம்பரா. சடாயுவுயிர். 109). 2. மூக்கு; nose. "தோன்றா நகையுடன் றுண்டமுஞ் சுட்டி" (கல்லா. 63, 8). 3. முகம் (பிங்.); face. 4. யானைத்துதிக்கை; elephant's trunk. 5. சாரைப்பாம்பு (பிங்.); rat snake. 6. வாளலகு (ஆயுதவலகு); blade, as of a sword.

**துண்டமதி** *tuṇḍamati,* பெ. (n.) பிறைத் திங்கள்; crescent. "துண்டமதி நுதலாளையும்" (பதினொ. திருத்தொண். திருவந். 7).

[துண்டம் + மதி]

**துண்டமிழு-த்தல்** *tuṇḍam-iḻu-,* செ.கு.வி. (v.i.) தோட்டங்களிற் சிறு வாய்க்கால் அமைத்தல்; to make small channels in garden beds.

[துண்டம் + இழு-.]

**துண்டரிக்கம்** *tuṇḍarikkam,* பெ. (n.) 1. கொடுமை (வின்.); oppression. 2. தொந்தரவு (வின்); quarrelsomeness. 3. முகக்களை; bright

intelligent look. 4. *கண்டிப்பு;* sharpness, curtness, decisiveness, as in speech. *'அவன் துண்டரிக்கமாய்ப் பேசுகிறான்'.*

தெ. துண்டரிக்கமு

**துண்டரிகம்** *tuṇḍarigam,* பெ. (n.) துண்டரிக்கம்[1,2] *பார்க்க;* see tuṇḍarikkam. "*துண்டரிகப் பிள்ளைதனைச் சூழ்ந்து பிடித்து" (ஆதியூரவதானி).*

**துண்டன்** *tuṇḍaṉ,* பெ. (n.) *கொலைஞன்;* murderer. *'துண்டனாகிய துட்பண்ணியன்' (சேதுபு. அக்கினி. 44).*

**துண்டாக்கினி** *tuṇḍā-k-kiṉi,* பெ. (n.) *நிலவுபோன்று காய் காய்க்கும் எருக்கஞ் செடி;* madar plant.

**துண்டாடு-தல்** *tuṇḍāḍu-,* செ.குன்றாவி. (v.t.) *துண்டு துண்டாக வெட்டுதல் (வின்.);* to cut in pieces, as a board.

*[துண்டு + ஆடு-.]*

**துண்டாயம்** *tuṇḍāyam,* பெ. (n.) 1. *பொற் பணம்;* gold fanam. 2. *பொன்மணல்;* gold sand.

*[துண்டு + ஆயம்]*

**துண்டாலபித்தி** *tuṇḍāla-pitti,* பெ. (n.) *வெள்ளுமத்தை;* white datura.

**துண்டி[1]-த்தல்** *tuṇḍi-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. *வெட்டுதல்;* to cut, sever. "*இருபதமு மழுவாற் றுண்டித்து" (சேதுபு. கடவு. 12).* 2. *கிழித்தல் (வின்.);* to tear up. 3. *பிரித்தல்;* to divide, separate. *'அவனை அக்கூட்டத்தினின்று துண்டித்துவிட்டார்'* 4. *சுருக்கிப் பேசுதல்;* to cut short one's words, speak in few words. *'அவன் துண்டித்துப் பேசுகிறான்' (வின்.).* 5. *மறுத்தல் (வின்.);* to dispute, disprove. 6. *கண்டித்தல்;* to rebuke sharply.

*[துண்டு → துண்டி → துண்டித்தல்]*

**துண்டி[2]-த்தல்** *tuṇḍi-,* செ.கு.வி. (v.i.) 1. *வெட்டுண்ணுதல்;* to be cut off, detached, broken. 2. *கடித்தபுண் வீங்குதல்;* to swell, as the skin from a bite. 3. *கண்டிப்பாதல்;* to be strict. "*துண்டித்துக் கேட்டான்".*

**துண்டி[3]** *tuṇḍi,* பெ. (n.) 1. *துண்டாய்க் கிடக்குந் தரிசு நிலம்;* detached piece of high land left waste; waste land surrounded by fields. 2. *கழி;* small arm of the sea.

**துண்டி[4]** *tuṇḍi,* பெ. (n.) 1. *கொப்பூழ்;* navel. 2. *பறவை மூக்கு;* beak.

**துண்டிகேசி** *tuṇḍi-kēsi* பெ. (n.) 1. *உண்ணாக்கின் கொப்புளம்;* a large boil on the palate. 2. *பெரிய கோவை;* Indian caper.

**துண்டிகை** *tuṇḍigai,* பெ. (n.) துண்டி[3] *பார்க்க (யாழ். அக.);* see *tuṇḍi.*

**துண்டித்துப்பிடி-த்தல்** *tuṇḍittu-p-piḍi-* செ.குன்றாவி. (v.t) 1. *பேசுவோனைத் தடைப்படுத்தி வினா எழுப்புதல்;* to interrupt one's speech with questions. 2. *நெருக்குதல்;* to press, ply card.

*[துண்டித்து + பிடித்தல்]*

**துண்டிப்பால்** *tuṇḍi-p-pāl,* பெ. (n.) *காட்டாமணக்குப் பால்;* juice of physic nut plant.

**துண்டிருசால்** *tuṇḍirucāl,* பெ. (n.) *பகுதி பகுதியாகப் பிரித்துச் செலுத்தும் வரி;* part remittance, remittance made in instalments. 2. *அதிக வரி;* extra taxes.

*[துண்டு + இருசால்]*

**துண்டில்** *tuṇḍil,* பெ. (n.) *மூங்கில் (அக.நி.);* bamboo.

*[துண்டு → துண்டில்]*

**துண்டிலம்** *tuṇḍilam,* பெ. (n.) *கக்கரிக்காய்;* cucumber.

*[துண்டு → துண்டிலம்]*

**துண்டீரபுரம்** *tuṇḍīra-puram,* பெ. (n.) *காஞ்சிபுரம்;* conjeevaram, as the capital of Tuṇḍiram. "*காஞ்சி துண்டீரபுரமெனப் புகல நின்றதுவே" (கந்தபு. திருநகரப். 73).*

**துண்டீரன்** *tuṇḍīraṉ,* பெ. (n.) *காஞ்சியில் ஆட்சிபுரிந்த அரசன்;* an ancient king of canjeevaram. *'துண்டீரனும் . . . அரசுசெய் தளித்தநந் நகரம்' (கந்தபு. திருநகரப். 87).*

**துண்டு**[1] *tuṇḍu,* பெ. (n.) ஆடை வகையுள் ஒன்று; a kind of towel.

*[துள் → துண்டு (மு.தா. 141)]*

**துண்டு**[2] *tuṇḍu,* பெ. (n.) *1.* கூறு; piece, bit, fragment, slice, scrap, morsel. *2.* பிரிவு; section, division strip. *3.* கையொப்பச்சீட்டு (யாழ்.அக.); receipt. *4.* சீட்டு; chit, billet, ticket, small note. *5.* சிறுதுணி; small piece of cloth; towel. *6.* இரண்டு பெரிய சிப்பமேனும் நான்கு சிறிய சிப்பமேனுங் கொண்ட புகையிலைக் கட்டு; bale of tobacco consisting of four small or two large cippam. *7.* 20 கவுளி கொண்ட வெற்றிலைக்கட்டு; a bale of betel leaves containing 20 kavuli. *8.* இழப்பு; loss, as in trade. *9.* துண்டுவாரம் பார்க்க; see *tuṇḍuvāram. 10.* தனி; separateness. 'அந்த வேலை துண்டாய் நடக்கட்டும்.' *11.* எச்சம்; balance. 'துண்டுப் பணம்' (நாஞ்.).

*[துண்டு → துண்டி]*

**துண்டுக்கத்தரி** *tuṇḍu-k-kattari,* பெ. (n.) துண்டுக்கத்திரி பார்க்க (யாழ்.அக.); see *tuṇḍu-k-kattiri.*

*[துண்டு + கத்தரி]*

**துண்டுக்காணி** *tuṇḍu-k-kāṇi,* பெ. (n.) துண்டி[2, 3] பார்க்க (வின்.); see *tuṇḍi.*

*[துண்டு + காணி]*

**துண்டுக்கத்திரி** *tuṇḍu-k-kattiri,* பெ. (n.) ஒரு வகை நச்சுப்புழு (வின்.); a kind of venemous.

*[துண்டு + கத்திரி]*

**துண்டுசேறு** *tuṇḍu-ceṟu,* பெ. (n.) துண்டுதுண்டாய்க் கடலடிப் பரப்பிலுள்ள சேறு (செங். மீன்); pieces of bog land under the sea.

*[துண்டு + சேறு]*

**துண்டுத்தடி** *tuṇḍu-t-taḍi,* பெ. (n.) பெரிய மீன்களின் வேகத்தைக் குறைக்க ஆடுஞ் சிறுதடி (தஞ்சை.மீன்); a small rod, used to reduce the speed of the big size fishes.

*[துண்டு + தடி]*

**துண்டுதுடக்கு** *tuṇḍu-tuḍakku,* பெ. (n.) *1.* சிறுதுணுக்கு; small piece, fragment. *2.* தீண்டக்கூடா பொருள்; unclean object.

*[துண்டு + துடக்கு]*

**துண்டுந்துணியுமாக** *tuṇḍun-tuṇiyumāga,* வி.எ. (adv.) துண்டு துண்டாக; in jumps, in pieces, in cloths. 'அரத்தந் துண்டுந் துணியுமாகக் கிடக்கிறது'.

*[துண்டு + துணியுமாக]*

**துண்டுப்பத்திரிகை** *tuṇḍu-p-pattirikai,* பெ. (n.) தனிக்கடிதவாயிலாக வெளியிடப்படும் சிற்றிதழ்; leaflet.

*[துண்டு + பத்திரிகை]*

**துண்டுப்புள்ளி** *tuṇḍu-p-puḷḷi,* பெ. (n.) துண்டுவாரம் பார்க்க; see *tuṇḍuvāram.*

*[துண்டு + புள்ளி]*

**துண்டுபடு-தல்** *tuṇḍu-paḍu-,* செ.கு.வி. (v.i.) துண்டுவிழு-[2] பார்க்க; see *tuṇḍuviḻu-.*

*[துண்டு + படு-.]*

**துண்டுருட்டி** *tuṇḍuruṭṭi,* பெ. (n.) *1.* அடிமரத்தின் உருண்டை வடிவம்; roundness of trunk. *2.* பெருவயிறு; large abdomen.

*[துண்டு + உருட்டி]*

**துண்டுருட்டிக்காளை** *tuṇḍuruṭṭi-k-kāḷai,* பெ. (n.) கொழுத்த காளை (வின்.); fat bull.

*[தின்றுருட்டி + காளை → துண்டுருட்டிக் காளை]*

**துண்டுவலை** *tuṇḍuvalai,* பெ. (n.) வலையின் ஒரு கூறு (செங்.மீன்.); part of a fish net.

*[துண்டு + வலை]*

**துண்டுவாசிகூட்டு-தல்** *tuṇḍu-vāsi-kūṭṭu-,* செ.கு.வி. (v.i.) தவசம் முதலியவற்றால் இழப்பிற்கு ஈடு பெறுதல் (வின்.); to make good a loss, especially to grain (செ.அக.).

*[துண்டு + வாசிகூட்டு-.]*

**துண்டுவாரம்** *tuṇḍu-vāram,* பெ. (n.) மொத்த விளைவில் நிலவுடைமையாளர்க்குரிய பகுதி; mirasudar's share of the produce.

*[துண்டு + வாரம்]*

**துண்டுவிழு-தல்** *tuṇḍu-viḻu-,* செ.கு.வி. (v.i.) 1. *வேண்டிய அளவுக்கு மேல் மிச்சப்பகுதி அமைதல்;* to have a piece left over after a material has been cut into pieces or required length, as a cloth. "வேட்டி துண்டு விழுந்தது" 2. *வேண்டிய அளவுக்குக் குறைபடுதல்;* to be deficient. 'கொடுக்க வேண்டிய பணத்துக்கு பத்துரூபா துண்டு விழுகிறது.' 3. *இழப்பாதல்;* to end in loss, as trade.

*[துண்டு + விழு-.]*

**துண்டுவெளியீடு** *tuṇḍu-veḷiyīḍu,* பெ. (n.) *அட்டைகளின்றி அல்லது கட்டுமானம் செய்யப்படாமல் தாளில் அச்சிடப்பட்ட ஒரு சிறு புத்தகம் (அச்சு.);* pamphlet, handbill.

*[துண்டு + வெளியீடு]*

**துண்டை** *tuṇḍai,* பெ. (n.) துடுக்கானவன்; bold, rash person. 'துண்டையான பையல்'.

*[துள் → துண் → துண்டு → துண்டை (மு.தா. 60)]*

**துண்ணிடு-தல்** *tuṇṇiḍu-,* செ.கு.வி. (v.i.) *அச்சத்தால் திடுக்கிடுதல் (யாழ். அக.);* to start, as in fright.

*[துண் → துண்ணிடு-.]*

**துண்ணூறு** *tuṇṇūṟu,* பெ. (n.) திருநீறு பார்க்க; see *tirunīṟu.* 'துண்ணூற்று மடல்'.

**துண்ணெனல்** *tuṇṇeṉal,* பெ. (n.) 1. *திடுக்கிடுதற் குறிப்பு;* expr. signifying startling. "எயினர்கோன் துண்ணென்றான்" *(கம்பரா. குகப். 28).* 2. *அச்சக்குறிப்பு;* expr. signifying frightening. "ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி." *(திருவாச. 19. 10).* 3. *விரைவுக் குறிப்பு;* suddenness. "துண்ணென வென்னுள மன்னிய சோதி" *(திருவாச. 497).*

*[துண் + எனல்]*

**துணங்கல்** *tuṇaṅgal,* பெ. (n.) கூத்து (பிங்.); dance.

*[துணங்கை → துணங்கல்]*

**துணங்கறல்** *tuṇaṅgaṟal,* பெ. (n.) 1. *இருள்;* darkness. 2. *திருவிழா;* festival (செ. அக.).

**துணங்கு** *tuṇaṅgu,* பெ. (n.) இருள் (யாழ்.அக.); darkness.

**துணங்கை** *tuṇaṅgai,* பெ. (n.) 1. *முடக்கிய இருகைகளையும் விலாப் புடைகளில் ஒற்றியடித்துக்கொண்டு அசைந்தாடும் ஒரு வகைக் கூத்து;* a kind of dance in which the arms bent at the above are made to strike against the sides. "பிணந்தின் வாய டுணங்கை தூங்க" *(திருமுரு. 56).* 2. *பேய் (சூடா.);* devil. 3. *திருவிழா (திவா.);* festival. 4. *யாழ் விண்மீன் (திருவாதிரை) (சூடா.);* the sixth nakṣatra.

*[துளங்கு → துணங்கு → துணங்கை]*

**துணதுண-த்தல்** *tuṇa-tuṇa-,* 11 செ.கு.வி. (v.i.) *இடைவிடாது பேசித் தொந்தரவு செய்தல்;* to worry with ceaseless talk (கொ.வ.).

**துணர்[1]-தல்** *tuṇar-,* 4 செ.கு.வி. (v.i.) துணர்[3] பார்க்க; see tuṇar. "இருடுணுர்ந்தனைய குஞ்சியன்" *(சூளா. குமார. 6).*

*[துண் → துணர் → துணர்தல்]*

**துணர்[2]** *tuṇar,* பெ. (n.) 1. *பூ;* flower. "துணரினா லருச்சனை புரிந்தே" *(பிரமோத். 18, 30).* 2. *பூங்கொத்து;* bunch of flowers. "பொற்றுணர்த் தாமம்" *(கல்லா. 10).* 3. *பூந்தாது (சூடா.);* pollen of a flower. 4. *குலை;* bunch of fruits. "சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்" *(ஐங்குறு. 214).*

*[துண் → துணர்]*

**துணர்[3]-த்தல்** *tuṇar-,* 11 செ.கு.வி. (v.i.) *கொத்துடையதாதல்;* to cluster, as flowers. "துணர்த்த பூந்தொடையலான்" *(கம்பரா. வேள்வி. 53).*

*[துண் → துணர் → துணர்த்தல்]*

**துணரி** *tuṇari,* பெ. (n.) *பூங்கொத்து;* bunch of flowers. "துணரிஞாழல் நறும்போது நஞ்சூழ் குழற்பெய்து" *(திவ். பெரியதி. 9, 3, 5).*

*[துணர் → துணரி]*

**துணவு[1]** *tuṇavu,* பெ. (n.) விரைவு (வின்.); quickness celerity, suddenness.

*[துண்ணெனல் → துணவு]*

**துணவு**[2] *tuṇavu,* பெ. (n.) நுணா பார்க்க (வின்.); see *nuṇā*.

**துணி**[1]**-தல்** *tuṇi-,* செ.கு.வி. (v.i.) *1.* வெட்டுண்ணுதல்; to be sundered, cut, severed. "இருடுணிந் தன்ன குவவுமயிர்க் குருளை" *(அகநா. 201). 2.* நீங்குதல்; to be removed. "இன்றே துணிந்ததென் வினைத் தொடர்பு" *(கம்பரா. கையடை. 5). 3.* கிழிதல்; to be torn. "ஆடையுந் துணிந்த கீரையாக்கியே" *(திருவாத. பு. மண்சும. 29). 4.* தெளிவாதல்; to become clear. "துணி நீர் மெல்லவல்" *(மதுரைக். 283). 5.* துணிவு கொள்ளல்; to dare, venture. "அவன் இப்போது துணிந்து பேசுகிறான்".

*[துள் → துண் → துணி-. (மு.தா. 158)]*

**துணி**[2]**-தல்** *tuṇi-,* செ.குன்றாவி. (v.tr.) *1.* உறுதி செய்தல்; to resolve, determine, ascertain; to conclude. "அருஞ்சுரந் துணிந்து பிறளாயினள்" *(அகநா. 35). 2.* தொடங்குதல்; to commence. "எண்ணித் துணிக கருமம்" *(குறள். 467).*

**துணி-த்தல்** *tuṇi-,* செ.குன்றாவி. (v.tr.) *1.* வெட்டுதல்; to cut, sever, cut off. "இலங்கைக் கோன் சிரமுங் கரமுந் துணித்து" *(திவ். பெரியதி. 8, 6, 5).*

*[துள் → துண் → துணி-. (மு.தா. 141)]*

**துணி**[3] *tuṇi,* பெ. (n.) *1.* துண்டம்; piece, slice, chop, fragment, bit, morsel. "வெளிற்றுப் பனந் துணியின்" *(புறநா. 35). 2.* ஆடை (பிங்.); cloth for wear. "துணிச்சிதர்" *(மணி. 11, 109). 3.* தொங்கல் (சூடா.); hanging, pendants, decorations, as of cloth. *4.* தேரிற் கட்டிய கொடி (சது.); flag of a car. *5.* ஒளி (பிங்.); light. *6.* மரவுரி (பிங்.); bark-cloth. *7.* உறுதி; ascertainment, determination.

*[துள் → துண் → துணி-. (மு.தா. 141)]*

**துணிக்காகிதம்** *tuṇi-k-kāgidam,* பெ. (n.) துணி போன்று இருக்கத்தக்க முறையில் உருவாக்கப் பெற்ற தாள் அல்லது அட்டை; linen finish, paper like cloth.

*[துணி + காகிதம்]*

**துணிக்கை** *tuṇikkai,* பெ. (n.) சிறுதுண்டு; small piece, slice.

*[துணி → துணிக்கை (மு.தா. 141)]*

**துணிகரம்** *tuṇikaram,* பெ. (n.) *1.* துணிவு; daring, boldness, self-confidence. *2.* துடுக்கு; venturesomeness, presumption, rashness, temerity.

*[துணி → துணிகரம்]*

**துணிகரி-த்தல்** *tuṇikari-,* 11 செகுவி. (v.i.) துணிவு கொள்ளல் (வின்.); to be bold, daring, intrepid, to dare.

**துணிச்சல்** *tuṇiccal,* பெ. (n.) துணிகரம் பார்க்க; see *tuṇikaram* (செ. அக.).

*[துணி → துணிச்சல்]*

**துணிசுட்டசாம்பல்** *tuṇi-suṭṭa-sāmbal,* பெ. (n.) சீலைச்சாம்பல்; ashes of burnt cloth useful in medicine.

**துணிசெய்-தல்** *tuṇi-cey-,* செ.குன்றாவி. (v.tr.) வெட்டுதல்; to cut to pieces. "பிரமன் சிரமுந் துணிசெய்து" *(தேவா. 103, 4).*

*[துணி + செய்-தல்]*

**துணிதாண்டு-தல்** *tuṇi-tāṇḍu-,* செ.கு.வி. (v.i.) உறுதியாக உண்மை சொல்லுதல்; to take an oath by stepping over a cloth.

*[துணி + தாண்டுதல்]*

**துணிந்தவன்** *tuṇintavaṉ,* பெ. (n.) எதற்கும் அஞ்சாதவன்; dare devil.

**துணிந்துமணியங்கட்டு-தல்** *tuṇindu-maṇiyaṅ-kaṭṭu-,* செ.கு.வி. (v.i.) *1.* விடாப்பிடியாய் இருத்தல்; to persist in a foolish purpose, used in contempt. *2.* ஊக்கத்தோடு முயலுதல்; to persevere with energy.

*[துணிந்துமணியம் + கட்டு-.]*

**துணிநிலா** *tuṇinilā,* பெ. (n.) பிறைநிலா; crescent moon. 'துணிநிலா வணியினான்' *(திருவாச. 35, 5).*

*[துணி + நிலா]*

**துணிப்பந்தம்** *tuṇi-p-pantam,* பெ. (n.) கிழிச்சீலையாலாகிய தீப்பந்தம் (வின்.); a torch made of rags.

*[துணி + பந்தம்]*



**துணிப்புத்தூக்கு** *tuṇipu-t-tūkku,* பெ. (n.) எழுவகைத் தூக்குகளுள் ஒன்று (சிலப். 3, 16, உரை.); musical mode, one of seven tūkku.

**துணிப்புழு** *tuṇi-p-puḻu,* பெ. (n.) கம்பளிச் சால்வைகளில் கூடுகட்டும் புழுவகை (அபி.சிந். 907); a worm infesting woollen clothes.

**துணிபு** *tuṇipu,* பெ. (n.) 1. துணிவு பார்க்க; see tuṇipu. "துரும்பு பற்றிக் கடல் கடக்குந் துணிபே யன்றோ" (தாயு. கல்லாவின். 1). 2. கொள்கை; opinion, theory.

*[துணி → துணிபு]*

**துணிபொருள்** *tuṇi-poruḷ,* பெ. (n.) 1. உறுதி செய்த பொருள்; ascertained object. "குற்றியல்லன் மகன் எனத் துணிபொருள் மேலானும்" (தொல். சொல். 25 சேனா.). 2. மெய்ப் பொருள்; principle or doctrine conclusively, established. "துன்பமறுக்குந் துணிபொரு ளுணர்ந்தோர்" (மணிமே. 23, 136). 3. பரம் பொருள்; God as determined by scriptures. "மற்றைத் துறைகளில் முடிவுஞ் சொல்லுந் துணிபொருள்" (கம்பரா. வாலிவ. 132). 4. இயலுகை (சாத்தியம்) (மணிமே. 27,29, உரை); major term.

*[துணி + பொருள்]*

**துணியல்** *tuṇiyal,* பெ. (n.) துண்டு; small piece, as of flesh. "கொழுமீன் குறைஇய . . . துணியல்" (மதுரைக். 320).

*[துணி → துணியல்]*

**துணியறை** *tuṇiyaṟai,* பெ. (n.) துணையறை (அகநி.) பார்க்க; see tuṇaiyaṟai.

*[துணி + அறை]*

**துணியில்சுருட்டல்** *tuṇiyil-šuruṭṭal,* செ.குவி. (v.t.) மருந்தை வெள்ளைச் சீலையில் தடவி உருட்டித் திரிபோல் செய்தல்; rolling a piece of cloth smeared with the required medicine so as to form a wick.

*[துணியில் + சுருட்டல்]*

**துணியிலூட்டல்** *tuṇiyilūṭṭal,* செ.குன்றாவி (v.t.) மருந்தைத் துணியில் தடவுதல்; smearing medicine on a piece of cloth or lint.

*[துணியில் + ஊட்டல்]*

**துணிவு** *tuṇivu,* பெ. (n.) 1. ஆண்மை; confidence, boldness, daring, bravery. "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்" (குறள். 383). 2. மனத்திட்பம்; strength of mind. "செய்க துணிவாற்றி" (குறள். 669). 3. துணிச்சல்; presumption, temerity, audacity. 4. உறுதி; ascertainment, certainty. 5. தெளிந்த அறிவு; determination, decision. "நெச்சத்துத் துணிவில்லோரே" (புறநா. 214, 3). 6. முடிவு; conclusion. 7. கொள்கை; opinion founded on fasts, knowledge or evidence. 'நல்லறிவாளர் துணிவு' (ஆசாரக். 18). 8. நம்பிக்கை (யாழ்.அக.); belief, trust. 9. பகுதி; branch, department. "கலைகளின் துணிவும்" (மணி. 2, 29). 10. நோக்கம் (வி.); purpose, design, aim. 11. தாளம்; time-measure. "தூக்குந் துணிவும்" (மணிமே. 2, 19). 12. தனியிடை எதிர்ப்பட்ட தலைவியைத் தெய்வமகளோ மண்ணக மகளோ என்று ஐயுற்ற தலைவன் மண்ணக மகளேயென ஒருதலைத் துணிதலாகிய கைக்கிளை வகை; (akap.) theme in which the hero of a poem who meets the heroine for the first time in a lonely place and doubts that she must be a celestial nymph, resolves this doubts and finally realises that she is but a mortal. 13. துண்டம்; piece.

*[துள் → துண் → துணி → துணிவு]*

**துணிவுரை** *tuṇivurai*, பெ. (n.) அகவுரைப் பிரிவு பதினான்கில் ஒன்று; a kind of commandatary out fourteen.

[துணிவு + உரை]

**துணிவுவமை** *tuṇivuvamai*, பெ. (n.) உவமேயத்தை உவமானமாக முதலில் ஐயுற்றுப்பின் உவமேயமாகவே துணியும் அணிவகை (வீரசோ. அலங். 15, உரை); a simile in which the upamēyam is first mistaken for upamanam and then its real nature is ascertained.

[துணிவு + உவமை]

**துணுக்கம்** *tuṇukkam*, பெ. (n.) நடுக்கம்; trembling, palpitation of the heart through fear. "அறிவனுந் துணுக்கங் கொண்டான்" (கம்பரா. ஊர்தேடு. 57). 2. அச்சம்; fear. 3. உள்ளோசை (யாழ்.அக.); vibration. 4. நெஞ்சுபடபடப்பு; palpitation of the heart.

[துணுக்கு → துணுக்கம் (மு.தா. 64)]

**துணுக்கிடு-தல்** *tuṇu-k-kiḍu-*, செ.குன்றாவி (v.t.) திடுக்கிடுதல்; to be started (செ.அக.).

[துண் → துணுக்கு → துணுக்கிடு-. (மு.தா. 64)]

**துணுக்கு**[1] *tuṇukku*, பெ. (n.) துணுக்கம் பார்க்க; see *tuṇukkam*.

[துண் → துணுக்கு]

**துணுக்கு**[2] *tuṇukku*, பெ. (n.) துணியல் பார்க்க; see *tuṇiyal* (செ.அக.).

[துண் → துணுக்கு]

**துணுக்குக்கபம்** *tuṇukku-k-kabam*, பெ. (n.) தடித்தும், கனமாயும், உறைந்தும், மங்கலாயும், சுண்ணாம்பு போல் வெளிவரும் சளி; thick heavy congealed mass of philegm in the digestive and respiratory passages discharged by caughing or vomitting (சா.அக.).

[துணுக்கு + கபம்]

**துணுக்குண்ணி** *tuṇu-k-kuṇṇi*, பெ. (n.) பொறுக்கித் தின்பவன்; miser, scrape-penny, as one who picks up and eats crumbs. "இந்தத் துணுக்குண்ணியோ கொடுப்பான் சொன்னம்". (விறலிவிடு. 851).

[துணுக்கு + உண்ணி]

**துணுக்குறு-தல்** *tuṇu-k-kuṟu-*, செ.குவி. (v.i.) அச்சமுறுதல்; to be startled, sturck with fear, shocked. "யாவருந் துணுக்குற் றேங்க" (கம்பரா. கும்ப. கருணை. 58).

[துணுக்கு + உறு-.]

**துணுக்கெறி**[1]**-தல்** *tuṇu-k-keṟi-*, செ.குவி. (v.i.) அச்சத்தால் துள்ளுதல்; to start with fear, as infants.

[துணுக்கு + எறி-.]

**துணுக்கெறி**[2]**-தல்** *tuṇu-k-keṟi-*, செ.குவி. (v.i.) குளிர்ச்சி மிகுதியால் சளி, தடித்து வெளிவரல்; discharge of soild phlegm due to excess of mucus in the system.

**துணுக்குத்துணுக்கெனல்** *tuṇukku-t-tuṇukkeṉal*, பெ. (n.) அஞ்சுதற் குறிப்பு; onom. expr. of being afraid. "நான் சென்று கிட்டுகை யாவதென" என்று துணுக்குத் துணுக்கென்னா நிற்பர்கள் பிரம்மாதிகள்" (திவ்.பெரியதி. 1,2,9, வ்யா.)

[துணுக்கு + எறி-.]

**துணுக்கெனல்** *tuṇukkeṉal*, பெ. (n.) அச்சக் குறிப்பு; expr. signifying fear. "துணுக்கென் றுள்ளஞ் சொற் றளர்ந்து" (பிரபுலிங். வசவண். 32).

[துணுக்கு + எனல்]

**துணுக்கை** *tuṇukkai*, பெ. (n.) துணியல் (யாழ்.அக.) பார்க்க; see *tuṇiyal*.

[துணுக்கு → துணுக்கை]

**துணுங்கு-தல்** *tuṇuṅgu-*, 5 செ.குன்றாவி. & கு.வி. (v.t.) & (v.i.) வெருவுதல் (யாழ்.அக.); to fear.

[துண் → துணுங்கு]

**துணை**[1] *tuṇai*, பெ. (n.) 1. கூட்டு; association, company. 2. உதவி; help, assistance, aid, succor, support. "தங்குபே ரருளுந் தருமமுந் துணையா தம்பகைப் புலன்களைத் தவிர்க்கும்" (கம்பரா. நகரப். 6). 3. காப்பு; protection, guidance. கடவுள்

துணை. 4. கூட்டாயிருப்பவன்-வள்-து; partner, companion, amte. "நறுநுதலா ணன்மைத் துணை" (நாலடி. 381). 5. உதவிபுரிவோன்; escort, covoy, helpmate. "நானோர் துணை காணேன்" (திருவாச. 25, 10). 6. நட்பினன்-ள்; friend. "தந்துணைக் குரைத்து நிற்பார்" (சீவக. 465). 7. இரட்டை; pair, couple, brace. "துணைமீன் காட்சியின்" (கல்லா. 5, 27). 8. இரண்டு; two. "அந்தணன் பங்குவி னில்லத் துணைக் குப்பா லெய்த" (பரிபா. 11, 7-8). 9. கணவன்; husband. "தாழ்துணை துறந்தோர்" (சிலப். 4, 13). 10. மனைவி; wife, mate. "துணையொடு வதிந்த தாதுண் பறவை" (அகநா.4). 11. உடன்பிறப்பு; brother or sister "துணையின்றிச் சேற னன்றோ" (கம்பரா. கும்பக்கருண. 158). 12. ஒப்பு; comparison, similitude. "துணையற வறுத்துத் தூங்க நாற்றி" (திருமுரு. 237). 13. அளவு; measure; extent; degree; quantity; number. "விருந்தின் றுணைத்துணை" (குறள். 87). 14. புணர்ச்சி; conjugal union. "முந்நாளல்லது துணையின்று கழியாது" (தொல். பொ. 122). துணை போனாலும் பிணை போகாதே (பழ.).

ம. துண

[துண் → துணை (வே.க. 254)]

**துணை**[2] *tuṇai*, வி.எ. (adv.) வரை; until. "தங்கரும முற்றுந் துணை" (நாலடி. 231).

[துண் → துணை]

**துணை**[3] *tuṇai*, பெ. (n.) 1. படைக் கருவி; sharp end of an instrument or a weapon. 2. அம்பு; arrow.

[துண் → துணை]

**துணை**[4]**-தல்** *tuṇai-*, 4 செகுன்றாவி. (v.t.) ஒத்தல்; to resemble, to be like. "நெய் பூசிய தொழின்மையே துணையும்" (காஞ்சிப்பு. திருக்கண். 19).

[துண் → துணை-.]

**துணை**[5]**-த்தல்** *tuṇai-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. மாலை முதலியன கட்டுதல்; to string, or a garland. "தண்ணறுங் கழுநீர் துணைப்ப" (மதுரைக். 551). 2. ஒத்தல் (தொல்.பொ. 286, உரை); to resemble.

[துணை → துணைதல் → துணை-.]

**துணைக்கருவி** *tuṇai-k-karuvi*, பெ. (n.) 1. வழி வகை; means to an end, medium. 2. உதவிக் கருவி (நன். 287, விருத்.); implement, tool, instrument.

[துணை + கருவி]

**துணைக்காரணம்** *tuṇai-k-kāraṇam*, பெ. (n.) குடத்துக்குத் தண்டு சக்கரம்போலச் செயல் (காரிய) நிகழ்ச்சிக்கு உதவியாயிருக்கும் காரணம் (தொல்.சொல். 74, உரை); instrumental or secondary cause, as the potter's stick or wheel.

[துணை + காரணம்]

**துணைக்குக்கி** *tuṇai-k-kukki*, பெ. (n.) இரைப்பைக்கு அடுத்துத் தொடுத்திருக்கும் சிறுகுடலில் ஏறக்குறைய ஒரு அடி நீளமுள்ள ஒரு பகுதி; the first portion of the small intestine measuring about one foot long (சா.அக.).

[துணை + குக்கி]

**துணைக்கோள்** *tuṇai-k-kōl*, பெ. (n.) ஒரு கோளைச் சுற்றிச் சுழலும் சார்புக்கோள்; satellite.

[துணை + கோள்]

**துணைச்சகோதரி** *tuṇai-c-cakōtari*, பெ. (n.) கிறித்தவருள் துறவறம் பெறுவதற்குமுன் மாணவ நிலையிலுள்ளவள்; novitiate nun before ordination among christians (பாண்டி.).

[துணை + சகோதரி]

**துணைச்சொல்** *tunai-c-col*, பெ. (n.) ஒத்துரைக்குஞ் சொல் (வின்.); word or words in support of, or in seconding, previous speaker.

[துணை + சொல்]

**துணைத்துறவி** *tunai-t-turavi*, பெ. (n.) கிறித்தவருள் துறவு பெறுவதற்கு முன் மாணவ நிலையிலுள்ளவன் (பாண்டி.); lay disciple before ordination, among christians.

**துணைப்படை** *tuṇai-p-paḍai,* பெ. (n.) *நட்பரசரதாய்த் தனக்கு உதவுஞ் சேனை (குறள். 762, உரை);* forces of one's allies sent to one's aid. one of aru-vakai-p-paḍai, q.v.

*[துணை + படை]*

**துணைப்பேறு** *tuṇai-p-pēṟu,* பெ. (n.) *உதவி பெறுகை;* receiving aid.

*[துணை + பேறு]*

**துணைப்பொருள்** *tuṇai-p-poruḷ,* பெ. (n.) *ஒப்புமை கூறப்படுவது;* object of comparison. "அப்பொருளாகு முறழ் துணைப்பொருளே" *(தொல். சொல். 16).*

*[துணை + பொருள்]*

**துணைபோ-தல்** *tuṇai-pō-,* செ.கு.வி (v.i) *ஒப்பாதல்;* to be similar or equal; to match. 'அவனுக்கு இவன் துணைபோனவன்'.

*[துணை + போ-.]*

**துணைமுத்தம்** *tuṇai-muttam,* பெ. (n.) *வடஞ் சேர்ந்த முத்து;* stringed pearls. "துஞ்சாக் கதிர்கொ டுணைமுத்தந் தொழுதேன்" *(சீவக. 351).*

*[துணை + முத்தம்]*

**துணைமூளை** *tuṇai-mūḷai,* பெ. (n.) *மூளையின் அரைக்கால் பங்காய் தலையின் பின்பக்கத்தில் கீழ்ப்பிடரியைப் பற்றிச் சிறிய பந்து வடிவமாக இருக்கும் சிறிய மூளை;* that portion of the brain which is posterior to underlies the great cerebral mass-cerebellum.

**துணைமை** *tuṇaimai,* பெ. (n.) *1. பிரிவின்மை;* union. "நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே" *(தொல். பொ. 42).* *2. ஆற்றல்;* ability, power. "யாஅ ரொருவ ரொருவர்த முள்ளத்தைத் தேருந் துணைமை யுடையவர்" *(நாலடி. 127).* *3. உதவி;* help. "துணைவரோடுந் துளபமா றுணைமை செய்ய" (சேதுபு. இலக்குமி. 25) (செ.அக.).

*[துணை → துணைமை]*

**துணையரண்** *tuṇai-y-araṇ,* பெ. (n.) *வன்மைமிக்க சுற்றத்தாரானாகிய துணை (சுக்கிர நீதி. 300);* strong and powerful kindred, considered a means or defence.

*[துணை + அரண்]*

**துணையல்** *tuṇaiyal,* பெ. (n.) *பூமாலை;* garland, wreath of flowers. "சாந்துங் கமழ்துணையலும்" *(தேவா. 562, 2).*

**துணையறை** *tuṇai-y-aṟai,* பெ. (n.) *தோரணம் முதலியவற்றின் தொங்கல் (திவா.);* ornamental hangings.

*[துணையல் → துணையறை]*

**துணையாளன்** *tuṇai-y-āḷaṉ,* பெ (n) *உதவி புரிவோன்;* helper. "துணையாளனே தொழும்பாள ரெய்ப்பினில் வைப்பனே" *(திருவாச. 5, 98).*

*[துணை + ஆளன்]*

**துணையாளி** *tuṇai-y-āḷi,* பெ (n) *1. மருத்துவனுக்கு இரண்டாவதாக, நோயாளிக்கு உதவி செய்யும் ஆள்;* as assistant to the doctor treats the patient. *2. செவிலி;* a female in hospital attending to wants of patients-nurse. *3. ஒரு காரியத்தில் சமமான பங்கெடுத்துக் கொள்பவன் (பாண்டி.);* coadjutor.

*[துணை + ஆளி]*

**துணையிரு-த்தல்** *tuṇai-y-iru-,* செ.குன்றாவி. (v.t.) *பருவமுற்றாள், மகப்பேறெய்தினாள், மணப்பெண் இவர்கட்குப் பேய் முதலியவற்றால் கேடு வராதபடி உதவியாயிருத்தல் (வின்.);* to keep company with a girl who has attained the age of puberty or with a woman in childbirth or with the bride, protecting them from demon-attack.

*[துணை + இரு-.]*

**துணைவஞ்சி** *tuṇai-vañji,* பெ. (n.) *பிறரை வெல்ல வேனுங் கொல்லவேனுந் துணிந்து நிற்கின்றானொருவனைச் சிலகூறி உடன்பாடு கூறும் புறத்துறை (புறநா. 45);* theme describing the reconciliation of a warrior with his enemy whom he is determined to conquer or kill.

*[துணை + வஞ்சி]*

**துணைவலி** *tuṇai-vali,* பெ. (n.) *நட்பரசரால் ஆகிய ஆற்றல் (குறள். 471);* strength of a king derived from his allies.

*[துணை + வலி]*

**துணைவன்** *tuṇaivaṉ*, பெ. (n.) *1.* கணவன் (பிங்.); husband. "துணைவரைத் தழுவினர்" (கம்பரா. மாரீசன் வதை. 121). *2.* தோழன் (சூடா.); friend, companion. *3.* அமைச்சர் (அக.நி.); minister. *4.* உதவி செய்வோன்; helper, assistant, convoy. "தோழா போற்றி துணைவா போற்றி" (திருவாச. 4, 120). *5.* உடன்பிறந்தான்; brother, cousin. "உரிமையறக் கவர்ந்த பெருந்துணைவன்" (பாரத. கிருட்டிண. 14).

*[துணை → துணைவன்]*

**துணைவன்விழியாள்** *tuṇaivaṉ-viḻiyāḷ*, பெ. (n.) மாலையில் மலரும் மல்லிகை; evening jasmine, garden jalap (சா.அக.).

*[துணை → துணைவன்]*

**துணைவாரி** *tuṇai-vari*, பெ. (n.) இரட்டைக் கதவு (சிவக்.பிரபந்பக். 92); folding doors.

**துணைவன்விளையல்** *tuṇaivaṉ-viḷiyāḷ*, பெ. (n.) பத்திராட்சி; evening jasmine (சா.அக.).

**துணைவி** *tuṇaivi*, பெ. (n.) மனைவி; wife, as a helpmate. "நீதுறவேல் ... நின் துணைவியையே" (வெங்கைக். கோ. 318). *2.* உடன்பிறந்தாள்; sister. "தாயருந் துணைவிமாருந் தழுவினர்" (குற்றா. தல. தக்கன்வே. 118). *3.* பாங்கி; heroine's confidante, lady's maid.

*[துணை → துணைவி]*

**துணைவினை** *tuṇai-viṉai*, பெ. (n.) ஒரு வினைக்குத் துணையாக வரும் வினை; auxiliary verb, as iru in eḻundirundāṉ.

*[துணை + வினை]*

**துத்தகம்** *tuttakam*, பெ. (n.) துத்தம்[2] (யாழ்.அக.) பார்க்க; see *tuttakam*.

**துத்தகை** *tuttakai*, பெ. (n.) நெருக்கல்; pressing together.

**துத்தநாகபற்பம்** *tutta-nāga-paṟpam*, பெ. (n.) துத்தநாகத்தை நீற்றிக் கொண்ட பற்பம்; flowers of zinc.

**துத்தநாகம்** *tuttanākam*, பெ. (n.) ஒரு மாழை (பிங்.); zinc.

**துத்தநாகமணல்** *tuttanāga-maṇal*, பெ. (n.) நாகமணல் (வைஈ.); sand containing lead.

*[துத்தநாகம் + மணல்]*

**துத்தநாகவகை** *tuttanāga-vakai*, பெ. (n.) மருந்து வகை (யாழ்.அக.); a medicine.

**துத்தபேனம்** *tutta-pēṉam*, பெ. (n.) பால்நுரை (யாழ்.அக.); milk foam.

**துத்தம்**[1] *tuttam*, பெ. (n.) *1.* இசை ஏழனுள் இரண்டாவது; the second note of the gamut, one of seven icai, q.v. "வண்டினந் துத்தநின்று பண்செயும்" (தேவா. 488, 10). *2.* சமனிசை (பிங்.); tenor. *3.* ஓமாலிகை வகை (சீவக. 623, உரை); a scent used in battin. *4.* நாய் (சூடா.); dog. *5.* நாய்ப்பாகல் (மலை). பார்க்க; see *nāy-p-pākal*, a kind osenna. *6.* நாணல் (மலை.) பார்க்க; see *nāṇal*, wild sugar-cane. *7.* நீர்முள்ளி (மலை.) பார்க்க; see *nīrmuḷḷi*, a herb growing in moist places.

**துத்தம்**[2] *tuttam*, பெ. (n.) *1.* வைப்பு நச்சுவகை (சூடா.); a prepared arsenic, vitriol, sulphate of zinc or copper. *2.* கண் மருந்தாக உதவுந் துரிசு (தைலவ. தைல. 69); tutty, blue or white vitriol used as collyrium.

**துத்தம்**[3] *tuttam*, பெ. (n.) பால் (பிங்.); milk. "துத்தமன்ன சொல்லியர்" (இரகுநாட்டுப். 23).

**துத்தம்**[4] *tuttam*, பெ. (n.) துந்தம் (பிங்.) பார்க்க; see *tuntam*.

**துத்தமனா** *tuttamaṉā*, பெ. (n.) முயற்புல் (மலை.); harialli grass.

**துத்தரி** *tuttari*, பெ. (n.) துத்தரிக்கொம்பு பார்க்க; see *tuttari-k-kombu*. "கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்" (கம்பரா. கங்கைப். 30).

**துத்தரிக்கொம்பு** *tuttari-k-kombu*, பெ. (n.) ஒருவகை ஊதுகொம்பு; a kind of bugle-horn. "துத்தரிக் கொம்புந் துடியும்" (சீவக. 434, உரை).

*[துத்தரி + கொம்பு]*



**துத்தரிகம்** *tuttarikam,* பெ. (n.) நெல்லிக்காய்; indian gooseberry *(சா.அக.).*

**துத்தரிப்பு** *tuttarippu,* பெ. (n.) அட்டிகைப் பதக்கத்தின் மேலுறுப்பு வகை; an upper part of patākkam in attikai.

**துத்தல்** *tuttal,* பெ. (n.) *1.* உண்ணுதல்; to eating. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" *(குறள். 12).* *2.* நுகர்தல்; to enjoy.

*[துய் → வ. துத்தல் (வே.க. 284)]*

**துத்தாஞ்சனம்** *tuttāñjaṉam,* பெ. (n.) கண்மருந்து வகை; collyridum of vitriol.

*[துத்தம் + அஞ்சனம்]*

**துத்தாத்தி** *tuttātti,* பெ. (n.) பாற்கடல் *(யாழ்.அக.);* ocean of milk.

**துத்தாரம்** *tuttāram,* பெ. (n.) ஊமத்தை; datura *(சா.அக.).*

**துத்தாரி** *tuttāri,* பெ. (n.) *1.* ஊதுகுழல் வகை; long, straight pipe. *2.* ஆடைவகை *(யாழ்.அக.);* a kind of cloth.

தெ. துத்தார; க. துத்தாரி; ம. துத்தாரி

**துத்தி**[1] *tutti,* பெ. (n.) *1.* செடிவகை *(சூடா.);* wrinkled learned eveing mallow. *2.* பெருந்துத்தி பார்க்க; see *peruntutti,* country mallow. *3.* வட்டத் துத்தி பார்க்க; see *vaṭṭa-t-tutti,* narrow woolly stipuled lotus croton. *4.* பட்டுப்பூச்சி மரம்; white mulberry tree. *5.* முள்வெள்ளரி வகை; spiked bitter cucumber.



வகைகள்

*1.* பெருந்துத்தி - country mallow
*2.* பணியாரத் துத்தி - cake mallow
*3.* கருந்துத்தி - black mallow
*4.* கொடித்துத்தி - creeping mallow
*5.* அரசிலைத்துத்தி - peepul leaved eveming mallow
*6.* எலிச்செவித் துத்தி - rat's ear mallow
*7.* ஒட்டுத்துத்தி - burr mallow
*8.* இரட்டகத்துத்தி - double thread mallow
*9.* சீமைத்துத்தி - foreign mallow
*10.* சிறுதுத்தி - small mallow
*11.* சிறுசீமைத்துத்தி - small foreign mallow
*12.* காட்டுத்துத்தி - wild mallow
*13.* கண்டுதுத்தி - one leaved mallow
*14.* ஓரிலைத்துத்தி - one leaved mallow
*15.* செந்துத்தி - devil's cotton.
*16.* நாமத்துத்தி - namatutti
*17.* நிலத்துத்தி - ground mallow
*18.* பொட்டகத்துத்தி - double thread tutti
*19.* வயிற்றுத்துத்தி - field mallow
*20.* மஞ்சள் துத்தி - common yellow mallow
*21.* ஐயிதிழ்த்துத்தி - five capelled evening mallow
*22.* வட்டத்துத்தி - lotus croton
*23.* கல்துத்தி - stone mallow
*24.* மணித்துத்தி - vine leafed bendy
*25.* நல்லதுத்தி - common evening mallow
*26.* திருநாமத்துத்தி - lobe leaved mysore mallow
*27.* வேலித்துத்தி - hedge mallow
*28.* மலைத்துத்தி - mountain evening mallow
*29.* வெண்துத்தி - pure white darwin's mallow
*30.* நறுமணத்துத்தி - fragrant mallow
*31.* சிவப்புத்துத்தி - red mallow

**துத்தி**[2] *tutti,* பெ. (n.) பக்கவிசையாக ஊதும் ஒத்துக்கருவி; bass pipe.

**துத்தி**[3] *tutti,* பெ. (n.) *1.* மகப்பே றெய்தினா லுடம்பில் தோன்றும் வரித் தேமல் *(பிங்.);* streaky spots below the navel especially of a woman who has delivered. "புதல்வனை ஈன்றவளுடைய துத்தி போலே" *(கலித். 32, 7, உரை).* *2.* பாம்பின் படப்பொறி; spots on the hood of a cobra. "பைத்த பாம்பின் றுத்தி

யேய்ப்ப" (பொருந. 69). 3. யானை மத்தகப் புள்ளி (நிகண்டு); spots an elephant's forehead.

**துத்தி**[4] *tutti,* பெ. (n.) 1. திருமண்; sacred earth. 2. திருவடி நிலை; sacred sandal.

**துத்திக்காரன்** *tutti-k-kāraṉ,* பெ. (n.) ஒத்தூதுபவன்; bass-piper.

[துத்தி + காரன்]

**துத்திக்கீரை** *tutti-k-kīrai,* பெ. (n.) ஒருவகைக் கீரை; american binolious morning glory.

மறுவ. துத்திகம்

[துத்தி + கீரை]

**துத்திநாகம்** *tutti-nākam,* பெ. (n.) துத்தநாகம் (பதார்த்த. 1170) பார்க்க; see *tuttanākam* (செ.அக.).

[துத்தி + நாகம்]

**துத்திநீர்** *tutti-nīr,* பெ. (n.) சிறுநீர்; urine (சா.அக.).

**துத்திப்பட்டு** *tutti-p-paṭṭu,* பெ. (n.) துகில்வகை (எங்களூர், 168); a kind of fine cloth.

[துத்தி + பாட்டு]

**துத்திப்பாலை** *tutti-p-pālai,* பெ. (n.) தொந்தம்பாலை; blue dyeing rose bay (சா.அக.).

**துத்திப்பூக்கிளாவர்** *tutti-p-pūk-kilāvar,* பெ. (n.) மகளிர் காதணி வகை (இக்.); a woman's ear ornament.

**துத்திப்பூமோதிரம்** *tutti-p-pū-mōtiram,* பெ. (n.) துத்திப்பூ வடிவிலமைந்த விரலாழி; finger-ring desinged after the tutti flower.

[துத்தி + பூ + மோதிரம்]

**துத்தியம்** *tuttiyam,* பெ. (n.) புகழ்ச்சி; eulogy, praise, commendation. "பிரமனுந் துத்தியஞ் செய நின்றநற் சோதியே" (தேவா. 1218, 2).

**துத்திரி** *tuttiri,* பெ. (n.) 1. துத்தாரி பார்க்க; see *tuttāri* "கல்லல துத்திரி யேங்க" (கல்லா. 34, 10). 2. துத்திரி[2] பார்க்க; see *tuttiri.*

**துத்தினை** *tuttiṉai,* பெ. (n.) வட்டத்திருப்பி; Indian parara (சா.அக.).

**துத்து**[1] *tuttu,* பெ. (n.) 1. பொய்; lie. 2. தவறு; fault. 3. வஞ்சனை; deceit (செ.அக.).

[ஒருகா. தெ. துத்து → துத்து]

**துத்து**[2] *tuttu,* பி.பெ. (n.prob.) 1. சேண முதலியவற்றின் உள்ளிடும் கம்பளி ஆட்டுமயிர் முதலியன (வின்.); stuffing of wool or goat's hair in couches, saddles etc., 2. துத்துக்கம்பளி (யாழ்.அக.) பார்க்க; see *tuttu-k-kambaḷi.*

[ஒருகா. துறுத்து → துத்து]

**துத்துக்கம்பளி** *tuttu-k-kambaḷi,* பெ. (n.) கம்பளிப் போர்வை (வின்.); a kind of blanket.

[துத்து + கம்பளி]

**துத்துக்கம்மல்** *tuttu-k-kammal,* பெ. (n.) கம்மலணி வகை; an ear-ornament worn by women.

[துத்து + கம்மல்]

**துத்துக்காரன்** *tuttu-k-kāraṉ,* பெ. (n.) துத்தன் பார்க்க; see *tuttaṉ.*

[துத்து + காரன்]

**துத்துக்கோல்** *tuttu-k-kōl,* பெ. (n.) நெசவுப்பா தளராமல் நிற்றற்பொருட்டு நூற் பிணையல்களுக்கிடையில் நெய்வோர் செலுத்துங் கழி; rod used by weavers to press the weft compactly.

[துத்து + கோல்]

**துத்துப்போடு-தல்** *tuttu-p-pōḍu-,* செ.குன்றாவி (v.t.) கிணறு முதலியவற்றை மணல் முதலியவற்றால் மேவி விடுதல் (வின்.); to fill up, close.

[துத்து + போடு-.]

**துத்துமாற்று** *tuttu-māṟṟu,* பெ. (n.) 1. தந்திரம்; artifice, guile, chicanery. 2. எத்து; deceit. 3. பொல்லாங்கு; evil.

[துத்து + மாற்று]

**துத்துரு** *tutturu,* பெ. (n.) தாமரைப் பொகுட்டுப் போன்ற அணிவகை; an ornament like the

pericap of a lotus. "துத்துரு வொன்றில் தடவிக் கட்டின பளிங்கு ஒன்றும்" *(S.I.I.ii, 179).*

**துத்துவாரெலும்பு** *tuttuvārelumbu,* பெ. (n.) **பழுவெலும்பு;** collar bone.

*[துத்துவார் + எலும்பு]*

**துத்தூரம்** *tuttūram,* பெ. (n.) **ஊமத்தை** (மலை) பார்க்க; see *ūmattai* (செ.அக.)

**துதகாரம்** *tutakāram,* பெ. (n.) **துப்பும்போது எழும் ஒலி** (யாழ்.அக.); noise of spitting.

**துதம்** *tudam,* பெ. (n.) **துதி**[2] பார்க்க; see *tuti.* "வாயோரீ ரைஞ்ஞூறு துதங்க ளார்ந்த" *(திங். பெருமாள். 1,2).*

**துதம்**[2] *tutam,* பெ. (n.) **அசைவு** (வி.); motion, vibration, oscillation, agitation.

**துதாமுதலாய்** *tutā-mutal-āy,* வி.எ. (adv.) **முழுதும்;** wholly, entirely.

தெ. துதாமொதலுக

**துதி**[1] *tuti,* பெ. (n.) **நுனி;** point, sharp edge. "துதிவா யெஃகமொடு" *(புறநா. 253).*

*[நுனி → நுதி → துதி (த.வ. 65)]*

**துதி**[2] *tuti,* பெ. (n.) *1.* **துருத்தி;** bellows. "மயிர்த் துதி யலற வூதலின்" *(சீவக. 2530).* **2. உறை;** sheath, scabbard. "துதியவள் ளுகிர்" *(அகநா. 8).*

**துதி**[3] *tuti,* பெ. (n.) **தூதுளை** பார்க்க; see *tūtuḷai;* climbing brinjal.

**துதிக்கரம்** *tuti-k-karam,* பெ. (n.) **துதிக்கை** பார்க்க; see *tutikkai.* "தந்தியுந் துதிக்கரஞ் சலித்து நின்றது" *(செவ்வந்தி. 4, உரையூரழித் 92).*

*[துதி + கரம்]*

**துதிக்கை** *tuti-k-kai,* பெ. (n.) **தும்பிக்கை;** elephant's trunk. "துதிக்கையி னுதிக்கே கூழை வாரென்னும்" *(கலிங். 560).*

*[நுனி → நுதி → துதி → துதிக்கை]*

**துதியம்** *tutiyam,* பெ. (n.) **கசப்புப் புடலையின் உள்ளகம்** (வின்.); pulp of the bitter snake-gourd.

**துதை**[1]**-தல்** *tutai-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* **செறிதல்;** to be crowded, thick, close, intense. "தோடமை முழவின் றுதைகுரலாக" *(அகநா. 82).* **2. மிகுதல்;** to abound; to be copious, interse. *3.* **படிதல்;** to be steeped. "வெண்ணீறு துதைந்தெழு . . . வயிரத் தொப்பனே" *(திருவாச. 29:6).*

*[துற்று → துத்து → துது → துதை → துதை-. (வே.க. 261)]*

**துதை**[2]**-த்தல்** *tutai,* 11 செ.குன்றாவி. (v.t.) **நெருக்குதல்** (யாழ்.அக.); to press together.

*[துதை → துதை-.]*

**துதை**[3] *tutai,* பெ. (n.) **நெருக்கம்** (வின்.); closeness, crowded state.

**துந்தம்** *tundam,* பெ. (n.) **வயிறு;** abdomen, belly.

**துந்தமம்** *tundamam,* பெ. (n.) **பறை வகை** (யாழ்.அக.); a drum.

*[ஒருகா. துந்துபி → துந்தமம்]*

**துந்தி** *tundi,* பெ. (n.) *1.* **கொப்பூழ்;** navel, umbilicus. "துந்தித் தலத்தெழு திசைமுகன்" *(திவ். திருவாய். 1, 3, 9).* **2. வயிறு** (தைலவ. தைல. 97); belly.

*[உந்து → துந்து → துந்தி (வ.மொ.வ. 179)]*

**துந்திகன்** *tundigaṉ,* பெ. (n.) **பெரு வயிறுள்ளோன்** (யாழ்.அக.); one who has pot belly (செ.அக.).

*[துந்தி → துந்திகன்]*

**துந்திநாமா** *tundi-nāmā,* பெ. (n.) **ஒருவகைத் தம்புரு;** a kind of tampuru.

*[துந்தி + நாமா]*

**துந்துபம்** *tundupam,* பெ. (n.) கடுகு (சங்.அக.); mustard.

**துந்துபி** *tundubi,* பெ. (n.) *1.* **பேரிகை;** large kettle drum. "அந்தர மருங்கிற துந்துபி கறங்க" *(பெருங். கரவாண. 1, 150).* **2. வாச்சியப் பொது** (சூடா.); drum. *3.* **ஆண்டறுபதனுள் ஐம்பத்தாறாவது;** the 56th year of the jupitar cycle. *4.* **ஓர் அரக்கன்;** an asura. "துந்துபிப் பெயருடைச் சுடுசினத் தவுணன்" *(கம்பரா. துந்துபி. 1).*

**துந்துபிவழங்குதல்** *tundubi-valaṅgu-*, செ.கு.வி. (v.i.) *மகிழ்ச்சியாயிருத்தல்;* to be happy or glad.

**துந்துமாரம்** *tundu-māram*, பெ. (n.) 1. *புழு வகை;* a worm. 2. *பூனை;* cat *(செ.அக.)*.

**துந்துமாரி** *tundu-māri*, பெ. (n.) *முதல் வள்ளல்கள் எழுவருளொருவன் (சூடா.);* a chief noted for his liberality, one of seven mutal vaḷḷalkaḷ's.

**துந்துமி**[1] *tundumi*, பெ. (n.) *மழைத்துளி;* light rain, drizzle.

*[தூம் (தூவும்) + துமி]*

**துந்துமி**[2] *tundumi*, பெ. (n.) *துந்துபி*[1] *பார்க்க;* see *tuntubi*. "துந்துமி யொடு குடமுழா" *(தேவா. 919, 6).*

**துந்துமியாட்டம்** *tundumi-y-āṭṭam*, பெ. (n.) பேரொலி *(வின்.);* great noise, bustle, clamour.

*[துந்துமி + ஆட்டம்]*

**துந்துருபாவை** *tunduru-pāvai*, பெ. (n.) *துடிப்புள்ளவள்;* fidgety woman, busybody.

*[ஒருகா. துருதுரு → துந்துரு + பாவை]*

**துந்துருமாலை** *tundurumālai*, பெ. (n.) *துந்துரு பாவை பார்க்க;* see *tunturu-pāvai*.

*[துந்துருபாவை → துந்துருமாலை]*

**துந்துளம்** *tuntuḷam*, பெ. (n.) *காரெலி (சூடா.);* black rat.

**துநீ** *tunī*, பெ. (n.) *பறவை முட்டை;* bird's egg.

**துப்பகம்** *tuppagam*, பெ. (n.) *துப்பம் பார்க்க (அக.நி.);* see *tuppam*.

**துப்பட்டி** *tuppaṭṭi*, பெ. (n.) 1. *குளிருக்காகப் போர்த்திக் கொள்ளும் துணிப் போர்வை;* a cearse cotton cloth used to cover oneself in cold weather. 2. *விழாக் காலங்களில் பரவமகளிர் போர்த்துக் கொள்ளும் போர்வை;* veil, cloth used by parava women for covering themselves on public occasions. 3. *மேல்விரிப்பு;* sheet, table-cloth, cotton blanket. "மேசைத் துப்பட்டி".

**துப்பம்** *tuppam*, பெ. (n.) 1. *நெய்;* ghee. "தொறுப்பாடியோம் வைத்த துப்பமும் பாலும்" *(திவ்பெரியாழ். 2,1,6).* 2. *அரத்தம் (யாழ்.அக.);* blood.

*[துப்பு → துப்பம் (மு.தா. 154)]*

**துப்பரவு** *tupparavu*, பெ. (n.) *துப்புரவு பார்க்க (வின்.);* see *tuppuravu*.

**துப்பல்** *tuppal*, பெ. (n.) 1. *உமிழ்நீர்;* saliva, spittle. 2. *விளையாட்டில் பிள்ளைகள் தடை நிகழ்த்த வழங்குஞ்சொல்;* a word used in boy's game to indicate a short respite. "துப்பல் விட்டேன்" *(வின்.)* 3. *பயனற்றது;* that which is worthless.

ம. துப்பல்

*[துப்பு → துப்பல்]*

**துப்பலிடு-தல்** *tuppal-iḍu-*, செ.கு.வி. (v.i.) *ஆணையிடுதல் (யாழ்.அக.);* to swear.

*[துப்பல் + இடுதல்]*

**துப்பற்களாசி** *tuppaṟ-kaḷāśi*, பெ. (n.) *துப்பற் களாஞ்சி (யாழ்.அக.) பார்க்க;* see *tuppaṟ-kaḷāñji*.

*[துப்பல் + களாசி]*

**துப்பற்காளாஞ்சி** *tuppaṟ-kāḷāñji*, பெ. (n.) *தம்பல முதலிய எச்சிலுமிழுங்கலம்;* spittoon.

*[துப்பல் + களாஞ்சி]*

**துப்பற்படிக்கம்** *tuppaṟ-padikkam*, பெ. (n.) *துப்பற்காளாஞ்சி பார்க்க;* see *tuppaṟ-kāḷāñji*.

*[துப்பல் + படிக்கம்]*

**துப்பற்றவன்** *tuppaṟṟavaṉ*, பெ. (n.) 1. *திறனிலி;* inefficient person. 2. *வகையிலி;* helpless, destitute person.

*[துப்பு + அற்றவன்]*

**துப்பறவடி-த்தல்** *tuppaṟa-v-aḍi-*, செ.குன்றாவி. (v.t.) *நன்றாகப் புடைத்தல்;* to give a good thrashing beat soundly.

*[துப்பற + அடி-.]*

**துப்பறி-தல்** *tuppaṟi-*, செ.குன்றாவி. (v.t.) *உளவறிதல்;* to spy out, detect.

*[துப்பு → துப்பறி-.]*

**துப்பன்** *tuppaṉ,* பெ. (n.) **ஆற்றலுள்ளவன்;** mighty, powerful person. *"துப்பனைத் துரங்கப்படச் சீறிய தோன்றலை" (திவ்.பெரியதி. 7, 10, 6).*

*[துப்பு → துப்பன்]*

**துப்பன்**[2] *tuppaṉ,* பெ. (n.) **உளவாள்;** spy, secret agent, detective.

*[துப்பு[5] → துப்பன்]*

**துப்பா** *tuppā,* பெ. (n.) **கொம்புத் தேன்;** honey collected on branches of trees *(சா.அக.).*

*[துப்பு → துப்பா]*

**துப்பாக்கிமரம்** *tuppākki-maram,* பெ. (n.) **மரவகை;** bastard cedar *(செ.அக.).*

(இதனை, உருத்திராக்க மரம்; musket tree எனச் சா.அக. கூறும்)

**துப்பாக்கூட்டல்** *tuppāk-kūṭṭal,* செகுன்றாவி (v.t.) **தேனைச்சேர்த்தல்;** collecting honey *(சா.அக.).*

**துப்பார்** *tuppār,* பெ. (n.) **உண்பவர்;** consumers. *"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" (குறள். 12).*

*[து → துப்பார்]*

**துப்பாள்** *tuppāḷ,* பெ. (n.) **உளவாள்;** spy.

*[துப்பு → துப்பாள்]*

**துப்பிரசம்** *tuppirašam,* பெ. (n.) கடுஞ்சுண்டி (வின்.) பார்க்க; see *kaḍuñjuṇḍi;* a sensitive tree.

**துப்பிலார்** *tuppilār,* பெ. (n.) **வறியவர்;** indigent persons. *"துறந்தார் துறவாதார் துப்பிலார்" (ஏலா. 30).*

*[துப்பு + இல் + ஆர்]*

**துப்பினி** *tuppiṉi,* பெ. (n.) **துப்புநீர்;** spittle. (நெல்லை)

*[துப்புநீர் → துப்புனி]*

**துப்பு**[1] *tuppu,* பெ. (n.) *1.* **வலி;** vigour, strength, valour. *"கெடலருந் துப்பின்" (அகநா. 105).* *2.* **அறிவு;** intelligence. *3.* **திறமை;** ability, dexterity. *"ஆழ்கடலைக் கடைந்த துப்பவே" (திவ்.திருவாய். 4,7,5).* *4.* **முயற்சி** (பிங்.); effort, activity. *5.* **முனைப்பு** (பிங்.); zeal. *6.* **பெருமை;** greatness, eminence. *"துப்பழிந் துய்வது துறக்கந் துன்னவோ" (கம்பரா. உருக்காட். 13).* *7.* **நன்மை;** good, benefit. *"துப்பாய துப்பாக்கி" (குறள். 12).* *8.* **பொலிவு** (பிங்.); beauty. *9.* **பற்றுக்கோடு;** support. *"துன்பத்துட் டுப்பாயார் நட்பு" (குறள். 12).* *10.* **துணை** (பிங்.); assitnce, help. *11.* **துணைக் கருவி** (சூடா.); means, instrument. *"வேதினத் துப்பவும்" (சிலப். 14, 116).* *12.* **படைக்கலப் பொது** (யாழ்.அக.); weapon. *13.* **தன்மை;** manner, fashion. *"சுந்தரச் சுடரோர் மூன்றுந் தோற்றிய துப்பிற் றோற்ற" (இரகு. திக்குவி. 43).*

**துப்பு**[2] *tuppu,* பெ. (n.) *1.* **நுகர்ச்சி;** enjoyment. *"துப்புமிழ்ந் தலமருங் காமவல்லி" (சீவக. 197).* *2.* **நுகர்பொருள்;** object of enjoyment. *"வருபவர்க்குத் துப்பமைத்து நல்கும்" (திருவாரூ. 450).* *3.* **உணவு;** food. *"துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" (குறள். 12).* *4.* **நெய்;** ghee. *"உறைசெழு துப்பும் வாக்கி" (சுந்தபு. வில்வல. வதை. 18).*

*[து → துப்பு (வேக. 282)]*

**துப்பு**[3] *tuppu,* பெ. (n.) **தூய்மை** (பிங்); cleaness, purity. *"துப்புடை மணலிற் றாகி" (கம்பரா. எதிர்கோட். 2).*

*[தூய் → துய் → துப்பு]*

**துப்பு**[4] *tuppu,* பெ. (n.) **பகை;** enmity. *"துப்பி னெவ னாவர் மற்கொல்" (குறள். 1165).*

*[து → துப்பு]*

**துப்பு**[5] *tuppu,* பெ. (n.) *1.* **ஆராய்ச்சி;** investigation. *2.* **உளவு;** spying. *3.* **உளவடையாளம்;** sign, trace, evidence, as of crime.

க. து. துப்பு (tubbu)

**துப்பு**[6] *tuppu,* பெ. (n.) **துரு;** rust.

தெ. துப்பு

**துப்பு**[7] *tuppu,* பெ. (n.) *1.* **பவளம்;** red coral. *"துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" (சீவக. 550).* *2.* **அரக்கு** (பிங்.); gum lac. *3.* **சிவப்பு;** red, redness.

*[தும்பு → துப்பு (தமி.வ. 56)]*

**துப்பு[1]-தல்** *tuppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **உமிழ்தல்;** to spit. "அந்த வார்த்தையைத் துப்பென்ற நிந்தையால்" *(இராமநா. ஆரணி. 8).*

ம. துப்புக

**துப்பு[9]** *tuppu,* பெ. (n.) **உமிழ்நீர்;** spittle.

ம. துப்பு

**துப்புக்கூலி** *tuppu-k-kūli,* பெ. (n.) **உளவு கண்டுபிடித்தற்கு உதவுங்கூலி;** wage of an informer or spy; remuneration of a detective.

*[துப்பு[4] + கூலி]*

**துப்புக்கெட்டவன்** *tuppu-k-keṭṭavaṉ,* பெ. (n.) 1. துப்பற்றவன் பார்க்க; see *tupparravaṉ.* 2. **அறிவற்றவன்;** fool, stupid person. 3. **அழுக்குப் பிடித்தவன்;** dirty person.

*[துப்பு + கெட்டவன்]*

**துப்புக்கெட்டவள்** *tuppu-k-keṭṭavaḷ,* பெ. (n.) 1. **திறனிலாள்;** inefficent women. 2. **ஏதிலி;** helpless. துப்புக் கெட்டவளுக்கு இரட்டைப் பரியம் *(பழ.).*

*[துப்பு + கெட்டவன்]*

**துப்புக்கேடு** *tuppu-k-kēḍu,* பெ. (n.) சீர்கேடு (வின்.); degneration, ruin.

*[துப்பு + கேடு]*

**துப்புண்ணி** *tuppuṇṇi,* பெ. (n.) சீர்கெட்டவன் -ள் (யாழ்.அக.); person, as one whom everybody spits upon.

*[துப்பு + உண்ணி (துப்புதற்குரியவன்)]*

**துப்புத்துரிசு** *tuppu-t-turišu,* பெ. (n.) **மாசுமறு;** dust and dirt.

*[துப்பு + துரிசு]*

**துப்புத்துருப்பிடி-த்தல்** *tuppu-t-turu-p-piḍi-,* செ.குவி. (v.i.) 1. **உளவு கண்டுபிடித்தல்;** to spy, detect, trace. 2. **தெளிவான புலனாய்வு செய்தல்;** to investigate, enquire closely.

*[துப்பு + துருவு + பிடி-.]*

**துப்புத்துருவிசாரி-த்தல்** *tuppu-turu-višāri-,* செ.குன்றாவி. (v.t.) துப்புத்துருப்பிடி பார்க்க; see *tuppu-t-turu-p-piḍi.*

*[துப்பு + துரு + விசாரி-.]*

**துப்புநீர்** *tuppu-nīr,* செ.குன்றாவி. (v.t.) **எச்சில் நீர்;** spittle (நெல்லை).

*[துப்பு + நீர்]*

**துப்புநெல்லி** *tuppu-nelli,* பெ. (n.) **உணவுக் குரிய நெல்லி;** edible gooseberry used in food.

*[துப்பு[2] + நெல்லி]*

**துப்புரவாக்கல்** *tuppuravākkal,* செ.குன்றாவி (v.t.) **தூய்மை செய்தல்;** cleaning, purifying.

*[துப்புரவு + ஆக்கல்]*

**துப்புரவாய்** *tuppura-vāy,* வி.எ. (adv.) **முழுதும்;** wholly, entirely. "துப்புரவாய் அழிந்து விட்டது".

*[துப்புரவு + ஆக → ஆய்]*

**துப்புரவு** *tuppuravu,* பெ. (n.) 1. **திறமை;** ability, cleverness. "சர்வேசுவரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி துப்புரவுடையன" *(ஈடு. 1, 5,3).* 2. **வேண்டற்பாடு;** necessity. 3. **மேன்மை;** excellence. 4. **அழகு** (வின்.); beauty. 5. **முறைமை** (வி.); established custom, order, propriety of conduct.

*[தூய் → து → துப்பு → துப்புரவு (மு.தா. 162)]*

**துப்புரவு[2]** *tuppuravu,* பெ. (n.) 1. **ஐம்பொறி நுகர்ச்சி;** enjoyment or gratification of the senses. "நிலைமையினெஞ்சத்தான் றுப்புரவு" *(நாலடி. 87).* 2. **நுகர்ச்சிப் பொருள்;** objects of enjoyment. "துப்புரவில்லார் துவரத் துறவாமை" *(குறள். 1050).* 3. **பட்டறிவு;** experience. "சிவயோகத் துப்புரவுபெற்று" *(உபதேசகா. உருத்திராக். 179).*

*[துப்பு[2] + உரவு]*

**துப்புரவு[3]** *tuppuravu,* பெ. (n.) **தூய்மை;** purity, cleanliness. "துப்புரவொன்றில்லா வெற்றரையார்" *(தேவா. 577, 10).*

*[துப்பு[7] + உரவு]*

**துப்புளி** *tuppuḷi,* பெ. (n.) **படைக்கலக் கொட்டில்** (யாழ்.அக.); armoury.

*[துப்பு + உள் + இ]*

**துப்பேறு-தல்** *tuppēṟu-,* செ.கு.வி. (v.i.) துருவேறுதல்; to become rusty. "தண்ணீர் பட்டாலோ ரோல்டு கோல்டு துப்பேறிப் போகும்" (மதி.க. 111).

[துப்பு + ஏறு-.]

**துபப்பரணி** *tuba-p-paraṇi,* பெ. (n.) நேர்வாளம்; croton oil plant (சா.அக.).

**தும்**[1] *tum,* பெ. (n.) இறப்பெதிர் காலங்களைக் காட்டும் தன்மைப்பன்மை வினைமுற்று விகுதி (நன். 322); verbal ending, of the Ist person plural, denoting past or future tense, as in செய்தும்.

**தும்**[2] *tum,* பெ. (n.) தூசி; dust. "தும்பறக்க அடித்தான்" (வின்.).

தெ. கும்மு

**தும்பகர்** *tumbagar,* பெ. (n.) தும்பை பார்க்க (சீ.அ.); see *tumbai.*

**தும்பகா** *tumbagā,* பெ. (n.) தும்பை பார்க்க (வின்.); see *tumbai.*

**தும்படைசி**[1] *tumbaḍaiśi,* பெ. (n.) நெசவுத் தறி நாடாவிலோ ருறுப்பு (யாழ்.அக.); a part of shuttle having the weft-thread.

[தும்பு + அடைசி]

**தும்படைசி**[2] *tumbaḍaiśi,* பெ. (n.) அழுக்குப் போக்கும் கருவி (பாண்டி.); brush.

[தும்பு + அடைசு → அடைசி]

**தும்பரம்** *tumbaram,* பெ. (n.) அத்தி (அகநி.); country fig.

[தும்பு + தும்பரம் (வ.மொ.வ. 176)]

**தும்பராசம்** *tumbarāśam,* பெ. (n.) காட்டுக் கோதுமை; wild wheat (சா.அக.).

**தும்பராட்டகம்** *tumbarāṭṭagam,* பெ. (n.) 1. அரத்தை; galangal. 2. பேரரத்தை; greater galangal (சா.அக.).

**தும்பல்** *tumbal,* பெ. (n.) தும்மல் பார்க்க; see *tummal* (செ.அக.).

**தும்பரிசி** *tumbariśi,* பெ. (n.) வண்டரிசி; seed of an insect (சா.அக.).

**தும்பல்கொடி** *tumbal-koḍi,* பெ. (n.) கொடியைக் கிள்ளிச் சாறு முகர்ந்தால் தும்மல் வரும்; a creeper whose exudation causes sreezing when smelled.

[தும்மல் + கொடி - தும்பல்கொடி]

**தும்பலுவான்** *tumbaluvāṉ,* பெ. (n.) ஒருவகைப் பிசின் மரம்; forest mahogany (சா.அக.).

**தும்பன்** *tumbaṉ,* பெ. (n.) தீயவன்; wicked person.

[தும்பு → தும்பன்]

**தும்பா** *tumbā,* பெ. (n.) 1. சுரைக்குடுக்கைக் கலம்; hollowed gourd or rind of a gourd, used as a vessel. 2. உண்ணீருக்குரிய ஏனவகை; loc. a kind of drinking vessel.

[தும்பு → தும்பா. தும்பா → வ. தும்ப (வே.க. 281)]

**தும்பாலை** *tumbālai,* பெ. (n.) சுரை[4]; a bottle gourd.

[தும்பு → தும்பாலை (வே.க. 281)]

**தும்பாவகம்** *tumbāvagam,* பெ. (n.) குளம்பிக் கொட்டை; coffee seed (சா.அக.).

**தும்பி**[1] *tumbi,* பெ. (n.) 1. யானை; elephant. "தும்பியை யரிதொலைத் தென்ன" (கம்பரா. வாலிவதை. 51). 2. வண்டு (பிங்.); bee. "துவைத் தெழு தும்பி" (அகநா. 317). 3. ஆண்வண்டு (திவா.); male bee. 4. தட்டான் பூச்சி (வின்.); dragon fly.

ம. தும்பி; க. தும்பி; து. தும்பி.

தும்பி → வ. தும்பீ

[தும்பு → தும்பி (வே.க. 281)]



**தும்பி²** *tumbi*, பெ. (n.) 1. மீன்சாதிவகை; a genus of fish. 2. பதினொன்றரை விரலம் வரை வளரக் கூடியதும் செந்நிற முடையதுமாகிய கடல்மீன் வகை; a seafish, reddish, attaining 11½ in. in length. 3. காட்டத்தி (மலை.) பார்க்க; see *kāṭṭatti*; gaub. 4. கருப்பு மரவகை (தைலவ. தைல. 48); black gaub. 5. அகந்தாளி வகை; ceylon ebony. 6. தும்பிலி பார்க்க; see *tumbili*. 7. கரும்பு (மலை); sugar-cane.

*[தும்பு → தும்பி]*

**தும்பி³** *tumbi*, பெ. (n.) சுரை பார்க்க (பிங்.); see *śurai*; calabomb. "கமுகுமாத் தும்பி" (சைவச. பொது. 277). 2. தும்பா² பார்க்க; see *tumbā*. 3. கொற்றான் (மலை.) பார்க்க; see *koṟṟāṉ*; parasitic leafless plant.

*[தும்பு → தும்பி]*

**தும்பி⁴** *tumbi*, பெ. (n.) தீயவள்; wicked woman.

தும்பன் ஆ.பா; தும்பி பெ.பா.

**தும்பி⁵** *tumbi*, பெ. (n.) நச்சுத்தன்மையுள்ள கூறிய முட்களையுடைய மீன் (மீன்பிடி.); a kind of fish which has poisonous thorns.

*[தும்பு → தும்பி]*

**தும்பிக்காய்** *tumbi-k-kāi*, பெ. (n.) பனிச்சைக் காய்; malabar mangosteen.

*[தும்பி + காய்]*

**தும்பிக்கை** *tumbi-k-kai*, பெ. (n.) யானைத் துதிக்கை; elephant's trunk. "தும்பிக்கையான் பாதந் தப்பாமற் சார்வார்" (மூதுரைக் காப்புச்.).

*[தும்பி + கை]*

**தும்பிக்கைமாலை** *tumbi-k-kai-mālai*, பெ. (n.) மாலை வகை; a kind of large garland (நாஞ்.).

*[தும்பிக்கை + மாலை]*

**தும்பிச்சங்கை** *tumbi-c-caṅgai*, பெ. (n.) தும்பிக்கை பார்க்க; see *tumbikkai*.

*[தும்பி + சங்கை]*

**தும்பிச்சி¹** *tumbicci*, பெ. (n.) தும்பி⁴ (வி.) பார்க்க; see *tumbi*.

**தும்பிச்சி²** *tumbicci*, பெ. (n.) பழைய காசு வகை (சரவண. பணவிடு. 56); old coin.

**தும்பிச்சிக்கை** *tumbi-c-cikkai*, பெ. (n.) தும்பிக்கை பார்க்க; see *tumbikkai*.

*[தும்பிச்சி + கை]*

**தும்பிப்பதக்கம்** *tumbi-p-patakkam*, பெ. (n.) வண்டின் வடிவாகச் செய்யப்பட்ட பதக்கம்; beetle shapped pendant of a necklace. "தும்பிப் பதக்கவிலை சொற்பமோ" (விறலிவிடு. 698).

*[தும்பி + பதக்கம்]*

**தும்பிப்பாட்டு** *tumbi-p-pāṭṭu*, பெ. (n.) இறந்து பட்ட ஒரு பழைய நூல் (யாப்.வி.பக். 355); an ancient poem now lost.

*[தும்பி + பாட்டு]*

**தும்பிபறத்தல்** *tumbi-paṟattal*, பெ. (n.) மகளிர் விளையாட்டு வகை; a girl's game.

*[தும்பி + பறத்தல்]*

**தும்பிமா** *tumbi-mā*, பெ. (n.) வண்டு விழுந்த மாம்பழம்; mango fruit having beetles in its kernel (செ.அக.).

**தும்பிமீன்** *tumbi-mīṉ*, பெ. (n.) வெண்பழுப்பான எலும்புக் கம்பிகள் வாய்ந்த, உணவிற்கு ஏற்றதல்லாத அழகிய கடல்மீன் வகை; an ornamental sea-fish (சா.அக.).



**தும்பிமுகன்** *tumbi-mugaṉ*, பெ. (n.) பிள்ளையார் (பேரின்பக்கீர்த். ப. 2); God pilliyar.

**தும்பியம்** *tumbiyam*, பெ. (n.) செங்குத்தாய் மேலெழும்பவும், கீழிறங்கவும்வல்ல தும்பியம் என்னும் வானூர்தி; helicopter.

*[தும்பு + பறத்தல்]*

**தும்பியூது-தல்** *tumbi-y-ūdu-*, செ.கு.வி. (v.i.) *1.* வண்டு போல ஒலித்தல் *(வின்.);* to puzz, make a humming noise. *2.* ஓசையோடு வலிந்து மூச்சுவாங்குதல் *(வின்.);* to breath with a shrill sound, as one senseless from a fall or blow. *3.* எச்சில் வழலை நீர் முதலியவற்றை ஊதிக்குமிழியுண்டாக்குதல்; to blow bubbles from the mouth, as with spittle, soapy water etc.

*[தும்பி + ஊது-.]*

**தும்பிலி** *tumbili*, பெ. (n.) *1.* மரவகை; coromandel ebony 2. மைசூர் மரவகை; coromandal ebony of mysore. *3.* ஓரடிக்கு மேல் வளரக் கூடியதும் கருஞ்சாம்பல் நிற முள்ளதுமான கடல்மீன் வகை; a sea-fish, brownish grey, attaining atleast 1 ft. in length. *4.* நீர்வெட்டிமுத்து; fish poison tree *(சா.அக.).*

*[தும்பி + தும்பிலி]*

**தும்பிலிக்காய்** *tumbili-k-kāy*, பெ. (n.) *1.* கருப்பு மரத்தின் காய்; fruit of black ebbony. *2.* பனிச்சைக்காய்; malabar mangosteen *(சா.அக.).*

*[தும்பிலி + காய்]*

**தும்பினி** *tumbiṉi*, பெ. (n.) மின்மினிப் பூச்சி; glowworm, fire-fly.

**தும்பு**[1] *tumbu*, பெ. (n.) *1.* குற்றம்; fault, blemish, defect. "தும்பறப் புத்திசேன சொல்லிது குரவற் கென்ன" *(சீவக. 666). 2.* நாகரிகமில்லாச் சொல்; uncivil, vulgar or slanderous language. "வம்புதும்பு பேசுபவன்".

*[துன்பு → தும்பு.*
*ஒ.நோ. வன்பு → வம்பு.*
*வம்பு தும்பு என்பது மரபிணை மொழி (வே.க. 289)]*

**தும்பு**[2] *tumbu*, பெ. (n.) *1.* ஓரம்; border, fringe. *2.* நரம்பு முதலியவற்றில் விழுஞ் சிம்பு; frayed ends, as of a gut. "கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை நான்கும்" *(சீவக. 721, உரை). 3.* நார்; fibre. *4.* வரம்பு; propriety, relevancy. "தும்பில்லாமற் பேசுகிறான்". *5.* கயிறு; rope, tether. "ஆர்த்த தும்பறுத்து விடுப்ப" *(திருவாலவா. 33, 14). 6.* நெடுஞ்சி (மலை) பார்க்க; see *neḍuñji*; cow thorn. *7.* கரும்பு (மலை); sugar-cane. *8.* வல்லம்பர், நாட்டுக் கோட்டைச் செட்டிமார் இவர்கள் பெண்டிர் அணியும் ஒருவகைத் தாலியுரு; small globular pendant suspended from the tāli of vallampar and Nāṭṭu-k-kōṭṭai chetti women. *9.* தூசி; dust. "உள்ளெல்லாம் மிகவும் தும்பாக இருக்கிறது".

ம. தும்பு; தெ. தும்மு

*[துல் → துள் → துண்பு → தும்பு (வே.க. 281)]*

**தும்பு**[3]**-தல்** *tumbu-*, 5 செ.கு.வி. (v.i.) தும்மு *(வின்.)* பார்க்க; see *tummu.*

*[துன்பு → தும்பு-,]*

**தும்புக்கட்டு** *tumbu-k-kaṭṭu*, பெ. (n.) தேங்காய் நாரால் செய்த துடைப்பம்; sweeping brush made of coconut fibres.

*[தும்பு[2] + கட்டு]*

**தும்புக்கயிறு** *tumbu-k-kayiṟu*, பெ. (n.) *1.* தென்னை பனை முதலியவற்றின் நாரால் திரிக்கப்பட்ட கயிறு; rope of coconut, palmyra or other fibres. *2.* மாட்டுத் தும்பு; halter, tethering, rope. தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கிறதா? *(பழ.).*

*[தும்பு + கயிறு]*

**தும்புதட்டு-தல்** *tumbu-taṭṭu-*, செ.கு.வி. (v.i.) நையப்புடைத்தல்; to thrash.

*[தும்பு + தட்டு-.]*

**தும்புபிடுங்கு-தல்** *tumbu-piḍuṅgu-*, செ.கு.வி. (v.i.) பிறர் குற்றத்தை எடுத்துக் கூறுதல் *(வின்.);* to accuse, taunt, nag.

*[தும்பு + பிடுங்கு-.]*

**தும்புபோடு-தல்** *tumbu-pōḍu*, செ.குன்றாவி. (v.t.) *1.* கயிறு திரித்தல்; to make a tether. *2.* துருவியறிதல்; to probe, spy out.

*[தும்பு + போடு-.]*

**தும்புரு** *tumburu*, பெ. (n.) *1.* விண்ணக இசையாளனாகக் கருதப்படுபவன் ஒரு கந்தருவன்; a celestial musician. "தும்புரு நாதரர்

புகுந்தன ரிவரோ" (திவ்.திருப்பள்ளி. 8). 2. ஒரு வகை யாழ்; a kind of lute. "தும்புருக் கருவியுந் துன்னிநின் றசைப்ப" (கல்லா. 81).

**தும்புலிப்பாகு** *tumbili-p-pāku*, பெ. (n.) சருக்கரை; sugar (சா.அக.).

**தும்புவெட்டு** *tumbu-vettu*, பெ. (n.) ஆடையின் ஓரத்தை கத்தரிக்கை; cutting the edge of a cloth.

*[தும்பு + வெட்டு]*

**தும்பை** *tumbai*, பெ. (n.) 1. மருந்தாகப் பயன்படும், சிறிய வெள்ளை நிறப் பூக்களையுடைய குத்துச் செடிவகை (பதார்த்த. 557); white dead nettle. 2. செடி வகை; bitter toombay, a common weed. 3. காசித்தும்பை பார்க்க; see *kāśi-t-tumbai;* flower toombay. 4. செடிவகை; black gaub. 5. பெருவீரச் செயல்புரிவதன் அறிகுறியாக வீரர் போரிலணியும் அடையாளப்பூ; a garlands of flowers worn by warriors when engaged in battle, as a mark of their valour. "தொடியணிதோ ளாடவர் தும்பை புனைய" (புவெ.10,2). 6. தும்பைத் திணை (தொல்.பொ.70) பார்க்க; see *tumbai-t-tiṇai*. 7. போர் (பிங்.); battle. "தேவரை மேனாள் தும்பையின்றலை துரந்தது" (கம்பரா. பிரமா. 113). 8. கூட்டம் (வின்.); assembly, crowd.

தெ. தும்ப; க. தும்பை

*[தும்பு → தும்பை (மு.தா. 160)]*



**தும்பை வகைகள்**

1. காசித்தும்பை
2. கருந்தும்பை
3. கழுதைத்தும்பை
4. பீத்தும்பை
5. பேய்த்தும்பை
6. மலைத்தும்பை
7. கவிழ்தும்பை
8. பெருந்தும்பை
9. சிறுதும்பை
10. சன்னத்தும்பை
11. கசப்புத்தும்பை
12. கப்பாத்தும்பை
13. காட்டுத்தும்பை
14. செந்தும்பை
15. மஞ்சட்காசித்தும்பை
16. சிவப்புக்காசித்தும்பை
17. கறித்தும்பை

(சா.அக.)

**தும்பை**[2] *tumbai*, பெ. (n.) 1. வெற்றிலை (மலை.); betel leaf. 2. மீன் சாதி வகை (வின்.); a genus of fish.

**தும்பை**[3] *tumbai*, பெ. (n.) ஒருவகைத் தவசம்; a kind of grain. "தும்பையென்றும் வாய்வகுக்குஞ் சாமியென்றும்" (நெல்விடு. 170).

**தும்பைத்திணை** *tumbai-t-tiṇai*, பெ. (n.) பெருவீரச் செயல்காட்டிப் பகைவரோடு போர் செய்தலைக்கூறும் புறத்திணை வகை (தொல்.இளம்.); major theme of a king or warrior heroically fighing against his enemy.

*[தும்பை + திணை]*

**தும்பைப்பாரை** *tumbai-p-pārai*, பெ. (n.) தும்பை மீன் வகை (வின்.); the large tumbai fish.

*[தும்பை + பாரை]*



**தும்பைமணி** *tumbai-maṇi,* பெ. (n.) ஒருசார் மறவ மகளிர் அணியும் தாலி வகை; a kind of tāli worn by women of certain marava sub-caste (செ.அக.).

*[தும்பை + மணி]*

**தும்பைமாலை** *tumbaimālai,* பெ. (n.) தும்பை மாலையணிந்து பெரும்போர் புரிந்த வீரனைப் புகழ்ந்து கூறும் இலக்கிய வகை (தொல்.வி. 283, உரை); panegyric on a warrior who has fought valiantly against his enemy, wearing a tumbai garland.

*[தும்பை + மாலை]*

**தும்பைமை** *tumbai-mai,* பெ. (n.) மாலைக் கண்ணைக் குணப்படுத்த வேண்டி, கண்ணுக் கிடும் ஒருவகை மருந்துமை; an eye colloryium prepared out of leucas to cure night blindness (சா.அக.).

**தும்பையரவம்** *tumbai-y-aravam,* பெ. (n.) தன்சேனையை அரசன் தலையளி செய்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7,2); theme describing a king distributing honours and rewards to his troops after a victory.

*[தும்பை + அரவம்]*

**தும்பையன்** *tumbaiyaṉ,* பெ. (n.) மீன் வகை; a kind of fish. "தகுவெள்ளாரல் தும்பையன்" (பறாளை. பள்ளு, 16).

*[தும்பை → தும்பையன்]*

**தும்பையாடு** *tumbaiyāḍu,* பெ. (n.) ஒரு வகை ஆடு; a kind of sheep (சா.அக.).

*[தும்பை + ஆடு]*

**தும்மட்டி** *tummaṭṭi,* பெ. (n.) *1.* வரிக்கொம்மட்டி; country cucumber, climber. *2.* சர்க்கரைக் கொம்மட்டி; sweet water-melon. *3.* பேய்க் கொம்மட்டி; bitter water-melon.

**தும்மட்டிப்பட்டன்** *tummaṭṭi-p-paṭṭaṉ,* பெ. (n.) ஏமாற்றுபவன்; swindler, cheat.

*[தும்மட்டி + பட்டன்]*

**தும்மல்** *tummal,* பெ. (n.) *1.* தும்முகை; sneezing. "குறிப்பின்றித் தும்மல்போற் றோன்றிவிடும்" (குறள், 1253). *2.* மூச்சு (பிங்.); breath. தும்மலிலே போனாலும் தூற்றலிலே போகக் கூடாது (பழ.).

*[தும்மு → தும்மல்]*

**தும்மல்நூல்** *tummal-nūl,* பெ. (n.) தும்முவதால் ஏற்படும் நன்மை தீமைகளைக் கணக்கிட்டுப் பார்த்துச் சொல்லும் நூல்; that branch of science dealing with the art of divination of sneezing (சா.அக.).

*[தும்பை + நூல்]*

**தும்மவிடு-தல்** *tummaviḍu-,* செ.குன்றாவி. (v.t.) சிறிதேனும் வசதி கொடுத்தல்; to allow breathing-space.

**தும்மற்காதல்** *tummaṟ-kādal,* பெ. (n.) தும்மலைக் கொண்டு குறிகூறுகை; prediction from sneezing.

*[தும்மல் + காதல்]*

**தும்மற்பூண்டு** *tummaṟ-pūṇḍu,* பெ. (n.) காக்கை வலிப்புக்கு நசியமாகப் பயன்படும் ஒரு வகைப்பூண்டு; a stermitatory used as a snuff in the attack epilepsy (சா.அக.).

*[தும்பை + பூண்டு]*

**தும்மிட்டி** *tummiṭṭi,* பெ. (n.) *1.* சிறுகொம்மட்டி (யாழ்.அக.); a kind of small cucumber. *2.* பேரீந்து; cultivated date palm.

*[தும்மட்டி → தும்மிட்டி]*

**தும்மு¹-தல்** *tummu-,* செ.கு.வி. (v.i.) *1.* சளி முதலியவற்றால் மூச்சுக்காற்றுத் தடைப்பட்டு வாய்மூக்கு வழிகளால் ஒலியுடன் வெளியேறுதல்; to sneeze. "ஊடியிருந்தேமாத் தும்மினார்" (குறள். 1312). *2.* மூச்சுவிடுதல்; to breath.

தெ. தும்முட; ம. தும்புக

**தும்மு²-தல்** *tummu-,* செ.குன்றாவி. (v.t.) விடுதல்; to emit, letgo, leave.

**தும்மு³** *tummu-,* பெ. (n.) தும்மல் பார்க்க; see *tummal.* "தும்முச் செறுப்ப வழுதாள்" (குறள். 1318).

**தும்மு⁴** *tummu-,* பெ. (n.) கொதுகு (சது.); gnat.

**தும்முட்டி** *tummuṭṭi-*, பெ. (n.) *தும்மட்டி;* country cucumber.

**துமனதாளி** *tumaṉa-tāḷi*, பெ. (n.) *தாளிப்பனை;* talipot tree (*சா.அக.*).

**துமானம்** *tumāṉam*, பெ. (n.) *அணிகலன்கள் வைக்கும் கலம்;* jewel casket.

**துமிதல்**[1] *tumi-*, செகுவி. (v.i.) *1. வெட்டுண்ணுதல்;* to be cut off severed. "*அரவினருந்தலை துமிய*" (*புறநா. 211*). *2. அழிதல்;* to perish, to be crushed. "*பைம்பயிர் துமிய*" (*அகநா. 254*).

**துமிதல்**[2] *tumi-*, செ.குன்றாவி. (v.t.) *விலக்குதல்;* to remove. "*சுதைச் சிலம்பிமேல் விழவூதித் துமிந்தனன்*" (*பெரியபு. திருநீலநக். 13*).

**துமி**[3]**-த்தல்** *tumi-*, 11 செ.குன்றாவி. (v.t.) *1. வெட்டுதல்* (*திவா.*); to cut off. "*கொடுங்காற் புன்னைக் கோடு துமித் தியற்றிய*" (*பெரும்பாண். 266*). *2. அறுத்தல்* (*திவா.*); to saw. "*வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த*" (*அகநா. 24*). *3. விலக்குதல்;* to keep off, obstruct. "*தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டும்*" (*கலித். 116, 5*).

*[துமி → துமித்-]*

**துமி**[4] *tumi-*, பெ. (n.) *வெட்டு;* cut, severance. "*சுரந்துமி படுதலுங் கவன்று*" (*கந்தபு. அசமுகிசோ. 2*).

**துமி**[5]**-தல்** *tumi-*, செ.குன்றாவி. (v.t.) *உமிழ்தல்;* to spit. "*மிச்சிலைத் துமிந்து*" (*காஞ்சிப். சுழுவாய். 63*).

**துமி**[6]**-த்தல்** *tumi-*, செ.குவி. (v.i.) *துளித்தல்* (*வின்.*); to drizzle, sprinkle.

**துமி**[7] *tumi*, பெ. (n.) *1. மழைத்துளி;* rain drops. *2. தூறல்;* light, drizzling rain. *3. நீர்த்துளி;* drop of water; spray. "*திரைகடற்றுமி தமூர்புக*" (*கம்பரா. சேது. 42*).

**துமிதம்** *tumidam*, பெ. (n.) *மழைத்துளி* (*பிங்.*); rain drops.

**துமிரம்** *tumiram*, பெ. (n.) *1. கருமை;* black colour. *2. மிகுசிவப்பு;* deep red colour.

*[துமி → துமிரம்]*

**துமிலம்** *tumilam*, பெ. (n.) *பேராரவாரம்;* din, tumult. "*துமிலமெழப் பறைகொட்டி*" (*திவ்.பெரியாழ். 3,8,3*).

**துமுலம்** *tumulam*, பெ. (n.) *குழப்பம்* (*யாழ்.அக.*); confusion.

**துய்**[1]**-த்தல்** *tuy-*, 11 செ.குன்றாவி. (v.t.) *1. புலன்களால் நுகர்தல்;* to enjoy by means of the senses. "*கொடுப்பதூஉத் துய்ப்பதூஉ மில்லார்க்கு*" (*குறள். 1005*). *2. நுகர்தல்;* to experience, suffer, as the fruits of actions. "*தொல்வினைப் பயன்றுய்ப்ப*" (*கலித். 118*). *3. உண்ணுதல்;* to eat, feed. "*புதுப்பூத் துய்த்த வாய*" (*அகநா. 15*). *4. நூல் நூற்றல்;* to spin out.

*[துள் → துய் → துய்த்தல் (வேக. 282)]*

**துய்**[2] *tuy*, பெ. (n.) *1. உணவு;* food. "*துய்தானுறும் வாயினை*" (*கந்தபு. தாரக. 159*). *2. பஞ்சு;* cotton. "*துய்த்தலை மந்தியை*" (*புறநா. 158*). *3. பஞ்சின் நுனி* (*குறிதல் 37, உரை*); soft end of cotton thread. *4. கதிர், பூவிதழ் முதலியவற்றின் மெல்லிய பகுதி;* a soft part in the ears of corn, in the petals of flowers. "*துய்த்தலை வாங்கிய .. குரல்*" (*குறிஞ்சிப். 37*). *5. மென்மை;* softness. "*துய்யறத் திரண்ட திண்கோல்*" (*சீவக. 559*). *7. புளியம்பழத்தின் ஈர்க்கு;* fibre covering the tamarind pulp. "*துய்த்தலைப் பழனின்*" (*மலைபடு. 178*). *8. கூர்மை;* sharpness. "*துய்யவை யங்கை வாங்கி*" (*திருவாலவா. 38, 35*).

*[துள் → துய்]*

**துய்த்தல்** *tuyttal*, பெ. (n.) *நாடகச் சந்தி ஐந்தனுள் இறுதியானது* (*சிலப். 3, 13, உரை, பக். 83*); satisfactory end of the plot of a drama, one of five nāṭaka-canti.

**துய்ப்பு** *tuyppu*, பெ. (n.) *நுகர்ச்சி;* enjoyment. "*துறக்கவேந்தன் றுய்ப்பிலன் கொல்லோ*" (*மணிமே. 15, 46*).

*[துள் → துய் → துய்ப்பு]*

**துய்ய** *tuyya*, பெ. (n.) *1. கலப்பற்ற;* pure. "*துய்யவெள்ளை*". *2. தெய்வத் தன்மை பொருந்திய;* holy. "*துய்யதேவர்*" (*கம்பரா. பிரமாத்திர. 189*). *3. உறுதியான;* conclusive

certain. "துய்ய பொருளீதென் றுந்தீபற" (திருவுந்தி. 10).

*[தூய் → துய் → துய்ய]*

**துய்யமல்லி** *tuyya-malli*, பெ. (n.) நான்கு முதல் ஆறு மாதங்களில் விளையக்கூடிய சம்பா வகை; a white campā paddy which matures in four to six months.

*[துய்ய + மல்லி]*

**துய்மை** *tuymai*, பெ. (n.) தூய்மை, மென்மை; fuarlx, softness.

*[துய் → தூய்மை]*

**துய்யபால்** *tuyyapāl*, பெ. (n.) நீர் கலக்காத பால்; unadulterated milk or pure milk.

**துய்யன்** *tuyyaṉ*, பெ. (n.) *1.* தூய்மையானவன்; holy, sacred person. *2.* வெள்ளி மணல்; sand containing silver ore (w).

*[தூய்மை → துய்யன்]*

**துய்யா** *tuyyā*, பெ. (n.) *1.* திரைகளின் ஓரத்தில் அமைக்கப்படும் அழகிய பின்னல் வகை; a kind of lace-braid stiched on to the border of curtains. *2.* துய்யாப்பட்டை பார்க்க; see *tuyya-p-paṭṭai*. 3. நெசவுப்பின்னற் கயிறு; braidad cord.

*[தூய்மை → துய்யா]*

**துய்யாப்பட்டை** *tuyyā-p-paṭṭai*, பெ. (n.) போலிப் பொன்னிழை; imitation lace.

*[தூய்யா + பட்டை]*

**துய்யாள்** *tuyyāḷ*, பெ. (n.) *1.* தூய்மையானவன்; pure, chaste woman. *2.* நாமகள் (பிங்.); sarasvati.

**துய்யான்குறு** *tuyyāṉkuṟu*, பெ. (n.) மணல், வெள்ளி மணல்; silver ore (சா.அக.).

**துய்யான்குறுமணல்** *tuyyāṉ-kuṟumaṇal*, பெ. (n.) துய்யன்[2] பார்க்க; see *tuyyaṉ*[2] (சங்.அக.).

**துய்யோன்** *tuyyōṉ*, பெ. (n.) தூய்மை யுடையவன்; one who is virgin.

**துய்யை** *tuyyai*, பெ. (n.) சீக்காய்; soap nut (சா.அக.).

**துயக்கம்** *tuyyakkam*, பெ. (n.) சோர்வு; fatigue, loss of strength or courage.

*[துயங்கு → துயக்கு → துயக்கம்]*

**துயக்கன்** *tuyyakkan*, பெ. (n.) மனத்திரிவைச் செய்பவன்; one who causes distraction. "தூயன் துலக்கன் மயக்கன்" (திவ்.திருவாய். 1,9,6).

*[துயக்கு → துயக்கன்]*

**துயக்கம்** *tuyyakkam*, பெ. (n.) சோர்வு; fatigue, loss of strength or courage.

*[துயங்கு → துயக்கம்]*

**துயக்குதல்**[1] *tuyyakku-*, செ.குன்றாவி. (v.t.) *1.* தளரச் செய்தல் (வின்.); to slacken, relax. *2.* கட்டுதல்; to tie, fasten. "துயக்கு மவ்வினையின் கழிவும்" (தணிகைப்பு. நந்தியும். 110).

*[துயங்கு → துயக்கு]*

**துயக்கு**[2] *tuyyakku*, பெ. (n.) *1.* சோர்வு; fatigue, loss of strength or courage. "துயக்கிலன் சுகேது" (கம்பரா. தாடகை. 26). *2.* மனமயக்கம்; misconception, confusion. "துயக்கற வுணர்ந்து" (மணி. 27:19). *3.* வருத்தம்; sorrow. "துயக்கறுத் தெனையாண்டு கொண்டு" (திருவாச. 30:7). *4.* மனத்திரிவு; distraction. "இவையவன் துயக்கே" (திவ்.திருவாய். 1,3:9).

*[துயங்கு → துயக்கு]*

**துயக்கு**[3] *tuyyakku-*, பெ. (n.) *1.* பந்தம்; bondage. "துயக்கறாத மயக்கிவை" (தேவா. 260:10). *2.* ஆசை; desire. "தொண்டையங் கனிவாய்ச் சீதை துயக்கினா லென்னைச் சுட்டாய்" (கம்பரா. பொழிலிறுத். 40).

**துயக்கு**[4] *tuyakku*, பெ. (n.) *1.* தளர்ச்சி; relaxation. *2.* வலுக்குறைவு; valour (சா.அக.).

**துயங்கு-தல்** *tuyaṅgu-*, *5* செ.கு.வி. (v.i.) சோர்தல்; to be exausted, to faint. "இரணியன் துயங்கி நின்றான்" (வரத. பாகவத. நாரசிங்க. 28).

**துயம்** *tuyam*, பெ. (n.) *1.* இரண்டு; pair, couple. *2.* திருமாலைத் தேவதையாகக் கொண்டதும், இரண்டு சொற்களுடையதுமான மந்திர வகை; a mantra of two sentences propitiating

Viṣṇu. "மாமென்று தொட்டுரைத்த சொல்லும் துயத்தி னரும்பொருளும்" (பெருந்தொ. 1853). 3. கொடி (வின்.); banner, flag.

**துயர்[1]-தல்** *tuyar-,* செ.குவி. (v.i.) **வருந்துதல்;** to grieve, sorrow. "ஆனாது துயரு மென்கண்" (அகநா. 195).

**துயர்[2]** *tuyar,* பெ. (n.) 1. **துன்பம்;** sorrow, grief. "உலைப்பெய் தருவது போறுந்துயர்" (நாலடி. 114). 2. **அரசர்க்குரிய சூதாடு கருவி;** infirmities of kings, as playing at dice. "சூதுமுந்துறச் சொல்லிய மாத்துயர்" (கம்பரா. மந்தரை. 12).

**துயர்[3]-தல்** *tuyar-,* செ.குன்றாவி. (v.t.) **தொடர்தல்;** to follow, pursue.

**துயர்நிலை** *tuyar-nilai,* பெ. (n.) **துன்பநிலை;** state of being moody.

*[துயர் + நிலை]*

**துயரடி** *tuyar-aḍi,* பெ. (n.) 1. **சோர்வு;** fatigue, fainting. 2. **துன்பம்** (யாழ்.அக.); grief.

*[துயர் + அடி - துயரடி]*

**துயரம்[1]** *tuyaram,* பெ. (n.) 1. **மனவருத்தம்;** sorrow. "தணிவருந் துயரஞ் செய்தான்" (அகநா. 278). 2. **துயரம், இன்னல்;** trouble. "நீ யிருக்கத் துயரமுண்டோ வெமக்கினியே" (உத்தரரா. திருவோலக். 24) 3. **இரக்கம்;** pity. அவனைப் பார்த்தால் மிகவும் துயரமாயிருக்கிறது (உ.வ.).

*[துயர் → துயரம்]*

**துயரம்[2]** *tuyaram,* பெ. (n.) **மழை** (யாழ்.அக.); rain.

**துயரி** *tuyari,* பெ. (n.) **யாழ்நரம்பு;** lute-strings. "கோதை தொடுத்த துயரி" (சீவக. 921).

**துயருறுவோன்** *tuyar-uṟuvōṉ,* பெ. (n.) **வறியவன்** (யாழ்.அக.); poverty-stricken.

*[துயர் + உருவோன்]*

**துயல்(லு)-தல்** *tuyal-,* செ.குவி. (v.i.) 1. **அசைதல்;** to sway, wave. "மணிமயில் . . . துயல்கழை நெடுங்கோட்டு" (சிறுபாண். 263). 2. **தொங்குதல்;** to hang. "துயன்முலைப் பேழ்வாய்ப் பேய்" (பு.வெ. 4,18, கொளு). 3. **பறத்தல்;** to fly. "மென் சிறுபறவை கண்டந் தொக்குறு சுழனாக் கெண்டை கொண்டுவிண் டுயலா தன்றே" (உபதேசகா., பஞ்சாக். 57).

**துயல்வரு-தல்** *tuyal-varu,* செ.குவி. (v.i.) **துயல்[2]** பார்க்க; see *tuyal.* "துயல்வருஉ மாரம் போல" (சிறுபாண். 2).

*[துயர் + உருவோன்]*

**துயவு** *tuyavu,* பெ. (n.) **அறிவின்றிரிவு;** mental distraction. "துயவுற்றேம் யாமாக" (தொல்.சொல். 368, சேனா).

**துயில்[1](லு)-தல்** *tuyil,* செ.குவி. (v.i.) 1. **உறங்குதல்;** to sleep. "வரியரவி னணைத் துயின்று" (திவ்.பெரியதி. 8,3,2). 2. **தங்குதல்** (சீவக. 1504, உரை); stay. 3. **இறத்தல்;** to die. 4. **மறைதல்;** to set, as the sun. "ஒண்சுடர் துயின்றதாலென்னும்" (திவ்.பெரியதி. 2,7:4).

**துயில்[2]** *tuyil,* பெ. (n.) 1. **தூக்கம்;** to sleep. "மென்றோட் டுயிலின்" (குறள். 1103). 2. **கனவு;** dream. "துயில்போற் குறியா வரவு" (திணைமாலை. 50). 3. **இறப்பு;** death. "ஏந்தகலந் தொட்டான் பெருகத் துயில்" (பு.வெ. 4, 18). 4. **தங்குகை;** stay. "திருத்துயில் பெற்ற மார்பன்" (சீவக. 1504). 5. **புணர்ச்சி;** gohabitation. "நெஞ்சே மாப்ப வின்றுயி றுதுறந்து" (மதுரைக். 575). 6. **ஆடை** (வின்.); cloth.

**துயில்போ-தல்** *tuyil-pō-,* செ.குவி. (v.i.) 1. **துயில்** பார்க்க; see *tuyil.* 2. **ஆறுதல்** (யாழ்.அக.); to rest.

*[துயில் + போ]*

**துயில்வு** *tuyilvu,* பெ. (n.) **உறக்கம்** (யாழ்.அக.); sleep.

*[துயில் → துயில்வு]*

**துயிலார்[1]-தல்** *tuyilār,* செ.குவி. (v.i.) **உறங்குதல்;** to sleep. "துயிலாரா தாங்கண் . . . முற்றிய வெந்நோய்" (கலித். 146).

**துயிலார்[2]** *tuyilār,* பெ. (n.) **தேவர்** (உறக்கமிலாதோர்) (யாழ்.அக.); devas, as those who never sleep.

*[துயில் → துயில்வு]*

**துயிலி**[1] *tuyili*, பெ. (n.) கீரை வகை; the smallest Indian amaranth, Amarantus poly-gamus *(பதார்த். 601).*

**துயிலி**[2] *tuyili*, பெ. (n.) தஞ்சை மாவட்டம் துயிலி என்ற ஊரில் நெய்யப்படும் நல்லாடை வகை; a cloth of fine texture woven at a place called Tuyili in Tanjore district.

**துயிலிடம்** *tuyiliḍam*, பெ. (n.) 1. படுக்கும் இடம்; sleeping place. 2. மக்களின் படுக்கை (திவா.); contrivance to sleep on, as bed, couch, mat.

*[துயில் + இடம்]*

**துயிலுணர்-தல்** *tuyil-uṇar-*, செ.கு.வி. (v.i.) உளக்கம் நீங்குதல்; to awake, rise from sleep. "துயிலுணர்ந் திருந்தசோம சுந்தரக் கருணை வெள்ளம்" *(திருவிளை. நரிபரி. 17).*

*[துயில் + உணர்-.]*

**துயிலெடு-த்தல்** *tuyil-eḍu-*, செகுன்றாவி. (v.t.) தூக்கத்தினின்று எழுப்புதல்; to awake up, arouse.

*[துயில் + எடு-]*

**துயிலெடுப்பு**[1]**-தல்** *tuyil-eḍuppu-*, செகுன்றாவி. (v.t.) துயிலெடு பார்க்க; see *tuyil-eḍu*. "ஊர் துயிலெடுப்ப" *(மணிமே. 7:125).*

*[துயில் + எடுப்பு-]*

**துயிலெடுப்பு**[2] *tuyil-eḍuppu-*, பெ. (n.) தூக்கத்தினின்றெழுப்புகை; causing one to wake up.

*[துயில் + எடுப்பு]*

**துயிலெடை** *tuyil-eḍai-*, பெ. (n.) துயிலெழுப்புகை; waking one from sleep. "தூயோமாய் வந்தோந் துயிலெடை பாடுவான்" *(திவ்.திருப்பா. 16).*

*[துயில் + எடை]*

**துயிலெடைநிலை** *tuyil-eḍai-nilai*, பெ. (n.) பாசறைக்கண் துயிலும் வேந்தரைச் சூதர் அவர் புகழ் கூறித் துயிலெழுப்பல் கூறும் புறத்துறை; theme of Panegyrists waking a king who sleeps in Camp during an expedition. "தாவினல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதரேத்திய துயிலெடை நிலையும்" *(தொல்.பொ. 91).* 2. அரசர் முதலியோரைத் துயிலெடுத்தல் பற்றிப் பாடப்படும் பாடல் (சது.); poem sung to awake a king or great person from sleep.

*[துயிலெடை + நிலை]*

**துயிலெடைமாக்கள்** *tuyil-eḍai-mākkaḷ*, பெ. (n.) அரசரைத் துயிலெழுப்பும் சூதர்; panegyrists whose duty is to wake up kings from sleep. "துயிலெடைமாக்க ளிசைகொ ளோசையின்" *(பெருங்.வத்தவ. 5, 81).*

*[துயிலெடை + மாக்கள்]*

**துயிலெழு-தல்** *tuyil-eḻu-*, செகுவி. (v.i.) தூக்கம் கலைந்து எழுதல்; to awake from sleep. "சுப்பிரதீப மெழுந்தெனத் துயிலெழுந்தான்" *(இரகு.அயனெழுச். 139).*

*[துயில் + எழு]*

**துயிலெழுமங்கலம்** *tuyil-eḻu-maṅgalam*, பெ. (n.) பாணர் முதலியோர் அரசர் துயிலெழப் பாடும் மங்கலப் பாட்டு; panegyric sung to wake up a king from sleep. "விறலியும் பாணனும் நம் வேந்தற்குத் துயிலெழு மங்கலம் பாட வந்து நின்றார்" *(திருக்கோ. 375, உரை).*

*[துயில் + எழு + மங்கலம்]*

**துயிலேல்-தல் (துயிலேற்றல்)** *tuyil-ēl-*, செகுவி. (v.i.) துயிலெழு-. பார்க்க; see *tuyileḻu*. "யாழு மேத் தொலியு மிறைவன் கேட்டுத் துயிலேற்றான்" *(சீவக. 2355).*

*[துயில் + ஏல்-.]*

**துயிலொழி-தல்** *tuyil-oḻi-*, செ.கு.வி. (v.i.) துயிலெழு-. பார்க்க; see *tuyileḻu*.

*[துயில் + ஒழி-.]*

**துயிற்சி** *tuyirci*, பெ. (n.) உறக்கம்; sleep. "கயக்கமி றுயிற்சிக் கும்பகருணனை" *(கம்பரா. ஊர்தேடு. 121).*

*[துயில் → துயிற்சி]*

**துயிற்று-தல்** *tuyiṟṟu-*, செ.குன்றாவி. (v.t.) 1. உறங்கச் செய்தல்; to put to sleep. "மன்னுயிரெல்லாந் துயிற்றி" *(குறள். 1168).*

2. தங்கப் பண்ணுதல்; to cause to stay, to retain. "துயிற் றியபல் கேள்வியினர்" (சீவக. 2164).

[துயில் → துயிற்று]

**துயின்மடி-தல்** *tuyin-madi-*, செ.கு.வி. (v.i.) உறங்குதல்; to fall asleep. "கங்கு துயின்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பின்" (புறநா. 126:7).

[துயில் → துயின்மடி-]

**துயினடை** *tuyinadai*, பெ. (n.) தூக்கத்திடையே எழுந்து செல்லச் செய்யும் நோய்; somnambulism.

[துயில் + நடை]

**துர**[1]**-த்தல்** *tura-*, செ.குன்றாவி. (v.t.) 1. ஓட்டிச் செலுத்துதல்; to drive, as an elephant. "தோட்டியான் முன்பு துரந்து" (புறநா. 14-4). 2. எய்தல்; to shoot, as an arrow, to propel. "சுடுசரந் துரக்கும்" (கல்லா. 4). 3. போக்குதல்; to disperse, scatter. 4. தூண்டுதல்; to direct, urge, encourage. "அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமுந் துரக்க நல்லரு டுரந்தனள்" (கம்பரா. மந்தரை, 78). 5. அடித்தல்; to beat. "மகடூஉப் பகடுபுறந் துரப்ப" (பெரும்பாண். 58). 6. முடுக்கி உட்செலுத்துதல்; to drive in, hammer down, as a nail. "துரப்பமை யாணி" (பொருந. 10). 7. துளைத்தல்; to tunnel, bore.

**துர**[2]**-த்தல்** *tura-*, செ.கு.வி. (v.i.) 1. முயலுதல்; to be active, to make efforts. "அரும்பொருள் வேட்கையி னுள்ளந் துரப்ப" (கலித். 18). 2. போதல் (பிங்.); to go. 3. வீசுதல்; to blow, rage, as a tempest. "வளிதுரந்தக்கண்ணும்". 4. எரிதல்; to burn, as fire. "அங்கியு மவனெதிர் துரந்தான்" (கந்தபு. மார்க்கண். 135).

**துரக்காரன்** *tura-k-kāran*, பெ. (n.) 1. துரந்தரன்' பார்க்க; see *turandaran*. 2. கோயிற்குரிய தீர்வைகளைத் தண்டல் செய்யும் பணியாளன்; collector of revenues in repect of temple properties.

[துரம் + காரன்]

**துரக்கு** *tura-k-ku*, பெ. (n.) ஐயப்பாடு; misconception, doubt. "துரக்கற வுணர்ந்தனன்" (உத்தரரா. வரையெடு. 77).

**துரட்டன்** *turattan*, பெ. (n.) சிற்றின்பக்காரன்; lascivious person.

[துறட்டு → துறட்டன்]

**துரட்டு** *turattu*, பெ. (n.) துறட்டு பார்க்க; see *turattu*. "துரட்டிலே வந்து வலியச் சருவினோர்களை" (தனிப்பா.)

**துரத்தல்** *turattal*, பெ. (n.) 1. தொண்டைப் புகைச்சல்; bronchitis. 2 இருமல்; cough.

**துரத்திமரம்** *turatti-maram*, பெ. (n.) 1. ஆடு தொண்டை பார்க்க; see *ādu-tondai*. 2 நாக் குழிஞ்சான் பார்க்க; see *nā-k-kuliñjān*.

**துரத்து-தல்** *turattu*, செ.குன்றாவி. (v.t.) 1. வெருட்டியோட்டுதல்; to drive away. 2 அப்புறப்படுத்துதல்; to remove, reject. "அகத்தைவிடத் துரத்தி னார்கள்" (திருவிளை. விருத்த. 31). 3. திருடன் முதலியோரைப் பிடிக்கப் பின்தொடர்தல்; to pursue, as a thief. 4. வண்டிமாடு முதலியவற்றைத் தூண்டி விரைந்தோடச் செய்தல்; to drive, cause to move fast, as bullocks. வண்டிமாட்டைத் துரத்து (உ.வ.).

[துர → துரத்து]

**துரந்தரம்** *turandaram*, பெ. (n.) 1. பொதியெருது (யாழ்.அக.); pack-bull. 2. பொறுப்பு; responsibility.

**துரந்தரன்** *turandaran*, பெ. (n.) 1. பொறுப்பு ஏற்போன்; one who assumes a responsibility. 2 வெற்றியாளன்; conqueror, victor. "சத்துரு துரந்தரன் றன்முனை போல்" (இறை. 23,172). 3. முயன்று நிற்போன்; one actively and earnestly engaged in a pursuit. காரிய துரந்தரனா யிருக்கிறான் (உ.).

**துரப்பணம்** *turappanam*, பெ. (n.) துளையிடுங் கருவி; auger, drill, tool for boring holes.

[துர → துரப்பணம்]

**துரப்பணவலகு** *turappana-v-alagu*, பெ. (n.) 1. துளைக் கருவி; drill-bit 2. துரப்பணம் பார்க்க; see tura-p-panam.

[துரப்பணம் + அலகு]

**துயில்காணா** *tuyilkāṇā*, பெ. (n.) நெட்டி; pith, cork *(சா.அக.)*.

**துயில்கூர்தல்** *tuyilkūrdal*, பெ. (n.) உறங்கல்; sleep.

*[துயில் + கூர்தல்]*

**துயிலிக்கீரை** *tuyili-k-kīrai*, பெ. (n.) தொயிலிக் கீரை; a kind of greens *(சா.அக.)*.

*[துயிலி + கீரை]*

[இக்கீரையினால் ஆமம், தவிட்டுச் சிரங்கு, புண், நீரிழிவு, வெள்ளை நீங்குமெனச் சா.அக. கூறும்]

**துரப்புதல்** *turappu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தேடுதல்; to seek. "எனதொரு வாய்க்கு நால்வாய்க்கு மிரையெங்கே துரப்புவேனே" *(தனிப்பா. 1, 183, 3)*.

*[துர → துரப்பு-.]*

**துரப்பு**[2] *turappu*, பெ. (n.) 1. முடுக்குகை; driving, hammering. "துரப்பமை யாணி" *(பொருந. 10)*. 2. விடுகை; discharging. 3. அகற்றுகை (வின்.); dispelling, chasing, scaring away. 4. மலையிற் குடையப்பட்ட பாதை (நாஞ்.); way or path inside the hill, tunnel.

*[துர → துரப்பு (வே.க. 278)]*

**துரப்பை** *turappai*, பெ. (n.) துழாவித் தூர்க்கும் வாருகோல் (நாஞ்.); broom.

*[துரப்பு → துரப்பை (வே.க. 278)]*

**துரம்**[1] *turam*, பெ. (n.) முற்காலத்து வழங்கிய வாச்சிய வகை; an ancient musical instrument. "சங்கமுந் துரமு முரசினோ டியம்ப" *(பெருங். வத்தவ. 1, 18)*.

*[துர → துரம் (மு.தா. 59)]*

**துரம்**[2] *turam*, பெ. (n.) 1. சுமை (யாழ்.அக.); burden. 2. பொறுப்பு (யாழ்.அக.); charge, trust, responsibility. 3. கோயிற்குரிய வரி வாங்கும் அலுவலகம் (நாஞ்.); the department for collecting revenues in respect of temple-properties.

**துரமி** *turami*, பெ. (n.) தொடரி (மலை) பார்க்க; a species of buckthorn, thorny straggling shrub. 2. தூதுளை (மலை) பார்க்க; see *tūtuḷai*; climbing brinjal.

**துரவு**[1] *turavu*, பெ. (n.) 1. நீர்ப்பாசனத்துக்கு உதவும் பெருங்கிணறு; sultan well, large well for irrigation purposes. "துரவு கிணறு இழித்தப் பெறுவதாகவும்" *(S.I.I.ii, 509)*. 2. மணற்கேணி; well made by excavating sand, unwalled well.

ம. துரவு; தெ. தொருவு (பெருங்கிணறு)

*[துர → துரவு (வே.க. 278, துப்புத்துரவு)]*



**துரவு**[2] *turavu*, பெ. (n.) தூது (யாழ்.அக.); spying.

*[துர → துரவு]*

**துரவுச்சட்டம்** *turavu-c-caṭṭam*, பெ. (n.) கிணற்றின் சூறாவளிச் சட்டம் (யாழ்.அக.); round frame at the bottom of a well.

*[துரவு + சட்டம்]*

**துரவுமுழுகு-தல்** *turavu-muḻuku-*, செகுவி. (v.i.) சூறாவளிச் சட்டகத்தைக் கீழிறக்கிக் கிணறமைத்தல் (வின்.); to sink a well by gradually lowering a curb *(செ.அக.)*.

*[துரவு + முழுகு-,]*

**துரவுவாரகம்** *turavu-vārakam*, பெ. (n.) கிணறு வெட்டக் கொடுக்கும் கடன்; loan for sinking a well *(செ.அக.)*.

மறுவ. துரவு வாரகம்

*[துரவு + வாரகம்]*

**துரா** *turā,* பெ. (n.) *1.* தரா; mixed metal of copper and spelter. *2.* செடிவகை (M.M. 686); earth smoke. *3.* திராய் பார்க்க (M.M. 902); see *tirai.*

**துராக்கழிச்சல்** *turā-k-kaliccal,* பெ. (n.) நீராய்க் கழியும் மலம்; watery tool (செ.அக.)

*[துரா + கழிச்சல்]*

**துராணம்** *turāṇam,* பெ. (n.) தும்பை (மலை.) பார்க்க; see *tumbai;* white dead nettle (செ.அக.).

**துராய்**[1] *turāy,* பெ. (n.) அறுகம்புல்லால் திரித்த பழுதை; twisted quitch gross. "துராஅய் துற்றிய துருவையம் புழுக்கின்" (பொருந. 103).

**துராய்**[2] *turāy,* பெ. (n.) முத்து முதலியவற்றால் அமைக்கப்பட்ட தலையணி வகை; an ornament for the head made of pearls, etc. "சொருக்கழகு முத்துத் துராயழகும்" (விறலிவிடு.) (செ.அக.).

**துராய்**[3] *turāy,* பெ. (n.) துரா[2] பார்க்க; see *turā* (செ.அக.).

**துராய்க்கட்டை** *turāy-k-kaṭṭai,* பெ. (n.) தராவெனு மாழையாலாய ஏனம்; a metallic vessel (செ.அக.).

*[துராய் + கட்டை]*

**துரால்** *turāl,* பெ. (n.) *1.* செத்தை (திவா.); rubbish of dry leaves, grass, etc. 'அலகாலே துராலை வாருதல் கொண்ட மதுரையில்' (கலித். 96, உரை). *2.* துயரம் (பிங்.); affliction, distress, sorrow.

**துரி**[1] *turi,* பெ. (n.) சுமை; burden, weight. "துரிபெறச் சரிபொழில்" (திருப்பு. 508).

**துரி**[2] *turi,* பெ. (n.) *1.* எழுதுகோல்; painter's brush. *2.* துரீ பார்க்க; see *turī* (செ.அக.).

**துரி**[3]**-தல்** *turi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தேடுதல்; to search after. "துரிய வல்லார்க்குத் துரிசில்லை" (திருமந். 2454).

**துரிசு** *turišu,* பெ. (n.) *1.* குற்றம்; fault, crime. 'தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும்' (தேவா. 549. 8). *2.* துக்கம்; affliction, sorrow, distress. *3.* குறும்பு; perversity. "தொண்டே யுணக்கா யொழிந்தேன் றுரிசின்றி" (திவ். திருவாய். 9, 8, 6). *4.* மயிற்றுத்தம் பார்க்க (பதார்த்த. 1115); blue vitriol.

**துரிசுக்குரு** *turišu-k-kuru,* பெ. (n.) வெடியுப்பு (சங்.அக.); ammonium chloride.

*[துரிசு + குரு]*

**துரிஞ்சன்** *turiñjaṉ,* பெ. (n.) கறையான்; termites, white ants (செ.அக.).

*[ஒருகா. திரிஞ்சான் → துரிஞ்சன்]*

**துரிஞ்சி**[1] *turiñji,* பெ. (n.) *1.* சீக்கிரி பார்க்க; see *šikkiri;* black sirissa. *2.* பேரெலுமிச்சை பார்க்க; see *pērelumiccai;* citrus lemon (செ.அக.).

**துரிஞ்சி**[2] *turiñji,* பெ. (n.) மரவகைகளுள் ஒன்று; a kind of tree. "மாட்டுக்கொட்டகை, குடிசை முதலிய அமைக்க இம்மரம் பயன்படும்" (பொ. வழ) (கட். தொ. வரி.).

**துரிஞ்சிநாரத்தை** *turiñji-nārattai,* பெ. (n.) துரிஞ்சி[2] பார்க்க; see *turiñji* (செ.அக.).

*[துரிஞ்சி + நாரத்தை]*

**துரிஞ்சிப்பீன்** *turiñji-p-pīṉ,* பெ. (n.) ஒரு முட்செடியின்மீது உறைந்திருக்கும் பனி இதனால் வயிற்றுக் கழிச்சல் ஏற்படும்; solidified dew on a variety of a thorny shrub (சா.அக.).

*[துரிஞ்சி + பீன்]*

**துரிஞ்சில்** *turiñjil,* பெ. (n.) *1.* துரிஞ்சில் பார்க்க; see *turiñcil.* *2.* சீக்கிரி (பிங்.) பார்க்க; *šikkiri;* black sirissa (செ.அக.).

*[துருஞ்சில் → துரிஞ்சில்]*

**துரியம்**[1] *turiyam,* பெ. (n.) *1.* பொதியெருது (சூடா.); pack-bullock. *2.* சுமக்கை (வின்.); bearing, carring.

**துரியம்**[2] *turiyam,* பெ. (n.) விரைவு; quickness. "இதென்ன துரியம்" (தெய்வச். விறலிவிடு. 243).

**துரியன்** *turiyaṉ,* பெ. (n.) *1.* மாசற்ற உயிர் (வேதா. சூ. 79); soul in the highest state. *2.* கடவுள் (சங்.அக.); God (செ.அக.).

**துரியோதனன்** *turiyōtaṉaṉ*, பெ. (n.) திரிதராட்டிரன் மக்களில் மூத்தவன்; the eldest of the sons of Tirudaraṭṭiraṉ. "துரியோதனன் படை கெடும்படி வென்ற அருச்சுனனை" (சீவக. 456, உரை.)

**துரீ** *turī*, பெ. (n.) பாவாற்றி (வின்.); brush or fibrous stick, useed to clean and separate the threads of the woof (செ.அக.).

**துரீயபாகம்** *turīyapākam*, பெ. (n.) காற்பங்கு (யாழ்.அக.); one-fourth (செ.அக.).

**துரீயம்** turīyam, பெ. (n.) துரியம்[1] (யாழ்.அக.) பார்க்க; see *turiyam*.

**துரீலெனல்** *turīleṉal*, பெ. (n.) எதிர்பாராது விரைந்து வருதற் குறிப்பு; expr. signifying suddenness. "துரீலென்று உள்ளே புகுந்தான்" (செ.அக.).

**துரு**[1] *turu*, பெ. (n.) மரம் (உரி.நி.); tree (செ.அக.).

**துரு**[2] *turu*, பெ. (n.) 1. இருப்புக் கறை; rust. "வல்லிரும்பிற் றுருத்தான் வந்தே பிறந்தென்ன" (குமரே. சத. 90). 2. களிம்பு (வின்.); verdigric. 3. குற்றம்; flaw. "துருவின் மாமணியாரம்" (கம்பரா. உலா. 43). 4. செம்மறியாடு; sheep. "ஆடு தலைத் துருவின்" (நற். 169).

**துரு**[3] *turu*, பெ. (n.) வேதம் முதலியன ஓதுஞ் சந்தவகை; recital of a vedic text etc., by a disciple following his preceptor's lead. "சாகையிலும் கற்பத்திலும் கணத்திலும் துருச்சொல்லி" (T.A.S. i, 8).

**துருக்கத்தலை** *turu-k-kattalai*, பெ. (n.) கருநிறமுள்ள கடல்மீன்வகை; sea fish, dark grey (செ.அக.).

[துரு + கற்றலை]



**துருக்கப்பல்** *turukka-p-pal*, பெ. (n.) ஒழுங்கில்லாது வெளி நீண்ட பல்; an extremely large tooth projecting beyond the lips (சா.அக.).

**துருக்கம்**[1] *turukkam*, பெ. (n.) 1. மான் மணத்தி (திவா.); musk. 2. மத (கத்தூரி) மான் (திவா.); musk deer. 3. குங்குமம் (திவா.) பார்க்க; see *kuṅgumam*; saffron. 4. குங்குமமரம் (பிங்.); arnotto.

**துருக்கம்**[2] *turukkam*, பெ. (n.) 1. செல்லுதற்குரிய இடம் (உரி.நி.); inaccessible 2. மலையரண்; mountain fortress, stronghold, fastness. "மாற்றுருக்க மிலாமையின்" (இரகு. மாலையி. 113). 3. குறிஞ்சி நிலம் (பிங்.); hilly tract. 4. காடு (பிங்.); forest, jungle. 5. ஒடுக்கமான வழி (யாழ்.அக.); narrow path. 6. மதில் (பிங்.); rampart.

**துருக்கம்**[3] *turukkam*, பெ. (n.) குந்துருக்கம் பார்க்க (மலை.); see *kunturukkam*; konkany resin.

[துரு → துருக்கம்]

**துருக்கல்** *turukkal*, பெ. (n.) 1. செம்புறைக்கல்; iron ston, laterite. "துருக்கலோ கொடுங்கருங்கலோ" (அருட்பா. vi. ஆற்றாமை, 3, 8). 2. இருப்புக் கிட்டம்; iron dross (யாழ்.அக.).

[துரு → துருக்கல்]

**துருக்கவேம்பு** *turukka-vēmbu*, பெ. (n.) மலைவேம்பு பார்க்க; mountain neem.

[துருக்கம் + வேம்பு]

**துருக்கற்றாழை** *turukkaṟṟāḻai*, பெ. (n.) கடற்கரை ஓரங்களில் விளையும் ஒரு வகைச் சிவப்புக் கற்றாழை; rusty coloured aloe. It is found grown in the sea coast. but it is common in the western coast (சா.அக.).

[துரு + கற்றாழை]

**துருசி** *turuši*, பெ. (n.) துருசு[1] பார்க்க; see *turucu* (செ. அக.).

**துருசிகுரு** *turuši-kuru*, பெ. (n.) வெடியுப்பு (யாழ்.அக.); sal-ammoniac.

**துருசு**[1] *turušu*, பெ. (n.) *1.* **மயிற்றுத்தம்;** blue vitriol. *2.* **மாசு** *(வின்.);* spot, dirt, blemish, stain, defect. *3.* **களிம்பு** *(யாழ்.அக.);* rust.

**துருசு**[2] *turušu*, பெ. (n.) *1.* **விரைவு;** haste, speed. *"துருசா வசப்படுத்தும்" (விறலிவிடு). 2.* **ஆர்வ மிகுதி;** earnestness.

**துருசுசெந்தூரம்** *turušu-šentūram* பெ. (n.) **துருசைக் கொண்டு செய்யும் செந்தூரம்;** calcined red oxide of verdigris *(சா.அக.).*

*[துருசு + செந்தூரம்]*

**துருசுச்செம்பு** *turušu-c-cembu*, பெ. (n.) **துருசினின்று எடுக்கும் செம்பு இது தூய்மையான செம்பு என்று கருதப்படும்;** copper derived from verdigris. It is said to be pure copper *(சா அக.).*

*[துருசு + செம்பு]*

**துருசுமெழுகு** *turušu-meḻugu* பெ. (n.) **அடி முடியோடு துருசையும் சேர்த்துச் செய்யும் ஒரு வகை மெழுகு;** a wax like preparation made with verdigris and the human skull as chief ingredients *(சா.அக.).*

**துருஞ்சில்** *turuñjil* பெ. (n.) **வவ்வால்** *(திவா.);* bat *(செ.அக.).*

**துருணன்** *turuṇaṉ*, பெ. (n.) **சிவன்** *(கலிங்கபு. 41, 8);* Šivaṉ *(செ.அக.).*

**துருணி** *turuṇi*, பெ. (n.) *1.* **தேள்;** scorpion *2.* **பெண்ணாமை** *(கழ. தமி. அக.).*

**துருத்தி**[1] *turutti*, பெ. (n.) *1.* **ஆற்றிடைக்குறை;** ait, islet in a river. *"காடுங் காவும் கவின்பெறு துருத்தியும்" (திருமுரு. 223). 2.* **கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக்குறி;** a throw in the game of lice. *'துஞ்சலி னடமென்பர் துருத்தி யீதென்பர்' (கந்தபு. கயமுகனுற். 167) (செ அக.).*

*[துரு → துருத்தி]*

**துருத்தி**[2] *turutti*, பெ. (n.) *1.* **தோல்** *(பிங்.);* skin, leather. *2.* **உலையூதுகருவி;** bellows. *"கொல்லன் விசைத்துவாங்கு துருத்தியின்" (அகநா. 224). 3.* **தோற்பை;** leather bag or bottle for carrying water, leather bag. *"துருத்தியாங் குரம்பை தன்னில்" (தேவா. 953, 4). 4.* **நீர்வீசுங்கருவி;** a kind of leather squirt for sprinkling water. *"மேகமென் றுருத்திகொண்டு" (கம்பரா. மாரீச. 14). 5.* **முழுமையும் ஆட்டுத்தோலாலியன்ற காற்றுக் கருவி;** bass-pipe, made of the entire skin of a sheep or goat with two pipes, one to blow with the other to let out air. *6.* **ஒத்து;** a reed instrument. *7.* **வயிறு;** stomach *(செ.அக.).*

*[துருத்து → துருத்தி]*



**துருத்திக்கழுத்து** *turutti-k-kaḻuttu*, பெ. (n.) துருத்திக்குழாய் *(வின்.)* பார்க்க; see *turutti-k-kuḻay.*

*[துருத்தி[2] + கழுத்து]*

**துருத்திக்குழற்பண்ணை** *turutti-k-kuḻaṟ-paṇṇai*, பெ. (n.) துருத்திக்குழாய் *(வின்.)* பார்க்க; see *turutti-k-kuḻāy* *(செ.அக.)*

*[துருத்தி + குழல் + பண்ணை]*

**துருத்திக்குழாய்** *turutti-k-kuḻay*, பெ. (n.) **உலைமூக்கு** *(வின்.);* nozil of bellows.

*[துருத்தி + குழாய்]*

**துருத்திப்பாணம்** *turutti-p-pāṇam*, பெ. (n.) **தோற்பையிலிட்டுக் கொளுத்தும் ஒரு வகை வெடி** *(வின்.);* leather bag filled with gun powder, used as a rocket.

மறுவ. துருத்திவாணம்

*[துருத்தி + பாணம்]*

**துருத்திமூக்கு** *turutti-mūkku*, பெ. (n.) துருத்திக்குழாய் *(வின்.)* பார்க்க; see *turutti-k-kuḻay.*

*[துருத்தி + மூக்கு]*

**துருத்தியூது-தல்** *turutti-y-ūdu-*, செ.கு.வி. (v.i.) *1. உலையூதுகருவியாற் காற்று எழுப்புதல்;* to blow the bellows. *2. துருத்திவாச்சியம் ஊதுதல்;* to play on a bass pipe. *3. ஒத்துப் பாடுதல்;* to echo anothers words; to imitiate the words or opinion of a person obsequously.

*[துருத்தி + ஊது-.]*

**துருத்து[1]-தல்** *turuttu-*, 5 செ.கு.வி. (v.i.) வெளித் தோன்றுதல்; to bulge, protrude.

*[துரு → துருத்து-]*

**துருத்து[2]-தல்** *turuttu-*, செ.குன்றாவி. (v.t.) வெளித்தள்ளுதல்; to thrust out 'வயிறு துருத்திக் கொண்டிருக்கிறது'.

*[துரு → துருத்து-.]*

**துருத்தூரம்** *turuttūram*, பெ. (n.) ஊமத்தை (மலை.); datura.

**துருதிவாதி** *turudivādi*, பெ. (n.) திம்பாலை யென்னும் மரம் (சங்.அக.); a tree.

**துருதுரு-த்தல்** *turuturu-*, 11 செ.கு.வி. (v.i.) *1. அமைதியின்றி இருத்தல்;* to be fidgetty, restless; to make idle motions or gestures. "அவன் மிகவும் துருதுருத்தவன்" *2. துடித்தல்;* to quiver, as the lips or tongue through desire to speak. *3. பரபரப்பு;* to be in great haste.

*[ஒருகா. துருதுரெனல் → துருதுரு-.]*

**துருதுருக்கைத்தனம்** *turuturukkai-t-taṉam*, பெ. (n.) குறும்புத்தனம்; mischieviousness, rebellious conduct. "துருதுருக்கைத்தனம் அடித்துத் திரிந்த நீ" (ஈடு. 1, 3, 1).

*[துருதுரு → துருதுருக்கைத்தனம்]*

**துருதுருப்பு** *turuturuppu*, பெ. (n.) *1. அமைவின்மை;* restlessness, impatience. *2. விரைவு;* haste. *3. சுறுசுறுப்பு;* active habit (செ.அக).

*[துருதுரு → துருதுருப்பு]*

**துருதுருப்பை** *turuturuppai*, பெ. (n.) அமைதி யற்றவன்; a fidgetly or restless person (செ.அக).

*[துருதுரு → துருதுருப்பை]*

**துருதுருபாவை** *turuturu-pāvai*, பெ. (n.) துந்துருபாவை; restless, fidgetty girl or woman (செ.அக).

*[துருதுரு → துருதுருபாவை]*

**துருதுரும்பை** *turuturumpai*, பெ. (n.) பிள்ளை விளையாட்டு வகை (யாழ்.அக.); a child's game.

*[துருதுரு → துருதுரும்பை]*

**துருதுருவெனல்** *turuturuveṉal*, பெ. (n.) துருதுரெனல் பார்க்க; see *turuturenal* (செ.அக).

**துருதுரெனல்** *turutureṉal*, பெ. (n.) அமைவின்மைக் குறிப்பு; expr. signifying restlessness, impatience, uneasiness, the state of being always in motion.

**துருதை** turutai, பெ. (n.) *1. தினவு;* itching. *2. ஆசைப்பாடு;* craving (செ.அக).

**துருந்து-தல்** turuntu-, 5 செ.குன்றாவி. (v.t.) *1. துளை பெரிதாக்குதல்;* to enlarge, as a hole or cavity. *2. ஆராய்தல்;* to explore, examine (செ.அக).

**துருநகம்** *turunagam*, பெ. (n.) *1. முள்; கூர்மை; நுண்மை;* sharpness (கழ.தமி.அக).

**துருநாமம்** *turunāmam*, பெ. (n.) மூலநோய்; piles. "துக்கர் துருநாமர்" (சிறுபஞ். 76) (செ. அக).

**துருப்பணம்** *turuppaṇam*, பெ. (n.) துரப்பணம் பார்க்க (வின்.); see *tura-p-paṇam* (செ.அக.).

**துருப்படாதஉலோகம்** *turu-p-paḍāda-ulōgam*, பெ. (n.) விலையுயர்ந்த, தூய மாழையைக் குறிக்கும் சொல், எளிதில் துருபபிடிக்காத மாழையையும் குறிக்கும்; noble metals (அறி. களஞ்.).

*[துரு + படாத + உலோகம்]*

**துருபாதி** *turupādi*, பெ. (n.) பாதம் வெளி திரும்பிய பெண்; female with feet turned outwards (சா.அக.).

**துருப்பிடி-த்தல்** *turu-p-piḍi-*, செ.கு.வி. (v.i.) இரும்பிற் கறை பற்றுதல்; to rust, gater rust. 'துருப்பிடியிருப்புத் துண்டுபோல்' (அருட்பா.

அவாவறுப்பு, 11) - செகுன்றாவி. (v.t.) குற்ற வடையாளம் கண்டுபிடித்தல்; to detect, trace, search (செ.அக.).

[துரு + பிடி-.]

**துருப்பிணைப்பு** *turu-p-piṇaippu,* பெ. (n.) கசிவைத் தடுப்பதற்கு அல்லது மிகுதியான அழுத்தத்தைத் தாங்குவதற்கு ஒரு வளி கரணியைப் பயன்படுத்திச் செய்யப்படும் பிணைப்பு; rust joint (அறி.களஞ்.).

[துரு + பிணைப்பு]

**துருப்புக்கூடு** *turuppu-k-kūḍu,* பெ. (n.) தூற்றாப்பொலி; unwinnowed heap of grain. "துருப்புக்கூடாக அவ்வூரையன்றோ இவளு கந்தது" (ஈடு. 6, 5, 1).

[துருப்பு + கூடு]

**துருபவருணி** *turupavaruṇi,* பெ. (n.) காட்டாமணக்கு (மலை.); common physic nut (செ.அக.).

**துரும்பன்** *turumbaṉ,* பெ. (n.) 1. கீழோன்; man of the lowest caste. 2. கீழோனுக்கு வெளுக்கும் வண்ணான் (யாழ்.அக.); washerman of the low castes. 3. பயனிலி (தாயு. சுகவாரி. 7). 'துரும்பனே னென்னினும்' (செ.அக.).

[துரும்பு → துரும்பன்]

**துரும்பாட்டம்** *turumbaṭṭam,* பெ. (n.) கீச்சுக்கீச்சுத் தாம்பாளம் (வின்.); a children's game (செ.அக.).

[துரும்பு + ஆட்டம்]

**துரும்பாய்ப்போ-தல்** *turumbāi-p-pō-,* பெ. (n.) இளைத்துப்போதல்; emociated as in disease (சா.அக.).

**துரும்பு** *turumbu,* பெ. (n.) 1. கூளம்; bits of straw. 2. சக்கை; refuse stalles, as of sugar-cane. 'துரும்பெழுந்து வேங்கால்' (நாலடி. 35). 3. சிராக; splinder. 4. கண்ணுக்கு மையிடுங் கருவி; brush for paining eyes. 'கண்ணுக்கிட ஒரு துரும்பில்லாதபடி அழிந்து' (ஈடு. 5, 6, 1). 5. ஒரு வகுப்பு (1); a caste.

[துரு → துரும்பு]

**துரும்புகொடு-த்தல்** *turumbu-koḍu-,* செகுவி. (v.i.) விலக்கி விடுதற் குறிப்பாகத் துரும்பை மனைவியிடம் கொடுத்தல் (வின்.); to give a straw to a wife in token of divorce.

[துரும்பு + கொடு]

**துரும்புடன்** *turumbuḍaṉ,* பெ. (n.) தூற்றாப் பொலி; heap of grain which has not been winnowed (செ.அக.).

[துரும்பு + உடன்]

**துரும்புமுறித்துப்போடு-தல்** *turumbu-murittu-p-pōḍu-,* செகுவி. (v.i.) 1. தடை உண்டாக்குதல்; to create obstructions or obstacles. 2. பகை உண்டாக்குதல்; to sow seeds of discord, as between friends.

[துரும்பு + முறித்து + போடு-.]

**துரும்புவாங்கு-தல்** *turumbu-vāṅgu-,* செகுவி. (v.i.) விலகவுடம்படுதற் குறிப்பாக மனைவி துரும்பைப் பெற்றுக் கொள்ளுதல் (வின்.); to take a straw, as a wife consenting to be divorced.

[துரும்பு + வாங்கு-.]

**துரும்பொன்** *turumboṉ,* பெ. (n.) இரும்பு; iron (சா.அக.).

**துருமசிரோட்டம்** *turuma-sirōṭṭam,* பெ. (n.) பனை (மலை.); palmyra palm.

**துருமநகம்** *turumanagam,* பெ. (n.) முள் (சங்.அக.); thorn.

**துருமம்**[1] *turumam,* பெ. (n.) 1. மரம் (பிங்.); tree. 2. சாப்பிரா (மலை.); arnotto. 3. கற்பகத்தரு (யாழ். அக.); celestial tree.

**துருமம்**[2] *turumam,* பெ. (n.) பூண்டின் கடைப் பெயர்; plants second term as

1. கபித்துருமம்; அரத்தை; Alipinia galanga.
2. பூதத்துருமம்; பெரிய நறுவிலி; large sebeston.
3. வச்சிரத்துருமம்; திருகுக்கள்ளி; twisted purge.
4. போதித்துருமம்; அரசமரம்; peepal tree.
5. மாதத்துருமம்; மாங்காய்; mango tree.
6. இமத்துருமம்; மலை வேம்பு; hill neem.

7. அப்பிரியத்துருமம்; வறட்பூவா; white poolah.
(சா. அக.).

**துருமம்**[3] *turumam,* பெ. (n.) மனக்கலக்கம் (திவா); perturbation, perplexity of mind.

**துருமரம்** *turumaram,* பெ. (n.) துருமநகம் (யாழ்.அக.) பார்க்க; see *turuma-nagam*

**துருமவருணி** *turuma-varuṇi,* பெ. (n.) காட்டாமணக்கு (மூ.அ.); common physic nut.

**துருமாரி** *turumāri,* பெ. (n.) பானை (யாழ்.அக.); elephant.

**துருவகம்** *turuvagam,* பெ. (n.) குற்றி (யாழ்.அக.); stump.

**துருவங்கட்டு-தல்** *turuvaṅgaṭṭu-,* செ.குவி. (v.i.) 1. கணக்கு நெறிமுறை உண்டாக்குதல்; a rule for any mathematical calculation. 2. உதவி தேடுதல்; to devise means or expedients.

*[துருவம் + கட்டு-]*

**துருவசக்கரம்**[1] *turuva-cakkaram,* பெ. (n.) இரவு பகல்களை உண்டாக்குவதாகக் கருதப்படும் வானச் சக்கரம்; the wheel of Dhruva, turning the heavens and causing the motions. "மேருவின் புறஞ்சூழ்ந்தாடுந் துருவ சக்கரம்போல்" (திருவிளை. திருமணப். 161).

*[துருவம் + சக்கரம்]*

**துருவசக்கரம்**[2] *turuva-cakkaram,* பெ. (n.) உலகின் குளிர்ச்சி மண்டலங்களை வரையறுக்கும் சுற்று (ரேகை) வரிகை; polar circles. (M.Navi. 57)

*[துருவம் + சக்கரம்]*

**துருவதாளம்** *turuva-tāḷam,* பெ. (n.) 1. ஒன்பது தாளத்துளொன்று (திவா.); a variety of time measure. 2. சத்தத் தாளத்தொன்று (பரத.தாள. 18); a variety of time-measure represented thus 180, one of catta-tāḷam.

*[துருவம் + தாளம்]*

**துருவபதம்** *turupatam,* பெ. (n.) 1. துருவ மண்டலம்; region of the pole star, as attained by Duruva. "சந்திரசூரியர் முதலோர் பதங்கறுக்குத் துருவபதம்" (குற்றா. தல. திருக்குற்றா. 25). 2. 33 விரலவளவு கொண்ட குழி; a pit 34 in. deep. "துருவ பதமாகிய குழியை எட்டிற் கழிக்க" (சாவா. கிற். 21).

**துருவம்**[1] *turuvam,* பெ. (n.) 1. அசையா நிலை; Immutability, steadiness, firmness. 2. உறுதி (யாழ்.அக.); certainity. 3. துருவ விண்மீன்; the pole of any great circle of the sphere. 4. அழியாத்தன்மை (யாழ்.அக.); eternity. 5. ஊழ்; fate. "பருவரல் வந்தது துருவம்" (ஞானா. 31, 3). 6. ஒடுக்கவழி; narrow path. 7. 34 விரல அளவுள்ள குழி; a pit 34 in. deep. 8. ஒப்பு; resemblance. "வலம்புரித் துருவங் கொண்ட சங்கு" (சீவக. 811).

**துருவம்**[2] *turuvam,* பி.பெ. (n.prob.) மலைக் கோட்டை (வின்.); hill, fortress.

**துருவமுனைப்பு** turuvā-muṉaippu, பெ. (n.) நிலவுலக முனைக்கோடிகளை நோக்கி முனைத்து நிற்கும் காந்தக்கல், காந்த ஊசி முதலியவற்றின் இயல்பு, மின்னூட்டு முனைக்கோடி இயல்பு (மின்.); polarity.

*[துருவம் + முனைப்பு]*

**துருவயம்** *turuvayam,* பெ. (n.) அளவு; measurement (கழ. தமி. அக.).

**துருவல்** *turuval,* பெ. (n.) 1. தேடுகை; searching. 2. தேங்காய் முதலியவற்றின் துருவுத் திரள்; scrapings, as of coconut-pulp. "நாளி கோப்பழச் செழுந்துருவல்" (திருவாத. பு. திருப்பெருந். 51). 3. துருவலகு பார்க்க; see *turuvalaku.* 4. கடைகை (பிங்.); churning. 5. துளைக்கை; boring, drilling.

*[துருவு → துருவல்]*

**துருவல்மனை** *turuval-maṉai,* பெ. (n.) துருவலகு பார்க்க; see *turuvalagu.*

*[துருவல் + மனை]*

**துருவலகு** *turuvalaku,* பெ. (n.) தேங்காய் துருவுங் கருவி; coconut-scraper consisting of a curved iron-piece set in a block of wood.

*[துருவு + அலகு → துருவலகு]*

**துருவலகுக்குற்றி** *turuvalaku-k-kuṟṟi,* பெ. (n.) துருவலகு பார்க்க;. see *turuvalaku* (நெல்லை).

*[துருவு + அலகு + குற்றி]*

**துருவற்கறி** *turuvaṟkaṟi,* பெ. (n.) காய்கறிகளைத் துருவிச் சமைத்த கறி; curry made of scraped vegetables (செ. அக.).

*[துருவல் + கறி]*

**துருவாட்டி** *turuvāṭṭi,* பெ. (n.) ஏலம் (மலை.); true cardamom.

**துருவாடு** *turuvāḍu,* பெ. (n.) செம்மறியாடு (திவா.); a kind of fleecy sheep.

*[துரு → துருவாடு]*

**துருவாதி** *turuvāḍi,* பெ. (n.) காட்டாமணக்கு (மலை.); common physic nut.

**துருவு-தல்** *turuvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தேடுதல்; to seek, enquire into, search out, trace, pursue. "கீழ்நீர் குளித்தானைத் தீத்துரீஇ யற்று" (குறள். 929). 2. தொளைத்தல்; to bore, drill, perforate. 3. தேங்காய் முதலியன கடைந்து சீவுதல்; to scrape, as the pulp of a coconut. 4. கடைதல் (பிங்.); to churn. 5. துன்புறுத்துதல்; to harass.

தெ. துருமு; க. துருவு

*[துள் → துருவு-.]*

**துருவு²** *turuvu,* பெ. (n.) 1. தேடுகை (சூடா.); earching. 2. துருவுகை; scooping. 3. துளை (வின்.); hole.

க. துருவு

**துருவுகோல்** *turuvu-kōl,* பெ. (n.) தேங்காய் முதலியன துருவுங் கருவி; scraping instrument.

*[துருவு + கோல்]*



**துருவுபலகை** *turuvu-palagai,* பெ. (n.) துருவலகு பார்க்க (வின்.); see *turuvalagu.*

தெ. துரும்பலக

*[துருவு + பலகை]*

**துருவை** *turuvai,* பெ. (n.) 1. செம்மறியாடு; a kind of fleecy sheep. "தகர்விரவு துருவை" (பலைபடு. 414). 2. ஆடு (திவா.); sheep.

**துருளக்கம்** *turuḷakkam,* பெ. (n.) 1. குந்துருக்கம் (மூ. அ.); Indian gum anime. 2. நறும்புகை (வின்.); frank incense.

**துரேணிகை** *turēṇikai,* பெ. (n.) ஆவிரை (மலை.); tanner's senna.

**துரை¹** *turai,* பெ. (n.) 1. தலைவன்; chief, lord; master, ruler; gentle man, nobleman. 2. ஐரோப்பியன்; European. 'துரைகளோட சொக்கட்டான் போட்டால் தோற்றாலும் குட்டு, வென்றாலும் குட்டு' (பழ.).

தெ. தொர; க. தொரெ

*[துர → துரை (மு. தா. 59)]*

**துரை²** *turai,* பெ. (n.) 1. விரைவு; quickness, speed, haste. "பிறவித் துரைதுடைத்து" (சடகோபரந். 47). 2. மிகுதிப்பாடு; abundance, plenty, increase. "துரைமாண்டவா பாடித் தோணோக்க மாடாமோ" (திருவாச. 15, 14). (சிசி. 2, 32, சிவஞா.).

**துரைச்சி** *turaicci,* பெ. (n.) மாழை நிமிளை (மூ.அ.); a kind of bismuth (செ. அக.).

**துரைப்பெண்** *turai-p-peṇ,* பெ. (n.) பெருமாட்டி; lady, noble woman. "தொழுது மதன் போற்றும் துரைப் பெண்" (அழகிய நம்பியுலா, 136).

*[துரை + பெண்]*

**துரைபூபதி** *turaipūpati,* பெ. (n.) மாணிக்கம்; a valuable ruby (சா. அக.).

*[துரை + பூபதி]*

**துரைமகள்** *durai-makaḷ,* பெ.(n.) தலைவி; miolress; lady, queen. "மதுரைத் துரைமகள்" (குமர. பிர. மீனா. பிள்ளை. 27).

*[துரை + மகள்]*

**துரைமகன்** *durai-makaṉ,* பெ. (n.) துரை[1] பார்க்க; see *turai.*

*[துரை + மகன்]*

**துரைவாழை** *duraivalai,* பெ. (n.) ஒரு வகை வாழை; dacca banana (சா. அக.)

**துரோட்டி** *turōṭṭi,* பிபெ. (n.prob) 1. அங்குசம் (W); elephant's hook. 2. துறட்டுக்கோல் (யாழ். அக.); garderierls crook.

**துல்லம்** *tullam,* பெ.(n.) பேரொலி (சது.); Din, roar, great noise. (செ. அக.)

**துல்லியக்கடைசல்இயந்திரம்** *tulliyak kadaisal eyantiram,* பெ. (n.) துல்லியமான கடைசல் வேலைப் பாடுகளைச் செய்வதற்கேற்ற சிறிய மேசைக் கடைசல் இயந்திரம்; (எந்.) precesion lathe.

*[துல்லியம் + கடைசல் + இயந்திரம்]*

**துல்லியசாணை** *tulliya-caṉai,* பெ. (n.) இயந்திரக் கூறுகளின் நுண்ணிடை வேறு பாட்டளவு மிகவும் நெருக்கமாக இருக்கக் கூடிய இயந்திரச் சாணை; precesion grinding. (அறி. களஞ்).

*[துல்லியம் + சாணை]*

**துல்லியபானம்** *tulliya-paṇam,* பெ. (n.) பலர் ஒன்று சேர்ந்துக் குடித்தல்; drinking all together. (சா. அக.).

**துல்லியம்** *tulliyam,* பெ. (n.) 1. ஒப்பு; similitude, resemblance, equality. "அவனுக்கு இவன் துல்லியம்" (தத்துவப். அளவை. 3, உரை). 2. மிகச் சரியானது; accuracy, exactness. துல்லியமாய்ச் சொன்னான். 3. ஒப்பக் கையெழுத்து; sign-manual. "அரசரின் துல்லியஞ் சார்த்தின தீட்டு" (நாஞ்.).

*[துல் → துல்லியம் (வே. க. 251)]*

**துல்லிமை** *tullimai,* பெ. (n.) மேன்மை; superiority (சா. அக.).

**துலக்கம்** *tulakkam,* பெ. (n.) 1. வெளிச்சம்; lustre, brightness, splender. "துலக்க மெய்தினன் றோமில் களிப்பினே" (கம்பரா. இராவணன் களங். 1). 2. மெருகு (W.); polish, finish, gloss. 3. தெளிவு; clearness, limpidness, transparency, neatness. 'துலக்கமான எழுத்து" (W.).

*[துலக்கு → துலக்கம் (வே.க. 290).]*

**துலக்கினி** *tulakkiṉi,* பெ. (n.) பிண்டவுப்பு செயநீர்; an alkaline fluid prepared from the salt extracted from a foetus by a secret process. (சா. அக.).

**துலக்கு[1]-தல்** *tulakku-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. மெருகிடுதல்; to polish, burnish. 2. ஒளிரச் செய்தல்; to cause, to shine, to illumine, enlighten. 3. தூய்மை பண்ணுதல்; to clean, cleans. "கண்ணாடியை அடிக்கடி துலக்கினாற் பழுதன்றே" (கைவல். சந். 48). 4. வெளிப்படை யாக்குதல்; to explain; to clear up a thing; to expose, reveal. கமுக்கத்தைத் துலக்கிச் சொன்னான். 5. தீட்டுதல் (பிங்.); to whet, sharpen. 'துலக்காத ஆயுதம் துருப்பிடிக்கும்' (பழ.).

தெ. தொலகு

*[துல் → துலங்கு → துலக்கு (வே.க. 161).]*

**துலக்கு[2]** *tulakku,* பெ. (n.) மினுக்கு (W.); lustre, polish, gloss.

*[துலங்கு → துலக்கு (வே.க. 290).]*

**துலங்கு[1]-தல்** *tulaṅgu-,* 5 செ.குவி. (v.i.) 1. ஒளிரச் செய்தல் (சூடா.); to shine, glitter, to be bright. 2. ஒப்பமிடப்படுதல்; to be polished, burnished, furbished. 3. தெரியவருதல்; to be illustrious, conspicuous. 4. தெளிவாதல்; to be clear, perspicuous. 'கலங்கிய வமுதம்" (கல்லா. 5). 5. சிறத்தல் (W.); to be excellent, splendid.

தெ. துலக்கின்சு; க. தொலகு

*[துலங்கு → துலங்கு-, (வே.க. 290).]*

**துலங்கு[2]-தல்** *tulaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தொங்கியசைதல்; to hang, swing. "துலங்குமான் மேலூர்தி" (கலித். 13). 2. கலங்குதல்; to be agitated, disturbed. "துலங்குகின்றே னடியேன்" (திருவாச. 6, 28).

*[துல் → துலங்கு-.]*

**துலங்கு[3]-தல்** *tulaṅgu-,* செ.குவி. (v.i.) நிலை கெடுதல்; to be uprooted. "துலங்கவில் போகமூட்டி" (தணிகைப்பு. நாட்டுப். 2).

*[துளங்கு → துலங்கு-.]*

**துலங்கு**[4] *tulaṅgu,* பெ. (n.) தொழுமரம் (J); stocks.

*[துல் → துலங்கு]*

**துலத்தாது** *tulattātu,* பெ. (n.) நிலப்பனை (சங். அக.); a plant common in sandy tracts.

**துலம்**[1] *tulam,* பெ. (n.) 1. நீர்முள்ளி; a herb growing in most places 2. கோரை; a kind of sedge.

*[துல் → துலம் (வே. க. 251).]*

**துலம்**[2] *tulam,* பெ. (n.) 1. கனம் (யாழ். அக.); heaviness 2. துலாநிறை (சது.); weight of a scale 3. நிறைகோல் (யாழ். அக.); balance.

**துலம்**[3] *tulam,* பெ. (n.) துலவம் பார்க்க (சங். அக.); see *tulavam.*

**துலவம்** *tulavam,* பெ. (n.) பருத்தி (சது.); common cotton.

**துலா** *tulā,* பெ. (n.) 1. நிறைகோல்; balance, steel-yard. 2. ஏற்றமரம் (வின்.); well-sweep, picotah. 3. வண்டியின் ஏர்க்கால் (வின்.); single shaft of a cart or carriage. 4. துலாக்கட்டை, 1 பார்க்க; see *tulākkaṭṭai.* 5. துலாம், 6 பார்க்க; see tulām. "துலாஞ் செயிரறப் போதிகை கிடத்தி" (கம்பரா. நகரப். 29). 6. துலாவோரை (சூடா.); libra in the Zodiac.

*[துல் → துலா (வே. க. 251).]*

**துலாக்கட்டை** tulā-k-kattai, பெ.(n.) 1. திராவி; joist in a terraced house. 2. வண்டியச்சுக் கட்டை; cross-beam of a cart containing the axle.

*[துலா + கட்டை]*

**துலாக்கடைக்கூரை** *tulā-k-kaḍai-k-kūrai,* பெ. (n.) முக்கோண வடிவமான மரம் வைத்து இடப்பட்ட கூரை (கட்டட நாமா.); truss roof.

*[துலா + கடை+ கூரை]*

**துலாக்கூலி** *tulā-k-kūli,* பெ.(n.) வரி வகை (T.A.S. ii, 82.); a kind of tax.

**துலாக்கொடி** *tulā-k-koḍi,* பெ. (n.) ஏற்றம் இழுக்கும் கயிறு அல்லது கழை (J); rope or pole attached to a well-sweep.

*[துலா + கொடி]*

**துலாக்கோல்** *tulā-k-kōl,* பெ.(n.) நிறைகோல்; balance, steelyard. 'துலாக்கோல் வியல்பே தூக்குங் காலை" (தொல். எழுத். சிறப்புப்பா. உரை).

*[துலா + கோல்]*

**துலாக்கோடி** *tulā-k-kōḍi,* பெ. (n.) 1. நிறைவகை; a weight. 2. பத்துக்கோடி; ten crores. 3. மகளிர் காலணிவகை; a foot-ornament of women.

*[துலா + கோடி]*

**துலாத்தடம்** *tulā-t-taḍam,* பெ.(n.) 1. தராசுத் தட்டு; scale pan. 2. தோணித் துடுப்பு; Oar.

**துலாதரன்** *tulātaraṉ,* பெ. (n.) கதிரவன் (யாழ். அக.); sun.

**துலாதாரம்** *tulātāram,* பெ. (n.) 1. துலாக்கோல் பார்க்க; see *tulā-k-kōl.* 2. தராசுக் கயிறு; strings attaching scale-pans to the beam of a balance. (செ. அக.).

*[துலா + தாரம்]*

**துலாந்து** *tulāntu,* பெ.(n.) 1. துலாக்கட்டை (W.); cross beam 2. வீட்டிற் சாமான் வைக்க உதவும் ஒருவகைப் பரண் (J); bracket frame stuck to a wall for keeping things on. (செ. அக.)

*[துலா → துலாந்து (வ.மொ.வ. 180).]*

**துலாப்பட்டை** *tulā-p-paṭṭai,* பெ. (n.) பிளக்கப் பட்ட பனையின் அடிப்பகுதி; butt end of a split palmyra.

*[துலா + பட்டை]*

**துலாப்படி** *tulā-p-paḍi,* பெ. (n.) 1. துலாக்கோல்; steelyard. 2. தராசுப் படிக்கல்; large weight for a balance (செ. அக.).

ம. துலாப்படி

*[துலா + படி]*

**துலாபி** *tulābi,* பெ. (n.) ஓர் மீன்; a kind of fish (மீன். பி. தொ.பெ. அக.).

**துலாம்** *tulām,* பெ. (n.) 1. நிறைகோல்; balance, steelyard, scales. "நாஞ்சிலுந் துலாமு மேந்திய கையினன்" (சிலப். 22, 66). 2. துலாராசி (பிங்.); libra in the zodiac. 3. துலைத் திங்கள்; the

seventh month. *4. உத்தரக்கட்டை;* main beam in the roof of a house. *"செந்தினி மணித் துலாஞ் செறிந்த திண்சுவர்" (கம்பரா. நகரப். 30).* *5. துலாக் கட்டை;* joist. *6. தூண் மேலுள்ள போதிகையின் கீழ் வாழைப்பூ வடிவிலமைந்த ஒப்பனையுறுப்பு (பெருங். உஞ்சைக். 37, 102, உரை);* ornamental portion in the capital of a pillar, shaped like plantain flower. *7. ஏற்றமரம்;* well-sweep, picotah. *8. ஏறத்தாழ 100 பலம் எடையுள்ள ஒரு நிறை;* bazar weight = 1 bullock load = 100 palams, varying in different localities. *9. இருநூறு பலமுள்ள நிறை (நான். பால. 145);* a measure of weight = 200 palams. *10. 5 வீசை கொண்ட நிறை (வேதா. சூ. 3, உரை);* a measure of weight = 5 viss.

*[துலா → துலாம்]*

**துலாம்பரம்** *tulāmbaram,* பெ. (n.) *1. துலக்கம்;* clearness; brightness, as of a lamp, gem, etc. *துலாம்பரமாகத் தெரிகிறது.* *2. வெளிப்படையாக;* publicity. *துலாம்பரமான செயல்.*

*[துலா + அம்பரம்]*

**துலாமரம்** *tulā-maram,* பெ. (n.) *ஏற்றமரம்;* well-sweep, picotah *(செ. அக.)*

*[துலா + மரம்]*

**துலான்** *tulāṉ,* பெ. (n.) *நிறைகோல்;* balance.

*[துலாம் → துலான் (வ.மொ.வ. 180).]*

**துலி** *tuli,* பெ. (n.) *பெண்ணாமை (சங். அக.);* female tortoise.

**துலிபலை** *tulipalai,* பெ. (n.) *துலினி (யாழ். அக.) பார்க்க;* see *tuliṉi.*

**துலியாசனம்** *tuliyācaṉam,* பெ. (n.) *செம் முருங்கை (மலை.);* red Indian laburnum.

**துலினி** *tuliṉi,* பெ. (n.) *இலவு (சங்.அக.);* silk-cotton tree.

**துலுக்கன்மொட்டை** *tulukkaṉ-moṭṭai,* பெ. (n.) *சதுரகிரி மலையின் நடுவில் இராம தேவர் வதிந்திருந்த பெருங்காடு;* the dense forest in the centre of saduragiri hill where yacob alias Rama devar was living *(சா. அக.).*

**துலுக்கு[1]-தல்** *tulukku-,* 5 செ.கு.வி. (v.i.) *1. குலுக்குதல்;* to make affected gestures, as in walking. *"சிக்கங் கரஞ்சேர்த்து வாளா துலுக்கு கின்றீர்" (பதினொ. ஆளு. திருவந். 66).* *2. செருக்கி நடத்தல் (W);* to affect a proud gait, carry oneself proudly.

**துலுக்கு[2]-தல்** *tulukku-,* செ.குன்றாவி. (v.t.) *அசைத்தல்;* to shake toss.

**துலுக்கு[3]** *tulukku,* பெ. (n.) *அசைக்க (W.);* shaking or other gesticulation, especially of the head or body.

**துலுக்குக்கற்றாழை** *tulukku-k-kaṟṟāḻai,* பெ. (n.) *மக்கிக் கற்றாழை;* scarlet flowered aloe *(சா. அக.)*

**துலுக்குச்செவ்வந்தி** *tulukku-c-cevanti,* பெ.(n.) *துருக்கித் தேசத்துச் சாமந்தி;* Turkish chamomile. *(சா. அக.).*

**துலுங்கு-தல்** *tuluṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *அசைதல்;* to shake, toss. *"இரண்டு பாடுந் துலுங்காப் புடைபெயரா" (திவ். பெரியாழ். 3, 6, 9).*

*[ஒருகா. துளங்கு → துலுங்கு-]*

**துலுசீட்டு** *tulu-cīṭṭu,* பெ. (n.) *1. நினைவுக் குறிப்புச் சீட்டு;* a chit containing any memorandum. *2. பயிரிடுங் குடிகள் பட்டா கிடைப்பதற்குமுன் பெற்றுக் கொள்ளும் சீட்டு;* memoranda given to ryots who take up lands for cultivation serving as voucher until a formal patta is granted *(செ.அக.).*

**துலை[1]-தல்** *tulai-,* 4 செ.கு.வி. (v. i.) *தொலை[1] பார்க்க;* to perish.

*[தொலை-தல் → துலை-தல்]*

**துலை[2]-த்தல்** *tulai-,* 11 செ.கு.வி. (v.i.) *தொலை[2] பார்க்க;* see *tolai.*

*[தொலை-த்தல் → துலை-த்தல்]*

**துலை[3]** *tulai,* பெ. (n.) *1. தொலைதூரம்;* distance. great distance. *2. தொலைதூரத்து நாடு;* distant region. *"வெகு துலைகள் சுற்றினு மமைந்தமடர் பான்றி வருமோ" (குமரேச. சத. 46).*

*[தொலை → துலை]*

**துலை**[4] *tulai,* பெ. (n.) 1. நிறைகோல்; steelyard "ஞான மாத்துலை" (ஞானா. 31, 11). 2. துலை யோரை; libra in the zodiac. "இடப மரிதுலை வான்கடகம்" (சிலப். 3, 123, உரை). 3. ஒரு வகைக் கொடை; a kind of donation. "மருவுந் துலையாத யாமே வருகொடை" (சேதுபு. அனுமகுண். 8). 4. 100 பலங்கொண்ட நிறை (தைலவ. தைல. 14); a measure of weight = 100 palams. 5. நிறை; weight. 6. ஒப்பு; resemblance; equality. "தோல்வி துலையல்லார் கண்ணுங் கொலில்" (குறள். 986). 7. ஏற்றமரம் (அக.நி.); well-sweep, picotah. 8. துலைக்கிடங்கு பார்க்க; see *tulai-k-kiḍaṅgu.* 4. மடைமுகம் (யாழ். அக.); flood - gate 10. தோட்டம் (அக. நி.); garden.

*[தொலை → துலை]*

**துலைக்கட்டு** *tulai-k-kaṭṭu,* பெ. (n.) துலைக் கிடங்கின்மேலுள்ள கட்டடம்; structure over tulai-k-kiḍaṅgu (செ. அக.)

**துலைக்கிடங்கு** *tulai-k-kiḍaṅgu,* பெ. (n.) கிணற்றிலிருந்து இறைத்த தண்ணீர் தங்கும் இடம் (வின்.); a wide plot of ground where water baled from a well is stored.

*[துலை + கிடங்கு]*

**துலைக்குழி** *tulai-k-kuḻi,* பெ. (n.) துலைப் பள்ளம் பார்க்க; see *tulai-paḷḷam.*

*[துலை + குழி]*

**துலைத்தாலம்** *tulai-t-tālam,* பெ. (n.) துலைநா பார்க்க; see *tulai-nā.* "துலைத்தால மன்ன தனிநிலை" (கம்பரா. மந்தரை. 19).

*[துலை + தாலம்]*

**துலைநா** *tulai-nā,* பெ. (n.) தராசு முள்; pointer in a balance. (செ. அக.)

*[துலை + நா]*

**துலைப்படு-த்தல்** *tulai-p-paḍu-,* செ.குன்றாவி. (v.t.) அகலவகற்றுதல்; to send away. "தலைப் படுவேன் றுலைப்படுப்பான் தருக்கேன்மினே" (தேவா. 718, 4).

*[துலை + படு-]*

**துலைப்பள்ளம்** *tulai-p-paḷḷam,* பெ.(n.) ஏற்றச் சாலிலிருந்து நீர்கொட்டும் பள்ளம்; a pit where the baled water is discharged from a bucket. (செ. அக.)

*[துலை + பள்ளம்]*

**துலைமாந்தம்** *tulai-māntam,* பெ. (n.) மாந்த வகை (பாலவா. 298); a kind of convulsive.

*[துலை + மாந்தம்]*

**துலைமுகம்** *tulai-mukam,* பெ. (n.) துலைக்கிடங்கு பார்க்க (யாழ். அக.), see *tulai-k-kiḍaṅgu.*

*[துலை + முகம்]*

**துலையேறு-தல்** *tulai-y-ēṟu-,* செ.கு.வி. (v.i.) துலைத் தட்டுக் கொடைச் சடங்கில் துலைத் தட்டிலேறுதல்; to mount the scale-pan to perform tulai-t-taṭṭu-caḍaṅgu. "இரவியை யரவு தீண்டிற் பொற்றுலை யேறல் நன்காம்" (கூர்மபு. தானமுறை. 20).

*[துலை + ஏறு-]*

**துலையோடு-தல்** *tulai-y-ōḍu-,* செ.கு.வி. (v.i.) தண்ணீரிறைப்பதற்குத் துலாமரத்திலேறி மிதித்தல்; to pass up and down the pocotah in baling water.

*[துலை + யோடு-]*

**துலைவாய்** *tulai-vāy,* பெ.(n.) துலைக்கிடங்கு (யாழ். அக.) பார்க்க; see *tulai-k-kiḍaṅgu.*

*[துலை + வாய்]*

**துலைவாய்க்குழி** *tulai-vāy-k-kuḻi,* பெ. (n.) துலைப்பள்ளம் பார்க்க; see *tulai-p-paḷḷam.*

*[துலைவாய் + குழி]*

**துவ்வல்** *tuvval,* செகுன்றாவி. (v.t.) உண்ணல்; taking meal or food. (சா. அக.)

**துவ்வாதவன்** *tuvvātavaṉ,* பெ. (n.) poverty - stricken, indegent person. "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கும்" (குறள். 42).

**துவ்வாமை** *tuvvāmay,* பெ. (n.) 1. நுகராமை; non-eating, non-enjoyment. "துவ்வாமை வந்தக்கடை" (கலித். 22). 2. வறுமை; poverty, indigence. "துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும்"

*(குறள். 94).* 3. வேண்டாமை *(அக. நி.);* absence of desire. 4. வெறுப்பு (W.); disgust, dislike.

*[துவ்வு + ஆ + மைம 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**துவ்வான்** *tuvvāṉ,* பெ.(n.) துவ்வாதவன் *(சிந்தாமணி நிகண்டு)* பார்க்க; see *tuvvātavaṉ.*

*[துவ்வு + ஆ + அன்]*

**துவ்வானம்** *tuvvāṉam,* பெ. (n.) துவானம் பார்க்க; see *tuvāṉam.*

*[துவ்வு + வானம்]*

**துவ்வு¹-தல்** *tuvvu-,* செ.கு.வி. (v.i.) நுகர்தல் *(திவா.);* to eat, enjoy. "துவ்வாநறவின் சாயினத்தானே" *(பதிற்றுப். 60, 12).*

**துவ்வு²-தல்** *tuvvu-,* செ.குன்றாவி. (v.t.) 1. வலியுறுதல்; to be strong. "ஆன்ற துணையிலன் றான்றுவ்வான்" *(குறள். 862).* 2. பற்றுக்கோடு; support.

*[து → துவ்வு-. (வே.க. 203)]*

**துவ்வு³** *tuvvu-,* பெ. (n.) 1. உணவு *(யாழ். அக.);* food. 2. ஐம்பொறி நுகர்ச்சி *(சூடா.);* gratification of the senses. 3. அனுபவம் *(யாழ். அக.);* enjoyment, experience.

*[து → துவ்வு (வே.க. 283)]*

**துவ்வு⁴** *tuvvu,* பெ. (n.) இழிவு *(சூடா.);* debasement, meanness.

**துவ்வுதல்** *tuvvutal,* பெ. (n.) பற்றுக்கோடு *(அக. நி.);* support.

*[து → துவ்வு → துவ்வுதல்]*

**துவ்வை** *tuvvai,* பெ. (n.) 1. பருகுதற்குரியது; liquid food. 2. இறைச்சி; flesh, meat. 3. பிண்ணாக்கு; oil-cake. *(செ. அக.)*

*[துவ்வு → துவ்வை (வே.க. 283)]*

**துவக்கம்** *tuvakkam,* பெ. (n.) தொடக்கம்; beginning, commencement. *(செ. அக.)*

*[துவக்கு → துவக்கம்]*

**துவக்கு¹-தல்** *tuvakku-,* 5 செ.குன்றாவி. (Sv.tr.) தொடங்குதல்; to begin, enter upon, commence.

*[துடக்கு → துவக்கு-.]*

**துவக்கு²-தல்** *tuvakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல்; to tie, binds. "பிறவியாற் றுவக்குணா 200" *(கம்பரா. பிரமாத்திர. 184).* 2. ஈர்த்தல்; to engross the senses or affections; to fascinate; to bring under one's influence. "நடையழகாலே அவரைத் துவக்கி" *(ஈடு. 1, 4, 3).*

**துவக்கு³-தல்** *tuvakku-,* செ.கு.வி. (v.i.) கட்டுண்ணுதல்; to be tied, entanged. "வள்ளியர் கொடிமொட்டுத் துவக்கிப் பன்னிருகன் விழித்து" *(கல்லா. 82, 10).*

*[துடக்கு → துவக்கு-.]*

**துவக்கு⁴** *tuvakku,* பெ. (n.) 1. கட்டு; tie. "தறியிற் றுவக்குறு சித்திவிநாயகன்" *(குமர . பிர. மீனாட். பிள்ளைத். 3).* 2. தொடரி *(திவா);* chain. 3. தொடர்பு; connection. "வினைத் துவக்குடை வீட்டருந் தளைநின்று மீள்வார்" *(கம்பரா. மீட்சிப். 102).* 4. பற்று *(அகநி.);* attachment, love 5. செடி கொடிகளின் பிணக்கு *(பிங்.);* entanglement, tangle.

*[துடக்கு → துவக்கு.]*

**துவக்கு⁵** *tuvakku,* பெ. (n.) 1. தோல் *(பிங்.);* skin. "துவக்குதிரம்" *(சிசி. 9, 4).* 2. உடல் *(அகநி.);* body. 3. தொடுபுலனுறுப்பு; sensory organ of touch. "நற்செவி துவக்குக் கண்ணா நாசியைந் தினையும்" *(சிசி. 2, 61).*

*[துவ → துவக்கு (மு.தா. 93).]*

**துவக்குநோய்** *tuvakku-nōy,* பெ. (n.) தோல் நோய்; skin disease. "தணியாத துவக்கு நோயன்" *(பாரத. திரௌபதி. 74).*

*[துவக்கு + நோய்]*

**துவக்கூசி** *tuva-k-kūsi,* பெ. (n.) தோல் தைக்கும் ஊசி *(யாழ்.அக.);* awl.

*[துவக்கு + ஊசி]*

**துவங்கு-தல்** *tuvaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தொடங்குதல்; to commence, begin, enter upon.

*[துடங்கு → துவங்கு-.]*

**துவங்கட்டு-தல்** tuvaṅ-kaṭṭu-, செ.கு.வி. (v.i.) 1. வெற்றி முதலியன குறிப்பதற்குக் கொடியேற்றுதல்; to hoist, a flag, erct a

banner, as a challenge or as a sign of victory. *2. முயன்று நிற்றல்;* to set about a thing with the utmost zeal and energy, especially in a bad cause.

*[துவசம் + கட்டு-.]*

**துவசமங்கையார்** *tuvaša-mangaiyār,* பெ. (n.) **கள் விற்கும் பெண்கள்;** woman selling toddy "துவசமங்கயர் பாற் கள்ளும்" *(குற்றா. தல. மந்தமா 4).*

*[துவசம் + மங்கையார்]*

**துவசர்** *tuvašar,* பெ. (n.) **கள்விற்போர்** *(பிங்.);* toddy - sellers, dealers in spirituos liquours. "துவசரில்லிற் சோனகர் மனையில்" *(கம்பரா. ஊர்தேடு. 112).*

*[துவசம் → துவசர்]*

**துவசல்** *tuvašal,* பெ. (n.) **தொடர்பு;** connetion. அவர் துவசல் தீர்த்துக் கொண்டார்.

*[ஒருகா. தோய்தல் → துவலல்]*

**துவட்சி** *tuvatci,* பெ. (n.) *1.* **ஒசிவு;** flexibility. தொந்தனைத் துவட்சி நீங்கான் *(குற்றா.தல. கவுற்சன. 26).* *2.* **வாடுகை;** fading *(பரிபா. 6,64, உரை).*

*[துவள் → துவட்சி]*

**துவட்டர்** *tuvattar,* பெ. (n.) **சிற்பியர்** *(சூடா.);* artificers, smiths.

**துவட்டல்** *tuvattal,* பெ. (n.) **துவட்டு** பார்க்க; loc.

*[துவட்டு → துவட்டல்]*

**துவட்டற்கறி** *tuvattar-kari,* பெ. (n.) **கறிவகை;** a kind of curry.

*[துவட்டல் + கறி]*

**துவட்டாநாள்** *tuvattā-nāl,* பெ. (n.) **சித்திரை** பார்க்க *(குற்றா.தல.வானவர். 19);* the 14th nakṣatra.

**துவட்டு¹-தல்** *tuvattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **நீரைத் துடைத்தல்;** to wipe off, moisture, as after bathing. *2.* **கறி முதலியன துவட்டுதல்;** to boil or stew with a little water, as curry, meat, etc., *3.* **கறிப்பண்டங்களைத் தொட்டுக் கொள்ளுதல்;** to taste in small quantities, as pickles for giving relish to food. "துவட்டிக் கொண்டு சாப்பிட்டு விடலாம் *(வின்.).* *4.* **கசக்குதல்;** to crush, bress hard; to over work.

**துவட்டு²** *tuvattu,* பெ. (n.) *1.* **துவட்டுகை;** wiping off moisture. *2.* **கறிவகை;** a kind of curry. "குய்கமழ் கருனையுந் துவட்டும்" *(விநாயகபு. 39, 37).*

**துவடர்** *tuvaḍar,* பெ. (n.) **பகைவர்;** enemies. "பாப மதித்துவட ராக்கோமோ" *(காளத். உலா, 332).*

**துவண்டை** *tuvaṇḍai,* பெ. (n.) **துவர் நிறந் தோய்த்த புடவை** *(யாழ்.அக.);* cloth dyed in ochre.

**துவணீர்** *tuvaṇīr,* பெ. (n.) **பிறந்த குழந்தையின் மேற்கசியும் தூய்மையற்ற நீர்;** filth, slimy matter about a new-born infant.

**துவத்தம்** *tuvattam,* செ.கு.வி. (v.i.) **வீழ்தல்; வீழ்ச்சி.**

**துவர்¹-தல்** *tuvar-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **வகிர்தல்** *(பிங்.);* to divide, part as the hair in the middle. *2.* **புலர்த்துதல்;** to dry, wipe off moisture. "கூந்தல் பிழிவனந் துவரி" *(குறிஞ்சிப். 60).* *3.* **பூசுதல்;** to smear.

**துவர்²-தல்** *tuvar-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* **உலர்தல்;** to become dry. "கண்ணும் வாயுந் துவர்ந்து" *(திவ்.திருவாய். 8:5,2).* *2.* **தெளிதல்;** to be clear, distinct. *3.* **பிரிதல்** *(யாழ்.அக.);* to be part, divided. *4.* **முதிர்தல்** *(இலக்.அக.);* to be mature. *5.* **முழுதுமாதல்;** to be complete, whole. "துப்புரவில்லார் துவரத் துறவாமை" *(குறள், 1050).*

**துவர்³-தல்** *tuvar,* 4 செ.கு.வி. (v.i.) **ஆடுதல்** *(அகநி.);* to be flexible.

**துவர்⁴** *tuvar,* பெ. (n.) *1.* **விறகு** *(பிங்.);* fire-wood, as dry. "ஆரழல் துவர்புதித் தியற்றுமின்" *(பிரமோத். 20, 51).* *2.* **சருகிலை;** dry leaves. "முடிமிசை யேற்றிய துவர்கண்டு" *(பதினொ. திருக்கண்ணப். மறநக். 72).*

*[தும் → துமர் → துவர் (மு.தா. 151)]*

**துவர்**[5] *tuvar,* பெ. (n.) *1.* **துவர்ப்பு;** astringency. "துவர் மருவப் புளிப்பேற்றி" *(தைலவ.தைல.).* *2.* **துவர்ப்புப் பொருள்;** astingent substances. *3.* **நாவல் அல்லது பூவந்தி, கடு, நெல்லி, தான்றி, ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு அல்லது கருங்காலி, மாந்தளிர் என்ற பத்துத் துவர்ப்பு மருந்துப் பொருள்;** medical astringents, numbering ten, viz., nāval or pūvanti, kaḍu, nelli, tāṉri, āl, aracu, atti, itti, mutta-k-kāsu or karuṅkāli, māntaḷir. "விரையொடு துவருஞ் சேர்த்தி" *(சீவக. 623) (சது.).* *4.* **பகை** *(அக.நி.);* enmity, hatred, hostility. *5.* **பாக்கு;** areca-nut. "வாசமணத் துவர் வாய்க் கொள்வோரும்" *(பரிபா. 12,22).* *6.* **துண்டு;** piece. "மஞ்சள் துவர்" *(நெல்லை.).* *7.* **கோது;** refuse. "சிக்காய்த் துவர்". *8.* **செருக்கு;** pride. 'அவனுக்குப் பணத்துவர் அதிகம்'.

**துவர்**[6] *tuvar,* பெ. (n.) *1.* **பவளம்** *(திவா.);* coral. *2.* **சிவப்பு;** red colour, scarlet. "துவரிதழ்ச் செவ்வாய்" *(சிலப். 6, 26).* *3.* **கல்லாடை;** red ochre. "துவருகின்ற வாடை யுடல் போர்த்து" *(தேவா. 608, 18).* *4.* **துவரை** பார்க்க; see *tuvarai.* "துவர்ங் கோடு" *(தொல். எழுத். 363, உரை).*

*[தும் → துமர் → துவர் (மொ.வ. 181)]*

**துவர்**[7]**-த்தல்** *tuvar-,* 11 செ.கு.வி. (v.i.) **துவர்ப்பாதல்;** to be astringent.

*[துவர் - துவர்த்தல்]*

**துவர்**[8]**-த்தல்** *tuvar-,* 11 செ.கு.வி. (v.i.) **சிவத்தல்;** to be red. "துவர்த்த செவ்வாய்" *(கம்பரா. நீர்விளை. 13).*

*[துவர் → துவர்த்தல் (வ.மொ.வ. 181)]*

**துவர்**[9]**-த்தல்** *tuvar,* 11 செ.குன்றாவி. (v.t.) **பூசுதல்** *(வின்.);* to smear.

*[துவர் → துவர்-.]*

**துவர்க்கட்டி** *tuvar-k-kaṭṭi,* பெ. (n.) **காசுக்கட்டி** பார்க்க; a compound of catechu and other spices.

மறுவ. காய்ச்சுக்கட்டி

*[துவர் + கட்டி]*

**துவர்க்கண்டல்** *tuvar-k-kaṇḍal,* பெ. (n.) *1.* **செந்தாழை** *(தைலவ.தைல);* red species of screw-pine. *2.* **பூக்கண்டல்;** caudel mangrove *(சா.அக.)*

*[துவர் + கண்டல்]*



**துவர்க்காம்பு** *tuvar-k-kāmbu,* பெ. (n.) **கத்தைக் காம்பு;** black catechu *(சா.அக.).*

**துவர்க்காய்** *tuvar-k-kāy,* பெ. (n.) **பாக்கு;** areca-nut as astringent. "துவர்க்காயொடு சுக்குதின்னும்" *(தேவா. 660, 10).*

*[துவர் + காய்]*

**துவர்ச்சிகை** *tuvar-c-cigai,* பெ. (n.) *1.* **கடுக்காய்ப் பிஞ்சு** *(மலை);* tender, immature gall-nuts. "தவாத துவர்ச் சிகை" *(பெருங். மகத. 17, 149).* *2.* **கூவைமா** *(சங்.அக.);* arrowroot flour.

*[துவர் + சிகை]*

**துவர்த்து-தல்** *tuvarttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **ஈரந்துவட்டுதல்;** to wipe oft moisture.

ம. துவர்த்துக

*[துவர் → துவர்த்து-.]*

**துவர்த்து**[2] *tuvarttu,* பெ. (n.) **துவர்த்துமுண்டு** பார்க்க; loc.

**துவர்த்துமுண்டு** *tuvarttu-muṇḍu,* பெ. (n.) **ஈரந்துவட்டுந் துண்டு;** towel, as removing moisture.

*[துவர்த்து + முண்டு]*

**துவர்நீர்**[1] *tuvar-nīr,* பெ. (n.) **துவர்ப்பு நீர்;** astringent lotion.

*[துவர் + நீர்]*

**துவர்ப்பசை** *tuvar-p-paśai,* பெ. (n.) *உட்பகை, மானம், மாயை பேராசை என்ற நான்கு;* the four sins, viz, of anger conceit, intrigue and greed. "*துவர்பசை நான்கிலாந்த*" *(மேருமந். 1150).*

*[துவர் + பசை]*

**துவர்ப்பிடி-த்தல்** *tuvar-p-piḍi,* செகுன்றாவி (v.t.) *தடுத்திடுமாறு ஆடையைப் பிடித்தல்;* to hold one by one's cloth and obstruct. "*பற்றயர்தம்மை ... துவர்ப்பிறத்து ... தடுத்துவா*" *(திருவாலவா. 41, 10).*

*[துவர் + பிடி-.]*

**துவர்ப்புமருந்து** *tuvarppu-maruntu,* பெ. (n.) *இரத்தப் பெருக்கை நிறுத்தும் துவர்ப்பான சரக்குகளைக் கொண்டு செய்யப்பட்ட மருந்து;* astringent preparation having the quality of stopping bledding or restraining heremorhage.

*[துவர்ப்பு + மருந்து]*

**துவர்ப்பூ** *tuvar-p-pū,* பெ. (n.) *வாடிச் சிவந்த பூ;* withered flower. "*தன்றலை தங்கிய துவர்ப்பூ வேற்றி*" *(பதினொ. திருக்கண். மறம். நக். 61) (தமிவ. 57).*

*[துவர் + பூ]*

**துவர்மண்** *tuvarmaṇ,* பெ. (n.) *1. உவர்மண்;* fuller's earth. *2. அடைமண்;* alluvial soil. *3. துவர்ப்புமண்;* astringent soil *(சா.அக.).*

*[துவர் + மண்]*

**துவர்வலியுறுத்தி** *tuvar-vali-y-uṟutti,* பெ. (n.) *துவர்ப்புள்ள மருந்து;* astringent tonic.

*[துவர் + வலியுறுத்தி]*

**துவர**[1] *tuvara,* பெ.அ. (adv.) *முழுதும்;* entirely. "*துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே*" *(தொல். எழுத். 310).* 2. *மிக;* exceedingly. "*துய்க்க துவரப் பசித்து*" *(குறள். 944).*

**துவரங்கறி** *tuvaraṅ-kaṟi,* பெ. (n.) *பருப்பு சேர்ந்த கறிவகை;* preparations of curry mixed with dholl *(சா.அக.).*

*[துவரை + கறி]*

**துவரங்காய்** *tuvaraṅ-gāy,* பெ. (n.) *1. துவரைச் செடியின் காய்;* green red gram. *2. மலைத் துவரங்காய்;* green pod of hill of dholl *(சா.அக.).*

**துவரஞ்செடிவண்டு** *tuvarañjeḍi-vaṇḍu,* பெ. (n.) *குருவண்டு;* a beetle of the dholl plant *(சா.அக.).*

*[துவரை + செடி + வண்டு]*

**துவரம்**[1] *tuvaram,* பெ. (n.) *துவட்டற்கறி பார்க்க;* see *tuvaṭṭaṟ-kaṟi.*

*[துவர் → துவரம் (மு.தா. 149)]*

**துவரம்**[2] *tuvaram,* பெ. (n.) *துவர்ப்பு (பிங்.)* astringency.

*[துவர் → துவரம்]*

**துவரம்பருப்பு** *tuvaram-paruppu,* பெ. (n.) *துவரையின் பருப்பு;* the tentil or pea of the plant leytisus, dholl *(சா.அக.).*

*[துவரம் + பருப்பு]*

"தண்ணக் குறிஞ்சித் தலத்தாடகிப் பிளப்பை
வண்ணச் சுடரற்குள் வைத்தாங்கி யுண்ணற்
சுடிக்கும் பகவினறு மாச்சியத் தொடுண்ணிற்
பிடிக்குப்பிடி சதையாம் பேசு" *(சா.அக.)*

**துவரமரம்** *tuvara-maram,* பெ. (n.) *கதம்பம்;* kāṭar, a species of roudelecia wort.

*[துவர் → துவர + மரம்]*

**துவரலா** *tuvaralā,* பெ. (n.) *நந்தியாவட்டம்;* indian rose bay *(சா.அக.).*

**துவரன்** *tuvaraṉ,* பெ. (n.) *துவரம் (நெல்லை) பார்க்க;* see *tuvaram.*

*[துவரம் → துவரன்]*

**துவரன்சம்பா** *tuvaraṉ-sambā,* பெ. (n.) *நெல் வகை (வின்.);* a kind of paddy.

*[துவரன் + சம்பா]*

**துவராடை** *tuvar-āḍai,* பெ. (n.) *கல்லாடை;* salmon coloured cloth. "*அந்துவ ராடைப் பொதுவனொடு*" *(கலித். 102, 35).*

*[துவர் + ஆடை]*

**துவராதினி** *tuvar-ādiṉi,* பெ. (n.) *பேராமுட்டி;* fragrant sticky mallow *(சா.அக.).*

**துவராபதி** *tuvarāpati*, பெ. (n.) துவாரகை பார்க்க; see *tuvāragai*. "துவராபதிக் கென்னை யுய்த் திடுமின்" (திவ். நாய்ச். 12, 9).

*[துவரை + பதி]*

**துவராவதி** *tuvarāvati*, பெ. (n.) துவாரகை பார்க்க; see *tuvāragai*.

**துவரி[1]-த்தல்** *tuvari-*, 11 செ.குன்றாவி. (v.t.) செந்நிற மூட்டுதல்; to die with salman colour. "துவர்த்த வுடையவர்க்கும்" (திவ்.பெரியதி. 5, 6, 8).

*[துவரி → துவரித்தல்]*

**துவரி[2]** *tuvari*, பெ. (n.) 1. வடிநீர்; decoction. 2. துவரை; red gram (சா.அக.).

**துவரிகம்** *tuvarigam*, பெ. (n.) துவரை; red green (சா.அக.).

**துவரிதழ்** *tuvari-idal*, பெ. (n.) யானை (அக.நி.); elephant.

*[துவர் + இதழ்]*

**துவருப்பு** *tuvaruppu*, பெ. (n.) பூ நீறுப்பு; salt extracted from efflorescent salt collected on the soil of fuller's earth (சா.அக.).

*[துவர் + உப்பு]*

**துவரெண்ணெய்** *tuvarenney*, பெ. (n.) துவர்ப்புச் சரக்குகளினின்று வடிக்கும் எண்ணெய்; a medicinal oil extracted from astringent drugs (சா.அக.).

*[துவர் + எண்ணெய்]*

**துவரை[1]** *tuvarai*, பெ. (n.) 1. துவரஞ்செடி (பதார்த்த. 834); pigeon-pea, dhall. 2. கருந் துவரை; toposi ebony of bengal. 3. காட்டத்தி; gaub.

*[துவர் → துவரை]*

**துவரை[2]** *tuvarai*, பெ. (n.) துவாரகை பார்க்க; see *tuvāragai*. "உவரா வீகைத் துவரை யாண்டு" (புறநா. 291).

**துவரைக்கோமான்** *tuvarai-k-kōmān*, பெ. (n.) இடைச் சங்கப் புலவருள் ஒருவர் (இறை. 1, பக். 3); a poet of the middle sangam.

*[துவரை + கோமான்]*

**துவரைச்சிவப்பிறுங்கு** *tuvarai-c-civa-p-pirungu*, பெ. (n.) சோள வகை (விவசா. 3); a kind of maize of great millet.

*[துவரை + சிவப்பு + இறுங்கு]*

**துவரைமல்லி** *tuvarai-malli*, பெ. (n.) வெள்ளைக்கல் வகை; tourmaline.

மறுவ. கொழும்பு வைரம்

*[துவரை + மல்லி]*

**துவல்[1]** *tuval*, பெ. (n.) பூசைக்குப் பயன்படுத்தும் பூ; flowers offered in worship. "அடியாரிருந் துவல் . . . பரப்புவாய்" (தேவா. 383, 2). "செருப்படியாவன விருப்புறு துவலே" (பதினொ. திருக்கண். மறம். 103).

*[தூவு → துவர்]*

**துவல்[2](லு)-தல்** *tuval-*, 3 செ.கு.வி. (v.i.) துளித்தல்; to drip, as water; to sprinkle; to drizzle.

*[துவள் → துளி]*

**துவல்[3](லு)-தல்** *tuval*, 3 செ.கு.வி (v.i.) நிறைதல் (வின்.); to be full, thick.

*[துவன்று → துவல்-.]*

**துவல்(லு)-தல்** *tuval*, 3 செ.கு.வி. (v.i.) சாதல் (வின்.); to die.

*[துவள் → துவல்(லு)தல்]*

**துவல்[5]** *tuval*, பி.பெ. (n.prob.) விரைவு (வின்.); haste, celerity, rapidity, diligence.

*[துன் → தும் → துமல் → துவல் (வே.க. 282)]*

**துவல்[6](லு)-தல்** *tuval*, 3 செ.கு.வி. (v.i.) விரைதல் (வின்.); to be quick, rapid, to move with celerity.

**துவலம்** *tuvalam*, பெ. (n.) 1. பவளம்; corel. 2. ஒரு செய்ந்நஞ்சு வகை; one of the 32 kinds of native arsenic.

*[துவர் → துவல் → துவலம்]*

**துவலை** *tuvalai*, பெ. (n.) கூட்டம்; crowd. "இருங்கழித் துவலை யொலியின்" (ஐங்குறு. 163, அரும்.)

*[துவல் → துவலை]*

**துவலை** *tuvalai*, பெ. (n.) நீர்த்திவலை; watery particile, drop, spray. "சிதுரலந் துவலை தூவலின்" *(அகநா. 24).* 2. மழைத்தூவல் *(பிங்.)*; drizzle. "வடந்தை துவலை தூவ" *(நற். 152).*

தெ. துவர

*[துவல்[1] → துவலை]*

**துவள்[1](ளு)-தல்** *tuvaḷ(ḷu)-*, 2 செ.கு.வி. (v.i.) 1. ஒசிதல் *(சூடா.)*; to be flexible, supple, as a tender tree. "பொலிவில துவள" *(கம்பரா. பூக்கொய். 11).* 2. தெளிதல் *(சங்.அக)*; to bend, shrink, twist warp, as boards in the sun. 3. வாடுதல்; to fade, wither, as plants under scorching sun. "கண்ணார் தழையுந் துவளத் தருவனவோ" *(திருக்கோ. 112).* 4. கசங்குதல்; to become rumpled, as a new cloth. "புதிய ஆடை துவண்டு விட்டது". 5. துடித்தல்; to quiver, tremble. "பெருநீரறச் சிறுமீன் றுவண்டாங்கு" *(திருவாச. 6, 26).* 6. வருந்துதல்; to be distressed. "சோறு கூறை யின்றியே துவண்டு" *(தேவா. 119, 3).* 7. ஒழிதல்; to disappear. "வெஞ்சுரஞ் சென்ற தெல்லாம் . . . பூவணை மேலணையாமுன் றுவளுற்றதே" *(திருக்கோ. 351).* 8. அடர்தல்; to be dense, close. "தாழை துவளும் தரங்கநீர்ச் சேர்ப்பிற்றே" *(திணைமாலை. 59).* 9. இறுகுதல்; to be thick in consistancy, as milk. "பாலைத் துவளக் காய்ச்சினான்". 10. ஒட்டுதல்; to be sticky; to adhere, as oil. 11. புணர்தல்; to unite sexually. "துடியிடையார் கணவரொடு துவளும் போது" *(அருணா. பு. திருக்கண். 14).* 12. மெல்லிதா யிருத்தல் *(சங்.அக.)*; to be thin.

*[துவள் → துவளு-.]*

**துவள்[2](ளு)-தல்** *tuvaḷ(ḷu)-*, செ.குன்றாவி. (v.t.) தொடுதல் *(பிங்.)*; to touch.

**துவள்[3]** *tuvaḷ*, பெ. (n.) துவட்சி பார்க்க; see *tuvaṭci*. "நனியுருவத் தென்னோ துவள்கண்டீ" *(பரிபா. 6, 64).* 2. குற்றம்; fault, defect. "துவளின் மாயணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம்" *(திவ். திருவாய். 6, 5, 1).*

**துவள்வு** *tuvaḷvu*, பெ. (n.) துவட்சி பார்க்க; see *tuvaṭci*. "தோலாக்கரி வென்றதற்குந் துவள்விற்கும்" *(திருக்கோ. 110).*

*[துவள் → துவள்வு]*

**துவளம்** *tuvaḷam*, பெ. (n.) கிணற்றின் கைப்பிடிசுவர்; parapet wall of a well.

ஒ.நோ. தோவாளம்

**துவளல்** *tuvaḷal*, பெ. (n.) வளைவு; bending.

*[துவள் → துவள்வு]*

**துவளவரைத்தல்** *tuvaḷa-varai-*, செ.கு.வி. (v.i.) நெகிழவரைத்தல்; grinding till it becomes pulpy or pasty *(சா.அக.).*

*[துவள + அரை-.]*

**துவளை** *tuvaḷai*, பெ. (n.) வாட்டம்; melancholia, depression. "பேய் தொட்டு விட்டதாலே துவளையாம்" *(பணவிடு. 299).*

*[துவள் → துவளை (மு.தா. 92)]*

**துவளை[2]** *tuvaḷai*, பெ. (n.) 1. மேற்பூச்சு; anointing, rubbing. "காலிற் கையிற் றுவளை யிட்டு" *(பாலவா. 157).* 2. வேப்பெண்ணெய் முதலியவற்றில் தோய்த்திடும் ஒத்தடம்; fomentation, especially with margosa oil.

*[ஒருகா. துவாலை → துவளை]*

**துவளைசெய்தல்** *tuvaḷai-sey-*, செ.கு.வி. (v.i.) கண்ணிற்கு மருந்தெண்ணெய் மற்றும் கலிக்கம் பூசுதல்; smearing ointment or putting eye drops *(சா.அக.).*

**துவளைபோடல்** *tuvaḷai-pōḍal*, பெ. (n.) உடம்பின் மேல் சூடுண்டாகும்படி தேய்த்தல்; rubbing so as to create heat *(சா.அக.).*

**துவற்று[1]-தல்** *tuvaṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) தூவுதல்; to scatter drops, sprinkle. "தூஉ பின்ன துவலை துவற்றலின்" *(மலைபடு. 363).*

*[துவறு → துவற்று → துவற்று-. (மு.தா. 57)]*

**துவற்று[2]-தல்** *tuvaṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) கெடுத்தல்; to destroy, ruin. "வல்வினை துவற்றன்மேலென" *(தணிகைப்பு. வீராட். 4).*

*[துவல்[2] → துவற்று]*

**துவறல்[1]** *tuvaṟal*, பெ. (n.) மழை தூவுகை *(யாழ்.அக.)*; raining, drizzling, sprinkling.

*[துவல் → துவறல்]*

**துவறல்**[2] *tuvaṟal*, பெ. (n.) விரைவு (சது.) swiftness, haste.

*[துவல்[5] → துவறல்]*

**துவன்** *tuvaṉ*, பெ. (n.) வட்டத்திருப்பி (மலை) பார்க்க; see *vaṭṭa-t-tiruppi*.

**துவன்று**[1]**-தல்** *tuvaṉṟu-*, செ.கு.வி. (v.i.) *1.* நிறைதல்; to fillup. "இளையரும் முதியருங் கிளையுடன் றுவன்றி" *(பெரும்பாண். 268)*. *2.* நெருங்குதல்; to be thick, close, crowded. "வானம் வெளியறத் துவன்றி" *(கம்பரா. நாகபா. 97)*. *3.* கூடிநிற்றல்; to be in company; to join. "ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி" *(தொல்பொ. 192)*. *4.* குவிதல்; to be heaped up. "அகன்கட் பாறைத் துவன்றி" *(மலைபடு. 276)*. "துவன்று நிறைவாகும்" *(தொல். 815)*.

*[துவல் → துவன்று (வேக. 252)]*

**துவன்று**[2]**-தல்** *tuvaṉṟu-*, 5 செ.கு.வி. (v.i.) சாதல் (பிங்.); to die.

*[துவல் → துவன்று (வேக. 252)]*

**துவன்று**[3] *tuvaṉṟu*, பெ. (n.) நிறைவு (தொல்சொல். 332); fullness.

*[துவல் → துவன்று (வேக. 252)]*

**துவனம்** *tuvaṉam*, பெ. (n.) ஒலி; noise, sound. "துவனவில்லின்" *(கம்பரா. இராவணன் வதை. 27)*.

**துவனி** *tuvaṉi*, பெ. (n.) ஒலி; sound, noise, clamour. "தூய வானவர் வேதத் துவனியே" (தேவா. *1031)*.

**துவனி-த்தல்** *tuvaṉi*, 11 செ.கு.வி. (v.i.) முழங்குதல்; to sound, resound. "துவனித்தவர் வெம்படை தூவுதலும்" *(பாரத. நிவாத. 70)*.

*[துவணி → துவனி-.]*

**துவனை** *tuvaṉai*, பெ. (n.) ஓசை (யாழ்.அக.); noise.

*[ஒருகா. துவனி → துவனை]*

**துவாரடை** *tuvāraḍai*, பெ. (n.) மரக்கல வுறுப்பினுளொன்று; a contrivance in a boat. "மரக்கலமும் அதனகத்துச் சுக்கானும். துவாரடையும் பிறவும் அமைந்திருப்பினும்" *(சச்சுர-நிச்சயம், 150)*.

**துவாளி-த்தல்** *tuvāli-*, 11 செ.கு.வி. (v.i.) புல்லாங்குழல்; flute.

**துவானம்** *tuvāṉam*, பெ. (n.) தூறல்; drizzling. மழைவிட்டும் தூவானம் விடவில்லை.

*[தூவானம் → துவானம்]*

**துவாலை** *tuvālai*, பெ. (n.) *1.* மகளிர் சூதகப் பெருக்கு; excessive menstruation. *2.* உடலிற் பூசும் பூச்சு (தைலவ. தைல. *2)*; anointing the body. *3.* பூச்சு மருந்து (வின்.); liniment for medical anointing.

*[துவலை → துவாலை (மு.தா. 57)]*

**துவாலைச்சிரங்கு** *tuvālai-c-ciraṅgu*, பெ. (n) ஒருவகைச் சிரங்கு; napkin rash.

*[துவாலை + சிரங்கு]*

**துவாலைசெய்தல்** *tuvalai-šey*, மேற்பூசுதல் (பாலவா. *294)*; to anoint, smear.

*[துவாலை + செய்-.]*

**துவாலையடித்தல்** *tuvalai-y-aḍittal*, பெ. (n.) துவாலையிறைப்பு' பார்க்க; see *tuvālai-y-iṟaippu*.

*[துவாலை + அடித்தல்]*

**துவாலையிடு-தல்** *tuvālai-y-iḍu*, செ.கு.வி. (v.i.) துவாலைசெய்தல் பார்க்க; see *tuvālai-šey*. "அங்கமெலலந் துவாலையிடு" *(தலவ. தைல. 32)*.

*[துவாலை + இடு]*

**துவாலையிறைப்பு** *tuvālai-y-iṟaippu*, பெ. (n.) *1.* சூதகப் பெருக்கு; menorrhagia. *2.* ஒரு நோய்; leucorrhoca.

**துவாளி-த்தல்** *tuvaḷi-*, 11 செ.கு.வி. (v.i.) தவாளி பார்க்க; see *tavāḷi*; to groove, flute.

**துவானம்** *tuvāṉam*, பெ. (n.) தூறல்; drizzle. "மழை விட்டுந் தூவானம் விடவில்லை".

*[தூவானம் → துவானம்]*

**துவிக்குத்துரு** *tuvi-k-kutturu*, பெ. (n.) தண்ணீர் விட்டான் (சங்.அக.) பார்க்க; see *taṇṇīr-viṭṭāṉ*; climbing asparagus.

**துவை**[1]**-த்தல்** *tuvai-*, 11 செ.கு.வி. (v.i.) *1.* யாழ் ஒலித்தல் (திவா.); to sound as a lute; to resound.

2. ஆரவாரித்தல் (திவா.); to make a great noise. 'காலுறு துவைப்பின்' (மலைபடு. 117). 3. புகழப்படுதல்; to be praised. "நின் வயிற்றுவைத்த தும்பை" (பதிற்றுப். 88, 23).

**துவை²-த்தல்** *tuvai-*, செ.குன்றாவி. (v.t.) 1. மிதித்துழக்குதல்; to tread down. "ஆம்பலங் குப்பையை . . . வாளைக டுவைப்ப" (கல்லா. 52, 29). 2. இடித்தல்; to beat, as moist or green things as clay in a mortar; to mash, pound. 3. ஆடை துவைத்தல்; to beat, as clothes in washing. 4. குற்றுதல்; to husk. 'நெல்லைத் துவைக்கிறாள்'. 5. கடைதல்; to chum. கருங்கடற்றுவையத் தோன்றி' (கம்பரா. கடிம. 81). 6. சேர்த்துவைத்தல்; to gather, together. "தன்னுயிர்க்கென் றெண்ணித் துவைத்த பொருளொடு" (ஆசாரக். 96). துவைத்துத் தோள்மேற்போட்டுக் கொண்டான் (பழ.).

[துவ → துவை → துவைத்தல் (மு.தா. 92)]

**துவை³** *tuvai*, பெ. (n.) 1. மிதிக்கை; treading, pounding. 2. இறைச்சி (சூடா.); flesh, meat. 3. ஒலி (சூடா.); sound, clamour. 4. பிண்ணாக்கு (சூடா.); oil cake. 5. புளிங்கறி (திவா.); acidulated curry. 6. ஆணம்; thick, liquid curry. "மறிக்கொழுன் றுவை" (ஞானா. 36, 14). 7. துவையல் பார்க்க; see *tuvaiyal*. 8. பருகும் உணவு வகை (பிங்.); drink. "அற்ற றுவையாக" (சீவக. 2620). 9. துளசி பார்க்க (மலை.); see *tulaši*; sacred basil.

**துவை⁴-தல்** *tuvai-*, 4 செ.கு.வி. (v.i.) மிதித்துழக்கப்படுதல்; to be trodden. "நெற்கதிர் இன்னும் துவைய வேண்டும்".

[தோய் → துவை]

**துவை⁵-தல்** *tuvai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. தோய்தல்; to be dipped, as a cloth in dye. 2. கஞ்சியிடுதல் (வின்.) ; to be moistened with starch. 3. உறைதல் (வின்.); to be curdled, as milk; to be clotted as blood. 4. படைக்கருவி துவைச்சலிடுதல்; to be tempered, as steel.

[துவ → துவை → துவைதல் (மு.தா. 92)]

**துவை⁶-த்தல்** *tuvai-*, 11 செ.குன்றாவி. (v.i.) 1. தோய்த்தல் (வின்.); to dip in, soak. 2. உறையச் செய்தல் (வின்.); to curdle, as milk by rennet. 3. படைக் கருவிகள் துவைச்சலிடுதல்; to temper, as steel.

**துவைத்துப்பிழி-தல்** *tuvaittu-p-pili-*, செ.குன்றாவி. (v.t.) 1. மூலிகைகளை இடித்துச் சாறு இறக்குதல்; to squeezing juice out of bruished herbs. 2. ஊதையினால் உடம்பில் அடிபட்ட வலிபோல் காணும் ஒரு நிலைமை; a condition of the body with pain all over experienced by patients subjected to rheumatic affections as if beaten with sticks.

**துவையல்¹** *tuvaiyal*, பெ. (n.) 1. தொகையல் எனப்படும் உணவு; chutny, a kind of strong relish, made of a number of condiments and fruits as coconuts, onions, chillies. "துவைவாயினர்கள் சில்லோர்" (விநாயகபு. 80, 225). 2. ஆடை வெளுக்கை (வின்.); washing clothes.

[துவை → துவையல்]

**துவையல்²** *tuvaiyal*, பெ. (n.) உருக்கைத் துவைச்சலிடுகை; tempering of steel (செ.அக.).

[துவை → துவையல்]

**துவைவரல்** *tuvaivaral*, பெ. (n.) கலப்புக் கட்டோசை (பிங்.); din of many sounds.

[துவை/ + வரல்]

**துழத்தல்** *tula-*, 11 செ.குன்றாவி. (v.t.) துழாவுதல்; to stir, as with a ladle. "துடுப்பிற றுழ்ந்த வல்சியின் இட்டுந்தொட்டுங் கவ்வியுந் துழந்தும்" (புறநா. 26, 188).

[துள் → துள → துழ - துழத்தல் (வே.க. 275)]

**துழதி** *tulati*, பெ. (n.) துன்பம்; sorrow, distress. "பிறவித் துழதி நீங்க" (திவ். திருவாய். 2, 7, 7).

[துழ → துழதி (வே.க. 276)]

**துழவு-தல்** *tulavu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. துழாவு பார்க்க; see *tulāvu*. "துழாவு வழையமை சாரல் கமழத் துழைஇ" (மலைபடு. 181). 2. சூழவருதல்; to pass through review in mind, cat about one. "மாதிரந் துழவுங் கவலை நெஞ்சத்து" (புறநா. 174).

**துழவை** *tuḻavai*, பெ. (n.) 1. துழாவிலிட்ட கூழ்; porridge, as stirred with a ladle. "அவை யாவரிசி யங்களித் துழவை" (பெரும்பாண். 275). 2. மூங்கிற் பற்றை; split bamboo used as a rudder the steel a small boat.

[துழவு → துழவை (வே.க. 276)]

**துழவைதொடு-த்தல்** *tuḻavai-toḍu-*, செ.கு.வி. (v.i.) தெப்பஞ் செலுத்துதல் (வின்); to paddle a raft or boat.

[துழவை + தொடு-. (வே.க. 276)]

**துழனி** *tuḻaṉi*, பெ. (n.) 1. ஒலி; sound, noise, chirping of flocks of birds. "அருமறைத் துழனியும்" (தேவா. 316, 3). 2. குறை குற்றம்; carping criticism. 'அவன் ஓயாமல் துழனி பேசுவான்' (நெல்லை).

[துழ → துழனி (வே.க. 276)]

**துழா-தல்** *tuḻā-*, 5 செ.கு.வி. (v.i.) துழாவுதலின் மறுவடிவம்; dialect variation of tuḻavu. "பனிவாடை துழாகின்றதே" (திவ். இயற். திருவிருத். 35).

**துழாய்** *tuḻāy*, பெ. (n.) துளசி; sacred basil. "கமழ்குருந் துழாஅ யலங்கற் செல்வன்" (பதிற்றுப். 31, 8).

[துவை → துவையல்]

**துழாய்மௌலி** *tuḻāy-mauli*, பெ. (n.) துளசிமாலை முடியினனாகிய திருமால் (சூடா.); *Viṣṇu, as crowned with a garland of* basil.

[துழாய் + மௌலி]

**துழாய்வனம்** *tuḻāy-vaṉam*, பெ. (n.) துளசி (மலை.); sacred basil.

[துழாய் + வனம்]

**துழாவாரம்** *tuḻā-vāram*, பெ. (n.) வம்புப் பேச்சு; malicious gossip, slander.

[துழவு + வாரம் → துழாவாரம்]

**துழாவு[1]-தல்** *tuḻāvu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கையாலளைதல்; to stir with the hand. 2. கிளறுதல்; to stir with the ladle; to turn over, as paddy spread in the sun. 3. தடவுதல்; to feel, grope, search for with the hands out stretched. "துழாநெடுஞ் சூழிருளென்று" (திவ். இயற். திரு. விருத். 36). 4. நாடுதல்; to cast a searching look into, seek. "வானு நிலனுந் திரையுந் துழாவும்" (கலித். 145, 43). 5. ஆராய்தல்; to investigate, examine closely. 6. தண்டு வலித்தல்; to paddle or row a boat. "துளிபடத் துழாவு திண்கோற் றுடும்பு" (கம்பரா. குகப். 60.) 7. வெட்டுதல் (பிங்.); to cut.

[துழவு → துழாவு-]

**துழாவு[2]-தல்** *tuḻāvu-*, செ.கு.வி. (v.i.) 1. தடுமாறுதல்; to be disturbed in mind; to be perplexed. "எண்ணந் துழாவுமிடத்து" (திவ். இயற். திருவிருத். 28). 2. அளவளாவுதல் (பிங்.); to talk endearingly.

[துழவு → துழாவு-]

**துழை-தல்** *tuḻai-*, 4 செ.குன்றாவி. (v.t.) துடுப்பால் துழாவிச் செல்லுதல் (நாஞ்.); to propel by oars.

[துழாவு → துழை → துழைதல் (வே.க. 276]

**துள்** *tuḷ*, பெ. (n.) துள்ளு பார்க்க; see *tuḷḷu*.

[துல் → துள் (வே.க. 253)]

**துள்ளத்துடி-த்தல்** *tuḷḷa-t-tuḍi-*, செ.கு.வி. (v.i.) மிகுதுயரால் வருந்துதல்; to suffer from extreme anguish (செ. அக.).

[துள்ளல் + துடி-த்தல்]

**துள்ளம்** *tuḷḷam*, பெ. (n.) சிறுதுளி; little drop of water. "கண்ணநீர்கள் துள்ளஞ் சோர" (திவ். பெரியாழ். 5: 1, 7).

**துள்ளல்** *tuḷḷal*, பெ. (n.) 1. துள்ளுகை; frishing, leaping. "பேயும் பேயுந் துள்ள லுறுமெனா" (கலி. 94). 2. கூத்து (உரி. நி.); dance, dancing. 3. கூத்தன்; dancer. "வானவர்க்குங் காண் பரிதாகிநின்ற துள்ளலை" (தேவா. 489, 6). 4. ஆடு (சூடா.); goat, sheep. 5. ஆட்டுநோய்வகை (M.Em.D.245); a disease of sheep. 6. நீர்கொதுகு (பிங்); a kind of gnat, water insect. 7. துள்ளலோசை பார்க்க

(காரிகை. செய். 1); see *tullalōsai*. **8. சந்தத்தின் முடுகிசை;** lively or quick movement, in verse or singing.

*[துல் → துள் → துளி → துள்ளல் (வே.க. 253)]*

**துள்ளலோசை** *tullalōsai*, பெ. (n.) **கலிப் பாவுக்குரிய ஓசை** *(காரிகை. செய். 1, உரை);* rhytheming cadence peculiar to *kali* verse.

*[துள்ளல் + ஓசை]*

**துள்ளற்செலவு** *tullar-celavu*, பெ. (n.) **யாழ் வாசிக்கும் முறையுளொன்று;** a mode of playing yāl. "குடகச் செலவுந் துள்ளற்செலவும்" *(சீவக. 657, வார.).*

*[துள்ளல் + செலவு]*

**துள்ளாட்டம்** *tullāttam*, பெ. (n.) **1. களிப்பு;** sprightliness. **2. செருக்கு;** arrogance, haughtiness, assumption, overbearing airs.

*[துள்ளு + ஆட்டம்]*

**துள்ளி** *tulli*, பெ. (n.) **துளி** பார்க்க; see *tuli*. "வானத்தின் றுள்ளி. யல்லால்" *(மேருமந். 121).*

*[துளி → துள்ளி]*

**துள்ளிசிவு** *tullicivu*, பெ. (n.) **ஒரு வகை இசிவு நோய்;** a kind of disease accompanied with convulsion. "துள்ளிசிவு கொண்டே துணுக்குற்றுத் தான்பதைப்பார்" *(ஆதியூரவதானி).*

*[துள்ளு + இசிவு]*

**துள்ளு¹-தல்** *tullu-*, 5 செ.குன்றாவி. (v. i.) **1. குதித்தல்;** to leap, frisk, spring up, jump up; to be restive. "துள்ளித் தூண் முட்டுமாங் கீழ்" *(நாலடி. 64).* 'துள்ளாதே துள்ளாதே ஆட்டுக்குட்டி, என் கையில் இருக்கிறது சூரிக்கத்தி' *(பழ.?).* **2. தாவிச் செல்லுதல்;** to trip along in a frolicsane manner. "துள்ளு மான்மறி போந்திய செங்கையின்" *(தேவா. 93, 5).* **3. செருக்குதல்;** to be haughty, arrogant. "துள்ளுகின்றார் கூட்ட முறேல்" *(அருட்பா. 1, நெஞ்சறி. 635).* **4. கவலையற்று வாணாள் கழித்தல்;** to lead a happy-go-lucky life. **5. பதைத்தல்;** to tremble, quiver. 'துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து' *(கலித். 4).* **6. மிகுதல்;** to be abundant. "அனையது கேட்டலோடு மறிஞர்கள் மகிழ்ச்சி துள்ள" *(திருவானைக். நைமி. 28).*

*[துல் → துள் → துள்ளு]*

**துள்ளு²** *tullu*, பெ. (n.) **1. குதிப்பு;** leap, jump, spring. 'ஒரு துள்ளுத் துள்ளினான்'. **2. செருக்கு;** arrogance. "துள்ளுவார் துள்ளடக்குந் தோன்றலே" *(அருட்பா, 2, அருட்டிறத். 7).*

*[துல் → துள் → துள்ளு (வே.க. 253)]*

**துள்ளுக்காளை** *tullu-k-kālai*, பெ. (n.) **அடங்காதவன்;** ungovernable person, as an untamed bullock. 'துள்ளுகிற மாடு பொதி சுமக்குமா?' *(பழ.).*

*[துள்ளு + காளை]*

**துள்ளுக்குட்டி** *tullu-k-kutti*, பெ. (n.) **1. இளங் கன்று;** calf; frolicsome young animal. **2. விளையாட்டுப் பையன்;** playful, lively boy.

*[துள்ளு + குட்டி]*

**துள்ளுசீட்டு** *tullu-cīttu*, பெ. (n.) **அடைக்கலச் சீட்டு;** to letter giving assurance of safety or protection. "துள்ளுசீட் டொப்ப மெழுதும்" *(விறலிவிடு. 903).*

*[துள்ளு + சீட்டு]*

**துள்ளுப்பூச்சி** *tullu-p-pūcci*, பெ. (n.) **தவசங்களைக் கெடுக்கும் பயிர்ப்பூச்சி வகை;** a kind of hopping insect destructive to grain.

*[துள்ளு + பூச்சி]*

**துள்ளுப்போடு-தல்** *tullu-p-pōdu-*, பெ. (n.) **மீனைத் திருப்புதற்காக அணைகட்டுதல்;** to put up a small bund in order to turn the fish into a fish-trap.

*[துள்ளு + போடு-]*

**துள்ளுமறி** *tullumari*, பெ. (n.) **ஆட்டுக்குட்டி;** kid, lamb as frolicsone. 'துள்ளுமறியா மனது பலிகொடுத்தேன்' *(தாயு. கருணாகர. 8).*

*[துள்ளு + மறி]*

**துள்ளுமா** *tullumā*, பெ. (n.) **தேவதைகளுக்குப் படைக்கும் சருக்கரையோடு கலந்த மாவகை;** a preparation of flour offered to deities.

*[தெள்ளு → துள்ளு + மா]*

**துள்ளொலி** *tulloli,* பெ. (n.) **அலையெறியும் ஒலி;** noise of rippling water. 'துள்ளொலி வெள்ளத்தின்' *(தேவா.).*

*[துள்ளு + ஒலி]*

**துளக்கம்**[1] *tuḷakkam,* பெ. (n.) *1.* **அசைவு;** shaking, waving, motion. *2.* **மனக்கலக்கம்;** agitation of mind. "துளக்கமிலாதவர் தூய மனத்தார்" *(நாலடி. 189). 3.* **அச்சம்;** fear, dread. *4.* **குறைகை;** dwindling.

*[துளங்கு → துளக்கம்]*

**துளக்கம்**[2] *tuḷakkam,* பெ. (n.) *1.* **ஒளி;** brightness, splendour, gloss, lustre. *2.* **விளக்கு என்னும் 15ஆவது நாண்மீன்** *(பிங்.);* the 15th naksatra.

*[துள் → துளகு → துளங்கு → துளக்கு → துளக்கம்]*

**துளக்கு**[1]**-தல்** *tuḷakku-,* 5 செ.குன்றாவி (v.i.) *1.* **அசைத்தல்;** to move, shake, nod. "திருமுடி துளக்கி நோக்கி" *(சீவக. 1881). 2.* **வணங்குதல்;** to bow. "முனைவற்றொழுது முடிதுளக்கி" *(சீவக. 2357).*

*[துல் → துலர் → துளங்கு → துளக்கு-.]*

**துளக்கு**[2] *tuḷakku,* பெ. (n.) *1.* **அசைவு;** shaking. "துளக்கிலா விளக்கை" *(தேவா. 13, 6). 2.* **வருத்தம்;** grief, sorrow. 'மாமயிலாடி நாடகந் துளக்குறுத் தனவே' *(சீவக. 1560).*

*[துளங்கு → துளக்கு]*

**துளக்கு**[3]**-தல்** *tuḷakku-,* 5 செ.குன்றாவி (v.i.) **விளக்குதல்** *(யாழ். அக.);* to polish.

ம. துளக்கு

*[துலக்கு → துளக்கு-.]*

**துளங்கு**[1]**-தல்** *tuḷaṅgu-,* 5 செ.கு.வி (v.i.) *1.* **அசைதல்;** to move, to sway from side to side, as an elephant, to shake. "துளங்கிமில் நல்லேற்றினம்" *(கலித். 106). 2.* **வருந்துதல்;** to be perturbed. "துளங்கா தாங்கவ ளுற்றதை யுரைத்தலும்" *(மணி. 22, 8). 3.* **நிலைகலங்குதல்;** to be uprooted. "கடிமரந் துளங்கிய காவும்" *(புறநா. 23). 4.* **தளர்தல்;** to droop. 'சுடுகணை மருதலோடுந் துளங்கினான்' *(கம்பரா. முதற்போ. 132). 5.* **ஒலித்தல்;** to sound. 'சிறு சதங்கை துளங்க வார்த்தார்' *(பிரபுலிங். மாயை. பூசை. 45).*

*[துல் → துலம் → துளம் → துளங்கு- (மு.தா. 147).]*

**துளங்கு**[2]**-தல்** *tuḷaṅgu-,* 5 செ.கு.வி (v.i.) **ஒளிர்தல்;** to shine, to be bright, luminous, to radiate. "துளங்கு மிளம்பிறை யாளன்" *(தேவா. 88, 10).*

*[துலக்கு → துளங்கு-.]*

**துளங்கொளி** *tuḷaṅkoḷi,* பெ. (n.) *1.* **மிக்க ஒளி** *(வின்.);* dazzling, brightness. *2.* **சுழல் என்னும் 18ஆவது நாண்மீன்;** the 18th naksatra. "நங்கம்பனை துளங்கொளி புரட்டாதி" *(இலக். 27, 791).*

*[துளங்கு → துளங்கொளி (மு. தா. 147)]*

**துளசி** *tuḷaci,* பெ. (n.) *1.* **திருத்துழாய்;** sacred basil. *2.* **குழிமிட்டான்;** rough basil *(செ. அக.).* 'துளசிக்கு மணமும் முள்ளுக்குக் கூர்மையும் முளைக்கிற போதே தெரியும்' *(பழ.).*

**துளசிதீர்த்தம்** *tuḷaci-tīrttam,* பெ. (n.) **திருமால் வழிபாட்டின் பின் அடியார்களுக்கு வழங்கும் திருத்துழாயும் தூநீரும்;** tulaci leaves and consecrated water presented as offering to the idol in a Viṣṇu temple and distributed to worshippers.

*[துளசி + தீர்த்தம்]*

**துளசிமடம்** *tuḷaci-maḍam,* பெ. (n.) **துளசி மாடம்** பார்க்க; see *tulaci-māḍam* (செ. அக.).

*[துளசி + மடம்]*

**துளசிமணி** *tuḷaci-maṇi,* பெ. (n.) **மாலிய அடியார் அணிந்து கொள்ளத் திருத்துழாய்க் கட்டையைக் கடைந்து உண்டாக்கிய மணி;** beads made up of tulaci, worn by vaisnava devotees *(செ. அக.).*

*[துளசி + மணி]*

**துளசிமாடம்** *tuḷaci-māḍam,* பெ. (n.) **பூசிக்கப் படும் துளசிச் செடியைக் கொண்ட மேடை;** a raised construction on which a tulaci plant is set up for worship *(செ. அக.).*



*[துளசி + மாடம்]*

**துளசிமாலை** *tuḷaci-mālai,* பெ. (n.) துளசி இலைக் கொத்து அல்லது துளசிமணியாற் செய்யப்பட்ட மாலை; garland of tulaci leaves or beads.

*[துளசி + மாலை]*

**துளப்பு** *tuḷappu,* பெ. (n.) வயிறு; belly. "பாழியிற் பிணங்களும் துளப்பெழப் படுத்தியே" *(தக்கயாகப். 376).*

**துளபம்** *tuḷapam,* பெ. (n.) துளசி பார்க்க; see *tuḷaci.* "துளபத் தொண்டாய தொல்சீர்" *(திவ். திருமாலை. 45).*

*[துளவம் → துளபம் (வ.மொ.வ. 182)]*

**துளபமௌலியன்** tuḷapa-mouliyan, பெ. (n.) துளசி மாலையை முடியிலணிந்த திருமால் *(பிங்.);* Tirumāl, as wearing a tulaci wreath.

*[துளவம் + மௌலியன் → துளப மௌலியன்]*

**துளம்**[1] *tuḷam,* பெ. (n.) மாதுளை; common pomegranate. "துளம்படு முறுவல் தோழியர்க் கருளாள்" *(திவ். பெரியதி. 2, 7, 2).*

*[மாதுளம் → துளம்]*

**துளம்**[2] *tuḷam,* பெ. (n.) மயிலிறகினடி; root of peacock's feather *(திவ். பெரியதி. 2, 7, 2, வ்யா).*

**துளம்பிக்கிரி** *tuḷampikkiri,* பெ. (n.) ஆதொண்டை *(மலை.);* thorny caper.

**துளர்**[1]**-தல்** *tuḷar-,* 4 செ.குன்றா.வி. (v.t.) நில முதலியவற்றைக் கொத்துதல்; to hoe. "கணவன் புனந்துளர்ந்து வித்தி" *(குறுந். 214).*

*[துளம் → துளர்-தல் (வ.மொ.வழு. 41]*

**துளர்**[2]**-தல்** *tuḷar-,* செ.கு.வி. (v.i.) மணம் முதலியன வீசுதல்; to spread, as fragrance. 'துளருஞ் சந்தனச் சோலைக ளுடலாம்.... குளிர் நாற்றமே' *(சூளா. இரத. 5).*

*[துளம் → துளர்-தல் (வ.மொ.வழு. 41]*

**துளர்**[3] *tuḷar,* பெ. (n.) பயிரின் களை; weeds. "தொடுப் பெறிந் துழுத துளர்படு துடவை" *(பெரும்பாண். 201).*

**துளர்**[4] *tuḷar,* பெ. (n.) களைகொட்டு *(திவ். பெரியதி. 8, 7, 3);* weeding hook.

**துளவம்**[1] *tuḷavam,* பெ. (n.) துளசி பார்க்க; see *tuḷaci.* "தொடையொத்த துளவமுங் கூடையும் பொலிந்து" *(திவ். திருப்பள்ளி. 10).*

*[துள → துளவம் (வ.மொ.வ. 182).]*

**துளவன்** *tuḷavan,* பெ. (n.) 1. திருமால்; Tirumāl. "துளவ துளவ வெனச் சொல்லுஞ்சொற் போச்சே" *(அட்டப். பிள்ளைப்பெரு. சரித். பக். 6).* 2. ஒரு வகைச் செய்ந்நஞ்சு *(யாழ். அக.);* a prepared arsenic.

*[துளவு → துளவன்]*

**துளவி** *tuḷavi,* பெ. (n.) திப்பிலி *(மலை.);* long pepper.

**துளவு** *tuḷavu,* பெ. (n.) துளசி பார்க்க *(சூடா.);* see *tuḷaci.* "கள்ளணி பசுந்துளவினவை" *(பரிபா. 15, 84).*

*[துளம் → துளவு]*

**துளவை**[1] *tuḷavai,* பெ. (n.) தொளை *(யாழ். அக.);* hole, orifice.

*[துள் → துள → துளவை (வே. க. 274).]*

**துளவை**[2] *tuḷavai,* பெ. (n.) துழவை பார்க்க; see *tuḻavai.*

*[துள் → துள → துளவை]*

**துளாரி** *tuḷari,* பெ. (n.) நெய்வோர் கருவியுளொன்று *(யாழ். அக.);* a weaver's instrument.

**துளி**[1]**-த்தல்** *tuḷi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. சொட்டுதல்; to drip, fall in drops, as rain, as tears, as honey;

to trickle down. "மதுவுந் துளிக்குஞ் சோலை" *(தேவா. 395, 4).* 2. மழை பெய்தல்; to rain. "மங்கு லற்கமொடு பொங்குடி துளிப்ப" *(அகநா. 235).*

*[துள் → துளி → துளி-த்தல்]*

**துளி[2]-த்தல்** *tuḷi-,* செ.குன்றா.வி (v.t.) துளியாய்த் தெளித்தல்; to sprinkle, let fall in drops.

*[துள் → துளி → துளி-த்தல்]*

**துளி[3]** *tuḷi,* பெ. (n.) 1. துளிக்கை (பிங்.); raining, dripping. 2. திவலை (பிங்); rain drop, globule of water. 3. மழை (பிங்.); rain. "துளியனுழந்த தோய்வருஞ் சிமைதொறும்" *(பரிபா 7, 13).* 4. சொட்டளவு; minim, drop, as a measure. "மருந்தில் எத்தனைத் துளி விட்டுக் கொடுக்க வேண்டும்" 5. சிறிதளவு; pinch 'அம்மருந்தில் துளி சொடு' 6. நஞ்சு; poison. "துளிமண்டி யுண்டு நிறம்வந்த கண்டன்' *(தேவா. 36, 1).*

*[துள் → துள்ளி → துளி.]*

**துளி[4]** *tuḷi,* பெ. (n.) பெண்ணாமை (பிங்.); female tortoise.

*[துள்ளி → துளி]*

**துளிமழை** *tuḷi-maḻai,* பெ. (n.) திவலையாய்ச் சொரியும் மழை; drizzling.

**துளிர்[1]-த்தல்** *tuḷir-,* 11 செகுவி. (v.i.) 1. தளிர்த்தல்; to bud, sprout, shoot, put forth leaves. 2. செழித்தல்; to prosper, thrive.

தெ. தளிர்சு; க. தெளிர்; ம. துளிர்க்க

*[துள் → துளிர் → துளிர்-த்தல்]*

**துளிர்[2]** *tuḷir,* பெ. (n.) தளிர்; bud, sprout, young leaf, tender foliage. "நாறுநரந்தைத் துளிருங் சுலவி" *(தேவா. 403, 6).*

**துளிர்க்கெண்டை** *tuḷir-k-keṇḍai,* பெ. (n.) பாற்கெண்டை; white mullet.

**துளு** *tuḷu,* பெ. (n.) துளுவம் பார்க்க; see tuluvam. "தோகைக் காவிற் றுளுநாட்டன்ன" *(அகநா. 15).*

*[துள் → துளு]*

**துளுப்பிடு-தல்** *tuḷuppiḍu-,* செ.குன்றாவி. (v.t.) கலக்குதல்; to stir up. "குன்றிற் சுருங்கட றுளுப்பிட் டாங்கு" *(சீவக. 1112)* (செ. அக.).

*[துள் → துளு → துளுப்பு - துளுப்பிடு-தல் (வே.க. 276).]*

**துளும்பு[1]-தல்** *tuḷumpu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அசைதல்; to shake, to be agitated. "வம்பிற் றுளும்புமுலை வாளெடுங்கண் மடவார்" *(சீவக. 186).* 2. ததும்பு-தல்; to brim over, overflow; to fill, as tears in the eyes. "துளும்பு கண்ணிருண் மூழ்கி" *(திருவிளை. மாணிக்க துதி).* 3. துள்ளுதல் (சூடா.); frisk. 4. திமிறுதல் (சூடா.); to struggle and qrench oneself away. 5. விளங்குதல்; to sparkle, glitter, shine. "உவாக்கண்மீ தேவரிற் றுளிம்பினார்" *(சூளா. தூது. 73).* 6. இளகுதல் *(சீவக. 3063, உரை);* to melt. 7. மேலெழுதல்; to rise up; to come to the surface. "நீர் துளும்ப" *(சீவக. 1674).* 8. வருந்துதல்; to be troubled. "உயர்சந்தனத் தொழுதிக் குன்றந் தளும்பச் சென்று" *(சீவக. 3063).* 9. மிகுதல்; to abound. "துளும்பு மேன்மையிற் பொலிந்தது தொண்டைநன் னாடு" *(காஞ்சிப்பு. நாட்டுப். 35).*

*[துள் → துளும்பு → துளும்பு-. (மு.தா. 68)]*

**துளும்பு[2]-தல்** *tuḷumpu-,* செ.கு.வி. (v.i.) ஒளிர்தல்; to shine, to irradiate. "மருளிநின்று துளும்புவே" *(தக்கயாகப். 254).*

*[துள் → துளும்பு → துளும்பு-. (மு.தா. 68)]*

**துளுவம்** *tuḷuvam,* பெ. (n.) 1. பண்டைய ஐம்பத்தாறு நாடுகளுள் கன்னட நாட்டிற்குத் தெற்கிலுள்ள நாடு; the tulu country on the west coast, south of kannada, one of 56 country. "சொங்கணந் துளுவங் குடகம்" *(நன். 272, மயிலை).* 2. பதினென் மொழிகளுள் துளுவத்தில் வழங்கும் மொழி *(நன். 273, உரை);* the Tuluva language, one of patinenmoli, q.v.

*[துளு → துளுவம்]*

**துளுவவேளாளர்** *tuḷuva-vēḷāḷar,* பெ. (n.) துளுவ நாட்டிலிருந்து வந்து தொண்டை மண்டலத்தில் குடியேறிய வேளாள வகையார்; a sub-division of vēḷāḷās of Toṇḍaimaṇḍalam who migrated from the Tulu country.

*[துளுவம் + வேளாளர்]*

**துளுவன்** *tuḷuvaṉ,* பெ. (n.) வாழைவகை; a kind of plantain. 'துளுவன்பழம்'.

**துளை¹-தல்** *tuḷai-,* 4 செ.கு.வி. (v. i.) 1. நீரில் விளையாடுதல்; to dispart in water; to dive. "ஆனந்த வெள்ளத் துறையிலே படிந்து மூழ்கித் துளைந்து" (தாயு. வர்பனேன். 2). 2. அழுந்திக் கிடத்தல்; to be immersed. குடும்பக்கூத்துட் டுளைந்து' (தாயு. சொல்லற்7).

*[துள் → துளை-.]*

**துளை²-த்தல்** *tuḷai-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. துளையிடுதல்; to make hole, bore, drill, punch. 2. ஊடுருவுதல்; to pierce, as with an arrow. 3. வருத்துதல்; to torment, tease. "எப்பொழுதுமாக அவனைத் துளைக்கிறான்" 3. செயற்பாடு உசாவுதல்; to demand particulars or details. செலவுக்கணக்கு அவனைத் துளைத்துக் கொண்டிருக்கிறது.

*[துள் → துளை-. (வே.க. 279)]*

**துளை** *tuḷai,* பெ. (n.) 1. புழை (பிங்.); hole, orifice, aperture, perforation. "ஆடமைக் குயின்ற வவிர்துளை" (அகநா. 82). 2. உட்டொளை; hollow, as of a tube. 3. மூங்கில் (பிங்.); bamboo. 4. வாயில் (வின்.); gate way, passage. 5. சுருட்சி; curl, as of hair. "துளையார் கருமென் குழலாய்ச்சியர்" (திவ். பெரியதி. 3, 8, 8). 6. வயிரக் குற்றங்களுளொன்று; a flaw in diamond. "துளைகறி விந்து... காகபாதம்" (சிலப். 14, 180, உரை).

ம. துள; தெ. தொள; க. தொள; து. தொளு
*[துள் → துளை (வே.க 279)]*

**துளைக்கருவி** *tuḷai-k-karuvi,* பெ. (n.) இசைக்குரிய கருவி ஐந்தனுள் உட்டொளையுள்ள வாச்சியம் (பிங்.); wind instrument, one of five *karuvi.*

*[துளை + கருவி]*



**துளைக்கை** *tuḷai-k-kai,* பெ. (n.) தும்பிக்கை (யாழ். அக.); elephant's trunk.

*[துளை + கை]*

**துளைச்செவி** *tuḷai-c-cevi,* பெ. (n.) 1. உட் செவி; organ of hearing; internal ear. 2. உட் செவியுள்ள விலங்கு; an animal with an internal ear only, one of the two great classes of animals according to the Hindus.

*[துளை + செவி]*

**துளைநிறை** *tuḷai-niṟai,* பெ. (n.) துளைப்பொன் பார்க்க; see *tuḷai-p-poṉ.* "பொன் துளைநிறை... முப்பத்து முக்கழஞ்சும்" (S.I.I.I.140).

*[துளை + நிறை]*

**துளைநிறைசெம்பொன்** *tuḷai-niṟai-cempoṉ,* பெ. (n.) துளைப்பொன் பார்க்க; see *tuḷai-p-poṉ.* "செம்பொன் பதின்கழஞ்சு" (S.I.I.I.85).

*[துளை + நிறை + செம்பொன்]*

**துளைநிறைபொன்** *tuḷai-niṟai-poṉ,* பெ. (n.) துளைப்பொன் பார்க்க; see *tulai-p-poṉ.* (I.M.P.Cg. 200).

*[துளை + நிறை + பொன்]*

**துளைப்பு** *tuḷaippu,* பெ. (n.) 1. துளைக்கை; drilling, perforating. 2. இடைவிடாத் தொந்தரவு; frequent molestation, ceaseless annoyance.

*[துள் → துளை → துளைப்பு]*

**துளைப்பொன்** *tuḷai-p-poṉ*, பெ. (n.) புடமிடப்பட்டு வழங்கும் மாற்றுயுர்ந்த தங்கம் *(I.M.P. Tj. 138) (பெருங். இலாவாண. 6, 63);* refined gold of superior quality.

*[துளை + பொன்]*

**துளையம்** *tuḷaiyam*, பெ. (n.) நீரில் **துளைகை;** disporting in water. "வெள்ளநீர்த் துளைய மாடி" *(குமர. பிர. முத்துக். பிள். 52).*

*[துள் → துளை → துளையம் (வே.க. 275)]*

**துளையரியம்** *tuḷai-y-ariyam*, பெ. (n.) **ஊதுகொம்பு** *(யாழ்.அக.);* trumpet horn.

*[துளை + அரியம்]*

**துளைவண்டு** *tuḷai-vaṇḍu*, பெ. (n.) **வண்டுவகை;** borer, a beetle.

*[துளை + வண்டு]*

**துற்சம்** *tuṟcam*, பெ. (n.) **கொம்மட்டி** *(மலை) பார்க்க;* bitter gourd.

**துற்பரிசம்** *tuṟ-parisam*, பெ. (n.) **சிறுகஞ்சொறி** *(மலை.);* small climbing nettle.

**துற்றர்** *tuṟṟar*, பெ. (n.) **உண்பவர்;** those who eat. "விரைந்தால முண்ணுந் துற்றரை" *(தேவா. 204, 9).*

*[துன் → துற்று → துற்றர் (வே.க. 279)]*

**துற்றவை** *tuṟṟavai*, பெ. (n.) **நுகர்பொருள்;** articles of enjoyment. "துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை" *(திருவாசக. 3, 147).*

*[துன் → துற்று → துற்றர் (வே.க. 280)]*

**துற்றி** *tuṟṟi*, பெ. (n.) **உண்பவை** *(திவா.);* eatables.

*[துற்று → துற்றி (வே.க. 280)]*

**துற்று[1]-தல்** *tuṟṟu*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **உண்ணுதல்;** to eat. "கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி" *(அகநா. 36).* *2.* **கவ்வுதல்;** to seize with mouth. "இகலன்வாய்த் துற்றிய தோற்றம்" *(களவழி. 28).* *3.* **குற்றுதல்** *(பிங்.);* to pound. *4.* **நெருங்குதல்;** to come near, advance closely, lie close. "மைம்மரு பூங்குழற் கற்றை துற்ற" *(தேவா. 83, 1).* "காளை சீறிற் றுற்றிவ னுளனோ வென்பார்" *(சீவக. 1110).* *5.* **மேற்கொண்டு நடத்தல்;** undertake. "அரிது துற்றனையாற் பெரும" *(அகநா. 10).*

க. துத்து; தெ. துத்த

*[துன் → துற்று → துற்றர் (வே.க. 219)]*

**துற்று[2]** *tuṟṟu*, பெ. (n.) *1.* **உணவு;** boiled rice, food. "பற்றின் று துற்றின் று" *(4 வெ. 10, 4).* *2.* **கவளம்;** ball of boiled rice, as a mouhful. "முற்றுற்றுந் துற்றினை" *(நாலடி. 190).* *3.* **கூட்டம்** *(பிங்.);* corwd, multitude.

*[துறு → துற்று (வே.க. 261)]*

**துற[1]-த்தல்** *tuṟa*, பெ. (n.) *1.* **பற்றற்றுத் துறவு பூணுதல்;** to renounce wordly pleasures; to become an ascetic. "நல்லறிவாளர் குழவியிடத்தே துறந்தார்" *(நாலடி. 11).* *2.* **கைவிடுதல்;** to leave, relinguish, forsake, quit, abandon, desert, reject, discard. "தாவறத் துறந்தாரை" *(கலித். 118).* "தம்மைத் துறக்குந் துணிவிலாதார்" *(நாலடி. 75).*

**துற[1]-த்தல்** *tuṟa*, குன்றாவி & செகுவி. (tr. intr.) **நீங்குதல்** *(சூடா.);* to neglect, dispense with, oimit. avoid. "புலவுப்பலி துறந்த கலவுக்குழி கடுமுடை" *(அகநா. 3).* துறக்கத் துறக்க ஆனந்தம் துறந்தபின்பு பேரின்பம் *(பழ.).*

*[துர → துற → துறத்தல் (வே.க. 278)]*

**துறக்கநாடு** *tuṟakka-nāḍu*, பெ. (n.) **துறக்கம்** பார்க்க; see *tuṟakkam*. "துறக்கநா டருகிற் கண்டான்" *(கம்பரா. கடறாவு. 2)*

*[துறக்கம் + நாடு]*

**துறக்கம்** *tuṟakkam*, பெ (n.) **மேலுலகு;** heaven. "தொல்வினைப் பயனறுப்பத் துறக்கம் வேட் டெழுந்தாற் போல" *(கலித். 118).*

*[துர → துறக்கம் (மு.தா. 54)]*

**துறட்டி** *tuṟaṭṭi*, பெ (n.) *1.* **அங்குசம்;** iron crock, elephant goad. *2.* **காய் முதலியன பறிக்குந் துறட்டுக்கோல்;** pole with an iron hook fixed at one end to pluck fruits and leaves. *3.* **சிக்கு;** entanglement. *4.* **துறட்டிச்செடி** பார்க்க; see *tuṟaṭṭi-c-ceḍi.*

*[துறகு → துறட்டி]*

ப. க. தொறடு; வ. த்ரோட்டி;

துறட்டி - வ. த்ரோட்டி, த்ரோத்ர (வ.மொ.வ. 182)

**துறட்டிச்செடி** *turatti-c-cedi,* பெ. (n.) செடிவகை; prickly climbing cock-spur.

*[துறட்டி + செடி]*

**துறட்டிபோடு-தல்** *turatti-pōdu,* செ.குன்றாவி. (v.t.) *1.* மந்தணச் செயலறிதல்; loc; to draw out serets by quetioning to fish out. *2.* தன் வயப்படுத்த முயலுதல்; to contrive to bring under one's control.

*[துறட்டி + போடு-.]*

**துறட்டிரும்பு** *turattirumbu,* பெ. (n.) செடில்; iron hook for hook-swinging.

*[துறடு → துறட்டு + இரும்பு]*

**துறட்டு** *turattu,* பெ. (n.) *1.* முண்மரவகை; straight thorned linear-leaved coapershrub. *2.* சிறு மரவகை; silky backed round leaved caper tree. *3.* சிக்கல்; entanjglement, complication, as in a law suit. "துறட்டு வழக்கு". *4.* இடையூறு; danger. "ஆங்கோர் துறட்டுண் டதனையான் சொல்வேன்" *(விறலிவிடு. 150).*

*[துறகு → துறட்டு]*

**துறட்டுக்கோல்** *turattu-k-kōl,* பெ. (n.) துறட்டி² பார்க்க; see *turatti.*

*[துறட்டு + கோல்]*

**துறட்டுப்பிடி** *turattu-p-pidi,* பெ. (n.) துறட்டு வாதம் பார்க்க; see *turattu-vādam.*

*[துறட்டு + பிடி]*

**துறட்டுமுள்** *turattu-mul,* பெ. (n.) *1.* செடில்; iron hook for hook-swinging. *2.* செடிவகை; downy bached ovate acute leaved caper shrub.

*[துறடு → துறட்டு → துறட்டுமுள் (வேக. 268)]*

**துறட்டுவாதம்** *turattu-vādam,* பெ. (n.) ஒட்டாரம்; obstinacy.

*[துறட்டு + வாதம்]*

**துறட்டை** *turattai,* பெ. (n.) ஆறு விரல நீளமும் சாம்பற் பச்சை நிறமுமுள்ள கடல்மீன் வகை; sea fish, greyish green, attaining about 6 in. in length.

**துறடு** *turadu,* பெ. (n.) துறட்டி 1,2,3, பார்க்க; see *turatti.*

க. தொறடு

**துறந்தார்** *turandār,* பெ. (n.) பற்றறுத்தார்; ascetics, recluses, as having renounces the pleasures of the world. "துறந்தார் பெருமை துணைக்கூறின்" *(குறள், 22).*

*[துற → துறந்தார்]*

**துறந்தோர்** *turantōr,* பெ. (n.) துறந்தார் பார்க்க; see *turandār.* "துறந்தோர் தம்முன் முறவி யெய்தவும்" *(சிலப். 27, 95).*

*[துறந்தார் → துறந்தோர்]*

**துறப்பணக்கோல்** *tura-p-pana-k-kōl,* பெ. (n.) துறப்பணம் பார்க்க; see *tura-p-panam.*

*[துறப்பணம் + கோல்]*

**துறப்பணம்** *tura-p-panam,* பெ. (n.) துரப்பணம் பார்க்க; see *tura-p-panam.*

**துறப்பணவலகு** *tura-p-pana-v-alagu,* பெ. (n.) துறப்பணக் கோலிலுள்ள ஊசி; drill-bit.

*[துறப்பணம் + அலகு]*

**துறப்பு¹** *turappu,* பெ. (n.) *1.* பிரிவு; separation, parting. *2.* துறவு¹ பார்க்க; "துறப்பெனுந் தெப்பமே துணைசெயாவிடின்" *(கம்பரா. அயோத். மந்திர. 21).* "துறப்பஞ்சிக் கலுழ்பவள்" *(கலித். 10).*

*[துற → துறப்பு (வேக. 278)]*

**துறப்பு²** *turappu,* பெ. (n.) *1.* பூட்டு (பிங்.); lock. *2.* திறவுகோல் (யாழ்.அக.); key.

*[துற → துறப்பு (வேக. 279)]*

**துறம்** *turam,* பெ. (n.) துறவு பார்க்க; see *turavu.* "துறங்காட்டியெல்லாம் விரித்தாற் போலும்" *(தேவா. 19, 3).*

**துறவர்** *turavar,* பெ. (n.) துறவி பார்க்க; see *turavi.*

*[துறவு → துறவர்]*

**துறவறம்** *tura-varam,* பெ. (n.) *1.* பற்றறுநிலை; ascetic life. opp. to illaram. *2.* துறவிகளுக்கு வகுக்கப்பட்டுள்ள நெறிமுறை; the duties

enjoined on ascetics. "துறவறவியல் குறள்". துறவறமும் இல்லறமும் மனத்திலே (பழ.).

**துறவன்** *turavan*, பெ. (n.) துறவி (பாண்டி.); ascetic.

*[துறவு → துறவன்]*

**துறவி**[1] *turavi*, பெ. (n.) துறவு பார்க்க; see *turavu*. "துறந்தோர் தம்முன் துறவியெய்தவும்" (சிலப். 27, 95). துறவிக்கு வேந்தன் துரும்பு (பழ.).

*[துற → துறவு → துறவி (மு.தா. 54)]*

**துறவு** *turavu*, பெ. (n.) *1.* **மந்தணம்;** private affainrs, secrets. "உறவுகொண்டவரவர் துறவு கண்டேன்" (சீதக். 41). *2.* **வாய்ப்பான நிலை;** favaourable juncture. "சோடாய் மரத்திற் புறவிரண்டிருந்திடத் துறவுகண்டே வேடுவன்" (குமரே, சத 85). *3.* **வெளியிடம்;** open ground.

*[துற → துறவு (வே.க. 278)]*

**துறவை** *turavai*, பெ. (n.) *1.* **வெளியிடம்;** open ground, plain. *2.* **வெளிப்படையானது;** that which is open.

*[துற → துறவை]*

**துறவோர்** *turavōr*, பெ. (n.) **முனிவர்;** ascetics; reluses. "துறவோர்க்கொன் நீகலான்" (நாலடி 273).

*[துறவு → துறவோர்]*

**துறு-த்தல்** *turu-*, 11 செ.குன்றாவி. (v.t.) *1.* **திணித்தல்;** to cram as food into the mouth. "வாயிலே சீரையைத் துறத்து" (ஈடு. 9, 9, 1). *2.* **அமுக்குதல்;** to otuft, press or corwd into a bag or box. *3.* **அமைத்தல்;** to place, set up. "விளக்கும் துறத்தனர்" (வீநாயகபு. 3, 13) (செ.அக.).

ம. துறு; க. துறுகு; தெ. துறுகு

*[துறு → துறுத்து (பி.வி.) துறத்தல் (வே.க. 258)]*

**துறு**[3] *turu*, பெ. (n.) *1.* **நெருக்கம்** (திவா); thickness, closeness, crowdedness. *2.* **உண்ணுகை;** eating. *3.* **செம்பூரான்கால்** (சது.); ironstone, laterite.

**துறுகல்** *turu-kal*, பெ (n.) *1.* **பாறை;** rock. "வேழ மிரும்பிணர்த் துறகற் பிடிசெத்துத் தழூஉம்" (ஐங்குறு. 239). *2.* **நீர்க் காலடைக்குங் கல்** (சது.); stone to close the outlet of a channel. *3.* **குன்று;** hillock. "துறுக லேறி" (குங்குறு. 210).

*[துல் → துறு → துறுகல் (வே.க. 253)]*

**துறுட்டி** *turutti*, பெ. (n.) **சிற்றேலம்** (மலை.); true cardamam.

**துறுதுறுத்தவன்** *turu-turuttavan*, பெ. (n.) வேண்டாவினை அல்லது குறும்பு செய்து கொண்டேயிருப்பவன்; mischieve boy.

*[துறு → துறுதுறு → துறுதுவத்தவன் (மு.தா. 561)]*

**துறுதுறுவெனல்** *turu-turu-v-enal*, பெ. (n.) துறுதுறுவெனல் பார்க்க; see *turu-turu-v-enal*.

**துறுப்புக்கூடு** *turuppu-k-kūdu*, பெ. (n.) தூற்றாப் பொலி (திவ். அமலனாதி. அவ. பக். 14); unvinnowed heap of grain.

*[துருப்பு → துறுப்பு + கூடு]*

**துறுபடை** *turu-padai*, பெ. (n.) நெருங்கிய போர்ப்படை (சேனை.) (வின்.); squadron, as in close array.

*[துறு + படை]*

**துறும்பு-தல்** *turumbu-*, 5 செ.குன்றாவி (v.t.) துறுமு பார்க்க; "கொன்றையு நாகமுந் துறும்பு செஞ்சடை" (தேவா. 370, 5).

*[துறுமு → துறும்பு → துறும்புதல் (வே.க. 253)]*

**துறுமல்** *turumal*, பெ. (n.) *1.* **நெருக்கம்;** being close, closeness. *2.* **திரட்சி** (திவா.); globularity; roundness.

*[துறு → துறுமு → துறுமல் (மு.தா. 89)]*

**துறுமு**[1]**-தல்** *turumu*, 5 செ.கு.வி. (v.i.) **நெருங்குதல்;** to be close, corwded. "நறுமல் துறுமி" (பெருங்.இலாவாண. 15, 6).

*[துறு → துறுமு (மு.தா. 89)]*

**துறுமு**[2]**-தல்** *turumu-*, செ.குன்றாவி. (v.t.) **திரட்டுதல்** (வின்.); to make round.

*[துல் → துறுமு → துறுமு-. (மு.தா. 89)]*

**துறுவல்** *turuval*, பெ. (n.) *1.* **நெருங்குகை** (திவா.); thronging, rowding. *2.* **உண்கை** (பிங்.); eating.

3. நுகர்ச்சி; enjoyment of the senses, experience. "துறுவற்கெல்லை யாதெனில்" (ஞானா. 34, 6).

[துறு → துறுவல்]

**துறை** *turai,* பி.பெ. (n.prob.) 1. இடம்; place, location, situation, space, position. "அத்துறை யமலனும்" (ஞானா. 48, 2). 2. வழி; way, path, as of virtue or justice. "துறை திறம்பாமற் காக்கத் தோன்றினான்" (கம்பரா. வாலி. 74,) (தொல்.பொ. 56, உரை). 3. பகுதி; branch, section, category. "வீர ராயவர் புரிவதாண்மைத் துறையென லாயிற் றன்றே" (கம்பரா. வாலி. 82). 4. வழி; method, means. "துறையறிந்து காரியம் நடத்துகிறான்". 5. கடற்றுறை; seaport, harbour, roadstead. "துறைவளர் நாட்டொடு" (சீவக. 1618). 6. கடல்; sea. "துறைமுற்றிய துலங்கிருக்கை" (மதுரைக். 85). 7. ஆறு (திவா.); river. 8. வண்ணானொலிக் குமிடம்; place where washermen wash clothes. துறைச் சொல்லிளுரவராடை கொண்டொலிக்கு நின் புலைத்தி" (கலித். 72, 12). 9. நீர்த்துறை; ghat, bathing shut. "தண்புனற் றுருத்தியுந் தாழ்பூந் துறைகளும்" (மணி. 1, 65). 10. அவைகூடுமிடம் (வின்.); place of meeing, rendezvous. 11. நூல்; branch of knowledge. "மற்றைத் துறைகளின் முடிவும்" (கம்பரா. வாலி. 132). 12. அகமும் புறமும் பற்றிய தமிழ்ப் பொருட்கூறு; subject or theme in akam and puram. "திந்தமிழின் துறைவாய் நுழைந் தனையோ" (திருக்கோ. 20). 13. ஒழுங்கு; proper arrangement, codification. "வேதந் துறை செய்தான்" (குமரபிர.சிதமிப. செய். 13). 14. பாவினத்தொன்று; a minor variety of any of the purckasses o verse, one of three parinam. 15. பாட்டுவகை (பிங்.); a kind of singing. 16. வரலாறு; history. "துறையெனக் கியாதெனச் சொல்லு சொல்லென்றான்" (கம்பரா. மீட்சி. 255).

[துறு → துறை (வே.க. 253)]

**துறைக்காவல்** *turai-k-kāval,* பெ. (n.) துறைமுக முதலியவற்றிற் காவல்; watch or guard of a port; excise officer; military guard.

[துறை + காவல்]

**துறைக்குறை** *turai-k-kurai,* பெ. (n.) ஆற்றிடைக்குறை; fit. "வண்டுறைக்குறை சேர்ந்தான்" (பாரத. சம்பவ. 6).

[துறை + குறை]

**துறைகாட்டு-தல்** *turai-k-kāṭṭu-,* செ.கு.வி. (v.i.) வழிகாட்டுதல்; to lead the way put one in the way.

[துறை + காட்டு-.]

**துறைகாரர்** *turaikārar,* பெ. (n.) கோயிற்கணக்கு முதலிய அலுவலர்; agents, accountants and other servants of a temple.

[துறை + காரர்]

**துறைகூட்டு-தல்** *turaikūṭṭu-,* செ.குன்றாவி. (v.tr) துறை முழுக்கை நிறைவு செய்தல்; to finish lurai-muḻukku.

[துறை + கூட்டு-.]

**துறைச்சாதம்** *turai-c-cādam-,* பெ. (n.) 1. திருவிழாக் காலங்களில் நீர்த்துறையிற் கூடியுண்ணும் விருந்து; food eaten in company at a spring or in a river-bed on festive occassion. 2. கோயிலில் ஏற்பட்ட கட்டளை யுணவு; rice for which provision is made in a temple.

**துறைச்சுவடி** *turai-c-cuvaḍi,* பெ. (n.) நீர்த் துறைகளிலிருந்து படிக்கப்படும் தொன்ம ஏடு; a purāṇa explained at or near a bathing ghat. "துறைச்சுவடிகளிலே எழுதியிட்டு வைத்தும்" (ஈடு. 6, 10, 10.)

[துறை + சுவடி]

**துறைத்தோணி** *turai-t-tōṇi,* பெ. (n.) கரை கடத்துந் தோணி; ferry boat.

[துறை + தோணி]

**துறைப்பாட்டு** *turai-p-pāṭṭu,* பெ. (n.) அகப் பொருட் புறப்பொருட்டுறைகளைக் குறித்து வருஞ் செய்யுள் (இலக். வி. 603, உரை); verse illustrating the minor themes in akam and puram.

[துறை + பாட்டு]

**துறைப்பேச்சு** *turai-p-pēccu,* பெ. (n.) 1. கொச்சைப் பேச்சு; vulgar dialect, provin cialism. 2. நாட்டுமொழி; vernacular.

[துறை + பேச்சு]

**துறைப்பொங்கல்** *turai-p-pongal,* பெ. (n.) வண்ணார் தங்கள் துறையில் நடத்தும் பொங்கற் பண்டிகை; pongal ceremony of washermen performed at the washing place.

*[துறை + பொங்கல்]*

**துறைபடி-தல்** *turai-padi,* பெ. (n.) நீர் நிலைகளில் நீராடுதல்; to bath in a river. "நெடுமா லடியேத்தத் தூவித் துறை படியப் போயினாள்" *(சிலப். 18, 5).*

*[துறை + படி-.]*

**துறைபெய்-தல்** *turai-pey-,* செ.குன்றாவி. (v.t.) நீராடுவித்தல் *(யாழ்.அக.);* to path a person.

*[துறை + பெய்-.]*

**துறைபோ-தல்** *turai-po-,* செ.குன்றாவி. (v.t.) *1.* ஒரு (கல்வி) துறையில் முழுத் தேர்ச்சி பெறுதல்; to get knowledge in a specific field. *2.* எடுத்த கருமத்தில் வெற்றி; to get finished in an attempted affair.

*[துறு → துறை → துறைபோ (வே.க. 253).]*

**துறைமாறு-தல்** *turai-māru,* செ.குன்றாவி. (v.t.) *1.* வழிதவறுதல்; to mistake the proper course. *2.* முன்பயின்றதனைவிட்டு வேறுதொழிலிற் புகுதல்; to change an occupation or employment.

*[துறை + மாறு-.]*

**துறைமுகக்குத்தகை** *turai-muga-k-kuttagai,* பெ. (n.) பரிசிற்காரர் குத்தகை; rent of a ferry.

*[துறைமுகம் + குத்தகை]*

**துறைமுழுக்கு** *turai-mulukku,* பெ. (n.) துலை மாதத்தில் பெண்கள் ஆற்றில் சடங்கு முறையாக நீராடுகை; ceremonial river-bath of women in the month of Aippaci.

*[துறை + முழுக்கு]*

**துறைமுன்றில்** *turai-munril,* பெ. (n.) வீட்டின் முற்றமாகிய இடம்; courtyard of a house. "தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால்" *(ஐந்.ஐம்.37).*

*[துறை + முன்றில்]*

**துறையர்** *turaiyar,* பெ. (n.) கோவை, சேலம் மாவட்டங்களில் வாழும் உழவர்களான கன்னட சாதியார்; a kannarese cultivating caste in coimbatore and salem district.

**துறையார்** *turaiyār,* பெ. (n.) கோயில் வேலைக்காரர்; temple servants *(செ.அக.).*

**துறைவன்** *turaivan,* பெ. (n.) நெய்தனிலத் தலைவன்; chief of a maritime tract. "தண்ணந் துறைவன்" *(ஐங்குறு. 158).*

**துறோட்டி** *turōtti,* பெ. (n.) துறட்டி பார்க்க *(யாழ்.அக.);* see *turatti.*

**துன்** *tun,* பெ. (n.) வளை; hole, cavity. "எலித்துன்" *(செந். 4, 213).*

*[துல் → துன் (வே.க. 275).]*

**துன்பு** *tunbu,* பெ. (n.) துன்பம் பார்க்க; see *tunbam.* "துன்புறு பொழுதினும்" *(தொல். பொ. 184).*

*[துல் → துன் → துன்பு]*

**துன்புறுத்து-தல்** *tunburuttu-,* செகுன்றாவி (v.t.) வருத்துதல்; to cause suffering; to afflict.

*[துல் → துன் → துன்பு + உறுத்து-.]*

**துன்மி-த்தல்** *tunmi-,* 11 செகுவி. (v.i.) வருந்துதல் *(யாழ்.அக.);* to suffer.

*[துன்பு → துன்மி-.]*

**துன்மை** *tunmai,* பெ. (n.) தீமை *(யாழ்.அக.);* harm, evil.

**துன்று-தல்** *tunru-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* நெருங்குதல்; to be close, thick, crowded together. "துன்றுக்கு நறுங்குஞ்சி" *(கம்பரா. குகப். 28).* *2.* கிட்டுதல்; to get near, approximate. *3.* பொருத்துதல்; to get attached; to lie. "கொன்றை மதியமுங் கூவிள மத்தமுந் துன்றிய சென்னியர்" *(திருவாச. 17: 10).*

*[துல் → துன் → துன்னு → துன்று-. (வே.க. 252)]*

**துன்றுநர்** *tunrunar,* பெ. (n.) நண்பர் *(திவா.);* friends, as being near.

*[துன்று → துன்றுநர்.]*

**துன்னகாரர்** *tuṉṉa-kārar,* பெ. (n.) தையற்காரர்; tailors. "துன்ன காரருந் தோலின் றுன்னரும்" (சிலப். 5:32).

*[துன்னம் → துன்னகாரர்]*

**துன்னநாயகர்** *tuṉṉa-nāyakar,* பெ. (n.) துன்னகாரர் (யாழ்.அக.) பார்க்க; see *tuṉṉakārar.*

**துன்னபோத்து** *tuṉṉapōttu,* பெ. (n.) உழவெருமை (வின்.); plough-buffalo.

**துன்னம்**[1] *tuṉṉam,* பெ. (n.) 1. தையல்; seam, sewing, needle work. "இழைவலந்த பஃறுன்னத்து" (புறநா. 136). 2. ஊசித்துளை (பிங்.); eye of a needle.

**துன்னம்**[2] *tuṉṉam,* பெ. (n.) ஒரு வகை மரம்; a kind of tree.

**துன்னம்பெய்-தல்** *tuṉṉam-pey-,* 1 செ.குவி. (v.i.) தைத்தலைக் கொள்ளுதல்; to be stitched, sewed. "துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது வென்னேடி" (திருவாச. 12:2).

*[துன்னம் + பெய்-.]*

**துன்னர்** *tuṉṉar,* பெ. (n.) 1. தையற்காரர் (பிங்.); tailors. 2. தோல்வினை மாக்கள் (யாழ்.அக.); cobblers.

*[துன் → துன்னர் (வே.க. 252).]*

**துன்னல்**[1] *tuṉṉal,* பெ. (n.) தையல்; sewing. "துன்னற் சிதாஅர் துவர நீக்கி" (பொருந. 81).

*[துன் → துன்னல். துன்னல் = துளை]*

E. tunnel. "tunnel = 1. Artificial Subterranean passage through hill etc., or under river etc., Subterranean passage dug by burrowing animal; mining a pit or level open at one end; main flue of chimney" [M.E. 5 of tonel, tonnelle, dim of tonne TUN] எருதந்துறைச் சிற்றகர முதலி C.O.D.) (வே.க. 274).

**துன்னல்**[2] *tuṉṉal,* பெ. (n.) 1. நெருங்குகை; close together. "யாவருந் துன்னல் போகிய துணிவினோனென" (புறநா. 23, 14). 2. சிறு திவலை; small drops of water.

*[துன்னு → துன்னல்]*

**துன்னலர்** *tuṉṉalar,* பெ. (n.) பகைவர்; foes, enemies. "துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்" (கம்பரா. வேள்வி. 28).

*[துன்னு + அல் + அர்]*

**துன்னவாயன்** *tuṉṉavāyaṉ,* பெ. (n.) தையற் காரன்; tailor.

*[துன்னம் + வாயன்]*

**துன்னவினைஞர்** *tuṉṉa-viṉaiñar,* பெ. (n.) தையற்காரர்; tailors. "தோலின் றுன்னருந் துன்ன வினைஞரும்" (மணிமே. 28:39).

*[துன்னம் + வினைஞர்]*

**துன்னாதார்** *tuṉṉātār,* பெ. (n.) துன்னார் பார்க்க; see *tuṉṉār.*

*[துன்னு + ஆ + தார். 'ஆ' எதிர்மறை]*

**துன்னார்** *tuṉṉār,* பெ. (n.) பகைவர்; foes-enemies. "தொல்லமருட் டுன்னாரைச் செற்றும்" (கம்பரா. சரபங்க. 26).

*[துன் → துன்னார் (வே.க. 252)]*

**துன்னியார்** *tuṉṉiyār,* பெ. (n.) நண்பர்; friends, relations, adherents. "மன்னர் திருவுமகளி ரெழினலமுந் துன்னியார் துய்ப்பர்" (நாலடி., 167).

*[துன் → துன்னியார் (வே.க. 252)]*

**துன்னினர்** *tuṉṉiṉar,* பெ. (n.) துன்னியார் பார்க்க; see *tuṉṉiyār.* "துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்" (கம்பரா. வேள்வி. 28).

*[துன் → துன்னினர்]*

**துன்னீர்** *tuṉṉīr,* பெ. (n.) எச்சில்; spittle.

**துன்னு**[1]**-தல்** *tuṉṉu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பொருந்துதல்; to be fitted, joined, attached. 2. செறிதல் (திவா.); to be thick, crowded, to press close. "துன்னிக் குழை கொண்டு தாழ்ந்த குளிர்மரமெல்லாம்" (நாலடி., 167).

**துன்னு**[2]**-தல்** *tuṉṉu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணுகுதல் (திவா.); to approach, approximate, adhere to. "யாவருந் துன்னல் போகிய துணிவினோன்" (புறநா. 23). 2. மேவுதல்; to join, to undertake. "இன்னா ... துன்னாமை வேண்டும் பிறன்கட்செயல்" (குறள், 316). 3. செய்தல்; to do.

"எனைத் தொன்றுந் துன்னற்க தீவினைப்பால்" (குறள், 209). 4. **அடைதல்;** to gain, reach, attain. "துன்னருஞ்சீர்" (நாலடி, 226). 5. **உசாவுதல்;** to consider, take counsel. "தொடைவிடைதுன்னி" (பு.வெ. 8:19, உரை).

[துல் → துன்னு-. (வே.க. 252)]

**துன்னு[3]-தல்** tuṉṉu-, 5 செ.குன்றாவி. (v.i.) **தைத்தல்;** to sew, stitch. "நீயிங்குடுத்திய கந்தையைத் துன்னுவா ரிலையே பரஞ்சோதியே" (அருட்பா, I, காட்சிப் பெரு. 4).

[துல் → துன்னு-. (வே.க. 252)]

**துன்னு[4]-தல்** tuṉṉu-, 5 செ.குன்றாவி. (v.t.) **உழுதல்** (செந். 4, 213); to plough.

**துன்னு[5]** tuṉṉu, பெ. (n.) 1. முதுகு (அகநி.); back. 2. **சதை** (வின்.); flesh. 3. **இறைச்சி** (வின்.); meat.

[துன் → துன்னு]

**துன்னுநர்** tuṉṉunar, பெ. (n.) துன்னியார் (திவா) பார்க்க; see tuṉṉiyār.

**துன்னூசி** tuṉ-ṉ-ūsi, பெ. (n.) **தையலூசி;** needle, shoemaker's awl. "கொற்சேரி நுண்டுளைத் துன்னூசி விற்பாரின்" (ஐந்ஐம். 21). "கொழுச் சென்ற வழித் தூன்னூசி சென்றாற்போல" (தொல்.சி. பாயி. நச். உரை).

[துன் → துன்னு → துன்னூசி]



**துன்னெலி** tuṉṉeli, பெ. (n.) **வளை தோண்டும் எலிவகை** (செந். 4, 213); mole.

[துல் → துன் + எலி. துன் = வளை (வே. க. 275)]

**துனாவி** tuṉāvi, பெ. (n.) **திப்பிலி** (மலை.); long pepper.

**துனி[1]-த்தல்** tuṉi-, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **வெறுத்தல்;** to loath, abhor. "துனித்துநீர் துளங்கல் வேண்டா" (சீவக. 745). 2. **கலாய்த்தல்;** to be angry at, displeased with. "முனியார் துனியார்" (ஆசாரக். 70). 3. **நெடிது புலத்தல்;** to be sulky, as in a love-quarrel. "நாணின்றி வரினெல்லா துனிப்பேன்யான்" (கலித். 67:16).

[துல் → துன் → துனி-. (மு.தா. 226)]

**துனி[2]** tuṉi, பெ. (n.) 1. **வெறுப்பு;** disgust, dissatisfaction, loathing. "இனியறிந்தேனது துனியாகுதலே" (கலித். 14). 2. **சினம்;** anger, displeasure. "நான் முகனையும் படைப்ப னீண் டெனாத் தொடங்கிய துனியுறு முனிவன் றோன்றினான்" (கம்பரா. கையடை. 3). 3. **புலவிநீட்டம்;** protracted sulk in a love quarrel. "துனியும் புலவியு மில்லாயின்" (குறள், 1306). 4. **பிரிவு;** separation, as from a lover. "துனிசெய்து நீடினும்" (கலித். 10). 5. **துன்பம்;** affliction, sorrow, distress. "இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியும்" (தொல். பொருள். 303). 6. **நோய்** (சூடா.); disease. 7. **கரிசு;** sin. "துனியினி துகவே" (ஞானா. 43:32). 8. **குற்றம்;** flaw. "துனியறு செம்மணி" (கம்பரா. மந்தரை. 32). 9. **இடையூறு;** obstacle, hindrance, trouble. "துனியின்றி யுயிர்செல்ல" (கம்பரா. குலமுறை. 14). 10. **வறுமை;** poverty. "சீருடைச் செல்வர் சிறுதுனி" (குறள், 1010). 11. **அச்சம்** (வின்.); fear, dread.

[துல் → துன் → துனி (மு.தா. 226)]

**துனி[3]** tuṉi, பெ. (n.) **ஆறு** (சூடா.); river.

**துனிப்பு** tuṉippu, பெ. (n.) **வெறுப்பு;** aversion, disgust. "துனிப்புறு கிளவியால்" (சீவக. 1020).

[துனி → துனிப்பு]

**துனை-தல்** tuṉai-, 2 செ.குவி. (v.i.) **விரைதல்;** to hasten. "கோதைக்குத் துனைந்து சென்றுரைப்ப" (சிலப். 8:114).

[துல் → துன் → துனை-. (மு.தா. 60)]

**துனைவு** tuṉaivu, பெ. (n.) **விரைவு;** quickness, celerity, suddenness, speed. "கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள" (தொல். சொ. 315).

[துல் → துன் → துனை → துனைவு (மு.தா. 60)]

# தூ

**தூ**[1] *tū,* பெ. (n.) **தகர மெய்யும் ஊகார உயிரும் சேர்ந்த உயிர்மெய்யெழுத்து;** the compound of 't' and 'ū'.

*[த் + ஊ – தூ]*

'தூ' எழுத்துத் தமிழில் பெரும்பான்மையாக வழங்குவதில்லையாதலால் கல்வெட்டுகளில் அரிதாகவே காணப்படுகிறது.

'தூ' என்பது தூய்மை, வெண்மை, வன்மை, பற்றுக்கோடு, பகை, தசை, தூவி என்ற பொருளில் பெயராயும், இகழ்ச்சிக் குறிப்புப் போல இடைச்சொல்லாயும் வரும்.

ஓரெழுத்தொரு மொழியிலன்றி ஈற்றில் இது வாராது. 'வந்தூது' என்பது போலப் புணர்ச்சியின் பயனாகத் தொடர் மொழியிலும் 'என்பதூஉம்' என்பது போல அளபெடை எழுந்த சொல்லிலும் அன்றி மொழியிடையில் வாராது. மொழிக்கு முதலில் வரும்போது தூ, தூகு, தூசு, தூவு, தூங்கு, தூறு, தூது, தூம்பு, தூவி, தூண்டு, தூணி, தூள் முதலியவற்றின் அடியாகப் பிறந்த சொற்களன்றிப் பிற சொற்கள் எல்லாம் பிறமொழிச் சொற்களாம். (தெ.பொ.மீ. கலைக்களஞ்சியம்)

**தூ**[2] *tū,* பெ. (n.) *1.* **தூய்மை;** purity, cleanliness. "தூமலர் துவன்றிய" *(மலைபடு. 51).* **2. தூயது** *(பிங்.);* that which is pure. *3.* **வெண்மை;** brightness, whiteness. "தூமதி வாக்கிய கிரணம்" *(காஞ்சிப்பு. நாட்டு. 96).*

*[தூய் (தூய்மை) → தூ]*

**தூ**[3] *tū,* பெ. (n.) **வலிமை;** strength. "தூவெதிர்ந்து பெறாஅத்தாவின் மள்ள ரொடு" *(பதிற்றுப். 81:34).* **2. பற்றுக் கோடு;** support, prop. "இனந் தூய்மை தூவா வரும்" *(குறள். 455).* **3. பகை** *(பிங்.);* hostility, enmity.

*[து → தூ (வ.மொ.வர.)]*

**தூ**[4] *tū,* பெ. (n.) *1.* **இறைச்சி** *(பிங்.);* meat. "நெய்கொணிணந்து நிறைய வமைத்திட்ட . . . அடிசில்" *(பு.வெ. 10, முல்லை. 8).* **2. தசை;** flesh.

*[துய் → தூ. துய் = உணவு, மென்மை]*

**தூ**[5] *tū,* இடை. (int.) **இழிவையும் அருவருப்பையும் வெளிப்படுத்தும் சொல்;** an exclamation expressing one's disapproval and disgust. *தூ! நீயும் ஒரு பிறவியா?*

**தூ**[6] *tū,* பெ. (n.) **பறவையினிறகு;** feather, plumage. "தூவிரிய மலருழக்கி" *(திவ். பெரியதி. 3, 6:1).*

*[தூவி → தூ]*

**தூக்கக்கலக்கம்** *tūkka-k-kalakkam,* பெ. (n.) **தூக்கத்திலிருந்து விடுபடாத அல்லது தூக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாத நிலை;** state of being not fully awake. *தூக்கக் கலக்கத்தோடு கதவைத் திறந்தான்.*

*[தூக்கம் + கலக்கம்]*

**தூக்கங்கொள்(ளு)-தல்** *tūkkaṅgoḷ(ḷ)u-,* 13 செ.குவி. (v.i.) **தூங்குதல்;** to sleep; to get sleep.

*[தூக்கம் + கொள்-.]*

**தூக்கங்கொள்ளாமை** *tūkkaṅkoḷḷāmai,* பெ. (n.) **தூக்கம் பிடியாமை;** sleeplessness.

*[தூக்கம் + கொள்ளாமை]*

**தூக்கணக்கயிறு** *tūkkaṇa-k-kayiṟu,* பெ. (n.) **ஆழமான நீருள் முக்குளிப்பவனை முக்குளிக்குங் காலத்துக் கட்டியிழுக்குங் கயிறு;** rope that holds a diver while he is under water.

*[தூக்கணம் + கயிறு]*

**தூக்கணங்குரீஇ** *tūkkaṇaṅgurīi,* பெ. (n.) **தூக்கணங்குருவி** பார்க்க; see *tūkkaṇaṅ-guruvi.* "தூக்கணங் குரீஇ . . . பெண்ணைத் தொடுத்த கூடினும்" *(குறுந். 374).*

**தூக்கணங்குருவி** *tūkkaṇaṅ-guruvi,* பெ. (n.) **மெல்லிய நாரால் சிறுசிறு அறைகளைக் கொண்டதாகத் தொங்கும் கூட்டைக் கட்டும் சிறிய சாம்பல் நிறப் பறவை;** weaver bird, ploceus baya, as building hanging nests. *தூக்கணங்குருவி குரங்கிற்கு அறிவுரை புத்தி சொன்னது போல (பழ.).*

*[தூக்கணம் + குருவி]*



உயர்ந்த மரவுச்சியில் இலைகளால் கூடு கட்டி அதில் தங்கும் இயல்புடைய பறவை.

**தூக்கணம்** *tūkkaṇam,* பெ. (n.) *1.* **தொங்கட்டான், தொங்கல்** *(வின்.);* pendant, anything suspended. *2.* **உறி** *(சங்அக.);* suspended network of rope for supporting a pot. *3.* **தூக்கணங்குருவி** *(ஆசாரக். 96, உரை)* பார்க்க; see *tūkkaṇaṅ-guruvi.* *4.* **தூக்கணக்கயிறு** *(யாழ்அக.)* பார்க்க; see *tūkkaṇana-k-kayiṟu.*

*[தூக்கு → தூக்கணம்]*

**தூக்கணாங்குருவி** *tūkkaṇāṅ-guruvi,* பெ. (n.) தூக்கணங்குருவி பார்க்க; see *tūkkaṇaṅguruvi.*

*[தூக்கணம் + குருவி]*

**தூக்கணான்** *tūkkaṇāṉ,* பெ. (n.) தூக்கணங் குருவி பார்க்க; see *tūkkaṇaṅ-guruvi.* "தூக்கணான் குஞ்சு" *(விறலிவிடு. 632).*

*[தூக்கணம் → தூக்கணான்]*

**தூக்கந்தெளி-தல்** *tūkkandeḷi-,* 4 செ.குவி. (v.i.) **தூக்கத்தினின்று விழித்தல்;** waking from sleep.

*[தூக்கம் + தெளி-.]*

**தூக்கநடையன்** *tūkka-naḍaiyaṉ,* பெ. (n.) *1.* **தூங்கிக்கொண்டே நடப்போன்;** a person who walks in his sleep; sleep walker. *2.* **தூக்கத்தில் எழுந்து நடப்பவன்;** a night walker.

*[தூக்கம் + நடையன்]*

**தூக்கம்**[1] *tūkkam,* பெ. (n.) *1.* **மெய்மறந்து, மனத்தின் செயலற்று இறந்தவனைப் போல் கிடக்கச் செய்யும் ஒரு நிலைமை, உறக்கம்;** sleep, drowsiness, sleeping. "பெண்ணென்றாற் றூக்கம் பிடியாது" *(அருட்பா. I, விண்ணப்பக்கலி. 343).* *2.* **அயர்வு** *(யாழ்அக.);* fatigue, weariness. *3.* **சோம்பு** *(யாழ்அக.);* laziness, lassitude, dullness. *4.* **வாட்டம்;** drooping, as of plants. *5.* **முகச்சோர்வு;** downcast, dejected countenance. *6.* **விலைபோகாமலிருக்கும் நிலை;** lowness of price absence of demand; dullness of market. இந்தச் சரக்குகளுக்கு இப்போது தூக்கந்தான் *(இ.வ.).* *7.* **காற்று முதலியவற்றின் தணிவு;** cessation; mitigation; abatement, as of wind; subsidence, as of fever. "ஆனித் தூக்கம்" *(யாழ்அக.).* *8.* **கால நீட்டிக்கை;** delay. "தூக்கங் கடிந்து செயல்" *(குறள், 668).* *9.* **அணிகலத் தொங்கல்** *(பிங்.);* pendants in jewels. "பொன்னின் கொடித் தூக்கத்தில் தலையில் தைச்ச பூப்பதினாறு" *(S.I.I.ii,5).* *10.* **ஒருவகை மாலை;** a kind of garland. "பூவும் பட்ட மாலையுந் தூக்கமு மலங்கரித்து" *(பதினொ. கண்ணப்ப. மறம். நக்கீர. 53).* *11.* **ஒப்பனைத் தொங்கல்;** ornamental hanging. "தூக்கங்கள் . . . விளங்க" *(சிவரக. சகமுனி. 9).* *12.* **நான்கு உருளைகொண்ட சட்டத்தின் மேல் நாட்டிய துலாத்திலிருந்து கையில் குழந்தையை யுடைய மாந்தனொருவனைத் தொங்கவிட்டுக் காளிகோயிலைச் சுற்றி மும்முறை இழுப்பிக்கும் சடங்கு** *(நாஞ்.);* a vow by which a person with a child in his arms is suspended from a pole mounted on a four-wheeled contrivance and drawn thrice round a Kāli temple. *13.* **காதணி வகை** *(யாழ்அக.);* a kind of ear-ornament. *14.* **தூக்கணங்குருவி** *(அக.நி.)* பார்க்க; see *tūkkaṇaṅ-guruvi.*

*[தூங்கு → தூக்கம்]*

**தூக்கம்**[2] *tūkkam,* பெ. (n.) *1.* **நிறுப்பு;** weighing. "தூக்கம் ஒன்றுக்கு பண இடை பத்தக தூக்கம் இருபது" *(S.I.I. ii, 339).* *2.* **விலையேற்றம்;** rise price. *3.* **உயரம்** *(உரிநி.);* height.

*[தூக்கு → தூக்கம் (மு.தா.)]*

**தூக்கம்பிடி-த்தல்** *tūkkam-piḍi-,* 4 செ.குவி. (v.i.) **உறக்கங் காணுதல்;** to feel sleepy *(சா.அக.).*

*[தூக்கம் + பிடி-.]*

**தூக்கம்விடு-தல்** *tūkkam-viḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) 1. தூக்கம் தெளிதல்; to wake from sleep. 2. ஒப்பனைத் தொங்கல் கட்டுதல் (வின்.); to put up hanging or festoons; to make ornamental hanging-work in metal, in masonry, in carving etc.

*[தூக்கம் + விடு-.]*

**தூக்கமயக்கம்** *tūkka-mayakkam,* பெ. (n.) தூக்கத்திற்கு முன்பாக அடிக்கடி கொட்டாவி விட்டு, சோம்பல் கொள்ளும் நிலைமை; yawning frequently and feeling drowsy indicative of sleep-ocitation (சா.அக.).

*[தூக்கம் + மயக்கம்]*

**தூக்கமருந்து** *tūkka-marundu,* பெ. (n.) தூக்கத்தை உண்டாக்கும் மருந்து; medicine or drugs causing sleep.

*[தூக்கம் + மருந்து]*

**தூக்கமில்லாமை** *tūkkam-illāmai,* பெ. (n.) தூக்கம் வாரா நோய்; insomnia.

*[தூக்கம் + இல்லாமை]*

**தூக்கமூட்டி** *tūkka-mūṭṭi,* பெ. (n.) தூக்கம் வரும்படி செய்யும் மருந்து; any medicine or drug inducing sleep-Narcotic.

*[தூக்கம் + ஊட்டி]*

**தூக்கமெழுப்பி** *tūkkam-eḻuppi,* பெ. (n.) 1. தூக்கத்தை உண்டாக்கும் மருந்து; drug which induces sleep - Narcotic. 2. மூளையைத் தாக்காமலே தூக்கத்தை உண்டாக்குவது; hypnotic.

*[தூக்கம் + எழுப்பி]*

**தூக்கல்** *tūkkal,* பெ. (n.) 1. விலை முதலிய வற்றின் ஏற்றம்; rise, increase, as in price. 2. உயரம்; height. 3. நிறுக்கை; weighing. 4. தூக்குகை; lifting. 5. நேராகத் தூக்குகை; carrying straight.

*[தூக்கு → தூக்கல்]*

**தூக்கானந்தம்** *tūkkāṉandam,* பெ. (n.) தாளமமைத்து இசையிற்பாடும் போது பெயரைப் பிளந்து கூறுதலாலும்குரலை உயர்த்திடுதல் தாழ்த்திடுதல் களாலும் தலைவன் பெயர் புலனாகாதவாறு அமைக்குங் குற்றம் (யாப். வி. 96, பக். 522); a defect in singing with accompaniment, in which the hero's name is made unintelligible by raising or lowering the voice, etc.

*[தூக்கு + ஆனந்தம்]*

**தூக்கிக்கொடு-த்தல்** *tūkki-k-koḍu-,* 4 செ.குவி. (v.i.) கேள்வி கேட்காமல், தயக்கம் இல்லாமல் கேட்டதை உடனடியாகத் தருதல்; gift away; give on a platter. யாரென்றுகூடப் பார்க்காமல் தூக்கிக் கொடுத்து விட்டான்.

*[தூக்கி + கொடு-.]*

**தூக்கிட்டு** *tūkkiṭṭu,* வி.எ. (adv.) தூக்குப் போட்டு; commit suicide by hanging. பெண்ணொருத்தி தூக்கிட்டுத் தற்கொலை செய்து கொண்டாள்.

*[தூக்கு + இட்டு]*

**தூக்கித்தூக்கிப்போடு-தல்** *tūkki-t-tūkki-p-pōḍu-,* 20 செ.குவி. (v.i.) 1. மேடு பள்ளத்தில் வண்டி ஏறி இறங்கும்போது ஊர்ந்து செல்பவரை இருக்கையில் உட்காரவிடாமல் ஆட்டுதல்; jolt while travelling on a bad road. பேருந்தின் இறுதியில் உள்ள இருக்கையில் உட்காராதே; தூக்கித் தூக்கிப்போடும். 2. குளிர்காய்ச்சலால் உடம்பு துள்ளி மேலெழுதல்; shiver severly due to fever. காய்ச்சல் அதிகமானதால் உடல் தூக்கித் தூக்கிப் போடுகிறது.

*[தூக்கி + தூக்கி + போடு-.]*

**தூக்கிநிறுத்து-தல்** *tūkki-niṟuttu-,* 5 செ.குவி. (v.i.) வணிகம், அரசியல், குடும்பம் முதலிவற்றில் சரிவு நிலையைத் தடுத்து ஒரு நிலைக்குக் கொண்டு வருதல்; bolster; baleout. நடந்து முடிந்த இடைத் தேர்தல் வெற்றிதான் ஆட்சியைத் தூக்கி நிறுத்தியது. 'தூக்கி நிறுத்தடா பிணக்காடாய் வெட்டுகிறேன்' (பழ.).

*[தூக்கி + நிறுத்து-.]*

**தூக்கிப்பிடி¹-த்தல்** *tūkki-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* எடுத்து நிறுத்துதல்; to uphold, set erect, as a person. *2.* நுணுகிக் குற்றங் காணுதல் (வின்.); to hunt out trival faults.

*[தூக்கி + பிடி-.]*

**தூக்கிப்பிடி²-த்தல்** *tūkki-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) கஞ்சத்தனமாயிருத்தல் (உ.வ.); to be niggardly.

*[தூக்கி + பிடி-.]*

**தூக்கிப்பிடி³-த்தல்** *tūkki-p-piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* இழுத்துப்பிடித்தல்; stretching as nerves in spasmotic contraction. *2.* எழுப்பிப் பிடித்துக் கொள்ளுதல்; lifting and holding up as a sickman.

*[தூக்கி + பிடி-.]*

**தூக்கிப்போடு-தல்** *tūkki-p-pōḍu-*, 19 செ.குன்றாவி (v.t.) *1.* திடுக்கிடுமாறு செய்தல்; to startle, upset; to alarm. "அந்தச் செய்தியைக் கேட்டதும் அது என்னைத் தூக்கிப் போட்டது". *2.* வெளியில் எடுத்து விடுதல்; to take out, extract. "நீரில் விழுந்த அவனைத் தூக்கிப் போட்டான்" *3.* தூக்கு (மரண) தண்டனையாகத் தூக்கிலிட்டு விடுதல்; to execute by hanging. *4.* கோட்சொல்லிச் சண்டை மூட்டுதல்; to set persons by the ears.

*[தூக்கி + போடு-.]*

**தூக்கியடி-த்தல்** *tūkki-y-aḍi-*, 4 செ.குன்றாவி (v.t.) *1.* தான் மேம்பட்டுப் பிறனைப் பின்வாங்கச் செய்தல்; to get the better of, excel. அவன் எந்த நிலையிலும் இவரைத் தூக்கியடிக்கிறான். *2.* மற்போரில் அசட்டையாக (அலட்சியமாக) தோல்வியுறச் செய்தல்; to over throw with case in wrestling.

*[தூக்கி + அடி-.]*

**தூக்கியெறி-தல்** *tūkki-y-eṟi*, 3 செ.குன்றாவி (v.t.) *1.* விலக்குதல்; to refuse to accept. மக்கள் கிளர்ந்தெழுந்து ஆட்சியைத் தூக்கியெறிந்தனர். *2.* தூக்கியடி-. பார்க்க; see *tūkki-y-aḍi-*. *3.* அசட்டை பண்ணுதல்; to disregard, treat with insolvence or impertinence.

*[தூக்கி + எறி-.]*

**தூக்கிரும்பு** *tūkkirumbu*, பெ. (n.) இரும்புத் துறட்டி (வின்.); iron crook.

*[தூக்கு + இரும்பு]*

**தூக்கில்போடு-தல்** *tūkkil-pōḍu-*, 19 செ.கு.வி. (v.i.) தூக்கு (சுருக்கு)க் கயிற்றைக் கழுத்திலிறுக்கி இறக்கச் செய்தல்; hang to death. குற்றவாளியின் உயிர் பிரியும் வரை தூக்கில்போடத் தீர்ப்பாயிற்று.

*[தூக்கில் + போடு-.]*

**தூக்கிலி** *tūkkili*, பெ. (n.) ஆராய்ந்து பார்க்காதவன் (ஆலோசனையில்லாதவன்); thoughtless person. "தூக்கிலி தூற்றும் பழி" (கலித். 63).

*[தூக்கு → தூக்கிலி]*

**தூக்கிலிடு-தல்** *tūkkil-iḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) தூக்கில்போடு-தல் பார்க்க; see *tūkkil-pōḍu-*.

*[தூக்கில் + இடு-.]*



**தூக்கிவிடு-தல்** *tūkki-viḍu*, 18 செ.குன்றாவி. (v.t.) *1.* மேலுயர்த்துதல்; to lift up; to clevate. *2.* உதவிபுரிந்து காத்தல்; to save from danger or ruin, help in emergency. *3.* தூண்டிவிடுதல்; to stir up, instigate. *4.* தூக்கிலிடு பார்க்க; see *tūkkil-iḍu*.

*[தூக்கு → தூக்கி + விடு-.]*

**தூக்கிவாரிப்போடு-தல்** *tūkki-vāri-p-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) ஒரு நிகழ்வின் அல்லது செய்தியின் எதிர்பாராத கடுமையான தன்மையால் அதிர்ச்சி அடைதல்; be startled.

நண்பர் திடீரென்று இறந்ததும் தூக்கி வாரிப் போட்டது.

*[தூக்கு + வாரிப்போடு-.]*

**தூக்கு[1]-தல்** *tūkku-*, 5 செ.குன்றாவி. (v.t.) **உயர்த்துதல்;** to lift, lift up, raise, take up, hold up; to hoist, as a flag. "முட்டுறு கவரி தூக்கி யன்ன" *(அகநா. 156).* மேசையைத் தூக்கி வை. 2. **நிறுத்துதல்;** to weigh, balance. "செம்பொன் தூக்கி" *(திருவிளை. மாணிக்க. 84).* 3. **ஆராய்ச்சி செய்தல்;** to consider, reflect, investigate. "துணைவலியுந் தூக்கிச் செயல்" *(குறள், 471).* 4. **ஒப்பு நோக்குதல்;** to compare. "அமரரோ டசுரர் போரைத் தூக்கினர் முனிவர்" *(கம்பரா. நாகபாச. 52).* 5. **மனத்திற் கொள்ளுதல்;** to have in view; to expect. "சிறியதோர் பயனைத் தூக்கித் தீயவர் செய்யுஞ் சூழ்ச்சி" *(கந்தபு. கயமுகனுறற். 64).* 6. **தொங்க விடுதல்;** to hang suspend. "மறுகு விளக்குறுத்து மாலை தூக்கி" *(அகநா. 141).* 7. **தூக்கிலிடு** பார்க்க; see *tūkkil-iḍu.* "அக்குற்றவாளியைத் தூக்கினார்கள்". 8. **கை கொடுத்துதவுதல்;** to lift up, as one from a pit; to lend a helping hand. 9. **நங்கூரம் வலித்தல்** (வின்.); to weigh anchor. 10. **அசைத்தல்;** to shake, agitate, cause motion. "வாடை தூக்க வணங்கிய தாழை" *(கலித். 128).* 11. **தாங்கும் வலியிலதாகச் செய்தல்;** to take by storm; to overpower, as a strong sweet smell. வாசனை ஊரைத் தூக்குகிறது *(உ.வ.).* 12. **ஒற்றறுத்தல்** (பு.வெ. 7: 18); to set to time-measure.

*[தாங்கு + தூக்கு]*

**தூக்கு[2]** *tūkku*, பெ. (n.) 1. **தொங்கற் பொருள்;** pendant, anything suspended. "சல்லியுந் தூக்குமாக விட்ட முத்தமிழ் மாலை" *(சீவக. 1170, உரை).* 2. **உறி** (பிங்.); suspended net-work of rope supporting a pot. 3. **சுவடித் தூக்கு;** satchel, hanging frame for holding ola books. 4. **மாட்டற் கொக்கி;** hook or rope to suspend anything; cord for carrying a parcel. 5. **தூக்குமரம்** பார்க்க; see *tūkkumaram.* 6. **நிறைகோல்** (பிங்.); balance. 7. **துலையோரை;** libra in the zodiac. 8. **தூக்குக்கோல்** பார்க்க; see *tūkku-k-kōl.* 9. **எடை** (அக.நி.); weight. 10. **ஐம்பது பலம்;** a bazaar weight = 50 palams. 11. **100 பலம்** (பிங்.); standard weight = 1 tuḷām - 100 palams. 12. **கைத்தூக்குப் பண்டம்;** anything carried by hand, as in a basket. 13. **காத்தண்டு** (திவா.); yoke, piece of timber shaped to fit a persan's shoulders and support pail, etc., at each end. 14. **தூக்குமட்டப் பலகை;** wooden frame of a plumb line. 15. **தூக்கு நூல்** (வின்.); plumb line. 16. **தூக்கணங்குருவி** (அக.நி.) பார்க்க; see *tūkkaṇāṅguruvi.* 17. **உயர்ச்சி** (திவா.); height. 18. **ஏற்றம்;** rise, as in prices. விலை தூக்காயிருக்கிறது. 19. **செங்குத்து;** perpendicularity, steepness. "மடையிலிருந்து தண்ணீர் தூக்காகப் பாய்கிறது" *(தண்டி. 33).* 20 **ஒப்பு;** comparison, similitude. 21. **ஆராய்ச்சி** (சூடா. 11:9); deliberation, weighing in the mind, pondering. "தூக்கிலி தூற்றும் பழியென" *(கலித். 63).* 22. **செய்யுள்** (திவா.); poem. "மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்" *(நன்.53).* 23. **பாக்களைத் துணிந்து நிறுக்குஞ் செய்யுளுறுப்பு** (தொல்.பொருள். 313); a pause which helps in determining the metrical nature of a verse. 24. **கூத்து** (திவா.); dancing. 25. **இசை;** music. "பாணிநடை தூக்கு" *(பு.வெ. 12, வென்றிப். 17).* 26. **செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத் தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத் தூக்கு, கழாற்றூக்கு, நெடுந் தூக்கு என்று எழு வகைப்படும் தாளவகை** (சிலப், 14:150, உரை); a musical mode, of which there are seven kinds according to tāḷam, viz., sen-tūkku, matalai-t-tūkku, tuṇipu-t-tūkku, kōyiṟṟūkku; nivappu-t-tūkku, kaḻāṟṟūkku, nedundūkku. 27. **தாளத்தில் இரண்டு மாத்திரைக் காலம்** (சிலப். 3:16, உரை); a variety of time-measure consisting of two mātras, corresponding to kuru. 28. **ஆசிரியர்** (அக.நி.); guru.

*[தாங்கு + தூக்கு]*

**தூக்கு[3]** *tūkku*, பெ. (n.) **மேற்புறம் வளைவான பிடியுள்ள உருண்டை வடிவச் சிறு வாளி;** a vessel with an arch-shaped handle. தூக்கும் பணமும் கொடுங்கள், எண்ணெய் வாங்க.

*[தாங்கு → தூக்கு]*



**தூக்குக்கயிறு** *tūkku-k-kayiṟu,* பெ. (n.) கழுத்தை இறுக்கிக் கொல்லும் சுருக்குப் போடப்பட்ட கயிறு; rope with a sling; noose for hanging. தூக்குப் போடும்போது தூக்குக் கயிறு அறுந்து விட்டது.

*[தூக்கு + கயிறு]*

**தூக்குக்குண்டு** *tūkku-k-kuṇḍu,* பெ. (n.) நூற் குண்டு; plumb line.

*[தூக்கு + குண்டு]*



**தூக்குக்கோல்** *tūkku-k-kōl,* பெ. (n.) நிறுக்குந் துலைக் கோல் வகை (பிங்.); steelyard.

*[தூக்கு + கோல்]*



**தூக்குங்கோல்** *tūkkuṅ-gōl,* பெ. (n.) தூக்குக்கோல் பார்க்க; see *tūkku-k-kōl.*

*[தூக்கு + கோல்]*

**தூக்குச்சட்டி** *tūkku-c-caṭṭi,* பெ. (n.) குழம்பு முதலியன பகிர்ந்தளிக்கும் ஏன வகை; a kind of vessel with handle and tip for distributing sauce, etc.,

*[தூக்கு + சட்டி]*

**தூக்குணி** *tūkkuṇi,* பெ. (n.) *1.* தூக்குண்டவன் (வின்.); malefactor who is hanged. *2.* மான மற்றவன்; shameless person. "பண்பு நீதியறியாத தூக்குணிப் பள்ளன்" (பறாளை, பள்ளு). *3.* தூக்குக்கு அஞ்சாதவன் (வின்.); one so vile and daring as not to fear hanging. *4.* சாப்பாட்டுக்குத் தொங்குகிறவன் (வின்.); one who hangs about to get food.

*[தூக்கு + உண் - தூக்குண் → தூக்குணி]*

**தூக்குத்தண்டனை** *tūkku-t-taṇḍaṉai,* பெ. (n.) தூக்கிலிட்டுக் கொல்லுமாறு முறைமன்றம் வழங்கும் தண்டனை; sentence of death by hanging.

*[தூக்கு + தண்டனை]*

**தூக்குத்தலரிசி** *tū-k-kuttal-ariśi,* பெ. (n.) நன்றாகக் குத்தித் தூய்மை செய்த அரிசி (S.I.I. iv, 177); well-polished rice.

*[தூ + குத்தல் + அரிசி]*

**தூக்குத்தூக்கி** *tūkku-t-tūkki,* பெ. (n.) சுவடித் தூக்கைத் தூக்குபவன்; satchel-bearer.

*[தூக்கு + தூக்கி]*

**தூக்குநாசி** *tūkku-nāśi,* பெ. (n.) *1.* கடல் மீன் வகை; a kind of sea fish. *2.* பசிய நிறமுள்ளதும் 22 விரலம் வளர்வதுமான கடல் மீன் வகை; a kind of sea fish, greenish, attaining 22 in. in length.

*[தூக்கு + நாசி]*

**தூக்குநூல்** *tūkku-nūl,* பெ. (n.) சுவரின் ஒழுங்கறியும் நூற்கயிறு; plumb line.

*[தூக்கு + நூல்]*



**தூக்குப்பரிசை** *tūkku-p-parišai,* பெ. (n.) ஒரு கையால் தூக்கும் அளவு (யாழ். அக.); weight that can be lifted by a single-hand.

*[தூக்கு + பரிசை]*

**தூக்குப்பாலம்** *tūkku-p-pālam,* பெ. (n.) வழிவிடுவதற்காகப் பிரிந்து உயரே எழும்பிப் பின் இணையக்கூடிய பாலம்; draw bridge படகுக்கு வழி விடுவதற்காகத் தூக்குப்பாலம் தூக்கப்பட்டது.

*[தூக்கு + பாலம்]*



**தூக்குப்போடு-தல்** *tūkku-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) தூக்கில்போடு-தல் பார்க்க; see *tūkkil-pōḍu-.* 2. தூக்குக் கயிற்றில் தொங்குதல்; hang. அவமானம் தாங்காமல் தூக்குப்போட்டுத் தற்கொலை செய்து கொண்டார்.

*[தூக்கு + போடு-]*

**தூக்குபாலம்** *tūkku-pālam,* பெ. (n.) தோணிகளாலியன்ற மிதவைப் பாலம் (வின்.); floating bridge, pamtoon bridge.

*[தூக்கு + பாலம்]*

**தூக்குமரம்** *tūkku-maram,* பெ. (n.) தூக்குத் தண்டனை நிறைவேற்றுவதற்காக அமைந்த மரம்; gallows.

ம. தூக்குமரம்

*[தூக்கு + மரம்]*

**தூக்குமாலை** *tūkku-mālai,* பெ. (n.) கோயில் ஊர்திகளில் தொங்கவிடுவதற்குரிய மாலை வகை; garlands hung in temple-vehicles, etc.

*[தூக்கு + மாலை]*

**தூக்குமூக்குத்தி** *tūkku-mūkkutti,* பெ. (n.) மூக்குத்தி வகை; a kind of nose-ornament. "தூக்குமூக்குத்தி தூங்காக் குமிழையு நின்மூக்குக் குவமை சொன்னால் முத்தமிழோர்க் கொவ்வாதே" (கூளப்ப.).

*[தூக்கு + மூக்குத்தி]*

**தூக்குமேடை** *tūkku-mēḍai,* பெ. (n.) தூக்குத் தண்டனை நிறைவேற்றும் இடம்; platform with gallows. நாட்டு விடுதலைக்காகப் பலர் தூக்குமேடை ஏறினர்.

*[தூக்கு + மேடை]*



**தூக்குருண்டை** *tūkkuruṇḍai,* பெ. (n.) தூக்குநூல் பார்க்க; see *tūkku-nūl.*

*[தூக்கு + உருண்டை]*

**தூக்குவண்டி** *tūkku-vaṇḍi,* பெ. (n.) வண்டி வகை (புதுவை.); a kind of carriage.

*[தூக்கு + வண்டி]*

**தூக்குவாங்கு-தல்** *tūkku-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தூக்குப்போடு-தல் பார்க்க; see *tūkku-p-pōḍu-.*

*[தூக்கு + வாங்கு-]*

**தூக்குவாளி** *tūkku-vāḷi,* பெ. (n.) உணவு பொருள்களைப் பகிர்ந்தளிக்கப் பயன்படும் வாளி போன்ற அமைப்புடைய சிறிய ஏனம்; see *tūkku-vāḷi.*

*[தூக்கு + வாளி]*



**தூக்குவிளக்கு** *tūkku-viḷakku,* பெ. (n.) தொங்கு விளக்கு; hanging lamp.

ம. தூக்குவிளக்கு

*[தூக்கு + விளக்கு]*



**தூகம்** *tūgam,* பெ. (n.) புளிநரளை (மலை.); bristly trifoliate vine.

**தூகு-தல்** *tūgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) திருவலகிடுதல்; to sweep. "கோமானின் றிருக்கோயி றூகேன் மெழுகேன்" *(திருவாச. 5:14).*

*[தூய் → தூகு-.]*

**தூகை** *tūgai,* பெ. (n.) பாளை; flower sheath or spatha of areca; coconut, etc. *(சா.அக.).*

**தூங்கணங்குரீஇ** *tūṅgaṇaṅ-gurīi,* பெ. (n.) தூக்கணங்குருவி பார்க்க; see *tūkkaṇaṅ-guruvi.* "ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த தூங்கணங்குரீஇக் கூட்டுள சினையே" *(இறை. 9, உரை.).*

**தூங்கணம்** *tūṅgaṇam,* பெ. (n.) *1.* தொங்கல் *(சங்.அக.);* pandant, hanging. *2.* தூக்கணங்குருவி பார்க்க; see *tūkkaṇaṅguruvi.* "நந்தெறும்பு தூங்கணம்புள்" *(ஆசாரக். 97).*

*[தூங்கு → தூங்கணம்.]*

**தூங்கணி** *tūṅgaṇi,* பெ. (n.) தொங்கலணி வகை *(வின்.);* jewel formed of hanging globules of gold and precious stones.

*[தூங்கு + அணி.]*

**தூங்கமளி** *tūṅgamaḷi,* பெ. (n.) ஊஞ்சற் கட்டில்; swinging cot. "தோளி னாற்றிய தூங்கமளி" *(கம்பரா. ஊர்தேடு. 176).*

*[தூங்கு + அமளி]*

**தூங்கமுட்டு** *tūṅga-muṭṭu,* பெ. (n.) கோரைக் கிழங்கு வகை *(மலை.);* root of Cyperus juncifolius.

தெ. துநகமுட்டி

*[தூங்கு + முட்டு]*

**தூங்கல்** *tūṅgal,* பெ. (n.) *1.* தொங்கல்; pandant, hanging. *2.* தூக்கமயக்கம்; drowsiness, light sleep. "தூங்கலோங்கு நடை" *(முல்லைப். 53). 3.* சோம்பு; dullness. *4.* சோர்வு; depression. "தூங்கலி னுருவினைச் சொல்லின்" *(கம்பரா. சடாயுயிர். 27). 5.* உணவுக்குத் தொங்குவோன்; one who hangs about for food. *6.* யானை; elephant. *7.* துலை; balance. *8.* தாழ்கை; lowness. *9.* நெருங்குகை; closeness. *10.* கூத்து; dancing. "தூங்கலோசை தழைப்பன சாரலெங்கும்" *(இரகு. நாட்டுப். 50). 11.* வஞ்சியோசை; the slow measure of vañji metre *(காரிகை, செய். 1).*

*[தூங்கு → தூங்கல்.]*

**தூங்கல்வண்ணம்** *tūṅgal-vaṇṇam,* பெ. (n.) வஞ்சியோசை பயின்று வருஞ்சந்தம்; a rhythm effected by introducing vañji verse "தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்" *(தொல். பொருள். 542).*

*[தூங்கல் + வண்ணம்]*

**தூங்கலன்** *tūṅgalaṉ,* பெ. (n.) சோம்பன் *(யாழ்.அக);* lazi man.

*[தூங்கல் → தூங்கலன்]*

**தூங்கலாளி** *tūṅgal-āḷi,* பெ. (n.) தூங்குமூஞ்சி *(யாழ்.அக)* பார்க்க; see *tūṅgu-mūñji.*

*[தூங்கல் + ஆளி]*

**தூங்கலோசை** *tūṅgal-ōšai,* பெ. (n.) வஞ்சிப் பாவிற்குரிய ஓசை; rhythm peculiar to vañji verse "தூங்கலோசை வஞ்சியாகும்" *(தொல். பொருள். 396).*

*[தூங்கல் + ஓசை.]*

**தூங்காமை** *tūṅgāmai,* பெ. (n.) செயலில் சோர்வின்மை; vigilance. "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன் றும்" *(குறள், 383).*

*[தூங்கு + ஆ - தூங்கா → தூங்காமை.]*

**தூங்காவிளக்கு** *tūṅgā-viḷakku,* பெ. (n.) திருநந்தா விளக்கு *(வின்.);* perpetual lamp that is burning near an idol.

*[தூங்கா + விளக்கு]*

**தூங்கானைமாடம்** *tūṅgāṉai-māḍam,* பெ. (n.) விழுப்புரம் மாவட்டம் பெண்ணாகடத்தில் உள்ள சிவன் கோயில் (தேவா. 937); a Šiva shrine at Peṇṇākaḍam in Viḻupuram district.

**தூங்கிசம்** *tūṅgišam,* பெ. (n.) அழிவு; ruin. "அடைத்த கல்லைத் தூங்கிசமாக" *(இராமநா. கிட். 17).*

*[தூங்கு → தூங்கிசம். தூங்கு = தூக்கத்தால் அல்லது சோம்பலால் ஏற்படும் அழிவு]*

**தூங்கிசை** *tūṅgišai,* பெ. (n.) செய்யுட்குரிய நால்வகையோசையுள் ஒன்று; a kind of poetic rhythm, one of four išai.

*[தூங்கு + இசை.]*

**தூங்கிசைச்செப்பல்** *tūṅgišai-c-ceppal,* பெ. (n.) இயற்சீர் வெண்டளையான் மாமுன் நிரையும் விளமுன் நேருமாக வரும் வெண்பாவுக்குரிய ஓசை *(காரிகை, செய். 1, உரை);* a rhythm of veṇpā metre effected when nirai follows mā and nēr follows viḷam.

*[தூங்கிசை + செப்பல்]*

**தூங்கிசைத்துள்ளல்** *tūṅkišai-t-tuḷḷal,* பெ. (n.) கலிப்பாவுக்குரிய ஓசை வகை *(யாழ்.அக.);* a rhythm of kali-p-pā metre.

*[தூங்கிசை + துள்ளல்]*

**தூங்கிசையகவல்** *tūṅkišai-y-agaval,* பெ. (n.) நிரையொன்றாசிரியத் தளையான் வரும் அகவற்பாவுக்குரிய ஓசை *(காரிகை, செய். 1, உரை);* a rhythm of akaval metre.

*[தூங்கிசை + துள்ளல்]*

**தூங்கிவழி-தல்** *tūṅgi-vaḻi-,* 2 செ.கு.வி. (v.i.) தூங்கிவிழு-தல் பார்க்க; see *tūṅgi-viḻu-.*

*[தூங்கு → தூங்கி + வழி-.]*

**தூங்கிவிழு-தல்** *tūṅgi-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) *1.* தூக்க மயக்கத்தாற் சாய்ந்துவிழுதல்; to be unsteady through drowsiness. *2.* சுறுசுறுப் பின்றிச் சோம்பியிருத்தல்; to be lazy.

*[தூங்கு → தூங்கி + விழு-.]*

**தூங்கு-தல்** *tūṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தொங்குதல்; to hang. "காமமு நாணு முயிர்காவாத் தூங்கும்" *(குறள், 1163). 2.* ஊஞ்சலாடுதல்; to swing. "வீழூசல் தூங்கப் பெறின்" *(கலித். 131). 3.* அசைதல்; to sway from side to side, as an elephant. "தூங்கு கையா னேங்கு நடைய" *(புறநா. 22). 4.* கூத்தாடுதல்; to dance. "அறற்குழற் பாணி தூங்கியவரொடு" *(சிறுபாண். 162). 5.* இடையறாது விழுதல்; to pour, rain. "வீழ்பனி தூங்க" *(திருக்கோ. 320). 6.* ஒலித்தல்; to sound. "தண்ணுமை தழுவித் தூங்க" *(கம்பரா. மிதிலை. 9). 7.* துயிலுதல்; to sleep, slumber. "சொரிந்த சோரிதன் வாய்வரத் தூங்குவான்" *(கம்பரா. கும்ப. 62).* தூங்கினவன் கடாக்குட்டி, விழித்திருந்தவன் ஊட்டுக் குட்டி *(பழ.). 8.* அசைவு தோன்றாது சுற்றுதல்; to spin, as a top. பம்பரம் தூங்குகின்றது. *9.* சாதல்; to die. "நாடுங்காற் றூங்குபவர்" *(திரிகடு. 19). 10.* வாடுதல்; to droop, as a plant. "துக்கத்துட்

டுங்கி" (நாலடி. 121). 11. மந்தமாதல்; to be sluggish. "சொன்ன வெல்லையி னூங்குமத் தூங்கிய மன்னன் வந்திலன்" (கம்பரா. கிட்கி. 1). 12. காலத்தாழ்வாதல்; to delay. "தூங்குக தூங்கிச் செயற்பால" (குறள். 672). 13. நிலையாகத் தங்குதல்; to tarry, remain. "கடப்பாட்டாள னுடைய பொருள்போலத் தூங்குதற்குரிய தன்று" (குறுந். 143). 14. செறிதல்; to be crowded, dense. 15. மிகுதல்; to abound. "களி மகிழ் தூங்கி" (காசிக. சத். 18). 16. மெத்தென நடத்தல்; to walk slowly. 17. அழுந்துதல்; to rest profoundly.

தூங்காதவன் நீங்காதவன்
தூங்காதவனுக்குச் சுகம் இல்லை
தூங்கினவன் கன்று கடாக்கன்று
தூங்கினவன் கன்று சேங்கன்று
தூங்குகிற நரிக்கு இரை கிடையாது
தூங்குகிற புலியைத் தட்டி எழுப்பினதுபோல
தூங்குகிற வரிக்காரனை எழுப்பிவிட்டால் போனஆண்டுத் தீர்வையும் கொடுத்துவிட்டுப் போவென்பான்
தூங்குகிறவனைத் தட்டி எழுப்பி அத்தாளம் இல்லை என்று சொன்னது போல. (பழ.)

**தூங்குகட்டில்** *tūṅgu-kaṭṭil*, பெ. (n.) தூங்கு மஞ்சம் பார்க்க; see *tūṅgu-mañjam*.

[தூங்கு + கட்டில்]



**தூங்குதோள்** *tūṅgu-tōḷ*, பெ. (n.) பாம்பின் சட்டை; slough of a serpent. "பாம்பின் றூங்குதோல் கடுக்குந் தூவெள்ளருவி" (குறுந். 235).

[தூங்கு + தோள்.]

**தூங்குபாலம்** *tūṅgu-pālam*, பெ. (n.) தூக்கு பாலம் பார்க்க (வின்.); see *tūkku-pālam*.

**தூங்குமஞ்சம்** *tūṅgu-mañjam*, பெ. (n.) தொங்கியாடுங் கட்டில்; swinging cot.

க. தூங்குமஞ்ச; ம. தூக்குமஞ்சம்

[தூங்கு + மஞ்சம்.]

**தூங்குமூஞ்சி**[1] *tūṅgu-mūñji*, பெ. (n.) மிகுதியாகத் தூங்குபவன், மந்தன்; dull, sleepy fellow.

[தூங்கு + மூஞ்சி]

**தூங்குமூஞ்சி**[2] *tūṅgu-mūñji*, பெ. (n.) 1. சீமை வாகை; rain tree, as closing its leaves at night. 2. கரிசலாங்கண்ணி; a plant found in moist places (M.M.9l.).

[தூங்கு + மூஞ்சி]

**தூங்குமூஞ்சிமரம்** *tūṅgu-mūñji-maram*, பெ. (n.) மாலை நேரத்தில் கண் மூடித் தூங்குவது போலக் கிழ்நோக்கி மடியும் இலைகளைக் கொண்ட பெரிய மரம்; rain tree.

[தூங்குமூஞ்சி + மரம்]



**தூங்கெயில்** *tūṅgeyil*, பெ. (n.) சோழ மன்னனொருவனால் அழிக்கப்பட்ட வான் கோட்டை; an air-castle believed to have been destroyed by a Chola king. "தூங்கெயி லெறிந்த நின் னூங்கணோர் நினைப்பின்" (புறநா. 39).

[தூங்கு + எயில்]

**தூங்கெலி** *tūṅgeli*, பெ. (n.) எலி வகை (வின்.); a rat.

[தூங்கு + எலி]

கடிப்பதினால் தூக்கத்தையெழுப்பும் ஓர் வகை எலி.

**தூசக்குடிஞை** *tūša-k-kuḍiñai,* பெ. (n.) கூடாரம்; tent. "தூசக்குடிஞையுந் துலா மண்டபமும்" (பெருங். இலாவாண. 12: 43).

**தூசகத்தறி** *tūšaga-t-taṟi,* பெ. (n.) முற்காலத்து வழங்கிய வரி வகை (S.I.I.i, 91); an ancient tax.

**தூசங்கொளல்** *tūšaṅ-goḷal,* பெ. (n.) ஒருவன் பாடிய வெண்பாவின் ஈறு முதல் எழுத்துகளே ஈறும் முதலுமாக மற்றொரு வெண்பாப் பாடுவது (யாப். வி. 96, பக். 502); composing a veṇpā with the same initial and final letters as those of a stanza composed by another.

**தூசம்** *tūšam,* பெ. (n.) யானைக் கழுத்திலிடுங் கயிறு; elephant's neck-band. "வேய்முதற் றூசங்கொண் டேறினான்" (சீவக. 1602).

[தூசு¹ → தூசம்]

**தூசர்¹** *tūšar,* பெ. (n.) படைஞர்; troops. "இந்திரன் முதலோர் தூசர்" (குற்றா. தல. தக்கன் வேள்விச். 125).

[தூசு ³ → தூசர்]

**தூசர்²** *tūšar,* பெ. (n.) வண்ணார் (திவா.); washermen.

[தூசு ² → தூசர்]

**தூசரம்** *tūšaram,* பெ. (n.) சாம்பல் நிறம் (யாழ். அக.); grey colour.

[தூசு ³ → தூசரம்]

**தூசரன்** *tūšaraṉ,* பெ. (n.) எண்ணெய் வாணிகன் (யாழ்.அக.); oil monger.

[தூசு ² → தூசரன்.]

**தூசறு-த்தல்** *tūšaṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அடியோடு அழித்தல் (சங்.அக.); to exterminate.

[தூசு ⁵ → தூசறு-.]

**தூசி¹** *tūši,* பெ. (n.) 1. கொடிப்படை (திவா.); van of an army. "தூசியு மிரண்டுகையும்" (கம்பரா. அதிகாயன் 211). 2. குதிரை; horse. 3. போர்; battle "தூசியின் முதல் நாள்" (வின்.) 4. கூத்துத் தொழிலின் வேறுபாடு (வின்.); a kind of gesture in dancing. "வட்டணையுந் தூசியு மண்டலமும்" (சீவக. 693, உரை). 5. உச்சி; that which is top most. "மாமரத்தின் தூசிக் கொம்பில் ஏறி நின்றான்" (இ.வ.).

[தூசு ³ → தூசி]

**தூசி²** *tūši,* பெ. (n.) 1. சிறுமை; trifle. 2. புழுதி; dust. 3. காற்றில் பறந்து வரும் சிறு துகள்; small particle. கண்ணில் தூசி விழுந்துவிட்டதா?.

[தூசு → தூசி]

**தூசிகம்** *tūšigam,* பெ. (n.) புளியாரை; Indian sorrel.

**தூசிகா** *tūšigā,* பெ. (n.) சிமிட்டி; bitter apple (சா.அக.).

**தூசிதாங்கி** *tūši-tāṅgi,* பெ. (n.) 1. புழுதித்தடுப்பு; to keep of dust cover. 2. அழுக்குத் தடுப்பு துண்டுப் புடவை (யாழ்.அக.); apron.

[தூசி + தாங்கி.]

**தூசிதும்பு** *tūši-tumbu,* பெ. (n.) தூசியும் தூசி போன்ற பிறவும்; dust and the like. தண்ணீரில் தூசுதும்பு கிடக்கிறது, வடிகட்டு.

[தூசி + தும்பு]

**தூசிப்படை** *tūši-p-paḍai,* பெ. (n.) கொடிப்படை (சிலப். 26, 80, அரும்.); van of an army.

[தூசி + படை]

**தூசியம்** *tūšiyam,* பெ. (n.) கூடாரம் (யாழ்.அக.); tent.

[தூசு ² → தூசியம்]

**தூசு¹** *tūšu,* பெ. (n.) தூய்மை; cleanness. "தூசுதூ சாக்குவார் பாவை" (தமிழ்நா. 69).

[தூய்(மை) → தூசு]

**தூசு²** *tūšu,* பெ. (n.) 1. ஆடை; cloth. "தூசினா லங்கை நீவி" (சீவக. 1302). 2. பஞ்சு; cotton. "தீயினிற் றூசாகும்" (திவ்.திருப்பா. 6). 3. நெய்மீன் (சித்திரை) விண்மீன் (சூடா.); the 14th naksatra, part of virgo.

**தூசு**[3] *tūšu*, பெ. (n.) முன்னணிப்படை (பிங்.); van of an army. "வாலிசேய் தூசு செல்ல" (கம்பரா. திருமுடி. 4).

**தூசு**[4] *tūšu*, பெ. (n.) யானைக் கழுத்திலிடு கயிறு (பிங்.); elephant neck band.

**தூசு**[5] *tūšu*, பெ. (n.) தூசி[2] பார்க்க; see *tuši*. "அவன் ஒரு தூசுகூட விடவில்லை".

*[தூள் → தூளி → தூசி → தூசு]*

**தூசுப்பு** *tūšuppu*, பெ. (n.) தண்ணீர்விட்டான் (மூ.அ.); climbing asparagus.

**தூசுப்பூ** *tūšuppū*, பெ. (n.) தூசுப்பு பார்க்க; see *tūšuppu*.

**தூட்கல்** *tūṭ-kal*, பெ. (n.) பொடிக்கல் (யாழ்ப்.); small stones or bricks.

*[தூள் + கல்]*

**தூட்டிகம்** *tūṭṭigam*, பெ. (n.) தும்பை (மலை.); white dead nettle.

**தூடியம்** *tūḍiyam*, பெ. (n.) தூசியம் (இலக்.அக.) பார்க்க; see *tušiyam*.

**தூண்** *tūṇ*, பெ. (n.) 1. கட்டடம், பாலம் முதலியவற்றின் மேல்பகுதியைத் தாங்கி நிற்கும் செங்குத்தான அமைப்பு; pillar. "சிற்றி னற்றூண் பற்றி" (புறநா. 86). தூணில் சாயாதே. 2. பற்றுக் கோடு; mainstay, support. "துன்பந் துடைத் தூன்றுந் தூண்" (குறள், 615).

ம. தூண்

பல பொருள்கள் அல்லது கூறுகள் ஒன்றாகப் பொருந்தும்போது அல்லது சேரும்போது திரட்சியுண்டாவதால், பொருந்தற் கருத்தில் திரட்சிக் கருத்து தோன்றிற்று. "சேரே திரட்சி" (தொல். 316).

*[துள் → துள் → தூண் = திரண்ட கம்பம் (வே. க. 253, 254)]*

**தூண்டாவிளக்கு** *tūṇḍā-viḷakku*, பெ. (n.) 1. தூண்ட வேண்டாதபடி எப்பொழுதும் எரியும் நுந்தா விளக்கு; ever-burning lamp that needs no trimming. "தூண்டா விளக்கின் சுடரனையாய்" (திருவாச. 32:4). 2. பாம்பின் தலையில் உள்ளதாகக் கருதப்படும் மணி; lustrous gem on cobra's head, as an ever-burning lam. "தூண்டா விளக்கனையாய்" (திருக்கோ. 244).

*[துண்டு + ஆ - துண்டா + விளக்கு]*



**தூண்டி** *tūṇḍi*, பெ. (n.) 1. தானே சொல்லுகை (அக.நி.); untutored speech or talk. 2. தூண்டில் பார்க்க; see *tūṇḍil*.

*[தூண்டு → தூண்டி]*

**தூண்டிக்காட்டு-தல்** *tūṇḍi-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. விளக்கம் தருதல்; to explain. 2. பிறன் செய்த குற்றத்தை அவனிடம் குத்திக் காட்டுதல்; to bring home one's faults; to upbraid. 3. தூண்டிக்கொடு பார்க்க; see *tūṇḍi-k-koḍu*.

*[தூண்டி + காட்டு-.]*

**தூண்டிக்கொடு-த்தல்** *tūṇḍi-k-koḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. நினைவூட்டுதல்; to remind. 2. குறிப்பாக அறிவித்தல்; to hint, give the cue. 3. கோட் சொல்லுதல் (வின்.); to slander. 4. குற்றத்தை வெளியிடுதல் (வின்.); to expose one's crime.

*[தூண்டி + கொடு-.]*

**தூண்டித்துருப்பிடி-த்தல்** *tūṇḍi-t-turu-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) நுணுகி ஆராய்ச்சி செய்தல்; to trace and pursue, make a close investigation into.

*[தூண்டி + துருப்பிடி-.]*

**தூண்டிப்பிடி-த்தல்** *tūṇḍi-p-piḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) சிறுகுற்றத்தைப் பெரிதாக்குதல் (வின்.); to hold up or magnify little faults.

*[தூண்டி + பிடி-.]*

**தூண்டிமுள்** *tūṇḍi-muḷ*, பெ. (n.) தூண்டில்முள் பார்க்க; see *tūṇḍil-muḷ*.

**தூண்டிமூலி** *tūṇḍi-mūli*, பெ. (n.) கவிழ்தும்பை; stooping tumbay (சா.அக.).

**தூண்டில்** *tūṇḍil*, பெ. (n.) 1. மீன்பிடிக்கப் பயன்படும், கொக்கி இணைக்கப்பட்ட கோல்; fishing tackle. "தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று" (குறள். 931). 2. கொக்கி; hook. 3. வரிக்கூத்து வகை; a kind of masquerade-dance. "சூலந்தருநட்டந் தூண்டிலுடன்" (சிலப். 3, 73, உரை).

*[தூண்டு → தூண்டி → தூண்டில்]*

தூண்டிலில் அகப்பட்ட மீன் துள்ளி நத்தினால் விடுவீர்களா?
தூண்டிலைப் போட்டு வராலை இழு.
தூண்டில் நுனிமச்சத்துக்கு ஆசைப்பட்டு மீன் உயிரை இழப்பதுபோல.
தூண்டில்போட்டவனுக்குத் தக்கைமேற் கண்.
தூண்டிற்காரனுக்கு மிதப்பு மேலே கண். (பழ.)

**தூண்டில்போடு-தல்** *tūṇḍil-pōḍu-*, 20 செ.குவி. (v.i.) 1. தூண்டிலிடுதல்; to angle. 2. உளவறிதல்; to sound gently. 3. தன்வயப்படுத்துதல்; to entice, allure.

*[தூண்டில் + போடு-.]*

**தூண்டில்மீன்** *tūṇḍilmīṉ*, பெ. (n.) கடலின் அடிமட்டத்திலுள்ள மணலில் புதையுண்டு, தலை மேலே இடம் பெற்றிருக்கும் துடுப்பாரையை மட்டும் வெளிப்படுத்தும். இவ்வாரையின் நுனி, புழு அல்லது இறைச்சி போன்ற தோற்றமளிக்கும் புறவளர்ச்சியைத் தூண்டில் போன்று இயக்குவதால், சிறிய மீன்களை ஈர்த்து அவற்றை உட்கொள்ளுகின்றன. இதனால் தூண்டில் மீன் என்பதாயிற்று; a type of fish that hides beneath the sand and wave its fins like a worn and attract the smaller fisher and eat them.

*[தூண்டில் + மீன்]*

**தூண்டில்முள்** *tūṇḍil-muḷ*, பெ. (n.) தூண்டிற் கருவியின் முனையில் இரை கோக்கப்படும் இருப்புமுள்; fish-hook.

*[தூண்டில் + முள்]*



**தூண்டில்முறித்தான்பாறு** *tūṇḍil-muṟittāṉ-pāṟu*, பெ. (n.) கடலடிப் பாறையொன்றின் பெயர் (நெல்லை.); a rack beneath the sea.

*[தூண்டில் + முறித்தான் + பாறு. பாறை → பாறு]*

**தூண்டில்வேட்டுவன்** *tūṇḍil-vēṭṭuvaṉ*, பெ. (n.) மீன் பிடிப்போன்; fisherman, angler as a hunter with the angle. "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது" (அகநா. 36).

*[தூண்டில் + வேட்டுவன்]*

**தூண்டிவிடு-தல்** *tūṇḍi-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. விளக்கைத் தூண்டுதல்; to trim a lamp. 2. தூண்டிக்கொடு-. பார்க்க; see *tūṇḍi-k-koḍu-*

*[தூண்டி + விடு-.]*

**தூண்டிற்காரன்** *tūṇḍiṟkāraṉ*, பெ. (n.) மீன்பிடிப்போன் (வின்.); angler.

*[தூண்டில் + காரன்]*

**தூண்டு[1]-தல்** *tūṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. விளக்குத் தூண்டுதல்; to trim, as burning lamp. "தூண்டு சுடரனைய சோதி கண்டாய்" (தேவா. 843). 2. கிளப்பிவிடுதல்; to excite, stir up. 3. செலுத்துதல்; to spur, goad. "கடகரி புரவி தூண்டு மாலாழி யந்தேர்" (கம்பரா.கும்ப. 316). 4. அனுப்புதல்; to send. "சேனை முற்று மவன் றுணையாகத் தூண்டி" (பிரமோத். 7:58). 5. ஏவுதல்; to command. 6. நினைப்பூட்டுதல்; to remind. 7. குறுதல்; to pound, as with a pestle. 8. தள்ளுதல்; to push, force forward.

*[துண் → தூண் → தூண்டு-.]*

**தூண்டு**[2] *tūṇḍu,* பெ. (n.) கிளப்பிவிடுகை; exciting, rousing.

*[தூண்டு ' → தூண்டு']*

**தூண்டுகுச்சி** *tūṇḍu-kucci,* பெ. (n.) தூண்டுகோல் பார்க்க; see *tūṇṭu-kōl.*

*[தூண்டு + குச்சி]*

**தூண்டுகோல்** *tūṇḍu-kōl,* பெ. (n.) *1.* விளக்குத் திரி தூண்டும் ஈர்க்கு; stick for trimming a lamp or wick. *"மதிவிளக்கினை யயர்வறத் தூண்டுகோல்" (பிரபுலிங். துதி. 16)* *2.* ஏவி விடுவோன் *(யாழ்.அக.);* prime mover in an affair.

*[தூண்டு + கோல்]*

**தூண்மரம்** *tūṇmaram,* பெ. (n.) தூணாமரம் பார்க்க; see *tūṇāmaram.*

*[தூண் + மரம்]*

**தூண்மாலை** *tūṇ-mālai,* பெ. (n.) தூண்போலத் தொடுக்கப்படும் மாலை; garlands arranged column-like in decorating a temple etc.,

*[தூண் + மாலை]*

**தூணம்**[1] *tūṇam,* பெ. (n.) ஏனம் (பாத்திரம்) தூக்க இடும்கயிற்றுச் சுருக்கு; cord with a loop or rings to carry a pot. *"கரகத்துக்குத் தூணம் போட்டான்" (யாழ்.அக.).*

*[தூக்கணம் → தூணம்]*

**தூணம்**[2] *tūṇam,* பெ. (n.) *1.* பெரும் தூண்; pillar. *"பசும்பொற் றூணத்து" (மணிமே. 1:48).* *2.* பற்றுக் கோடு *(அருநி.);* prop, support.

*[தூண் + அம் - தூணம். 'அம்' பருமைப்பொருள் பின்னொட்டு]*

எ-டு மதி → மதியம், நிலை → நிலையம்

வ. ஸ்தூணா

**தூணம்**[3] *tūṇam,* பெ. (n.) பகை *(அக.நி.);* antipathy.

**தூணம்**[4] *tūṇam,* பெ. (n.) அம்புக்கூடு *(யாழ்.அக.);* quiver.

*[துள் → தூள் → தூளம் → தூணம் (வ.மொ.வ.)]*

**தூணாமரம்** *tūṇā-maram,* பெ. (n.) நீண்ட மரவகை; Indian mahogany.

**தூணி**[1] *tūṇi,* பெ. (n.) அம்புக் கூடு; quiver. *"தூணி . . . ஒடுங்கிய வம்பின்" (பதிற்று. 45, 1-2).*

வ. தூண

*[தூணம் → தூணி (வே.க.)]*

**தூணி**[2] *tūṇi,* பெ. (n.) நான்கு மரக் காலளவு; a mesure of capacity = 4 marakkal. *"கருங் கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணி பதக்கென்று" (நாலடி., 387).*

வ. ஸ்தூண

*[துள் → துண் → தூண் → தூணி (வே.க.)]*

**தூணி**[3]**-த்தல்** *tūṇi-,* 4 செ.கு.வி. (v.i.) பருத்தல்; to grow stout, big.

*[தூண் → தூணி]*

**தூணிக்கடம்பு** *tūṇi-k-kaḍambu,* பெ. (n.) வெண் கடம்பு; write cadamba.

**தூணிகர்** *tūṇikar,* பெ. (n.) பொன் வாணிகர் *(நிகண்டு);* the caste of merchants.

**தூணியங்கம்** *tūṇiyaṅgam,* பெ. (n.) அத்திப்பிசின் *(மூ.அ.);* gum of the cluster fig.

ம. துணியாங்கம்

**தூணிறுத்துதல்** *tūṇiṟu-t-tudal,* பெ. (n.) நாட்கால் நாட்டுகை *(E.T. vi, 133);* ceremony of setting up on an auspicious day the first post for the construction of a marriage pavilion or pandal.

*[தூண் + நிறுத்துதல்]*

**தூணீரம்** *tūṇīram,* பெ. (n.) அம்புக்கூடு *(யாழ்.அக.);* quiver.

*[தூணீ → தூணீரம்]*

**தூணு** *tūṇu,* பெ. (n.) சந்தன வேம்பு; sandal neem.

**தூத்தியம்** *tūttiyam,* பெ. (n.) தூதன் செயல் அல்லது மொழி *(சங்.அக.);* an ambassador's mission.

*[தூது → தூத்தியம்]*

**தூதகம்** *tūdagam,* பெ. (n.) துரிசு *(சங்.அக.);* sulphate.

**தூதம்** *tūdam,* பெ. (n.) *1.* **அசைவு;** motion. *2.* **பழிப்பு;** abuse.

**தூதர்**[1] *tūdar,* பெ. (n.) **ஓர் இனத்தார்;** a caste.

**தூதர்**[2] *tūdar,* பெ. (n.) **ஒரு நாட்டின் நிகராளி (பிரதிநிதி)யாக மற்றொரு நாட்டிற்கு அனுப்பப்பட்ட அரசு உயர் அதிகாரி;** ambassador; emissary.

*[தூது → தூதர்]*

**தூதரகம்** *tūdaragam,* பெ. (n.) **மற்றொரு நாட்டின் தலைநகரில் தூதுவரின் தலைமையில் இயங்கும் அலுவலகம்;** embassy. பிரஞ்சு தூதரகம். *2.* **முதன்மையான நகரங்களில் பண்பாடு மற்றும் பொருளியல் நடவடிக்கைகளைக் கவனிக்கும் வகையில் இயங்கும் கிளை அலுவலகம்;** consulate. சென்னையில் உள்ள அமெரிக்கத் தூதரகத்தில் நூலகம் உள்ளது.

*[தூதுர் + அகம்]*

**தூதளை** *tūdaḷai,* பெ. (n.) **தூதுளை** *(மூ.அ.)* பார்க்க; see *tūduḷai.*

**தூதன்** *tūdaṉ,* பெ. (n.) *1.* **செய்தியறிவிப்பவன்;** messenger. "வாலிதன்மக னவன்தன் றூதன் வந்தனென்" *(கம்பரா. பிணிவீட்டு. 82).* *2.* **அரசுத் தூதன்;** ambassador. "நன்றுகொ லென்ன லோடும் நாயகன் றூதனக் காண்" *(கம்பரா. பிணிவீட்டு. 85).* *3.* **ஏவலாளன்;** servant. "வெய்ய காலன் மாதூதர் மனங்களிக்க" *(பாரத. கிருட்டிண. 10).* *4.* **ஒற்றன்;** spy, secret agent. *5.* **அறிவன்** (புதன்) *(பிங்.);* Mercury.

**தூதனம்** *tūdaṉam,* பெ. (n.) **மூங்கில்** *(மலை.);* bamboo.

**தூதாடு-தல்** *tūdāḍu-,* 5 செ.குன்றா.வி. (v.i.) **தூதாகப் போதல்;** to act as a messenger. "நாடிநின் றூதாடித் துறைச் செல்லாள்" *(கலித். 72).*

*[தூது + ஆடு-]*

**தூதாயி** *tūdāyi,* பெ. (n.) **கிரிப் பூண்டுவகை** *(சங்.அக.);* a plant.

**தூதாள்** *tūdāḷ,* பெ. (n.) **தூதன்** பார்க்க; see *tūdaṉ.* "வன்றொண்டர் நடத்தவொரு தூதாளாகி" *(சிவப்பிரபந். சிவஞா. பிள். வாரானை. 3).*

**தூதி** *tūdi,* பெ. (n.) *1.* **தூது செல்பவள்;** a female messenger. "யான்விட வந்தவென் றூதி யோடே" *(திவ்.பெருமாள். 6:4).* *2.* **பாம்பின் நச்சுப் பல் நான்கனுள் ஒன்று** *(சங்.அக.);* one of the four poisonous fangs of a cobra.

**தூதிகை** *tūdigai,* பெ. (n.) **தூதி-1** *(சங்.அக.)* பார்க்க; see *tūdi.*

**தூதிடையாடல்** *tūdiḍai-y-āḍal,* பெ. (n.) **மாலைக் காலத்துத் தலைவியுற்ற துன்ப நோக்கித் தோழி தலைவனிடம் தூதாக நடந்ததைக் கூறும் புறத்துறை** *(பு.வெ.12, இருபாற். 3);* theme describing a confidant's love-embassy on behalf of her mistress.

*[தூது + இடை + ஆடல்]*

**தூதிற்பிரிவு** *tūdiṟ-pirivu,* பெ. (n.) **அரசனின் தூதுவனாகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரியும் பிரிவு;** separation of a hero from his beloved when he goes on a mission for his king. "ஓதற்பிரிவுந் தூதிற் பிரிவும் அந்தணர் முதலிய மூவரிடத்தன" *(தொல்.பொருள். 26, உரை).*

*[தூது → தூதில் + பிரிவு]*

**தூது**[1] *tūdu,* பெ. (n.) **கூழாங்கல்;** small pebble. "தூ துணம் புறவெனத் துதைந்தநின் னெழி னலம்" *(கலித். 56:16).*

*[து → தூது]*

**தூது**[2] *tūtu,* பெ. (n.) *1.* **அரச தூதர் தன்மை** (குறள். 69, அதி); embassy. *2.* **தூதுமொழி;** purport of an embassy. "தூதுரைப்பாண் பண்பு" *(குறள். 681).* *3.* **தூது செல்வோன்;** ambassador. "தக்க தறிவதாந் தூது" *(குறள். 686).* *4.* **செய்தி;** message. "தொட்டுவிடுத் தேனவனைத் தூதுபிற சொல்லி" *(சீவக. 1876).* *5.* **காமக் கூட்டத்துக் காதலரை இணக்குஞ்செயல்;** negotiation in love-intrigues. "தூதுசெய் கண்கள் கொண் டொன்று பேசி" *(திவ்.திருவாய். 9.9:9).* *6.* **பாணன் முதலிய உயர்திணைப் பொருளையேனும் கிள்ளை**

முதலிய அஃறிணைப் பொருளையேனும் ஊடனீக்கும் வாயிலாகக் காதலர்பால் விடுத்தலைக் கலிவெண்பாவாற் கூறும் இலக்கியம் *(இலக்.வி. 874);* a kind of poem in Kali-veṇbā which purports to be a message of love sent through a companion, a bird, etc., to effect a reconciliation. 7. தூது அனுப்பும் முறையில் இயற்றப்பட்ட ஒரு சிற்றிலக்கிய வகை; a genre in which one sends message.

வ. தூத

*[துது → தூது (வ.மொ.வ.)]*

தூது என்பது ஒருவர் கருத்தை மற்றொருவருக்குத் தெரிவிக்க இடையே ஒருவரை அனுப்புவதாகும். பகைவரிடையிலும், நண்பரிடையிலும், தலைவன் தலைவியரிடையிலும் தூது செல்வது வழக்கம். இவ்வாறு தூதனுப்பும் செய்தி புறத்திணை நூல்களிலும் அகத்திணை நூல்களிலும் காணப்படுகின்றது. தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல் 23ஆம் நூற்பாவில் "தூது முனிவின்மை" என்பதற்குப் பேராசிரியர் "புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று பன் முறையானும் சொல்லுதல்" என்று விளக்கம் தருகின்றார்.

பிற்காலத்தில் 'விருந்து' என்னும் இலக்கண முறையில் 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகத் தூது என்பதும் ஒரு சிறு நூலாக அமைந்தது. இலக்கண விளக்கப் பாட்டியலிலும், பிரபந்தத் திரட்டு என்னும் நூலிலும் தூது என்பதற்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

'கலிவெண்பாவினால் உயர் திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும் சந்தியின் விடுத்தல்' என்று இலக்கண விளக்கம் (நூற். 874) கூறுகிறது. பிரபந்தத் திரட்டு 'அன்னம், மயில், கிளி, முகில், பூவை, தோழி, குயில், நெஞ்சம், தென்றல், வண்டு என்னும் பத்தையும் தனித்தனியே விளித்துக் கூறி, மாலை கொண்டுவா என்று அனுப்புதல் தூது' என்று கூறும். இரத்தினச் சுருக்கமும் இப்பத்துப் பொருள்களையும் தூதாக அனுப்புவது மரபு என்கிறது.

இங்குக் கூறப்பெறாத பணம், தமிழ், மான், தாமரை (வனசம்), சவ்வாது, நெல், புகையிலை, விறலிவிடு தூதுகளும் தனித்தனி நூல்களாக வந்துள்ளன. தூது விடுப்பது ஆணாகவோ பெண்ணாகவே இருக்கலாம். எனினும் கிடைக்கும் நூல்கள் பெரும்பாலும் தலைவனிடத்துத் தலைவி விடுத்த தூதுகளாகவே உள்ளன (கலைக் களஞ்சியம்).

**தூது**[3] *tūdu,* பெ. (n.) தூதுவளை பார்க்க; see *tūdu-vaḷai.* "தூதெனு விளங்குஞ் செவ்வாய்த் தோகையர்" *(இரகு. யாகப். 14).*

**தூதுக்குழு** *tūdu-k-kuḻu,* பெ. (n.) அரசியல், பொருளியல், பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் அரசின் சார்பில் மற்றொரு நாட்டிற்குச் செல்லும் குழு; delegation of politicians, economists, artistes visiting other countries on behalf of the government.

*[தூது + குழு]*

**தூதுகறியுருண்டை** *tūdu-kaṟi-y-uruṇḍai,* பெ. (n.) பொரித்த குழம்பில் இடும் உளுத்தமா உருண்டை *(இ.வ.);* ball of kneaded black-gram flour, used in sauce.

*[தூது + கறி + உருண்டை]*

**தூதுணம்** *tūduṇam,* பெ. (n.) 1. கூழாங்கல்லை உண்ணும் புறா வகை *(திவா.);* a dove that eats pebbles. 2. தூக்கணங்குருவி *(அக.நி.);* weaver bird.

*[தூதுண் → தூதுணம்]*

**தூதுணம்புறவு** *tūtuṇam-puṟavu,* பெ. (n.) தூதுணம் பார்க்க; see *tūduṇam.* "தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கும்" *(பட்டினப். 58).*

*[தூதுணம் + புறவு]*

**தூதுணி** *tūduṇi,* பெ. (n.) தூதுணம் *(சங்.அக.)* பார்க்க; see *tūduṇam.*

*[தூதுணம் → தூதுணி]*

**தூதுணை** *tūduṇai,* பெ. (n.) தூதுவளை பார்க்க; see *tūdu-vaḷai.*

*[தூது + துணை]*

**தூதுவளை** *tūdu-vaḷai,* பெ. (n.) முள்ளுள்ள இலைகளைக் கொண்ட கொடிவகை *(மலை.);* climbing brinjal.

மறுவ. கூதளம்

*[தூது + வளை]*



**தூதுவன்** *tūduvaṉ,* பெ. (n.) *1.* தூதன்; messenger. "தாமே தூதுவ ராதலு முரித்தே" *(தொல்.பொருள். 119). 2.* காம வாயிலோன்; messenger in love-intrigues. "தூதுவனொருவன் றன்னை யிவ் வழிவிரைவிற் றூண்டி" *(கம்பரா. அங்கதன். 2). 3.* அறிவன் (புதன்); the planet, Mercury.

*[தூது → தூதுவன்]*

**தூதுவென்றி** *tūdu-veṉṟi,* பெ. (n.) தூதுவன் தனது செயலாண்மை வெற்றியைக் குறித்துக் கூறும் புறத்துறை (மாறனல. 84, உரை, ப96); a theme describing the success of an embassy.

*[தூது + வென்றி]*

**தூதுளம்** *tūduḷam,* பெ. (n.) தூதுவளை (பிங்.) பார்க்க; see *tūdu-vaḷai.*

*[தூதுவளை → தூதுளம்]*

**தூதுளை** *tūduḷai,* பெ. (n.) தூதுவளை பார்க்க; see *tūdu-vaḷai.*

**தூதூவெனல்** *tūdū-v-eṉal,* பெ. (n.) உமிழ்தற் குறிப்பு; onom. expr. of the sound of spitting.

**தூதை**[1] *tūdai,* பெ. (n.) மண் முதலியவற்றால் செய்த சிறுகலம்; small vessel made of earth etc. *2.* விளையாட்டுச் சிறுமரப் பானை; toy utensils of wood. *3.* ஓர் சிறிய அளவு; a small measure of capacity.

தெ. துத்த; ம. தூத

**தூதை**[2] *tūdai,* பெ. (n.) சிறு சம்மட்டி (யாழ்.அக.); a small hammer.

**தூதை**[3] *tūdai,* பெ. (n.) *1.* சிற்றாமுட்டி; Ceylon sticky mallow. *2.* பாலை; iron wood tree (சா.அக.).

**தூதைகூலம்** *tūdai-kūlam,* பெ. (n.) பஞ்சு பன்னும் வில்; cotton-pricker.

**தூந்துதுருப்பிடி-த்தல்** *tūndu-turu-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தூண்டித்துருப்பிடி (வின்.) பார்க்க; see *tūṇḍi-t-turu-p-piḍi.*

**தூப்பஞ்செய்-தல்** *tūppā-ñ-sey-,* 1 செ.கு.வி. (v.i.) தூய்மை செய்தல்; to clean. "கண்டவர் காட்சியைத் தூப்பஞ்செய்துடன்" *(மேருமந். 1271).*

*[தூ → தூப்பம் + செய்-.]*

**தூப்பா** *tūppā,* பெ. (n.) தூப்பாக்குழி பார்க்க; see *tūppā-k-kuḻi.*

**தூப்பாக்குழி** *tūppā-k-kuḻi,* பெ. (n.) சாக்கடை; gutter.

*[தூப்பா + குழி]*

**தூம்** *tūm,* பெ. (n.) *1.* முகத்தலளவை வகை; a dry measure of capacity. (எ-டு.) குப்பத்தூம், தேவதூம் (வின்.). *2.* ஒருநிறை; bazaar weight= about 6 lbs. 4 oz-avoir.

தெ. தூமு

*[தூம்பு → தூம் (வேக. 282)]*

**தூம்பல்** *tūmbal,* பெ. (n.) *1.* ஒரு வகைக் கொடி; calabash, climber. *2.* சுரை; bottle-gourd.

*[தூம்பு → தூம்பல்]*

**தூம்பா**[1] *tūmbā,* பெ. (n.) பாடை; bier.

*[தூம்பு[2] → தூம்பா]*

**தூம்பா**[2] *tūmbā,* பெ. (n.) தும்பை (சங். அக.) பார்க்க; see *tumbai.*

**தூம்பாமடை** *tūṉbā-maḍai,* பெ. (n.) தூம்புவாய் (நெல்லை.) பார்க்க; see *tumbu-vāi.*

*[தூம்பு → தூம்பா + மடை]*

**தூம்பிரம்** *tūmbiram,* பெ. (n.) கருஞ்சிவப்பு (வின்.); purple, dark red.

**தூம்பு**[1] *tūmbu,* பெ. (n.) *1.* உட்டுளை; tubularity. "தூம்புடைத் தடக்கை" *(புறநா. 19). 2.* உட்டுளைப் பொருள் (பிங்.); tube. *3.* மதகு; sluice. *4.* மதகின் உட்டுளை (அக.நி.); vent in a sluice. *5.* வாய்க் கால் (பிங்.); channel for irrigation. *6.* தூம்பு

வாய் பார்க்க; see *tūmbu-vāy*. "சுருங்கைத் தூம்பின்மனை" *(மணிமே. 28:5)*. 7. மூங்கில் *(திவா.)*; bamboo. 8. மூங்கிற்குழாய்; bamboo tube. "தூம்பின் கண்ணிட மிளிர" *(மலைபடு. 533)*. 10. மரக்கால் *(பிங்.)*; a measure of capacity for grain. 11. நீர்ப்பத்தர் *(திவா.)*; leathern bucket for baling water. 12. மனை வாயில் *(பிங்.)*; gateway, doorway. 13. பாதை *(யாழ்.அக.)*; path, way. 14. இடுக்கு வழி; narrow or difficult path, defile, pass. 15. ஈயம் *(வின்.)*; lead. 16. பாலம் முதலியவற்றில் அமைக்கப்படும் நீர் செல்வதற்கான சுதை (சிமிட்டி)க் குழாய்; drain pipe. கழிவுநீர் தூம்புவழியே சென்றுவிடும்.

தெ. தூமு; க., ம. தூம்பு; L. tubus; E. tube

*[தும்பு → தூம்பு]*



**தூம்புக்கை** *tūmbu-k-kai*, பெ. (n.) தும்பிக்கை பார்க்க; see *tumbi-k-kai*.

*[தூம்பு + கை]*

**தூம்புவாய்** *tūmbu-vāy*, பெ. (n.) சாய்கடை *(திவா.)*; drain, gutter.

*[தூம்பு + வாய்]*

**தூம்பை** *tūmbai*, பெ. (n.) தூம்பா[1] பார்க்க; see *tūmba*.

**தூமணி** *tūmaṇi*, பெ. (n.) முத்து; pearl. "தூமணித் தோள் வளை" *(சிலப். 6:90)*.

*[தூய்(மை) + மணி]*

**தூமை[1]** *tūmai*, பெ. (n.) மகளிர் பூப்புநீர்; catamenia. "பாவர் தூமையர்கள் கோளர்" *(திருப்பு. 363)*.

*[தூவாமை → தூமை]*

**தூமை[2]** *tūmai*, பெ. (n.) 1. வெண்மை; whiteness. 2. தூய்மை பார்க்க; see *tūymai*.

*[தூய் → தூமை]*

**தூமைச்சீலை** *tūmai-c-cīlai*, பெ. (n.) ஓர் வசைச் சொல்; a term of abuse meaning cloth worn during menses.

*[தூமை + சீலை]*

**தூய்தன்மை** *tūydaṉmai*, பெ. (n.) 1. தூய்மையின்மை; impurity as of body. 2. தீட்டு; pollution. "சொன்ன மறை மந்திரத்தாற் றூய் தன்மை கடிந்ததற்பின்" *(சீகாளத். பு. கண்ண. 138)*.

*[தூய்து + அன்மை]*

**தூய்து** *tūydu*, பெ. (n.) தூய்மையானது; that which is pure, clear.

*[தூய்(மை) → தூய்து]*

**தூய்நெறி** *tūy-neṟi*, பெ. (n.) நன்னெறி; spiritual path. "தூய்நெறியே சேரும்வண்ணம்" *(திருவாச. 51:4)*.

*[தூய் + நெறி]*

**தூய்மை[1]** *tūymai*, பெ. (n.) 1. துப்புரவு, அழுக்கு இல்லா நிலைமை; purity, cleanness. "புறந்தூய்மை நீரானமையும்" *(குறள், 298)*. 2. மெய்ம்மை *(அக.நி.)*; truth. 3. நன்மை; good. "காறூய்மை யில்லாக் கலிமாவும்" *(திரிகடு. 46)*. 4. வீடுபேறு; salvation. "தூஉய்மையென்ப தவாவின்மை" *(குறள், 364)*.

ம. தூம

**தூய்மை[2]** *tūymai*, பெ. (n.) வெண்மை; whiteness. "தூய்மை காட்டும்" *(பெருங்.உஞ்சைக். 32:59)*.

*[தூ → தூய்மை]*

**தூய்வெள்ளை** *tūy-veḷḷai*, பெ. (n.) தூய்மையான வெள்ளை *(யாழ்.அக.)*; pure white.

*[தூய் + வெள்ளை]*

**தூய்மைக்கேடு** *tūymai-k-kēḍu*, பெ. (n.) கழிவுகள் காற்று, நீர் முதலியவற்றில்

சேர்வதால் மூச்சுவிடுதற்கோ பயன் படுத்துவதற்கோ ஏற்றதாக இல்லாமல் போகும் நிலை; pollution. தொழிற் சாலையிலிருந்து வெளியேறும் கழிவுகளால் காற்றும், ஆற்று நீரும் தூய்மைக்கேடு அடைகின்றன.

*[தூய்மை + கேடு]*

**தூய** *tūya*, பெ.எ. (adj.) **தூய்மையான;** clean, pure, holy. "தூயமேனி" *(திருவாச. 2: 112).*

*[தூய் → தூய]*

**தூயம்** *tūyam*, பெ. (n.) **தூய்மை** பார்க்க; see *tūymai*. "தற்கண்ட தூயமும்" *(திருமந். 2451).*

*[தூய் → தூயம்]*

**தூயவன்** *tūyavaṉ*, பெ. (n.) *1.* **தூய்மையானவன்;** pure and holy man. "தீயவாச் சேர்தல் செய்தார் தூயவரல்லர்" *(கம்பரா. சடாயுவுயிர் 54).* *2.* **திருமால்** (உரி.நி.); Viṣṇu.

*[தூய் + தூயவன்]*

**தூயன்** *tūyaṉ*, பெ. (n.) **தூயவன்** பார்க்க; see *tūyavaṉ*. "தூயன் றுயக்கன் மயக்கன்" *(திவ். திருவாய். 1.9:6).*

*[தூய் → தூயன்]*

**தூயாள்** *tūyāḷ*, பெ. (n.) *1.* **தூய்மையானவள்;** spotless, pure woman. *2.* **கலைமகள்** (யாழ்.அக.); Sarasvadi. "வரைபயந்த தூயாடன் றிருப்பாகன்" *(பெரியபு. தடுத்தாட். 199).*

*[தூய் → தூயாள்]*

**தூர்[1](ரு)-தல்** *tūr-*, 2 செ.கு.வி. (v.i.) *1.* **நிரம்புதல்;** to be filled up. "இருடூர்பு புலம்பூர" *(கலித். 120).* *2.* **அடைபடுதல்;** to be closed. "துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி" *(பொருந. 10).* *3.* **அழிதல்;** to be extinguished, to perish. "தூர்ந்தொழியும் பொய்பிறந்த போழ்தே" *(நான்மணி. 76).* *4.* **மறைதல்;** to disappear. "வள்ளி நடந்த வழி தூர்ந்திடாது" *(வெங்கைக்கோ. 345).* *5.* **நெருங்குதல்;** to come to close quarters "இருவரும் ஒதுங்கியுந் தூர்ந்தும் பொருதலின்" *(தொல். பொருள். 68, உரை, பக். 219).*

*[துரு → தூர் (வேக.)]*

**தூர்[2]-த்தல்** *tūr-*, 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **அடைத்தல்;** to fill up, close up, as a well. "கடறூர்த்தன் மலையகழ்தல்" *(சீவக. 2165).* *2.* **மறைத்தல்;** to hide, cover. "விண்ணவர் விசும்பு தூர்த்தான்" *(கம்பரா. கைகேயி. 74).* *3.* **உட் செலுத்துதல்;** to insert. "பழுக்கும் பழத்தைத் தூர்த்து" *(தைலவ. தைல. 134).* *4.* **மிகப் பொழிதல்;** to pour forth in showers as arrows "தூர்க்கின்ற மலர்மாரி தொடரப்போய்" *(கம்பரா. இராவணன் வதை. 199).*

*[துரு → தூர் → தூர்-. (வேக.288)]*

**தூர்[3]-த்தல்** *tūr-*, 4 செ.குன்றாவி. (v.t.) **பெருக்கித் தூய்மைசெய்தல்;** to sweep. "சினக ராலயந் தூர்ப்பது திருமெழுக்கிடுதல்" *(உபதேசகா. சிவபுண்ணிய. 50).*

ம. தூல்குக

**தூர்[4]** *tūr*, பெ. (n.) *1.* **வேர்** (பிங்.); root. *2.* **அடிப் பகுதி;** bottom. "தூரிற்றின் றன்ன தகைத்தரோ" *(நாலடி., 138).* *3.* **அடிமரம்** (இ.வ.); stump of a tree. *4.* **பனையின் வேர்ப்பற்றுள்ள அடிப்பகுதி;** root like formation about the stump of palmyras. "வேர் தூர்மடல் குருகு பறியா நீளிரும்பனை" *(பரிபா. 2:42).* *5.* **பனைவடலி முதலியன** (இ.வ.); tree, especially young palmyras and coconuts. *6.* **கிணற்றில் தேங்கிய வண்டல் முதலிய கசடுகள்;** rubbish at the bottom of a well. "கிணற்றைத் தூர்வார வேண்டும்." *7.* **சேறு;** dregs, mud. "தூரிடை யுறங்கு மாமை" *(கம்பரா. நாட்டு. 6).* *8.* **ஏனத்தின் (பாத்திரத்தின்) அடிப்பகுதி** (நெல்லை); bottom of a vessel.

*[துரு → தூர் (வேக. 288)]*

**தூர்[5]** *tūr*, பெ. (n.) **பழிச்சொல்;** calumny. "கவலைத்தூர் கொல்லுங் கதிர் காமம்" *(கதிரைமலை காதல் - 10).*

*[தூரு → தூர்]*

**தூர்கட்டு-தல்** *tūr-kaṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* **மரஞ்செடி முதலியன அடி பருத்தெழுதல்;** to grow with a big stump, as a young tree. *2.* **கொத்தாய் முளைத்தெழுதல்;** to grow in clusters. நெற்பயிர் தூற்கட்டியெழுந்தது.

*[தூர் + கட்டு-]*

**தூர்த்தம்** *tūrttam,* பெ. (n.) *1.* அரவடித்தூள் *(யாழ்.அக.);* iron filings. *2.* ஊமத்தை; trumpet flower night shade.

*[தூர்² → தூர்த்தம்]*

**தூர்வகம்** *tūrvagam,* பெ. (n.) *1.* பொதியெருது; pack bullock. *2.* சுமக்கை; bearing, carrying.

**தூர்வம்** *tūrvam,* பெ. (n.) கொப்பூழ் *(சங்.அக.);* navel.

**தூர்வாரி** *tūr-vāri,* பெ. (n.) கிணறுகளில் தூரெடுப்பவன்; cleaner of wells.

*[தூர் + வாரி.]*

**தூர்வாரு-தல்** *tūr-vāru-,* 5 செ.கு.வி. (v.i.) கிணற்று வண்டல்களை வாரி எடுத்தல்; to clean out, as a well.

*[தூர்¹ + வாரு-.]*

**தூர்வு** *tūrvu,* பெ. (n.) கிணறு முதலியன சேற்றால் அடைபடுகை; filling up, closing up, as of a well with rubbish.

*[தூர்¹ → தூர்வு]*

**தூர்வை¹** *tūrvai,* பெ. (n.) *1.* கிணற்றடை தூர்; accumulation of rubbish in a well. "தானே வந்தாலுந் தூர்வை யெடுக்கவொண்ணாது" *(திவ். இயற். திருவிருத். 12, வியா, 85). 2.* கொத்தப்பட்ட மண் *(வின்.);* loosened earth, from digging or ploughing. *3.* செத்தை *(வின்.);* straws, dry leaves, etc. *4.* கிணற்றைச் சார்ந்த நிலம் *(யாழ்ப்.);* ground adjacent to a well.

*[தூர்¹ → தூர்வை]*

**தூர்வை²** *tūrvai,* பெ. (n.) அறுகம்புல்; quitch grass. "தூவெள்ளிரிசியுந் தூர்வைக் காடும்" *(திருவிளை. உக்கிர. 23).*

*[தூர் → தூர்வை]*

**தூர்வைக்காரன்** *tūrvai-k-kāraṉ,* பெ. (n.) *1.* கிணறு சார்ந்த நிலத்துக்கு உரியவன்; sole proprietor of the soil about a well. *2.* தூர்வாரி பார்க்க; see *tūrvāri.*

*[தூர்வை + காரன்]*

**தூர்வைசெய்-தல்** *tūrvai-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) நிலத்தைக் கொத்தித்திருத்துதல்; to digup, earth, to plough. "வேரற வகழ்ந்து போக்கித் தூர்வை செய்து" *(பதினொ. திருவிடை.மும். 10).*

*[தூர்வை + செய்-.]*

**தூர்வைத்தைலம்** *tūrvai-t-tailam,* பெ. (n.) அறுகம்புல் எண்ணெய் *(தைலவ. தைல. 132);* medicinal oil prepared from quitch grass.

*[தூர்வை + தைலம்]*

**தூர்வைப்படுத்து-தல்** *tūrvai-p-paṭuttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தூர்வைசெய் பார்க்க; see *tūrvai-šey.*

*[தூர்வை + படுத்து-.]*

**தூர்னா** *tūrṉa,* பெ. (n.) அறுகு *(மூ.அ.);* quitch grass.

*[தூர்வை → தூர்னா]*

**தூர** *tūra,* வி.எ. (adv.) விலக; afar, away, off. "தூற்றாதே தூரவிடல்" *(நாலடி, 75).* தூர இருந்தால் சேர உறவு *(பழ.).*

**தூரக்காரி** *tūra-k-kāri,* பெ. (n.) மாதவிடாய் கொண்டு விட்டுக்கு விலக்காய் உள்ள பெண்; woman in her periods, as one that stays outside her house.

*[தூரம் + காரி]*

**தூரகமனம்** *tūra-kamaṉam,* பெ. (n.) நெடுந்தொலைவு நடைச் செலவு; long journey. "தூரகமனமுங்கலைகளின் ஒன்றாதலின்" *(சீவக. 1219, உரை).*

**தூரகாரி** *tūra-kāri,* பெ. (n.) எதிர்கால விளைவறிந்து செய்வோன்; far sighted man of action. "தூரகாரி யாதலால் . . . அமரர் வாழ்த்தினர்" *(பாரத. பதினான். 32).*

*[தூரம் + காரி]*

**தூரச்சூலை** *tūra-c-cūlai,* பெ. (n.) தூரசூலை பார்க்க; see *tūra-šūlai.*

*[தூரம் + சூலை]*

**தூரசூலை** *tūra-šūlai*, பெ. (n.) பூப்புச் (சூதகச்) சூலை நோய் (சீவரட். 124); dysmenorrhea.

*[தூரம் + சூலை]*

**தூரணம்** *tūraṇam*, பெ. (n.) விரைவு (யாழ்.அக.); quickness, haste.

*[தூரம் → தூரணம்]*

**தூரத்தம்** *tūrattam*, பெ. (n.) ஊமத்தை; Indian datura.

**தூரத்தார்** *tūrattār*, பெ. (n.) 1. தூரத்து உறவு; distant relation. 2. வெளிநாட்டில் வாழ்வோர்; persons living at a distance or in a far-off country.

*[தூரம் → தூரத்தார்]*

**தூரதரிசி** *tūra-tarišī*, பெ. (n.) 1. பருந்து; vulture. 2. பண்டிதன்; pandit. 3. தொலை நோக்குப் பார்வையன்; far-sighted man.

**தூரதை** *tūradai*, பெ. (n.) தூரம் (யாழ்.அக.); distance.

*[தூரம் → தூரதை]*

**தூரந்தொலை** *tūran-tolai*, பெ. (n.) மிக்க தூரம்; great distance.

*[தூரம் + தொலை]*

**தூரப்பயணம்** *tūra-p-payaṇam*, பெ. (n.) வெளிநாட்டு செலவு; long journey; journey to a distant place.

*[தூரம் + பயணம்]*

**தூரப்பார்வை** *tūra-p-pārvai*, பெ. (n.) தொலைப் பார்வை; distant sight, hyperopia.

*[தூரம் + பார்வை]*

**தூரப்பார்வைமட்டு** *tūra-p-pārvai-maṭṭu*, பெ. (n.) கிட்டப் பார்வையாகிய கண்ணின் குற்றம்; nearsightedness, myopia.

*[தூரம் + பார்வைமட்டு]*

**தூரப்பந்து** *tūra-pandu*, பெ. (n.) நெருக்க மில்லாத உறவினன்; a distant relation.

*[தூரம் + பந்து]*

**தூரம்**[1] *tūram*, பெ. (n.) 1. சேய்மை (பிங்.); remoteness, distance. "தூரம் போயின" (கம்பரா. இராவணன் வதை, 240). 2. தூரச்சுற்றம் (வின்.); remote relationship. 3. வேறுபாடு (யாழ்.அக.); difference. 4. புறம்பு (யாழ்.அக.); outside. 5. மகளிர் தீட்டு (சூதகம்); menstruation.

தூரத்துப் பச்சை கண்ணுக்கு அழகு
தூரத்துப்பச்சை பார்வைக்கு இச்சை
தூரத்துத் தண்ணீர் ஆபத்துக்கு உதவாது
தூரத்துப் பார்வைக்கு மலை மழமழப்பு;
கிட்டப்போனால் கல்லும் கரடும். (பழ.)

**தூரம்**[2] *tūram*, பெ. (n.) 1. ஊமத்தை (மூ.அ.); tumpet flower nightshade. 2. சிறுமரவகை; purple datura.

**தூரம்**[3] *tūram*, பெ. (n.) ஓர் இசைக்கருவி (யாழ்.அக.); a musical instrument.

**தூரமம்** *tūramam*, பெ. (n.) தேள் கொடுக்கி; scorpion sting plant (சா.அக.).

**தூரமானவெண்ணம்** *tūramāṉa-v-eṇṇam*, பெ. (n.) 1. மேன்மையான கருத்து; aspiring thoughts. 2. கவலை; anxious thoughts. 3. கவனமின்மை; absence of mind. 4. உலகப் பற்று நீங்கிய கருத்து; thoughts abstracted from the world.

*[தூரம் + ஆனவெண்ணம்]*

**தூரமூலம்** *tūra-mūlam*, பெ. (n.) மூஞ்சிப்புல்; girdle grass (சா.அக.).

**தூரல்** *tūral*, பெ. (n.) 1. நிறைகை (யாழ்.அக.); filling up. 2. துன்பம் (சது.); affliction.

*[தூர் → தூரல்]*

**தூரவலி** *tūra-vali*, பெ. (n.) தீட்டு (சூதக) நோய் வகை; pain during menstruation.

*[தூரம் → வலி]*

**தூரவுறவு** *tūra-v-uṟavu*, பெ. (n.) விலகிய உறவு முறை; distant relation.

*[தூரம் + உறவு]*

**தூரவை** *tūravai*, பெ. (n.) அறுகு; harialli grass (சா.அக.).

**தூரன்** *tūraṉ,* பெ. (n.) *முயற் புல்;* here grass *(சா.அக.).*

**தூராகி** *tūrāki,* பெ. (n.) எலிக்காது என்னுஞ் செடி *(தைலவ. தைல. 125);* a plant.

**தூராகு** *tūrāgu,* பெ. (n.) எலிச்செவிக் கள்ளி; rat's ear spurge *(சா.அக.).*

**தூராடிகத்தலை** *tūrāṭi-kattalai,* பெ. (n.) கடல் மீன் வகை; sea-fish, dark grey.

**தூராதிதூரம்** *tūrādi-tūram,* பெ. (n.) மிக்க தூரம்; very great distance. "தூராதி தூரஞ் சொல்லத் தொலை யாது" *(ஔவை. கு. ஞானம்பிரி, 7).*

*[தூரம் + ஆதி + தூரம்]*

**தூராதூரம்** *tūrātūram,* பெ. (n.) *1.* வெவ்வேறு தூரம்; various distances. *2.* நெடுந்தொலைவு; very great distance.

**தூரால்** *tūrāl,* பெ. (n.) புதர் (புதுவை); bush.

*[தூர் → தூரால்]*

**தூரி[1]** *tūri,* பெ. (n.) *1.* பலகறை (வின்.); small shell, cowry. *2.* சிறுதூம்பு; small outlet for irrigation. *3.* தூரிவலை பார்க்க; see *tūrivalai.*

*[தூர் → தூரி]*

**தூரி[2]** *tūri,* பெ. (n.) எருது (வின்.); ox.

**தூரி[3]** *tūri,* பெ. (n.) ஊசல் (பிங்.); swing.

**தூரி[4]** *tūri,* பெ. (n.) தூரிகை (யாழ்.அக.) பார்க்க; see *tūrigai.*

**தூரி[5]** *tūri,* பெ. (n.) தூரியம்,3 பார்க்க; see *tūriyam,3.* "போர்ப்பணவந் தூரி" *(கம்பரா.பிரமாத்திர. 5).*

**தூரிகை** *tūrigai,* பெ. (n.) ஓவியம் தீட்ட, பெயர்ப்பலகை எழுதப் பயன்படும் எழுதுகோல்; விலங்கின் மயிர் ஒரு முனையில் செருகப்பட்ட நீண்ட குச்சி; painting reed or pencil, painter's brush. "கையா லெடுத்தது தூரிகை யேயன்று காரிகையே" *(வெங்கைக்கோ. 108).*

*[தூர் → தூரி → தூரிகை (வ.மொ.வ.)]*



**தூரிது** *tūridu,* பெ. (n.) சேய்மையானது; that which is far off or distant. "மிக்க தூரிதன்று பாண்டியனது செல்வமிக்க ஊர்" *(சிலப். 13:133, உரை).*

*[தூரம் → தூரிது]*

**தூரிமுள்ளு** *tūri-muḷḷu,* பெ. (n.) நரியிலந்தை; jackal bair *(சா.அக.).*

**தூரிய** *tūriya,* வி.எ. (adv.) தூரமான; far off, distant. "இல்லிடத்தினின்றுந் தூரிய இடத்தில்" *(கலித். 110, உரை).*

*[தூரம் → தூரிய]*

**தூரியகண்டம்** *tūriya-kaṇḍam,* பெ. (n.) ஓர் இசைக் கருவி (யாழ்.அக.); a musical instrument.

*[தூரியம் + கண்டம்]*

**தூரியம்[1]** *tūriyam,* பெ. (n.) *1.* இசைக்கருவி; musical instrument. "அந்தி விழவிற் றூரியங் கறங்க" *(மதுரைக். 460). 2.* மங்கலப்பறை (பிங்.); drum beaten on festive of joyful occasions. *3.* முரசு (பிங்.); a large drum.

**தூரியம்[2]** *tūriyam,* பெ. (n.) தூரிகை (சூடா.) பார்க்க; see *tūrigai.*

**தூரியம்[3]** *tūriyam,* பெ. (n.) ஒரு வகைத் துகில் (பிங்.); a kind of fine cloth.

**தூரியம்[4]** *tūriyam,* பெ. (n.) பொதியெருது (பிங்.); pack bullock.

**தூரியம்[5]** *tūriyam,* பெ. (n.) *1.* கைவேல் (வின்.); javelin, dart. *2.* எறிபடைப்பொது (அக.நி.); missile.

**தூரியம்**[6] *tūriyam,* பெ. (n.) *1.* ஈயம்; lead. *2.* நஞ்சு; poison.

**தூரியன்** *tūriyaṉ,* பெ. (n.) தூரத்துள்ளவன்; one who is far off or at a distance. "தூரியனாஞ் சிவன் தோன்றும்" *(சி.சி. 8:28).*

*[தூரம் → தூரியன்]*

**தூரியாங்கம்** *tūriyāṅgam,* பெ. (n.) பலவகை இசைக்கருவிகளையும் கொடுக்கும் தெய்வமரவகை (கற்பகதரு) (தக்கயாகப். 757, குறிப்பு); a Kalpaga tree which yields every kind of musical instrument that is wished for.

*[தூரியம் → தூரியாங்கம்]*

**தூரிவலை** *tūri-valai,* பெ. (n.) குப்பா எனும் பையுள்ள மீன்கள் வந்து விழும் வீசுவலை; a big fishing net.

*[தூர் → தூரி + வலை (வே.க. 288)]*

**தூரு**[1]**-தல்** *tūru, 5* செ.கு.வி. (v.i.) *1.* மலங்கழித்தல் (நாஞ்.); to go to stool.

* ம. தூருக

**தூரு**[2] *tūru,* பெ. (n.) தூர் பார்க்க; see tūr. "தூருகனத்தோடே . . . பாசனஞ் செய்" *(தைலவ.பாயி. 15).*

**தூரேத்தி** *tūretti,* பெ. (n.) கம்பந்திராய்ச் செடி (மலை.); a kind of wild chickweed.

**தூரோணம்** *tūrōṇam,* பெ. (n.) கவிழ்த்தும்பைச் செடி (மலை.); small purslane.

**தூலக்கட்டை** *tūla-k-kaṭṭai,* பெ. (n.) துலாக்கட்டை பார்க்க; see *tulā-k-kaṭṭai.* பத்துத் தூலக்கட்டை வீடு.

*[துலாக்கட்டை → தூலக்கட்டை]*

**தூலக்கடை** *tūla-k-kaḍai,* பெ. (n.) தூலக் கட்டை பார்க்க; see *tūla-k-kaṭṭai.*

**தூலகம்** *tūlagam,* பெ. (n.) பருத்தி (மலை.); common cotton.

*[தூலம் → தூலகம் (மு.தா. 160)]*

**தூலசர்க்கரை**[1] *tūla-śarkkarai,* பெ. (n.) உப்பு (சங்.அக.); salt.

**தூலசர்க்கரை**[2] *tūla-śarkkarai,* பெ. (n.) தூலசருக்கரை (சங்.அக.) பார்க்க; see *tūla-śarukkarai.*

**தூலசருக்கரை** *tūla-śarukkarai,* பெ. (n.) பருத்தி விதை (மூ.அ.); cotton seed.

**தூலபலம்** *tūla-palam,* பெ. (n.) எருக்கு; madar plant (சா.அக.).

**தூலபிசு** *tūla-piśu,* பெ. (n.) பஞ்சு (மூ.அ.); cotton.

**தூலம்**[1] *tūlam,* பெ. (n.) *1.* பஞ்சு (சூடா.); cotton. *2.* கோரை (மூ.அ.); a sedge. *3.* பருத்திச் செடி; Indian cotton plant. *4.* இலவு (மலை.) பார்க்க; see *ilavu.*

*[தூல் → தூலம் (மு.தா. 160)]*

**தூலம்**[2] *tūlam,* பெ. (n.) நீர்முள்ளி (மலை.); white long-flowered nail dye.

**தூலம்**[3] *tūlam,* பெ. (n.) நஞ்சு (யாழ்.அக.); poison.

**தூலி** *tūli,* பெ. (n.) தூலிகை பார்க்க; see *tūligai.*

**தூலிகை** *tūlikai,* பெ. (n.) *1.* எழுதுகோல் (சூடா.); pointing reed or pencil. *2.* அன்னத்தினிறகு (நிகண்டு.); swan's feather. *3.* மெத்தை (யாழ்.அக.); cushion. *4.* விளக்குத்திரி (யாழ்.அக.); wick.

**தூலினி** *tūliṉi,* பெ. (n.) சிவப்புநிற பூக்களைக் கொண்ட இலவு (மலை.); red-flowered silk cotton.

*[துல் → தூல் → தூலினி (மு.தா. 160)]*

**தூலை** *tūlai,* பெ. (n.) பருத்தி (சங்.அக.); cotton.

*[தூல் → தூலை]*

**தூவத்தி** *tūvatti,* பெ. (n.) வாள் (பிங்.); sword.

**தூவரன்** *tūvaraṉ,* பெ. (n.) அண்ணகன் (யாழ்.அக.); eunuch.

**தூவல்**[1] *tūval,* பெ. (n.) *1.* தூவுகை (சூடா.); sprinkling, spilling, drizzling. *2.* துவலை; little drops of water, rain drops. "தூவற் கலித்த தேம்பாய் புன்னை" *(புறநா. 24). 3.* மழை; rain, drizzle. "தூவற் கலித்த புதுமுகை" *(மலைபடு. 146). 4.* இறகு; feather. "சொக்கின் றூவலும்" *(தேவா.*

*216, 4).* 5. அம்பினிறகு *(யாழ்.அக.);* feather of an arrow. 6. எழுதுமிறகு *(யாழ்ப்.);* quill-pen. 7. சித்திரக் கோல் *(யாழ்ப்.);* painter's brush of cat's or squirrel's hair. 8. தளிர் *(யாழ்.அக.);* sprout, shoot. 9. எழுதுகோல்; pen.

*[தூவு → தூவல்]*



**தூவல்**[2] *tūval,* பெ. (n.) கறி வகை *(இ.வ.);* a kind of vegetable curry.

*[தூவு → தூவல்]*

**தூவல்ராகி** *tūvar-rāgi,* பெ. (n.) தூவலாரியம் (G.Sm.D. l, i, 218) *பார்க்க;* see *tūval-āriyam.*

*[தூவல் + ராகி]*

**தூவலாரியம்** *tūval-ā-riyam,* பெ. (n.) இராகி வகை (G.Sm.D. l, i, 218); ragi grwon under irrigation.

*[தூவல் + ஆரியம்]*

**தூவழி** *tū-vaḷi,* பெ. (n.) பண் வகை; a secondary melody type. "தும்பி வண்டொடு தூவழி யாழ்செய" *(சீவக. 854).*

*[தூய்(மை) + வழி]*

**தூவற்பிளவு** *tūvaṟ-piḷavu,* பெ. (n.) எழுதிறகின் முனைப் பிளவு (வின்.); slit of a quill-pen.

*[தூவல் + பிளவு]*

**தூவனாதி** *tūvaṉādi,* பெ. (n.) ஆடாதோடை; Malabar winter cherry *(சா.அக.).*

**தூவாத** *tūvāda,* பெ. (n.) வேண்டாதவை; that which is unpalatable or undersirable. "தூவாத நீக்கி" *(குறள். 685).* 2. தூய்மையில்லாத; polluted.

*[தூ → தூவாத]*

**தூவானம்** *tūvāṉam,* பெ. (n.) 1. காற்று அடித்துக் கொண்டுவரும் மழைத்துளிகள், சிதறல், சிதறுமழை; drizzle, rain driven in or scattered about in fine drops by stroing wind. மழைவிட்டுந் தூவானம் விடவில்லை *(பழ.).* 2. அருவி வீழிடம் (பிங்)); place where a cascade falls, as the place of spray.

*[தூவு + வானம்]*

**தூவி** *tūvi,* பெ. (n.) 1. பறவையிறகு; feather or down of birds. "மறுவிறூவிச் சிறுகருங்காக்கை" *(ஐங்குறு. 139).* 2. மயிற்றோகை (பிங்.); peacock's tail. 3. அன்னத்தினிறகு (பிங்.); swan's down. "ஆய்தூவி யனமெய்" *(கலித். 56).* 4. அன்னப் பறவை; swan. "தூவிகணிற் குஞ் சாலிவளைக்குஞ் சோலை சிறக்கும்" *(திருப்பு. 588).* 5. எழுதுகோல் (அருநி.); quill-pen. 6. மீன்சிறகு; fin of a fish.

*[தூவல் → தூவி]*

**தூவிப்பொன்** *tūvi-p-poṉ,* பெ. (n.) பொன்னின் ஒருவகை, கிளிச்சிறை; a kind of gold. "தூவிப்பொன் மாடமூதூர்" *(சீவக. 1756).*

*[தூவி + பொன்]*

**தூவியள-த்தல்** *tūvi-y-aḷa-,* 4 செ.குன்றாவி (v.t.) இலேசாகப் பெய்தளத்தல்; to put grain loosely into a measure, as in measuring flour.

*[தூவு + அளத்தல்]*

**தூவிவிடு-தல்** *tūvi-viḍu-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. கறிப்பொடி தூவுதல்; to strew curry-powder. 2. செய்தி பரப்புதல்; to spread a rumour.

*[தூவி + விடு-]*

**தூவினம்** *tūviṉam,* பெ. (n.) மிளகு *(சா.அக.);* black pepper.

**தூவு**[1]**-தல்** *tūvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தெளித்தல்; to sprinkle, strew. "நன்னீர் தூய்" *(திவ். திருவாய். 1. 6:1).* 2. இறைத்தல்; to scatter, spread out, as grain for fowls. 3. மிகச் சொரிதல்; to shower forth, as arrows. "வெங்கணை தூவி" *(சீவக. 453).* 4. அளக்கும் போது இலேசாகமேற் பெய்தல்; to put loosely in a measure, as flour while measuring.

தூவியளக்கிறான். 5. பூத்தூவி வழிபடுதல்; to strew or offer flowers in worship. "தீபமொடு தூபமலர் தூவி" (தேவா. 542, 3). 6. ஒழிதல்; to rest, cease. "கைதூவே னென்னும் பெருமையின்" (குறள், 1021) (சீவக. 2917, உரை.)

**தூவு²-தல்** *tūvu-*, 5 செகுவி (v.i.) மழை பெய்தல் (வின்.); to rain.

**தூவு³** *tūvu*, பெ. (n.) ஊண் (அருநி.); flesh, meat.

*[தூ → தூவு]*

**தூவுகை** *tūvugai*, பெ. (n.) பொடி தூவுகை; the act of sprinkling as with a powder (சா.அக.).

*[தூவு → தூவுகை]*

**தூவுரை** *tū-v-urai*, பெ. (n.) நல்லுரை; sage counsel. "தூவுரை கேட்டுத் துணிந்தில ணிருந்தது" (மணிமே. 28:136).

*[தூய்(மை) + உரை]*

**தூவெள்ளறுவை** *tū-veḷḷaṟuvai*, பெ. (n.) அழுக்கிலா வெண்ணிற ஆடை; pure, white cloth. "தூவெள் ளறுவைக் கண்மாசுபோல" (குறள். 1051, உரை).

*[தூய்(மை) + வெள்ளறுவை]*

**தூவெளி** *tūveḷi*, பெ. (n.) அருள்வெளி (ஞானவெளி); mystic sphere of pure intelligence. "சோதியைமாத்தூ வெளியை" (தாயு. பொருள்.வ. 18).

*[தூய்(மை) + வெளி]*

**தூவையர்** *tūvaiyar*, பெ. (n.) இறைச்சி யுண்டோர்; flesh eaters. "தூவையர்கள் சோகைமுகநீலர்" (திருப்பு. 363).

*[தூவு → தூவையார்]*

**தூள்** *tūḷ*, பெ. (n.) 1. எந்தக் கடினமான பொருளையும் உலக்கை அல்லது குழவி கொண்டு இடித்தோ அல்லது அரைத்தோ எடுத்த பொடி, துகள் (பிங்.); dust, powder, particle. 2. மருந்துப்பொடி; medicinal powder. 3. கறிப்பொடி (வின்.); curry powder. 4. மூக்குப் பொடி; snuff. 5. பூந்தாது; pollen. "தூளெழுந் தாமரை யலர்" (செவ்வந்தி. பு, அகத்திய. 34). 6. திருநீறு; the sacred ashes. "திரு நுண்டூ ளள்ளிச் சாத்தும்" (சேதுபு. கடவுள்வா. 8). 7. சிறியவை; anything small collectively, as fish, stones, roots etc. 8. சிறுமுத்து (வின்.); lowest class of pearls, as very small.

**தூள்கிளப்பு-தல்** *tūḷ-kiḷappu-*, 5 செகுவி. (v.i.) திறமை முதலியவை சிறப்பாக வெளிப் படுகிற வகையில் ஒன்றைச் செய்தல் அல்லது நிகழ்த்துதல்; to extremely well. மட்டைப் பந்தாட்டத்தில் அவர் தூள் கிளப்பிவிட்டார்.

*[தூள் + கிளப்பு-.]*

**தூள்படு-தல்** *tūḷ-paḍu-*, 20 செ.கு.வி (v.i.) 1. முனைப்பாக செயற்படுதல்; to be expedited with great eclat. செயல் தூள்படுகிறது. 2. அமளியுடன் நிகழ்தல்; to be in a commotion. குழந்தையைக் காணாமல் வீடு தூள்பட்டது.

*[தூள் + படு-.]*

**தூள்படுத்து¹-தல்** *tūḷ-paḍuttu-*, 5 செ.குன்றாவி (v.t.) 1. தூளாக்குதல்; to pulverise, reduce to powder. 2. முற்றும் அழித்தல்; to destroy utterly. "எனதுமிடி தூள்படுத்தி" (திருப்பு. 1042).

*[தூள் + படுத்து-.]*

**தூள்படுத்து²-தல்** *tūḷ-paḍuttu-*, 5 செகுவி (v.i.) புரளி (அட்டகாசம்) பண்ணுதல் (உவ); to make a show of great strength or ability.

*[தூள் + படுத்து-.]*

**தூள்பற-த்தல்** *tūḷ-paṟa-*, 3 செகுவி (v.i.) பலரும் அறியும்படி அதிகாரம் வெளிப்படுதல் அல்லது பணம் செலவழித்தல்; to be loudly displayed. வீட்டில் மூத்த மருமகள் அதிகாரம் தூள் பறக்கிறது.

*[தூள் + பற-.]*

**தூள்மீன்** *tūḷ-mīṉ*, பெ (n.) பொடி மீன் (யாழ்ப்.); small fish.

*[தூள் + மீன்]*

**தூள்விறகு** *tūḷ-viṟagu*, பெ. (n.) பொடி விறகு (யாழ்ப்.); fire-wood of small size.

*[தூள் + விறகு]*

**தூளம்** *tūḷam*, பெ. (n.) தூளனம்,1 பார்க்க; see *tūḷaṉam,1*.

**தூளனம்** *tūḷaṉam*, பெ. (n.) திருநீற்றை நீரிற் குழையாது பூசுகை; besmearing one's body with the dry sacred ahses. "நீறு தூளனஞ்

செய்திடின்" *(சிவரக. சிவதன்மா. 23).* 2. தூள் *(வின்.);* dust.

*[தூள் → தூளனம்]*

**தூளா-தல்** *tūḷā-,* 6 செ.கு.வி. (v.i.) *1.* தானே பொடியாதல்; falling into pieces. *2.* அரைப் பதினால் பொடியாதல்; becoming reduced to powder by grinding or pounding *(சா.அக.).*

*[தூள் + ஆ-.]*

**தூளாக்கு-தல்** *tūḷākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொடி செய்தல்; pulverising, reducing to dust.

*[தூள் + ஆக்கு-.]*

**தூளி[1]-த்தல்** *tūḷi-,* 4 செ.கு.வி. (v.i.) பருத்தல் *(வின்.);* to grow stout, bulky.

*[தூள் → தூளி-.]*

**தூளி[2]-த்தல்** *tūḷi-,* 4 செ.குன்றாவி. (v.t.) திருநீற்றை உடல்முழுவதும் பூசுதல் *(சங்.அக.);* to besmear one's body with the dry sacred ashes.

*[தூள் → தூளி]*

**தூளி[3]** *tūḷi,* பெ. (n.) *1.* புழுதி; dust. "ஏத்துவார் களுழக்கிய பாததூளி படுதலாலிவ் வுலகம் பாக்கியஞ் செய்ததே" *(திவ். பெரியாழ். 4.4:6).* *2.* பூந்தாது; pollen.

*[தூள் → தூளி]*

**தூளி[4]** *tūḷi,* பெ. (n.) குதிரை *(அக.நி.);* horse.

*[தூள் → தூளி]*

**தூளி[5]** *tūḷi,* பெ. (n.) ஆர்ப்பு; noise, tumult.

*[தூள் → தூளி]*

**தூளி[6]** *tūḷi,* பெ. (n.) குழந்தையைத் தூங்கவைக்க நீண்ட துணியின் இரு முனையையும் கட்டி ஒன்றில் தொங்கவிட்டிருக்கும் அமைப்பு; ஏணை; cradle made with a long piece of cloth.



**தூளிகுச்சம்** *tūḷi-kuccam,* பெ. (n.) கதம்பப் பொடி *(சங்.அக.);* fragrant powder.

*[தூளி + குச்சம்]*

**தூளிச்சி** *tūḷicci,* பெ. (n.) தூளாகச் செய்யும் மருந்து அல்லது மூலிகை; any medicine or drug capable of reducing any substance into a fine powder as by action of acid.

*[தூளி → தூளிச்சி]*

**தூளிசாலம்** *tūḷi-šālam,* பெ. (n.) அருகக் கடவுளது கோயில் முதல்மதில் (மேருமந். 60, உரை); the first compound-wall of a temple of Arhat.

**தூளித்துவசம்** *tūḷi-t-tuvašam,* பெ. (n.) *1.* கதம்பப் பொடி; a fragrant powder used in bath. *2.* மணமேற்றியபொடி; any scented powder. *3.* காற்று; air *(சா.அக.).*

*[தூளி + துவசம்]*

**தூளித்துவசன்** *tūḷi-t-tuvašaṉ,* பெ. (n.) காற்று *(யாழ்.அக.);* wind.

*[தூளி + துவசன்]*

**தூளிதம்** *tūḷi-dam,* பெ. (n.) *1.* திருநீறு *(வின்.);* the sacred ashes. *2.* பொடியானது; dust, that which is reduced to powder.

*[தூளி → தூளிதம்]*

**தூளிமட்டம்** *tūḷi-maṭṭam,* பெ. (n.) தரைமட்டம் *(யாழ்.அக.);* ground-level.

*[தூளி + மட்டம்]*

**தூற்றல்** *tūṟṟal,* பெ. (n.) தூறல் பார்க்க; see *tūṟal.*

ம. தூற்றல்

*[தூற்று → தூற்றல்]*

**தூற்றலுந்தும்மலுமாய்** *tūṟṟalun-tummalumāy,* வி.எ. (adv.) தூறலுந்தும்மலுமாய் பார்க்க; see *tūṟalun-tummalu-māy.*

**தூற்றாப்பொலி** *tūṟṟā-p-poli,* பெ. (n.) தூற்றாத நெற்குவியல்; grain-heap which has not been winnowed. "தூற்றாப்பொலி ஆலையிற்

பாகுகாய்கின்ற புகையாற் பரக்கப்பட்டு" (சிலப். 10: 151, உரை).

[தூற்று + ஆ + பொலி]

**தூற்றாரி** *tūṟṟāri*, பெ. (n.) ஊதாரி (வின்.); prodigal, squanderer.

[தூற்று + ஆளி – தூற்றாளி → தூற்றாரி]

**தூற்றி** *tūṟṟi*, பெ. (n.) 1. புறங்கூறுவோன்; talebearer. தூற்றித் திரியேல் (பழ.). தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும் (பழ.). 2. பெருக்குவோன்; sweeper.

[தூற்று → தூற்றி-]

**தூற்றிக்கொள்(ளு)-தல்** *tūṟṟi-k-koḷ-*, 16 செ.குன்றாவி. (v.tr.) தெரிந்து கொள்ளுதல்; to sift and select. "தூற்றிக் கொளப் பட்டார்" (சீவக. 2164).

[தூற்று → தூற்றி + கொள்-]

**தூற்று**[1]**-தல்** *tūṟṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. சிதறுதல்; to scatter, disperse, spread or strew. "தென்ற றூற்றுங் குறுந்திவலை" (கம்பரா. கடல்காண். 5). 2. தூசிபோமாறு நெல்லைத் தாவுதல்; to winnow. "கால்வரத் தூற்றி . . . உயர்ந்திட்ட நெற்றிரளின்" (சேதுபு. திருநாட். 74). 3. புழுதி முதலிய இறைத்தல்; to throw up, as dust in the air. "புழுதியைத் தூற்றாதே". 5. பரப்புதல்; to spread. "அரும்பொதி வாசஞ் சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற" (சிலப். 4:18). 6. பலருமறியப் பழிகூறுதல்; to publish abroad evil reports; to defame, slander. "துன்னியார் குற்றமுந் தூற்று மியல்பினார்" (குறள், 188). 7. அறிவித்தல்; to make known. "வாரமு நாளுந் தூற்றி" (கம்பரா. திருமுடி. 25). 8. வீண்செலவு செய்தல்; to squander, lavish, waste.

[துவற்று → தூற்று-. (மு.தா. 57)]

**தூற்று**[2] *tūṟṟu*, பெ. (n.) 1. பொலி தூற்றுகை; winnowing, clearing chaff from grain. 2. ஒருவரைப் பேச்சாலோ எழுத்தாலோ பழிக்கை, பழிப்பு; slandering, spreading a slanderous report.

**தூற்றுக்காடு** *tūṟṟu-k-kāḍu*, பெ. (n.) சிறுதூறு (வின்.); low jungle, thicket (செ.அக.).

[தூற்று + காடு]

**தூற்றுக்குடியான்சுழி** *tūṟṟu-k-kuḍiyāṉ-suḻi*, பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 133); an ancient coin.

**தூற்றுக்கூடை** *tūṟṟu-k-kūḍai*, பெ. (n.) 1. பொலி தூற்றுவதற்கு உதவுந் தட்டுக் கூடை (வின்.); winnowing basket. 2. பொலி தூற்றுதற்கு உதவும் முறம்; winnowing fan.

[தூற்று + கூடை]



**தூற்றுகூடை** *tūṟṟu-kūḍai*, பெ. (n.) தூற்றுக் கூடை பார்க்க; see *tūṟṟu-k-kūḍai*.

[தூற்று + கூடை]

**தூற்றுமுறம்** *tūṟṟu-muṟam*, பெ. (n.) நெற்பொலி தூற்றுதற்கு உதவும் முறம்; winnowing fan.

[தூற்று + முறம்]



**தூற்றுமைக்கொற்றான்** *tūṟṟumai-koṟṟāṉ,* பெ. (n.) கொற்றான் வகை *(மூ.அ.);* green thread -like leafless creeper.

**தூற்றுவாய்** *tūṟṟu-vāy,* பெ. (n.) பொலி தூற்றும் போது அடிக்கும் பின்காற்றுப் பக்கம் *(வின்.);* windward side in winnowing.

*[தூற்று + வாய்]*

**தூற்றுவாயக்கொற்றான்** *tūṟṟu-vāya-k-koṟṟāṉ,* பெ. (n.) தூற்றுமைக்கொற்றான் பார்க்க *(யாழ்.அக.);* see *tūṟṟumai-k-koṟṟāṉ.*

**தூறல்[1]** *tūṟal,* பெ. (n.) *1.* சிறு மழை *(பிங்.);* rain. *2.* மழைத்துளி; drop of rain.

*[தூறு → தூறல். வேகமாகவோ வலுவாகவோ இல்லாமல் தொடர்ச்சியாகச் சிறுசிறு துளிகளாக விழுகிற மழை.]*



**தூறல்[2]** *tūṟal,* பெ. (n.) பழிச்சொல்; slander, abuse.

*[தூறு → தூறல்]*

**தூறலுந்தும்மலுமாய்** *tūṟalun-tummalum-āy,* வி.எ. (adv.) சாரலுஞ் சிறுபெயலுமாக; in drizzle or gentle rain. மழை தூறலுந் தும்மலுமாய் இருக்கிறது (இவ.).

*[தூறல் + உம் + தும்மல் + உம் + ஆய்.]*

**தூறவம்** *tūṟavam,* பெ. (n.) நாவல் *(மலை.);* common black plum.

**தூறன்** *tūṟaṉ,* பெ. (n.) *1.* குடிக்குப் பழிப்பாயுள்ளவன்; one who is a disgrace to his family. *2.* தீயோன்; libertine, debauchee. *3.* அவதூறு சொல்பவன் *(சங்.அக.);* slanderer.

*[தூறு → தூறன்]*

**தூறாக்கு-தல்** *tūṟākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) பழித்தல் *(வின்.);* to defame, cast aspersion on one's character.

*[தூறு + ஆக்கு-.]*

**தூறாய்ப்போ[1]-தல்** *tūṟāy-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) செய்தி பரவுதல் *(வின்.);* to be rumoured abroad.

*[தூறு + ஆய் + போ-.]*

**தூறாய்ப்போ[2]-தல்** *tūṟāy-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) தலைமயிர் எண்ணெய்ப் பசையற்றுப் போதல் *(இவ.);* to be come free from any trace of oil, as hair.

*[தூறு + ஆய் + போ-.]*

**தூறியமயிர்** *tūṟiya-mayir,* பெ. (n.) வாராமற் கிடக்கும் தலைமயிர் *(வின்.);* rough, shaggy, unkempt hair.

*[தூறு + மயிர் - தூறிய மயிர்]*

**தூறு[1]-தல்** *tūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* மழைத்துளி விழுதல்; to drizzle. *2.* செய்தி பரத்தல் *(வின்.);* to spread as news. *3.* கிளைத்தல் *(வின்.);* to sprout forth, branch forth, become bushy. *4.* சடை பற்றுதல் *(வின்.);* to become shaggy and rough.

*[துவறு → தூறு-.]*

**தூறு[2]-தல்** *tūṟu-,* 5 செ.குன்றாவி (v.t.); பழித்தல் *(இவ.);* to traduce, slander.

*[துவறு → தூறு-.]*

**தூறு[3]** *tūṟu-,* பெ. (n.) *1.* புதர்; bushes, shrubbery, thick underwood. "தூற்றில் வாழ்முயல்" *(பெரியபு. திருக்குறிப். 77). 2.* குவியல்; heap. "எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்" *(குறள். 435). 3.* குறுங்காடு; low jungle. ஆறுகொண்டது பாதி, தூறு கொண்டது பாதி. *4.* சுடுகாடு; burning ground. "தூறன்றி யாடரங் கில்லையோ" *(தேவா. 1241, 2). 5.* திராய் *(மலை.);* Indian chickweed. *6.* மஞ்சள் *(மலை.);* country turmeric. *7.* தென்னை, பனை முதலியவற்றின் வேரொட்டிய அடி; bottom root of coconut tree, palmyra tree, etc.

*[துள் → துறு → தூறு (மு.தா. 233.)]*

**தூறு[4]** *tūṟu,* பெ. (n.) *1.* பழிச்சொல்; calumny, slander, ill report. "மாதர் தூறுதூவத் துயர்க்கின்றேன்" *(அருட்பா. புராண, விரகு. 15).*

2. தீங்கு; evil. "தூறியற்றிடுந் துட்ட பண்ணியன்" (சேதுபு. அக்கி. 69).

[துவறு → தூறு (மு.தா.57)]

**தூறுகி** *tūṟugi*, பெ. (n.) கருப்புக் கடுக்காய் (சா. அக.); black gallnut.

**தூறுகுணம்** *tūṟukuṇam*, பெ. (n.) கடம்பு (மலை.); common Indian oak.

**தூறுகுணாதியம்** *tūṟukuṇādiyam*, பெ. (n.) வெள்ளைக் கடுக்காய் (சா.அக.); white myrobalan of cuddapah.

**தூறுட்டி** *tūṟuṭṭi*, பெ. (n.) சிற்றேலம் (மலை.); true cardamom.

**தூறுதம்** *tūṟudam*, பெ. (n.) மஞ்சட்கடுக்காய்; yellow myrobalan - yellow gallnut (சா.அக.).

**தூறுதலை** *tūṟu-talai*, பெ. (n.) சிலும்பலான மயிர்த்தலை (வின்.); rough, shaggy head.

[தூறு + தலை.]

**தூறுதலைச்சி** *tūṟu-talaicci*, பெ. (n.) 1. மயிர்க் கூச்செறிந்தவள்; a woman whose hair is on end, especially when excited or otherwise affected nervously. 2. பறட்டைத் தலைச்சி; a woman having bushy hair. (சா. அக.).

[தூறு + தலைச்சி.]

**தூறுதலையன்** *tūṟu-talaiyaṉ*, பெ. (n.) 1. பரட்டைத் தலையன் (சங்.அக.); person with shaggy hair. 2. பிராய் (மலை.); paper tree.

[தூறு + தலையன்.]

**தூறுதவம்** *tūṟu-davam*, பெ. (n.) மரவள்ளிக் கிழங்கு; tapioca plant (சா.அக.)

**தூறுமாறு** *tūṟu-māṟu*, பெ. (n.) தீநெறி; bad conduct, vicious life.

[தாறுமாறு → தூறுமாறு.]

**தூறுமீன்** *tūṟu-mīṉ*, பெ. (n.) மீன்வகை (பெரியமாட். 101.); a kind of fish.

[தூறு + மீன்.]

**தூறுவாதி** *tūṟuvādi*, பெ. (n.) தீம்பாலை யென்னும் மரம் (சங்.அக.); a tree.

**தூறுவாயன்** *tūṟu-vāyaṉ*, பெ. (n.) பழி கூறுவோன்; slanderer

[தூறு + வாயன்.]

**தூன்மரம்** *tūṉ-maram*, பெ. (n.) சந்தனவேம்பு (சங்.அக.); sandal neem.

மறுவ. தூணுமரம்